S. R. Gopalakrishna

ஸ்ரீ

# நம்மாழ்வார்

அருளிச்செய்த

# திருவிருத்தம்.

இது,

[illegible] காலேஜ் தமிழ்ப் பண்டிதர்,

திருவல்லிக்கேணி

வைத்தமாநிதி - முடும்பை -

சடகோபராமாநுஜாசாரியர்

இயற்றிய உரையுடன்,



சென்னை

மெமோரியல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

விகாரி வருஷம் ஆவணி மீ

[illegible] - கஉ.

திருவிருத்தம் என்னும் இத்திவ்யப்ரபந்தமானது - இந்த உலகில் இருள் நீங்க வந்து உதித்த அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்து உரைத்த ஆழ்வார்களுட் ப்ரதானரும், காசினியோர் தாம்வாழக் கலியுகத்தொடக்கத்திலே வந்து அவதரித்தவரும், ஸ்ரீவைஷ்ணவகுருபரம்பரையில் ப்ரதமாசாரியரும், ப்ரபந்நஜநகூடஸ்தருமான நம்மாழ்வார் அருளிச்செய்த சதுர்வேதசாரமான நான்கு நூல்களுள் முதலாவது, ருக்வேதத்தின் சாரமானது; ஆழ்வார், தமது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமானை நோக்கி, 'தேவரீரை அனுபவிக்கைக்கு விரோதியான தேகசம்பந்தத்தை அறுத்துத்தந்தருள வேணும்' என்று சம்சாரசம்பந்தநிவ்ருத்தியை அபேக்ஷித்து விண்ணப்பஞ் செய்தது, அந்தாதித்தொடையாக அமைந்த நூறுபாசுரங்களையுடையது, நூல்தொடக்கமும் நூற்பயனும் ஆகிய முதல் இறுதி பாசுரம் இரண்டு நீங்கலாக மற்றைய தொண்ணூற்றெட்டு பாசுரங்களிலும் அகப்பொருளிலக்கணத்துறைகள் அமையப்பெற்றது, அந்யாபதேசம் ஸ்வாபதேசம் என்று முறையே பெயர்பெற்ற வெளிப்படைப்பொருள் உள்ளுறைப்பொருள் என்னும் இருவகைப்பொருளுள்ளது, சொற்செறிவு பொருட்பொலிவு ஆழ்ந்தகருத்து தொனி பொருள் கற்பனையலங்காரம் முதலிய சிறப்புக்களால் ஒப்புயர்வின்றி விளங்குவது, நூலைக்கற்பார்க்குப் பிறவித்துயரறுத்து அந்தமிலின்பந் தரவல்லது, பரம்பொருளை அகப்பொருள்நெறியால் அநுபவிக்குந்திறத்தில், சைவசமயத்து மாணிக்கவாசகர் இயற்றிய திருச்சிற்றம்பலக்கோவையாரென்னுந் திருக்கோவையாரை ஒருபுடையொப்புமையாகக் கொள்ளத்தக்கது.

சிருங்காரரசப்ரதானமான கிளவித்துறைகளை ஞானநூலாகிய இதிற் கூறுதற்குக் காரணம் - கத்தினருந்தானைக் கட்டிப்பூசிக் கத்தினப்பார் போல, சிற்றின்பங்கூறும் வகையாற் பேரின்பத்தைக்காட்டி நாட்டுதல் என்பர். ஆழ்வார்க்குத் தலைமகளாகுந்தன்மை நேர்தற்கு ஏது - புருஷோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்கு முன் உலகமடங்கப் பெண்தன்மையதாதலும், ஜீவாத்மாவினது ஸ்வாதந்த்ரியமின்மையும், பாரதந்த்ரியமும் முதலியன, இந்நூலின் இரண்டாம்பாட்டுரையிற் காண்க. தண்டகாரணியவாசிகளான முனிவர் இராமபிரானது சௌந்தரியாதிசயத்தில் ஈடுபட்டுப் பெண்மைவிரும்பி மற்றொரு பிறப்பில் ஆய்மங்கையராய்க் கண்ணனைக் கூடினரென்ற ஐதிஹ்யமும் உண்டாக, "கண்ணனுக்கே, யாமது காமமறம் பொருள்வீடிதற்கென்றுரைத்தான், வாமனன்சீலன் இராமாநுசனிந்த மண்மிசையே" (இராமாநுசநூற்றந்தாதி) என்பதன்பொருளும் அறியற்பாலது.

இப்படிப்பட்ட பெருமையுடைய திருவிருத்தத்துக்குத் திருவாய்மொழிக்குப்போலவே பூர்வாசாரியர்கள் செய்தருளிய பலவியாக்கியானங்களும் அவற்றின் அரும்பதவுரைகள்பலவும் உள்ளனவென்று அறிந்து அவற்றையெல்லாந் தேடிப் பலபிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து ஒருங்கே பதிப்பித்து வெளியிடக்கருதி யாம் பத்துவருஷத்துக்குமுன் கிரந்தங்களைச் சேர்க்கத் தொடங்கியபோது, ஐந்துவியாக்கியானங்களும், மூன்று அரும்பதவுரைகளும் கிடைத்தன.

ஐந்துவியாக்கியானங்கள் - நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வாதிகேசரிஅழகியமணவாளசீயர், அப்பிள்ளை, பெரியபரகாலஸ்வாமி என்னும் இவர்கள் செய்தவை. அரும்பதவுரைகள் மூன்றும், பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தின் பொருளை விளக்குவன. அவற்றில் ஒன்று, அப்புவரையர் செய்தது, மற்றையிரண்டையும் செய்தவர் இன்னாரென்று தெரியவில்லை. பதினைந்தாம்பாட்டின் அப்புவரும்பதவுரையால், கோனப்பயங்கார்செய்த அரும்பத

வுரையும் ஒன்று உண்டென்றும், அது இம்மூன்றினும் வேறென்றுந் தெரிகிறது, அது எமக்குக் கிடைக்கவில்லை.

நம்பிள்ளையென்பவர், இராமாநுஜாசாரிய ரென்கிற ஸ்ரீபாஷ்யகாரருடைய பிரசிஷ்யரான பட்டரது சிஷ்யரான நஞ்சீயரை ஆசிரயித்தவர். இவர் ஒரு கிரந்தரூபமாக இவ்வியாக்கியானம் எழுதிவைத்தவரல்லர்; இவரது அந்தரங்கசிஷ்யரான வடக்குத்திருவீதிப்பிள்ளையென்பவர், இவர் பகலிலே உபந்யாஸஞ்செய்யும்பொழுது அதனைக்கேட்டு உள்ளத்தில் தரித்துவைத்துக்கொண்டு அப்படியே இரவில் ஒருபுஸ்தகரூபமாக எழுதித்தலைக்கட்டினது. இது இந்த வியாக்கியானத்துக்கு ஈடு என்றும் ஒரு பெயர் உண்டு. நம்பிள்ளை உபந்யாசமே யாதலாலும், நம்பிள்ளையினால் ஆமோதித்து அங்கீகரிக்கப்பட்ட தாதலாலும், இதனை நம்பிள்ளையீடு என்னத் தட்டில்லை. திருவாய்மொழியின் 'ஈடுமுப்பத்தாறாயிரப்படி' என்ற வியாக்கியானமும் இத்திறத்ததே. "தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை, வள்ளல் வடக்குத் திருவீதிப்—பிள்ளையிந்த, நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது, ஈடு முப்பத்தாறாயிரம்" (உபதேசரத்தினமாலை) என்பது காண்க. பெரிய திருமடல் முதலிய இன்னும் இரண்டொரு நூலுக்கு இவர்பெயரால் வழங்கும் வியாக்கியானங்களும் இத்தன்மையனவென்றே கொள்ளுதற்குரியன. இந்த வியாக்கியானம், மற்றை யெல்லா வியாக்கியானங்களினும் பெரியது.

பெரியவாச்சான்பிள்ளை யென்பவர், நம்பிள்ளைக்குப் பிரியசிஷ்யர். அவரது நியமனத்தினாலே திருவாய்மொழிக்கு 'இருபத்தினாலாயிரப்படி' என்ற வியாக்கியானமும், மற்றைமூவாயிரங்களுக்கும் வியாக்கியானமுஞ் செய்தருளினவர். "நம்பிள்ளை தம்முடைய நல்லருளாலேவியிட, பின் பெரியவாச்சான்பிள்ளை யதனால்—இன்பா, வருபத்திமாறன் மறைப்பொருளைச் சொன்னது, இருபத்துநாலாயிரம்," "பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்கும், தெரிய வியாக்கியைகள் செய்வால்—அரிய, அருளிச்செயற்பொருளை யாரியர்கட் கிப்போது, அருளிச்செய லாய்த்து அறிந்து" (உபதேசரத்தினமாலை) என்பன காண்க. பெரியவாச்சான்பிள்ளையொருவரே நாலாயிரத்துக்கும் மிக்க சுருக்கமும் மிக்கப்பெருக்கமு மல்லாமல் இடைநிகராகத் தக்க சிறந்த வியாக்கியானம் முதலில் இயற்றினவ ரென்று அறிக. இந்த வியாக்கியானம், மற்றை வியாக்கியானங்களினும் அரிதின் அறியப்படும் ஆழ்பொருளுடையது, மற்றைய வியாக்கியானங்களுக்கு அரும்பதவுரைகள் ஏற்படாமல் இவ்வொன்றுக்குமே நான்கு அரும்பதவுரைகள் ஏற்பட்டமை கொண்டும், இதனை அறியலாம். அந்த அரும்பதவுரைகளில், வியாக்கியான வாக்கியங்கள் சிற்சிலவற்றை ஸந்தேகமென்று குறித்திருக்கிறதும், இதன் அருமையை வற்புறுத்தும். வடக்குத்திருவீதிப்பிள்ளைபோலவே பெரியவாச்சான்பிள்ளையும் நம்பிள்ளையுபந்யாஸத்தையேகொண்டு வியாக்கியானம் அருளிச்செய்தவ ராதலால், கீழ்க்குறித்த ஈடும் இவர்வியாக்கியானமும் சிற்சிலவிடங்களில் பொருட்கருத்துக்களோடு சொல்லும் ஒத்திருக்கும், இங்ஙனம் இருத்தலை, இந்நூல் வியாக்கியானங்களின் பிற்பகுதியில் மிகுதியாகக் காணலாம்

அழகியமணவாளசீய ரென்பவர், பெரியவாச்சான்பிள்ளையினுடைய திருக்குமாரரான நயனாராச்சான்பிள்ளையினுடைய சிஷ்யர். தமது பிரசங்கசக்தியால் அந்யமதத்தாரை வென்று அவர்களாகிய யானைகளுக்குத் தாம் சிங்கம்போலுதலால், 'வாதிகேஸரி' என்னும் பட்டப்பெயரைப் பெற்றவர். திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படி வியாக்கியானம் அருளிச்செய்தவரும் இவரே. மற்றைய வியாக்கியானங்களிலும் ஸ்வாபதேசார்த்தம் அருளிச்செய்யப்பட்டிருந்தாலும், இவருடைய வியாக்கியானம் அவையெல்லாவற்றைக் காட்டிலும் விவரமாக விடாமல் நூல்முழுவதுக்கும் உள்ளுறைபொருளை

விளக்கியுள்ளதனால், 'ஸ்வாபதேசவுரை' என்று சிறப்புப்பெயர்பெறும் சொற்பொருள்விளக்கமும், மற்றைய வியாக்கியானங்களினும் இவருரையில் தெளிவாயிருக்கும். "அன்போ டழகிய மணவாளச் சீயர், பின்போரும் கற்றறிந்து பேசுகைக்காக—தன்பெரிய போதமுடன் மாறன் மறையின் பொருளுரைத்தது, ஏதமில் பன்னீராயிரம்" (உபதேசரத்தினமாலை) என்றதில் 'அன்போடு,' 'பின்போரும் கற்றறிந்து பேசுகைக்கா,' 'தன்பெரிய போதமுடன்,' 'ஏதமில்' எனக்கொண்டாடப்பட்டவாறும், 'இத்தையொழிய நாலு வியாக்கியானம் உண்டானாலும் சப்தார்த்தநிர்ணயத்துக்கு இத்தைக் கொண்டே ஸாதிக்கவேண்டியிறே' என்ற பிள்ளைலோகஞ்சீயருரையும் காணத்தக்கன

அப்பிள்ளையென்பவர், மணவாளமாமுனிகளது திருவடிகளை ஆசிரயித்த அஷ்டதிக்கஜங்களுள் ஒருவர். [அஷ்டதிக்கஜங்களென்று சிறப்பித்துக் கூறப்படுவோர்-வானமாமலைசீயர், திருமலை எம்பெருமானார்சீயர், பட்டர்பிரான்சீயர், கோயிற்கந்தாடையண்ணன், எறும்பியப்பா, அப்பிள்ளை, அப்பிள்ளார், பிரதிவாதிபயங்கரம் அண்ணன் என இவர்.]இவர் வியாக்கியானம், பெரும்பாலும் முற்கூறின வியாக்கியானங்களைத் தழுவிச் சொற்பொருளையும் ஸ்வாபதேசார்த்தத்தையும் சுருக்கமாகக் கூறுவது.

பெரியபரகாலஸ்வாமியென்பவர், சந்திரகிரி வேங்கட தேசிகரை ஆசிரயித்து அவருபதேசமுகத்தால் சாஸ்திரார்த்தங்களை அறிந்தவர். திருவாய்மொழிக்குப் பதினெண்ணாயிரப்படிவியாக்கியானஞ் செய்தருளியவர். இவர் வியாக்கியானம், பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தின் சாராம்சங்கள் சிலவற்றை எடுத்துக்கொண்டு வேறு சிலவற்றையுஞ் சேர்த்துச் சுருக்கமாக எழுதப்பட்டது.

மேற்குறித்த ஐந்துவியாக்கியானங்களுள் முந்தினநான்கும் தென்கலை சம்பிரதாயத்தையும், பிந்தியது வடகலைசம்பிரதாயத்தையும் அனுசரித்தவை

இவர்களேயன்றி நஞ்சீயரும் அழகியமணவாளப்பெருமாள்நாயனாரும் இந்நூலுக்கு வியாக்கியான மருளியிருக்கின்றன ரென்று கர்ண பரம்பரையாகக் கேள்விப்படினும் அவை தேடிப்பார்த்ததில் எமக்கு எங்கும் கிடைத்தில "நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு, எஞ்சாமை யாவைக்கு மில்லையே—தஞ்சீரால், வையகுருவின் தம்பி மன்னு மணவாளமுனி, செய்யுமவை தாமுஞ் சில" (உபதேசரத்தினமாலை) என்றதன் வியாக்கியானத்திலே, பிள்ளைலோகஞ்சீயர், திருப்பாவைக்கும் கண்ணிநுண்சிறுத்தாம்புக்கும் நஞ்சீயர் வியாக்கியானமும் அழகியமணவாளப்பெருமாள்நாயனார் வியாக்கியானமும் உள்ளனவென்று தாம் கண்டவற்றை வெளியிட்டிருந்ததலால், இந்நூலுக்கு அவர்கள் வியாக்கியானஞ் செய்தருளின ரென்று நிச்சயித்தற்கு இடமில்லாமையையும் உணர்க

இந்நூலின் முதற்பாசுரத்துக்கு, வேதாந்ததேசிகர், உபகாரசங்கிரகமென்னும் ரஹஸ்யத்தில் நிர்ணயாதிகாரத்தில் வியாக்கியானம் அருளிச்செய்திருக்கின்றனர்.

இந்நூலின் தனியனுக்கு(த் தென்கலைசம்பிரதாயத்தில்)பிள்ளைலோகஞ்சீயர் வியாக்கியானமும், (வடகலைசம்பிரதாயத்தில்) வாத்ஸ்ய அஹோபிலாசாரியர்வியாக்கியானமும், ஒரு ஸம்ஸ்கிருதவ்யாக்யானமும் கிடைத்தன

இங்குக்குறித்த ஐந்து வியாக்கியானங்கள் மூன்று அரும்பதவுரைகள் முதலிய அனைத்திலும் இந்நூலை அநேகஸ்ரீகோசங்களைக்கொண்டு பிழையறப் பரிசோதித்துப் பதிப்பிக்கத்தொடங்கி, பிரமாணங்களுக்கு ஆகரங்காட்டுகிற மேற்கோள்விளக்கத்துடன் அச்சிடுவித்து, ௧௱ - பாசுரங்களடங்கிய ௧௨௦ - பக்கமளவில், சிலவருஷங்களுக்குமுன் வெளிப்படுத்தினேம் அந்தக்

கிரந்தம் காரியாந்தரங்களினாலாகிய அவகாசக்குறைவாலும், மற்றுஞ்சில முட்டுப்பாட்டாலும், இதுவரை முடிவுபெறாமலிருப்பதைப்பற்றி மிக இரங்குவதோடு, கூடியவிரைவில் முடித்துப்பிரசுரித்தற்கு இடம்பொருளேவல்களையும் எம்பெருமான் திருவருளையும் எதிர்பார்த்துமிருக்கின்றோம். நிற்க.

வடமொழியுந்தென்மொழியும் விரவிய மணிப்பிரவாளநடையில் எழுதப்பட்டுள்ள இந்த வியாக்கியானங்கள் எல்லாவற்றையும் அரும்பதவுரைகளையுந் தழுவித் தமிழ்நடையில் ஓருரை இயற்றப்புகின் வெகுவிரிவாய்விடுமாதலால், அங்ஙனஞ்செய்யாது, அவற்றைப் பெரும்பாலுந் தழுவிச் சிறுபான்மை உசிதமாக வேறு சில விஷயங்களையும் புதிதாகச்சேர்த்து எமது சிற்றறிவிற்கு ஏற்ப இவ்வுரை ஒருவாறு எழுதி முடிக்கப்பட்டது.

இதில் அவசியமான பதப்பிரயோசனங்களையும், இன்றியமையாத இலக்கணக்குறிப்புக்களையும், முக்கியமான புராணகதைகளையும் எடுத்துக்காட்டிப் பதப்பொருள் கருத்து விசேஷார்த்தம் சொற்சுவை பொருட்சுவை யாப்பிலக்கணம் அணியிலக்கணம் முதலியவற்றை அங்கங்கே இனிது விளக்கியிருத்தலோடு, ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயங்களையும், அகப்பொருள்துறையிலக்கணவகைகளையும் விவரித்திருக்கின்றோம். அன்றி, பூர்வாசாரியர்களுடைய வியாக்கியானங்களின் வாக்கியங்களும் உரியஇடங்களில் இதில் எடுத்தாளப்பட்டுள்ளன; “முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவம்” (நன்னூல்) என்பது இலக்கணமாதலால்.

தொல்காப்பியத்துப் பொருளதிகாரம், இறையனாரகப்பொருள், திருக்கோவையார், திருக்குறள் காமத்துப்பால், தஞ்சைவாணன்கோவை என்பனவும், இவற்றின் உரைகளும், அம்பிகாபதிகோவையும், தணிகைப்புராணத்துக் களவுப்படலமும், மற்றைய திவ்வியப்பிரபந்தங்களும், அவற்றின் வியாக்கியானங்களும், அரும்பதவுரைகளும், இந்நூலின் துறைப்போக்கையும் மற்றுஞ்சில பொருள்களையும் விளக்குதற்குத் துணைநின்றன. இவற்றினின்று தக்கவிடங்களில் மேற்கோள்களும் காட்டியிருக்கின்றோம். நம்பியகப்பொருள் விளக்கம், வீரசோழியம், இலக்கணவிளக்கம், வெங்கைக்கோவை முதலிய சிலவற்றி னுதவியும் உண்டு.

திருக்கோவையார்க்கு உரைசெய்யத்தொடங்கிய நல்லறிவுடைய தொல்பேராசிரியர்தாமே (அந்நூலுரைப்பாயிரத்தில்) “பரமகாரணன் திருவருளதனால், திருவாதவூரமகிழ் செழுமறைமுனிவர், ஐம்பொறிகையிகந் தறிவா யறியாச், செம்புலச் செல்வ ராயின ராதலின், அறிவன் நூற்பொருளும் உலக நூல்வழக்கு மென, இருபொருளும் நுதலி எடுத்துக்கொண்டனர், ஆங்கவ் விரண்டனுள், ஆகமநூல்வழியின் நுதலியஞான, யோகநுண்பொருளினையுணர்த்துதற்கரிது, உலகநூல்வழியின் நுதலியபொருளெனும், அலகில் நீம்பாற் பரவைக்கண் எம், புலனெனுங் கொள்கலன் முகந்தவகை சிறிது, உரையாமரபின் உரைக்கற்பாற்று” என்றதனால், அந்நூலின் உட்கிடைப்பொருளேயன்றி வெளிப்படைப்பொருளும் உணர்த்துதற்கு எளியதன் றென்றன ரென்றால், அந்நூலோடொத்த இத்திருவிருத்தத்தின் ஸ்வாபதேசம் அந்யாபதேசம் என்னும் இருவகையர்த்தத்தையும் உள்ளபடி வெளியிடுதற்குச் சிற்றறிவுடைய சிறியோமாகிய யாமோ உரியோம்? அல்லோமாயினும், பூர்வாசாரியர்களது அருளிச்செயல்களையே பற்றுக்கோடாகக்கொண்டு இவ்வுரையை எழுதினோம். இதில் காணப்படுங் குற்றங் குறைகளைப் பெரியோர் தமது இயற்கை நற்குணத்தாற் பொறுத்தருளுமாறு பிரார்த்திக்கின்றோம்.

விகாரி ௵
ஆவணி ௴

வை-மு-ச.

ஸ்ரீ

ஆழ்வார்திருவடிகளே சரணம்

## திருவிருத்த நூலாசிரியராகிய

# நம்மாழ்வாரது வரலாறு.*

ஸ்ரீவைஷ்ணவசமயத்திற் சிறந்த மெய்யடியார்களென்று கொண்டாடப்படுகிற **ஆழ்வார்கள், பன்னிருவர்.** புறவிருளொழிக்கிற துவாதசாதித்தரினும் பெருமைபெற்று அகவிருளொழித்த இவர்களுடைய சரித விபவங்கள், அநந்தம். அவை - வடமொழியில் பிரமாண்டம் பாத்மம் மார்க்கண்டேயம் என்ற புராணங்களிலும், பார்க்கவம் வ்ருத்தபாத்மம் பரவ்ருத்தபாத்மம் என்ற உபபுராணங்களிலும் எதிகாலவரலாறுகளை விவரிக்குமிடத்துக் கூறப்பட்டுள்ளனவாகப் பிரசித்தமாயிருத்தல்மாத்திரமன்றி, திவ்யசூரிசரிதம் பரபந்நாம்ருதம் என்ற வடநூல்களிலும், குருபரம்பராப்பிரபாவங்களென்கிற மணிப்பிரவாளக்கிரந்தங்களிலும், பிரபந்தசாரம் உபதேசரத்தினமாலை என்னுந் தமிழ்ப்பிரபந்தங்களிலும், பெருக்கமாகவுஞ் சுருக்கமாகவுங் காணப்படுகின்றன. இவற்றிற் கூறப்படாமல் பிறநூல்களாலும் காணபரம்பரையாலுமே அறியத்தக்க ஐதிகியங்களும் அநேகம் உண்டு

இவையனைத்திலுமுள்ள சரித்திரங்களையெல்லாம் ஒருங்கேயெடுத்து விரிவாக எழுதத்தொடங்கின் மிகப்பெருகுமாதலால், தொகுத்துச் சுருக்கமாக எழுதப்படுகிறது, இது.

எல்லாவுலகங்களினும் மேம்பட்டு மேலிடத்திலுள்ளதாய், ஒப்புயர்வின்றி விளங்கும் இயற்கைப்பேரொளியுடையதாய், கமலக்கண்ணனது கருணைப்பெருக்கின் வடிவமான விரசையென்னும் விமலநதியை எல்லையாகப்பெற்றதாய், † "சிறுகாலையிலா நிலையோ திரியா, குறுகா நெடுகா குணம்வேறுபடா, வுறுகால்கிளர்பூதமெலாமுகினும், மறுகா நெறி" என்றபடி கலை முகூர்த்தம் முதலிய காலபரிணாமங்களும் நிலைவேறுபாடும் சுருக்கமும் பெருக்கமும் குணவேற்றுமையும் உற்பத்திவிநாசங்களும் இன்றி என்றுமொருபடிப்பட்டிருப்பதாய், அந்தமில்பேரின்பத்தை யனுபவிக்குமிடமாய், மனமொழிமெய்களுக்கு எட்டாத மகிமையுடையது, பரமபதமென்கிற திவ்வியலோகம்.

அங்கு, ஸ்ரீவைகுண்டநகரிலே, செம்பொன்செய்கோயிலிலே, திருமாமணிமண்டபத்திலே, ‡ "சென்றாற்குடையா மிருந்தாற்சிங்காதனமாம், நின்றால்மரவடியாம் நீள்கடலுள்—என்றும், புணையா மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும், அணையாந் திருமாற்கு அரவு" என்றபடி சகலவிதகைங்கரியங்களைச்செய்கிற ஆதிசேஷனது சொரூபமான சீரியசிங்காதனத்திலே, ஸ்ரீ பூமி நீளைகளென்னுந் தேவிமார்மூவரோடுங் கூடி வீற்றிருந்து, நித்தியமுக்தர்களுக்கு நிரதிசயஆனந்தத்தை அனுபவிப்பித்தருளுகிற சகல கல்யாண குணகண பரிபூர்ணனான சர்வேசுவரன், திரிபாதவிபூதியாகிய அந்தப்பரமபதத்தி

---

* இது, யாம் எழுதி வெளியிட்டுள்ள **'ஆழ்வார்கள்சரித்திரம்'** என்ற வசனநூலிலிருந்து எடுத்தது.

†கம்பராமாயணம்-ஆரணியகாண்டம்-சரபங்கர்பிறப்புநீங்குபடலம்-௨0.

‡ இயற்பா - முதல்திருவந்தாதி - ௫௩

னுள்ளார் எப்பொழுதும் பரமசுகத்தையே நுகர்ந்துவருதல்போல அவ்வுலகத்துக்குக்கீழ்ப்பட்டுள்ள லீலாவிபூதியாகிய சகலலோகங்களிலுமுள்ள பல்லுயிர்களும் தம்தம்முயற்சியால் அப்பெரும்பதவியையடைந்து இன்புற்றுவாழலாம்படியிருக்க, அங்ஙனஞ்செய்யாது, தன்னைத் தரிசித்தல் தொழுதல் சேர்தல் தியானித்தல் துதித்தல் முதலிய பணிவிடைகளைப் புரிந்து ஈடேறும்பொருட்டுத் தன்னாற்கொடுத்தருளப்பட்ட கண் கை கால் மனம் வாய் முதலிய அவயவங்களை அவ்வத்தொழிலில் உபயோகித்து உய்வுபெறாமல், சமித்துவெட்டிவருதற்குக் கொடுத்த வாளைக்கொண்டு அதுசெய்யாது பசுவின் வாலைத் தறிப்பார்போலவும், களைபறிக்கக்கொடுத்த கருவியைக்கொண்டு அஃதாற்றாது கண்ணைக் கலக்கிக்கொள்வார்போலவும், ஆறுகடந்துகரையேறுமாறுகொடுத்த புணையைக்கொண்டு அதுபுரியாது அநர்த்தப்பெருக்குவழியாற் கடலிடைப்புக்கிடுவார்போலவும், அவ்வுறுப்புக்களைச் சப்தாதி விஷயாந்தரங்களிலே செலவிட்டு, *மாரனார்வரிவெஞ்சிலைக்கு ஆட்செய்து, †மாறிமாறிப்பலபிறப்பும்பிறந்து இறந்து, கரையில்லாதகரும்பெருங்கடலினுள் அமிழ்ந்து வருந்தி அலைவதை, உற்றுநோக்கி, அவ்வான்மாக்களையும் அழிவில்வீட்டை யடைவிக்கவேண்டுமென்று இயல்பாகவெழுந்த பரமகிருபையாலே, அவ்வுயிர்கள் நல்வழிதீவழிகளை நன்குபகுத்துணர்ந்து நடக்குமாற்றை அறிவித்தற்பொருட்டு, தன்கட்டளைரூபமான வேதங்களை வெளியிட்டருளி, அரியபெரிய அவ்வேதங்களின் ஆழ்ந்தமறைபொருள்களைச் சிலவாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய சேதனர் ஐயந்திரிபறத் தெள்ளிதில்தெரிந்துகொள்ளுதற்கு உபயோகமாம்படி அவற்றிற்கு அங்கமான அநேகசாஸ்திரங்களையும் முனிவர் முதலானோரைக்கொண்டு பிரகாசிப்பித்தான்.

பேரிருளிலேதிரிவார்க்குப் பொருள்விளக்கம்பிறக்குமாறு கைவிளக்குக்கொடுத்தாற்போல, அநாதியஜ்ஞாநாந்தகாரத்தில் அகப்பட்டவர்க்கு ஆத்தஜ்ஞாநப்பிரகாசமுண்டாகுமாறு இப்படி சாஸ்திரதீபத்தைக் காட்டிக்கொடுக்கவும், விழியிலார்க்கு விளக்குப் பயன்படாதவாறுபோல, பகவத்பக்தியாகிற சித்தாஞ்சநத்தால் ‡நெஞ்சென்னும் உட்கண்ணின் குருடு தீராத உலகத்தார்பலர்க்கு அந்தப்பிரமாணப்பிரதீபமும் முழுப்பயன்படாதாயிற்று. அவர்கள் சாஸ்திரங்களின்சித்தாந்தத்தைத் தீரத்தெளிய ஆய்ந்து ஓய்ந்து உணராமல் நுனிப்புல்மேய்ச்சலாக மேல்நோக்காய்ப்பார்த்தறிந்து நிலையில்லாதவற்றை நிலையுடையனவென்றும் நிலையினவற்றை நிலையிலவென்றும் விபரீதமாகத்துணிந்து தர்மார்த்தகாமங்களில் அதியபிமுகரும் மோக்ஷத்தில் அதிவிமுகருமாய் அழிந்துபோவதை ஆலோசித்து, தயாசிந்துவான தாமோதரன், தன்ஆணைசெல்லாத இடங்களில் அரசன் தானே நேரிற்சென்று தண்டம் நடத்துதல்போலவும், கிணற்றினுள்வீழ்ந்த குழந்தையை யெடுக்கத் தாய் தானும் அதனுட் குதித்தல்போலவும், தானே ராமகிருஷ்ணாதிரூபத்தால் §ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்து இங்குப்பிறந்து பரத்துவத்தை இருந்ததுதெரியாதபடி விட்டுச் சௌலப்பியத்தையே தலைமைக்குணமாகக்கொண்டு உலகத்தோடொத்துவாழ்ந்து துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்து அறத்தை நிலைநிறுத்தித் தன்வடிவழகாலும் உபதேசமுகத்தாலும் அநுட்டானமூலமாகவும் பிரசைகளைத் தன்வசப்படுத்தத் தொடங்கியவளவிலும், பலர், அநாதிகர்மவாசனையாலே சீர்திருந்தாமல் அத்திருவவதாரமூர்த்திகளிடத்தும் மநுஷ்யபுத்தியையேபண்ணித் தம்மைப்போலவே அவர்களைப்

* பெருமாள்திருமொழி - மூன்றாந்திருப்பதிகம் - ௩.
† திருவாய்மொழி - பதினாறாந்திருப்பதிகம் - அ.
‡ இயற்பா - பெரியதிருவந்தாதி - உஅ.
§ திருவாய்மொழி - இருபத்தைந்தாந்திருப்பதிகம் - ரு.

பாவித்து எதிரம்பு கோத்துப் போருக்குநின்றும் *கேட்பார்செவிசுடு கீழ்மைவசைகளையே வைதும் விசுவரூபத்தையுமுட்பட இந்திரசாலமென்று இகழ்ந்தும் அத்மகதிகளை அடையலாயினர்.

அதுகண்டு திருமால் திருவுள்ளமிரங்கி 'இனி இவர்களை வசீகரித்தற்கு வழி யாதோ?'என்று திருமகளோடு நீர்க்காலோசனை செய்து, 'தீபங்காட்டி மிருகம்பிடிப்பார்போல், இவர்களினத்தவரென்னலாம்படியான சேதநரைக் கொண்டு இவர்களைக் கைப்பற்றுவதே உத்தமமாகிய உபாயம்' என நிச்சயித்து, ஸ்ரீபூமிநீளாதேவிகளையும் ஸ்ரீபஞ்சாயுதங்களையும் ஸ்ரீவத்ஸகௌஸ்துபவநமாலாதி சின்னங்களையும் அநந்தகருடவிஷ்வக்ஸேநாதியரையும் பார்த்து 'நீங்கள் ஏற்றபடி பூலோகத்தில் பலசாதிகளிலும் பிறந்து பிரபஞ்சத்தவரைப் பிறவிப்பெருங்கடலினின்றுகரையேற்றி வாருங்கள்' என்றுகட்டளையிட்டு அனுப்ப, அவர்கள் அப்பணியைச் சிரமேற்கொண்டு ஆழ்வாராதியராக அவதரித்தார்கள்.

இவர்கள், பகவானுடைய சகலமங்களகுணங்களாகிய அமுதவெள்ளத்திலே முழுகி மிகவுமீடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுபவராதலால்,இவர்களுக்கு '**ஆழ்வார்**' என்று திருநாமம்.

இவர்கள், இருடிகள்போலத் தாமாகமிகமுயன்று தத்துவஞானத்தைப் பெறுதலின்றி, எம்பெருமான் தானேவந்து தன்னைக் காட்டிக்கொடுக்கக் கண்டு, ஞானபக்திவைராக்கியங்களை எளிதிற்பெற்று, சிலர்க்கு விலக்காக மறுக்கப்படுகிற வேதம்போலவன்றி யாவர்க்கும் ஒருங்கே உதவும்படி சகலவேதவேதாங்கரகசியார்த்தங்களைத் தமிழ்த்திவ்வியப்பிரபந்தங்களாக அருளிச்செய்து தம்முடைய அநுபவத்தைப் பிறர்க்குப்போதித்து உலகத்தை வாழ்வித்தருளுதலால், கூறுதற்கரிய வீறு பெறுவர்.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் என ஆழ்வார்கள் பதின்மர். திருமாலின் வேறு தசாவதாரமென்னலாம்படியான மகிமையுடைய இவர்களது திருவவதாரக்கிரமம்,

† "பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
ஐயன் அருள்மாறன் சேரலர்கோன்—துய்யபட்ட
நாதன் அன்பர்தாள்தூளி நற்பாணன் நன்கலியன்
ஈதிவர்தோற்றத்தடைவா மிங்கு"என்று முறைமைபெற்றிருக்கும்.

நம்மாழ்வாரது சிஷ்யரான மதுரகவியையும், பெரியாழ்வாரது பெண்பிள்ளையான ஆண்டாளையுங் கூட்டி ஆழ்வார்கள் பன்னிருவரென்பது, சம்பிரதாயம்.

இனி, நம்மாழ்வார் சரித்திரம் வருமாறு.—

‡ "பூழியர்கோன் தென்னாடு முத்துடைத்து" என்ற முதியார்மொழியின்படி முத்துவளத்தை மிகுதியாகவுடையதும், செந்தமிழ்நாடென்று சிறப்

* திருவாய்மொழி - அறுபத்தைந்தாந்திருப்பதிகம் - ௯

† உபதேசரத்தினமாலை - ௪.

‡ "வேழ முடைத்து மலைநாடு மேதக்க,சோழ வளநாடு சோறுடைத்துப் - பூழியர்கோன், தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை, நன்னாடு சான்றோ ருடைத்து".—ஔவையார்தனிப்பாடல்.

புற்றதும், * "ஈரொன்பதாம் பாண்டி" என்றவாறு பதினெட்டுத்திருப்பதிக ளையுடையது மான பாண்டியநாட்டிலே, கங்கை யமுனை முதலிய புண்ணிய நதிகள்பலவற்றினும் மகிமையுடைய தாமிரபாணியென்னும் பொருநையா ற்றின் கரையிலே, திருநகரி யென்பது ஒரு திவ்யதேசம் அத் திருக்குரு கூரிலே வேளாளவருணத்திலே வம்சபரம்பரையாகத் திருமாலடிக்கே தொண்டுபூண்டொழுகுஞ் சிறந்தகுலத்திலே திருவழுதிவளநாட ரென்னும் பாகவதரது புத்திரரான அறந்தாங்கியா ரென்ற சக்கரபாணியாரது தனயரா கிய அச்சுதரைத் தந்தையாகவுடையவர் செந்தாமரைக்கண்ணர். அவர்பாலு தித்த செங்கண்ணரது குமாரரான பொற்காரியார், தம்புதல்வராயத்தோ ன்றிய காரியாருக்குக்கலியாணஞ்செய்விக்கக்கருதி மலைநாட்டிலுதிருவண் பரிசாரமென்னுந் திருப்பதியி லுள்ள திருவாழுமார்பரென்னும் பகவத்பக்த ரது தநயையாள உடையநங்கையாரை மணம்பேசி முடிக்க, பின்பு இருவா க்கும் அவ்வூரில் வெகுசம்பிரமமாக விவாகமகோற்சவம் நடந்தேறிற்று. பின் னர் இத்தம்பதிகள் திருக்குருகூருக்கு வந்து சிறப்பாகப் பலவாண்டு இல்ல றம் நடத்திவருகையில், ஒருநாள், மாமனார்வேண்டுகோளின்படி, காரியார், தம் துவாழ்க்கைத்துணைவியுடனே திருவண்பரிசாரத்தை யடைந்து அங்குச் சில காலம் வசித்திருந்தார்; பிறகு தம்துஇல்லாளோடு தம்மூருக்கு மீண்டுவரு கையில், திருக்குறுங்குடியென்னுந் திருப்பதியை யடைந்து அங்கெழுந்தரு ளியிருக்கிற நம்பி யென்னுந் திருநாமமுடைய எம்பெருமானை வந்தித்து வாழ்த்தி 'அடியேங்களுக்கு ஒரு மகப்பேற்றை அளித்தருளவேணும்'என்று பிரார்த்திக்க, அவ்வாறோதி 'நாமே வந்துபிறக்கிறோம்' என்று பெருங்க ருணையோடு ஆச்சகமுகமாகச் சொல்லியருளித் தனது தீர்த்தம் திருமாலை திருப்பரியட்டம் முதலியவற்றைப் பிரசாதித்தருளினன். இங்ஙனம் பெற்ற அவர் திருநகரியிற் சென்று வாழ்கையில், உடையநங்கையார்கருப்பவதியாக, அவரது திருவயிற்றினின்று, பகவானது அம்சமும் ஸ்ரீகௌஸ்துபத்தி னது அம்சமும் சேனைமுதலியாரது அம்சமுமாக, ஒருகுமாரர், வைகாசிவிசா கத்திலே† திருவவதரித்தார்.

இப்படி ஒருவர் மூவரதுஅம்சமாக இருக்கக்கூடுமோ' என்னில்,—சக்க ரவர்த்தியான அரசன் அஷ்டதிக்பாலகர்களின் அம்சங்கள் கூடிப் பிறந்தவ னென்றும், ‡ இளையபெருமாளும் § நம்பிமூத்தபிரானும் தனித்தனி ஆதிசே ஷாம்சத்தோடு பகவானதுஅம்சமும் பொருந்தியவ ரென்றும், அநுமான் வாயுவின் அம்சத்துடன் ருத்திராம்சமு முடையவ ரென்றும் நூல்கள் கூறு கையால், அவைபோலவே இதுவும் ஒக்கு மென்க.

இப்படி பகவான் அவதாரஞ்செய்தற்குமுன்னமே, அவனுக்குப் பலவா றுாலும் அடிமைசெய்தலையே உறுதொழிலாகக்கொண்ட திருவனந்தாழ் வான், இக்குமாரர்மீது வெயில்மழைமுதலியன படாதிருக்குமாறு ஒருபெரிய புளியமரமாக வந்து அவதரித்திருந்தார்.

நம்பிதந்தருளினவரத்தின்படியுதித்த குமாரர் பிறந்தபொழுதேதொட ங்கி அழுதல் பாலுண்ணுதல் முதலிய லோகவியாபாரமொன்று மின்றியும்

---

* "ஈரிருபதாஞ் சோழ மீரொன்பதாம் பாண்டி, யோர்பதின்மூன்றும் மலைநா டோரிரண்டாஞ்- சீர்நடுநா டாறோடெட்டு தொண்டை யவ்வடநா டாறிரண்டு, கூறுதிருநா டொன்றாக் கொள்".—நூற்றெட்டுத்திருப்பதியந் தாதி - பாயிரம் - அ.

† 'கலியுகம்பிறந்த நாற்பத்துமூன்றாநாளான பிரமாதிவருஷத்து வை காசிமாதத்துப் பௌர்ணமி கூடின வெள்ளிக்கிழமையில் கடகலக்கினத் தில்' என்று விவரங் காண்க இப்பொழுது நடப்பது, கலியுகவருஷம்- ருOOக.

‡ லக்ஷ்மணன் § பலராமன்.

வாட்டமில்லாது பரிபூர்ணராயிருக்கிற அதிசயத்தைக் கண்டு தாய்தந்தையர் எம்பெருமான்பக்கலிலே பாரத்தை வைத்திட்டுத் தாம் சிறிதுங்கவலைப்படாமல் பிறந்தபன்னிரண்டாநாளில் அத்திருநகரியிலுள்ள திருக்கோயிலுக்கு அக்குழந்தையை யெடுத்துக்கொண்டுபோய் அங்கு எழுந்தருளியிருக்கிற பொலிந்துநின்றபிரானைச் சேவிக்கப் பண்ணுவித்து, அப்பெருமானது திருமுன்பே, அந்தத்தெய்வக்குழந்தைக்கு, உலகநடைக்கு மாறாக விருந்ததனால் '**மாறன்**' என்று திருநாமஞ்சாத்தி, அருகிலிருந்த திருப்புளியமரத்தினடியிலே *ஆணிப்பொன்னாற் செய்த வண்ணச்சிறுத்தொட்டிலிலே வளர்த்தி ஓம்பிவந்தார்கள்.

கர்ப்பத்திலிருக்கும்பொழுது ஞானமுடையனவாயிருக்கிற குழந்தைகளைப் பிறந்தவுடனே தனதுபரிசத்தால் அஜ்ஞானத்துக்குஉள்ளாக்கி அழுதல் அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந்தன்மையதான சடமென்னும்வாயு இவரையும் பிறந்தபொழுது தொடுதற்குவர, அப்பொழுது இவர் அதனை உங்காரத்தால் ஒறுத்து ஓட்டி ஒழித்ததனால், இவர்க்கு '**சடகோபர்**' என்று திருநாமமாயிற்று.

†"நஞ்சடகோபனைப்பாடினையோவென நம்பெருமாள் விஞ்சியவாதரத்தாற்கேட்ப" என்றபின்புள்ளாருங்கொண்டாடும்படி இவர் நம்பெருமாளால் 'நம்ஆழ்வார்' என்று அபிமானித்து விசேஷகடாக்ஷஞ்செய்யப்பட்டு மற்றை யாழ்வார்களனைவரினும் உயர்வு பெற்றதனால், '**நம்மாழ்வார்**' என்று ஒரு திருப்பெயர் பெற்றனர்.

இப்படிப்பட்ட ஆழ்வார் பதினாறுபிராயமளவும் கண்விழியாமல் மௌனத்தோடு எழுந்தருளியிருக்க, அதுநோக்கிய நங்கையாரும் அவர்கொழுநரும் 'இவர், தம்மைப்போன்ற நிலையுடையாரெவரையும் உலகத்தில் காணாமையால், யாரோடும் பேசாமலிருக்கிறார்' என்று அறியாமல், 'எம்பெருமான் விஷயத்தில் நாம் செய்த அபராதம் ஏதேனும் உண்டோ?' என்று கருதிக் கலங்கியிருந்தனர்.

அப்பொழுது பரமபதநாதனது நியமனத்தால் சேனைத்தலைவர் ஏகாந்தமாக எழுந்தருளி இவருக்குத் ‡திருவிலச்சினைசெய்து சகல மந்திரார்த்தங்களையும் உபதேசித்தருளினர்.

இப்படிபெற்ற இவர் பதினாறுகலைகளுமநிறைந்த சந்திரன்போலப் பதினாறுபருவமநிரம்பி உறங்காப்புளிநிழலிலே பதுமாசனங்கொண்டு வீற்றிருந்து பரதத்துவத்தைத் தியானஞ்செய்து ஞானமுத்திரைகைக்கொண்டிருந்த காலத்தில், திவ்யதேசயாத்திரையாகச் சென்றிருந்த **மதுரகவியாழ்வார்**, இவரது வைபவத்தைக் கேட்டும் இவரது திவ்யவொளியைக் கண்டும் திருவயோத்தியினின்று புறப்பட்டு வந்து அருகிலநின்று இவர்க்கு 'உணர்ச்சி உளதோ? இலதோ?' என்று சோதிக்கும்பொருட்டு இவர்முன்னிலையிலே ஒரு சிறுகல்லை யெடுத்துப்போகட, அதுவிழுந்தவொலியைக்கேட்டவுடனே இவர் திருக்கண்களைவிழித்துப் பார்த்தருளினர். உடனே மதுரகவிகள் 'இவர்க்கு வாக்கு உண்டோ? இன்றோ? அறிவோம்' என்று எண்ணி இவரைநோக்கி 'அசித்தாகிய சரீரத்திலே அணுவளவினதான ஆத்துமா சம்பந்தித்தால், அது எதை அனுபவித்து எங்கு இருக்கும்?' என்னுங்கருத்தமைத்து 'செத்தத

* பெரியாழ்வார் திருமொழி - மூன்றாந்திருப்பதிகம் - க

† சடகோபரந்தாதி - பாயிரம் - ௩

‡ பஞ்சஸம்ஸ்காரம்.

தின்வயிற்றில் சிறியது பிறந்தால்,* எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?’ என்று வினவ, ஆழ்வார் ‘அச்சரீரத்தைச் சார்ந்த சுகதுக்கங்களை அனுபவித்துக் கொண்டு அதனையே ஆசிரயித்திருக்கும்’ என்ற கருத்தையமைத்து † ‘அத்தைத் தின்று அங்கேகிடக்கும்’ என்று விடையருளிச்செய்தார். அதுகேட்டு மதுர கவிகள் மிகமகிழ்ந்து சடகோபமுனிவரது ஞானத்தைக்கொண்டாடி இவரை யடைந்து தாமகடைத்தேறக்கருதி, இவர் திருவடிகளிலே சாஷ்டாங்கப்பிர ணாமமாகத் தாளூந்தடக்கையுங்கூப்பிவிழுந்து தண்டனிட்டு இவரது இணை யடித்தாமரைகளைத் தியானித்தலும் திருநாமங்களை வழுத்துதலும் செய்து கொண்டு இவரை ஆசிரயித்து ‘அடியேனுக்குத் தத்வஹிதபுருஷார்த்தங்களை விளக்கியருளவேண்டும்’ என்று பிரார்த்தித்தார்.

அவ்வாறிருக்கையில், ஸ்ரீவைகுண்டநாதன் ஆழ்வாரது ஞானக்கண்ணுக்குச் சேவைசாதிக்கத் திருவுளங்கொண்டவளவிலே, பெரியதிருவடியுந்தனது ‡ பக்ஷபாதந்தோன்றமுன்வந்துநிற்றலும், பெருமான் பிரியாப்பிரியமுடைய பிராட்டியுடனே கருடவாகநாரூடனாய் எழுந்தருளி எதிர்வந்துநிற்க, § “கருமுகில் தாமரைக்காடுபூத்து நீடிருசுடரிருபுறத்தேந்தி யேடவிழ்திருவொடும் பொலிய ஓர்செம்பொற்குன்றின்மேல்வருவபோல் கலுழன்மேல்வந்துதோன்றிய” அம்முகில்வண்ணனது திருமேனியழகைச் சேவித்துக் கண்கள் ஆனந்த வருவிசொரிய உடம்பு உரோமாஞ்சங்கொள்ள ஆனந்தவெள்ளத்தில் ஆழ்ந்தார். அநந்தரம் நூற்றெட்டுத்திருப்பதியெம்பெருமான்களும் அங்கு எழுந்தருளிக் காட்சிகொடுக்க, அவர்களைத் தரிசித்து அவர்கள் திவ்யகுணங்களை அனுபவித்து அவ்வனுபவத்தாலுண்டானப்ரீதி உள்ளடங்காமல் அதனைப் பிரபந்தமுகமாக வெளியிடக்கருதி, நான்குவேதங்களுள் இருக்கு, யசுர், அதர்வணம் என்ற மூன்றுவேதங்களின் சாரார்த்தத்தைத் **திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி** யென்ற மூன்றுபிரபந்தங்களின்மூலமாக வெளியிட்டு, அவ்வேதங்களுட்சிறந்ததும் பகவானதுசொரூபமாகவேயுள்ளதுமான சாமவேதத்தின் தத்துவப்பொருளைச் சரமப்பிரபந்தமான **திருவாய்மொழி** யால் அருளிச்செய்து, அவற்றை மதுரகவிகளுக்கு உபதேசித்தருளினார்.

அக்காலத்தில் நித்தியசூரிகளும் சுவேதத்துவீபவாசிகளான ஸ்ரீவைஷ்ணவசிரேஷ்டர்களும் காரிமாறப்பிரானது மகிமையைக் காணும்பொருட்டு முன்வந்துசேர, அவர்களைத் தமதுபிரபந்தத்திலே ‖ “பொலிக பொலிக” என்று வாழ்த்தியருளினார்.

தம்பக்கல் திருவுள்ளமுவந்து பொலிந்துநின்றபிரான்பிரசாதித்தருளின மகிழமலர்மாலையைத் தரித்ததனால் ‘**வகுளாபரணர்**’ என்றும், பிறமதங்களாகிய யானைகளைத் தமதுபிரபந்தங்களிற்கூறிய தத்துவார்த்தங்களாற் செருக்கடக்கி அவற்றிற்கு மாவெட்டியெனனுங்கருவிபோல இருத்தலால் ‘**பராங்குசர்**’ என்றுந் திருநாமம்பெற்ற **குருகைப்பிரான்**, பரப்பிரஹ்மஸ்வரூபமும் ஜீவாத்மாவினதுதன்மையும் பரமாத்மாவையடையுமுபாயமும் அங்ஙனம்

---

* ‘சிறியதின்வயிற்றிற்பெரியதுபிறந்தால்’ என்றுபாடமோதி, ‘அணுரூபமானசீவனிடத்து விபுரூபமான ஞானவிகாசம் உண்டானால் எதைஅனுபவயோக்கியமாகக்கொண்டெங்குச்சேரும்?’ என்று பொருளுரைப்பாரும் உளர்.

† ‘அத்தைத்தின்று அங்கேகிடக்கும்’ என்பதற்கு - ‘அகாரவாச்சியமான பரப்பிரஹ்மத்தை அனுபவித்து அதன்பக்கலிலே பற்றும்’ என்று பொருளுரைத்தலும் உண்டு.

‡ பக்ஷபாதம் - சிறகடித்தலும், மிக்கஅன்பும்.

§ கம்பராமாயணம் - பாலகாண்டம் - திருவவதாரப்படலம் - கங.

‖ திருவாய்மொழி - நாற்பத்திரண்டாந்திருப்பதிகம் - க.

அடைதலின் பயனும் அச்சரணாகதிக்குப்பகையும் என்று சகலவேதசாஸ்திரங்களிலுமசாரமாகச்சொல்லப்பட்ட அர்த்தபஞ்சகத்தையும், மந்திரசிரேஷ்டமான த்வயமென்னும் சரணாகதிமந்திரத்தின் அர்த்தத்தையும் பிரபந்தரூபமாக யாவரும் எளிதில் அறியத் தெரிவித்தருளி,

* "நளிர்மதிச்சடையனுநான்முகக்கடவுளுந்
தளிரொளியிமையவர் தலைவனுமுதலா
யாவகையுலகமும்யாவருமகப்பட
நிலநீர்தீகாலசுடரிருவிசும்பு
மலர்சுடர்பிறவுஞ்சிறிதுடன்மயங்க
வொருபொருள்புறப்பாடின்றிமுழுவது
மகப்படக்கரந்தோராலிலைச்சேர்ந்தவெம்
பெருமாமாயனையல்ல
தொருமாதெய்வமற்றுடையமோயாமே"

என்று தமது சித்தாந்தத்தின் தத்துவத்தை நன்குவெளியிட்டு, தமதுவாழ்நாள்முழுவதிலும் பிறிதொன்றிற் சிந்தைசெலுத்தாது பரமனையே சிந்தித்து, பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகளை யுடையராய்க்கொண்டு உலகநடையாட்டஞ் சற்றுந்தொடராது **முப்பத்தைந்து திருநக்ஷத்திரம்**† வாழ்ந்திருந்து, அப்பால், இமையவர் எதிர்கொள்ள, கின்னரகந்தருவர்தியர் கீதம்பாட, தேவர்கள் தோத்திரஞ்செய்ய, வைகுந்தமாநகர் புக்கு, திருமாமணிமண்டபத்தில் அந்தமில்பேரின்பத்தில் அமர்ந்தனர்.

இவர், மற்றையாழ்வார்கள்போல இவ்வுலகவுணர்ச்சிநடையாடாநிற்க எம்பிரானருளால் ஒருகாலவிசேடத்தில் தத்துவஞானமுதலியனதோன்றப்பெற்று அனுபவித்தவரன்றி, திருத்துழாய் பரிமளத்தோடே அங்குரிக்குமாபோலே அவதரிக்கும்பொழுதே இயற்கையில் ஞானபக்திகளையுடையராய அந்நிலை என்றும் மாறாதிருந்ததனால், தலைவராகக் கூறப்படுவர். இதுவே, இவரை அவயவியாகவும், மற்றையாழ்வார்களை இவர்க்கு அவயவமாகவும் நிரூபித்தற்கு ஏற்ற காரணமாம்.

அங்ஙனம் உருவகப்படுத்துமிடத்து, இவருக்கு, பூதத்தாழ்வாரைச் சிரமாகவும், பொய்கைப்பேயாழ்வார்களைக் கண்களாகவும், பெரியாழ்வாரை முகமாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும், குலசேகராழ்வாரையும் திருப்பாணாழ்வாரையுங் கைகளாகவும், தொண்டரடிப்பொடியாழ்வாரை மார்பாகவும், திருமங்கையாழ்வாரைக் கொப்பூழாகவும், மதுரகவியாழ்வாரைப் பாதமாகவும் உரைப்பது, மரபு.

இப்படி ஒப்புயர்வற்ற இவ்வாழ்வார் எம்பெருமானது திருவடிகளுக்கு மிகவும் அந்தரங்கராக இருந்ததனால், பெருமாளது பாதுகை, '**ஸ்ரீசடகோபம்**' என்று இவரது திருநாமத்தை யிட்டு வழங்கப்படுகிறது.

‡ "தனமாகுசிலர்க்குத்தவமாகுசிலர்க்குத்தருமநிறை
கனமாகுசிலர்க்கத்தற்காரணமாகுசிலர்க்காரணத்தி
னினமாகுசிலர்க்கத்தற்கெல்லையுமாந்தொல்லையோவகுள
வனமாலையெம்பெருமான்குருகூர்மன்னன்வாய்மொழியே."

---

* இயற்பா - திருவாசிரியம் - ௭.
† திருநக்ஷத்திரம் - பிராயம்.
‡ சடகோபரந்தாதி - ௬.

# நம்மாழ்வார்க்கு அந்தரங்கரான

# மதுரகவியாழ்வாரது வரலாறு. *

சந்தனப்பொதியச் செந்தமிழ்த்தடவரையை யுடைய தென்னாட்டிலே, நம்மாழ்வாரவதாரஸ்தலமான திருக்குருகூருக்கு அருகிலுள்ளதும் வைத்த மாநிதிப்பெருமாள் கண்வளர்ந்தருளுந் திவ்வியதலமு மான †தென்றிசைத் திலதமனைய **திருக்கோளூரிலே, சித்திரைமாதத்தில், சித்திரைநக்ஷத்திரத்திலே‡**, கணேசரான குமுதரது அம்சமும் கருடாழ்வானது அம்சமு மாய், ஒருவர், ஒரு முன்குடுமிப்பிராமணருக்குப் புத்திரராய் அவதரித்தார். சூரியோதயத்துக்குமுன் கிழக்கில் காணப்படுகிற அருணோதயம் போலப் பராங்குசர் உதித்தற்குமுன் தென்றேயத்தில் தோன்றிய இவர், நான்குவேதமும் ஆறு வேதாங்கமும் மீமாஞ்சை தர்க்கம் புராணம் தருமநூல் என்னும் நான்கு உபாங்கமு மாகிய பதினான்குசாஸ்திரங்களையும் பால்யத்திலேயே பயின்று செவிக்கினிய செஞ்சொற்கவிகளைப் பாடவல்லராய் அதனால் '**மதுரகவி**' என்று திருநாமம்பெற்று மெய்யுணர்வினால் அவாவற்று மகாவிரக்தராய் விஷ்ணுபக்திவிஞ்சி யோகநிஷ்டையிலுந் தேர்ந்து தீர்த்தயாத்திரை திவ்விய தேசயாத்திரைகளில் திருவுள்ளமுடையராய்ப் புறப்பட்டுச் சஞ்சரிக்கலுற்று §“தேனமர் சோலைக் கற்பகம் பயந்த தெய்வநன்னறுமலர் கொணர்ந்து, வானவர் வணங்குங் கங்கையின் கரைமேல் வதரியாச்சிரமம்” முதலிய வடநாட்டுத்திருப்பதிகளைச் சேவித்துக்கொண்டு, பரமபதமருளும் பிரதானபட்டண மேழனுள் முதலதான திருவயோத்தியை யடைந்து, ||“மானதமடுவில் தோன்றிவருதலாற் சரயுவென்றே, மேன்முறையமரர்போற்றும் விழுந்தியதனினூடு” நீராடி, முன்பு விபவாவதார மெடுத்து முடித்துத் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளியவன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றிய இடமான அந்தச்சாகேதநகரத்தில் அர்ச்சாவதாரரூபமாய் எழுந்தருளியிருக்கிற இராமபிரானையும் சானகிப்பிராட்டியையுந் தரிசித்துத் திருவடிதொழுது அப்பரிசுத்த பூமியில் நித்தியவாசஞ்செய்யக் கருதிச் சிலகாலம் வசித்திருந்தார்.

அக்காலத்தில் ஒருநாள் இரவில் இவர் திருக்கோளூரெம்பெருமானைத் திசைநோக்கித் தொழக்கருதித் தெற்குத்திக்கில் கண்செலுத்தினபொழுது, அப்பக்கத்திலே வானுறவளர்ந்துவிளங்குகிற திவ்வியமான ஒருபேரொளிப் பிழம்பைக் கண்ணுற்று அதுஇன்னதென்றறியாமல் 'கிராமநகரங்கள் வேகின்றனவோ? காட்டுத்தீயோ?' என்று சங்கித்துத் திகைத்துநின்றார். நின்றவர் இங்ஙனமே அடுத்தஇரண்டுமூன்றுநாள்களிலுங் கண்டு அச்சுடர்த்திரள் முச்சுடரொளியினும் மிக்குவிளங்கியதனால் வெகுவியப்புற்று அதனை அருகிற் சென்றுபார்த்துத்தெளியத் துணிந்து பிரஸ்தானமாய் அச்சோதியையே குறியாக்கொண்டு அதிதுரிதமாக நெடுவழிகடந்து நடந்துவந்து ஆழ்வார்திருநகரியையடைந்து அதில் அவதரித்தருளியுள்ள சடகோபமுனிவரது திருமேனி விளக்கத்தைச் சேவித்து இதுவே அத்தனைநெடுந்தூரம்பிரகாசித்ததென்று அறிந்து ஆச்சரியப்பட்டு அவ்வாழ்வாரது நிலைமை முன்பு தாம்கேள்வியுற

---

* நம்மாழ்வார்வரலாற்றோடு தொடர்ச்சியுள்ளதனால், இவ்வாழ்வார் வரலாறும் இங்குக் காட்டப்படுகிறது.

. † திருவாய்மொழி - ஐம்பத்தேழாந்திருப்பதிகம் - சு.

‡ 'துவாபரயுகத்தில் எட்டுலட்சத்து அறுபத்துமூவாயிரத்து எண்ணூற்றெழுபத்தொன்பதாவதான ஈசுவரவருஷத்தில் சுக்கிலசதுர்த்தசி கூடின வெள்ளிக்கிழமையில்' என விவரம்.

§ பெரியதிருமொழி - நான்காந்திருப்பதிகம் - க.

|| கம்பராமாயணம் - பாலகாண்டம் - வேள்விப்படலம் - ரு

யிருந்தபடியே அப்பிராகிருதமாயிருக்கக் கண்டு அவர்க்குக் கட்புலனும்வாய்ப் புலனும் உண்மையைச் சில உபாயங்களாற் பரிசோதிப்பவரானார். அப்பொழுது, **காரிமாறப்பிரான்** கண்திறந்து கடாக்ஷித்து இவர்கேட்ட கேள்விக்கு ஏற்றவிடை சொல்லியருள, அதுகேட்டு மதுரகவியாழ்வார் அவரது ஞானவைபவத்துக்கு அதிசயித்து ஈடுபட்டு அவரையே ஆசாரியராகக்கொண்டு சரணம்புகுந்தார்.

அநந்தரம் நம்மாழ்வார் பஞ்சஸம்ஸ்காரம்பிரசாதித்து இவரை ஆட்கொண்டு, பரத்வம் வியூகம் விபவம் அந்தர்யாமித்வம் என்னும் நான்குநிலைகளுக்கு முறையே வேதம் பாஞ்சராத்திரம் இதிகாசம் ஸ்மிருதி என்பன போல அர்ச்சாவதாரத்துக்கேற்ற துதிவடிவமான தமிழ்நூல்களைச் செய்யத் தொடங்கி, சதுர்வேதத்தின்சாரமாக நான்குபிரபந்தங்களை அருளிச்செய்து, அவற்றை அம்மதுரகவிக்கு உபதேசித்தருளினார்.

'முந்தின மூன்றுயுகங்களில் தியான யாக அர்ச்சனங்களாற்போலக் கடையுகத்தில் தோத்திரமாத்திரத்தால் உயர்கதி உண்டாம்' என்ற நூற்கொள்கைக்கு ஏற்ப மதுரகவிகள் தாம்உபதேசம்பெற்ற திவ்வியப்பிரபந்தங்களைக் கைத்தாளமெடுத்துப் பண்ணிசையோடு எப்பொழுதும் பாராயணஞ்செய்துகொண்டு திருக்குருகூர்நகர்நம்பிக்குப் பிரதானசிஷ்யராய், பரதாழ்வானுக்கேபணிவிடைபுரிந்தொழுகின சத்துருக்கினாழ்வான்போலப் பகவத்பக்தியினும் பாகவதப்பிரதிபத்தியையே பரமாநுஷ்டானமாகத் தலைக்கொண்டு அவ்வாழ்வார்விஷயமாக '**கண்ணிநுண்சிறுத்தாம்பு**' என்ற திவ்வியப்பிரபந்தத்தைப் பாடி முமுக்ஷுக்களுக்கு உபகரித்தருளி வாழ்ந்திருக்கையில், * தேவிற் சிறந்த திருமாற்குத் தக்க தெய்வக்கவிஞரும் * பாவிற்சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதருமான காரிமாறர் திருநாட்டையலங்கரித்தார்.

அப்பால், ஆசிரியரைப்பிரிந்ததற்கு மிகஇரங்கி அரிதில் தேறிய மதுரகவிகள், அர்ச்சாரூபமான ஆழ்வார்விக்கிரகத்தை அத்திருநகரியிலே எழுந்தருளப்பண்ணிப் பிரதிஷ்டித்து அவர்க்கு நித்திய நைமித்திக உற்சவங்களையெல்லாம் சிறப்புற நடத்திக்கொண்டுவந்தார். அத்திருவிழாக்களில் 'வேதந்தமிழ் செய்தமாறர்வந்தார்,' 'திருமாலுக்குரியதெய்வப்புலவர்வந்தார்,' 'அளவிலாஞானத்துஆரியர் வந்தார்' என்று இவைமுதலாக அநேகவிருதுகளைக் கூறித் திருச்சின்னம் ஒலிமுழங்குதலைக் கேள்வியுற்றவளவிலே, மதுரைச்சங்கத்தாரது தூண்டுதலால் அவர்கள்மாணாக்கர்கள் வந்து எதிரிட்டு 'உங்களாழ்வார் பக்தரேயன்றிப் பகவானல்லரே, இவர் சங்கமேறிய புலவரோ? இவர்பாடின திருவாய்மொழி சங்கமேறிய செய்யுளன்றே; இவரை வேதந்தமிழ்செய்தவரென்று சிலாகிப்பது தகுதியோ?' என்று பல குதர்க்கம் பேசி விருதுகளைத் தடுத்திட்டனர். அதற்கு மதுரகவிகள் மனம்பொறாமல் வருந்தி 'இவர்களுக்குக் கர்வபங்கமாம்படி தேவரீர் செய்தருளவேண்டும்' என்று ஆழ்வாரையே பிரார்த்திக்க, சடகோபர் ஒருகிழப்பிராமணவடிவத்தோடுவந்து 'திருவாய்மொழியில் † "கண்ணன்கழலிணை, நண்ணும்மனமுடையீ, ரெண்ணுந்திருநாமந், திண்ணம்நாரணமே" என்ற பாசுரத்தின் முதலடியை ஒரு சிற்றேட்டில் எழுதிக்கொண்டு போய்ச் சங்கப்பலகையில் வைத்திட்டால் அவர்கள் செருக்கு அடங்கும்' என்று கூறியருளினர். அந்நியமனப்படியே **சடகோபபக்தர்** கண்ணன்கழலிணையையெழுதிய ஏட்டை எடுத்துப்போய் வைத்திட்டமாத்திரத்தில், சங்கப்புலவர்கள் ஏறியிருந்த பலகை பொற்றாமரைப்பொய்கையில் முழுகித் தன்மேலிருந்த புலவர்களையெல்லாம் நீரில்வீழ்த்தி உடனே கிளம்பித் தன்மீதுவைத்த சிறுமுறியைமாத்திரம் ஏந்திக்கொண்டு மித

* சடகோபரந்தாதி - பாயிரம் - க.

† திருவாய்மொழி - தொண்ணூற்றைந்தாந்திருப்பதிகம் - க.

ந்தது அப்பொழுது நீரில்விழுந்து அமிழ்ந்து தடுமாறியெழுந்து மெல்ல நீந்திக் கரைசேர்ந்த சங்கப்புலவர்கள் சகலவேதசாஸ்திரங்களையும் பிறராற்கற்பிக்கப்படாமல் தாமேயுணர்ந்த பகவத்மசமான ஆழ்வாருடைய தெய்விகமான பாண்டித்தியத்தைத் தெரிந்து இறுமாப்பொழிந்து தாமமுன்புஅபசாரப்பட்டதற்குஅநுதாபமுற்று அதனை க்ஷமிக்கும்பொருட்டு அவரது மகிமைதங்கிய பிரபாவத்தைக் குறித்துத் தோத்திரமாகத் தனித்தனி ஒவ்வொரு பாட்டுபாடி வெளியிடுபவரானார்கள் அப்பாடல்கள் யாவும்

"சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமந்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு
முளவோ பெருமா னுனக்கு"

என்ற இப்பாடலவடிவாகச் சிறிதுமவேறறுமையின்றி ஒற்றுமைப்பட்டிருக்கக் கண்டு அவர்களனைவரும் 'இது என்ன அற்புதம்? இதுவும் ஆழ்வாரது தெய்வத்திருவருளே!' என்று அதிசயப்பட்டு

"ஈயாடுவதோகருடற்கெதிரேயிரவிக்கெதிர்மின்மினியாடுவதோ
நாயோடுவதோவுறுமிப்புலிமுன்னரிகேசரிமுன்னடையாடுவதோ
பேயாடுவதோவழகூர்வசிமுன்பெருமான்வகுளாபரணன்னருள்கூர்ந்
தோவாதுரையாயிரமாமறையின்றொருசொற்பொறுமோவுலகிற்கவியே"

என்பது முதலாகச் சிற்சிலகவிகள் பாடிப் புகழ்ந்து அன்றுமுதல் ஆழ்வார்க்கு விருதுகூறல் முதலிய சகலவிபவங்களையும் முன்னினும் பலமடங்கு மிகுதியாக நடப்பித்துவந்தார்கள்.

இப்படி மதுரகவியாழ்வார் *"ஆசானை யெவ்விடத்து மப்படியே" என்றபடி தமது ஆசாரியருடைய பெருமைகளை வெளியிட்டுக்கொண்டு அப்பதியிலே சிலகாலம் எழுந்தருளியிருந்து பின்பு சிந்தையும்மொழியுஞ்செல்லாநிலைமைத்தான பெருவீட்டை யடைந்தார்.

இங்ஙனம் இவ்வாழ்வார் நம்மாழ்வாருக்குத் திருவடித்தொண்டராயொழுகியதனால், அவரதுதிருவடிநிலை 'மதுரகவிகள்' என இவர்திருநாமத்தையிட்டு வழங்கப்படும்.

---

## நம்மாழ்வாருடைய மகிமையையும் அவரது திவ்வியப்பிரபந்தத்தின் பெருமையையும் பற்றி விநோதரசமஞ்சரியில் எழுதியுள்ளதோரு விஷயம்.

'திருவள்ளுவர் குறள்செய்த காலத்தில் அவரும் ஔவையும் இடைக்காடரும் சந்தித்த சமயத்தில், வள்ளுவரை நோக்கி மற்றையிருவரும் 'நீர் செய்த நூல் எத்தன்மைத்தாகியது?' என்றுவினவ, அவர் 'அகஸ்தியரால் பிரசித்தம்பண்ணப்பட்ட இயல் இசை நாடகம் என முத்திறத்ததாகிய தமிழும், என்னாற் செய்யப்பட்ட குறளும், உடையநங்கையின் திருக்குமாரராகிய சடகோபர் அருளிச்செய்த திருவாய்மொழியின் புத்திரஸ்தானமாகிய வழிநூலாம்' என்னுங் கருத்தை உள்ளமைத்து,

"குறுமுனிவன் முத்தமிழு மென்குறளு நங்கை
சிறுமுனிவன் வாய்மொழியின் சேய்" என்று சொன்னதையும்,

அதுகேட்டு ஔவை, 'அர்த்தபஞ்சகத்தையும் சதுர்விதபுருஷார்த்தத்தையும் அறப்பாலமுதலியமுப்பாலுள் அடக்கி அமைக்கப்பட்ட உண்மைப்பொருளா

---

* "நேசனைக்காணவிடத்துநெஞ்சாரவேதுதித்த, லாசானையெவ்விடத்து மப்படியே—வாச, மனையாளைப்பஞ்சணையின்மைந்தர்தமைநெஞ்சில், வினையாளைவேலைமுடிவில்"—ஔவையார்தனிப்பாடல்.

கியஎவ்வகைப்பட்டவேதஙகளுக்குஞ சமமதமான மேலானபொருளை, குளிர சசி தஙகிய தாமிரபருணிதீரததி லிருககும திருக்குருகூரிற காரிமுதலியார் புதலவராய அவதரிதத நமமாழ்வாரது திருவாயமொழியாகிய திரவிடவேத மென்று சிலா சொலலுவாாகள், நான், அவாகள்சொலலை மறுதது, அக்குறளை, இநத உலகததிறகுத தாயாகிய ஸ்ரீமநநாராயணனுறை பிரமனுக்கு உபதேசிககபபடடுவநத கீரவாணவேத மென்றே சொலலுவேனா' எனனுங கருததை உள்ளிட்டு,

“ஐமபொருளு நாறபொருளு முபபொருளிற பெயதமைத்த
செமபொருளை யெமமறைககுஞ சேட்பொருளைத—தணகுருகூாச
சேயமொழிய தெனபா சிலரியா னிவ்வுலகினை
தாயமொழிய தென்பேன் தகைநது” என்று சொன்னதையும,

இடைககாடா ‘திரவிடவேதமாகிய சேயமொழியையும கீரவாணவேதமாகிய தாயமொழியையும ஆராயநதுசொலலுமிடததில, இரணடும ஒன்றேயாம, திருவாயமொழியை யாவரும சஙகையின்றி வேதமெனறே சொலலுவாாகள். திருவாயமொழியைபபோலச சிறநத நூலகளா அனேகம உணடு என்று சிலர் குதாககளுசெயதாலும, நானஅவாகளைமறுதது, அவைகளும இந்தககுறளும அததிருவாயமொழியினது சாயையாயிருபபவைக ளென்றே சொலலுவேன்’ எனனுங கருததை யடககி,

“சேயமொழியோ தாயமொழியோ செபபி லிரணடுமொன்றவ்
வாயமொழியை யாரு மறையெனப—வாயமொழிபோ
லாயமொழிகள் சால வுளவெனினு மமமொழியினை
சாயமொழியென பேனயான தகைநது” என்று சொன்னதையும,

ஒருகாலததில தாமிரபருணிநதியின் வடகரையில வசிததிருநத யோகி யொருவா வளாத்த நாயொனறு தென்கரையிலுளள ஆழவாாதிருநகரிககுப பிரதிதினமும மததியானவேளையிற போய வீதியிலிருககும வைஷணவாகளுடைய உசசிஷடததைத தினறு வயிறறை நிரபபிககொணடுவருகிற வழககபபடி ஒருநாள போயத திருமபிவர நேரபபடடதனால, யோகியானவா, நாயஇன்னுமவரவிலலையேயெனறு ஆறறோரததிலவநது பாாககுமபொழுது, அநநாய நட்டாறறிலவருகையில அகஸமாததா வெளளம வநதமையால நீநதிககாலோயநதுபோய நீரில அமிழநது இளமபிறறு; அததருணததில அதன்கபாலமவெடிதது அநத ரநதிரததின வழியாய நாயின்ஆதமாவாகிய சோதியானது எழுநது அமாவாசையிருளில அநேகமதீவட்டி கொளுததினது போலப பிரகாசிததததைப பிரததியட்சமாகப பாாதது, ‘அசேதநமாகிய நாயும, பெறுதறகரிய பேறு பெறறதே, இதென்னசாதனததையுடைததா யிருநதது? ஒன்றுமிலலாதிருநதும, ஆழவாாதிருநகரியின உசசிஷடததை உணடதனாலலவோ, இபபடிச சமபவித்தது? இது, தபசிகளா யோகிகளா ஞானிகள் முதலானவாகளுக்கும சித்திககமாட்டாதே’ எனறு நினைதது மனந்துருகிக் கணணீாவிட்டு அழுது அவா

“வாயக்குங குருகைத திருவீதி யெசசிலை வாரியுணட
நாயக்கும பரம பதமளித்த தாயநத நாயொடிநதப
பேயக்கு மிடமளித் தாறபழு தோபெரு மாளமகுடஞ
சாயக்கும படிக்குக கவிசொலலு ஞானத தமிழககடலே”

என்பது முதலாகச சிலபாடலகளால ஆழவாரை ஸதோததிரிததததையும நினைக்க ’

# உபதேசரத்தினமாலை.

"ஆழவாரகள் வாழி யருளிச செயலவாழி
தாழவியாது மிலகுரவா தாமவாழி—யேழபாரு
முயய வவாக ளுரைததவைகள தாமவாழி
செயயமறை தன்னுடனே சோநது."

"ஆழவாா களையு மருளிச செயலகளையுந
தாழவா நினைபபவாகள் தாமநரகில—வீழவாாக
ளென்று நினைதது நெஞசே யெபபொழுதும நீயவர்பால்
சென்றணுகக் கூசித் திரி."

'தெருளுறற வாழவாாகள் சீாமை யறிவாரார்
அருளிச செயலை யறிவாராா—அருள்பெறற
நாதமுனி முதலான நநதே சிகரையலலால
பேதைமன மேயுணடோ பேசு."

"ஏராா்வை காசி விசாகததி னேற்றததைப
பாரோ ரறியப பகாகின்றேன்—சீராரும
வேதந தமிழசெயத மெயய னெழிறகுருகை
நாத னவதரிதத நாள் "

"உண்டோவை காசி விசாகத்துக் கொபபொருநாள்
உணடோ சடகோபாக் கொப்பொருவர்—உணடோ
திருவாய மொழிக்கொபபுத தெனகுருகைக் குணடோ
ஒருபாா தன்னிலொக்கு மூா."



ஸ்ரீ

# திருவிருத்தம்.

இது - நமமாழவார் அருளிசசெயத நாள்குதிவ்யபபிரபநதஙகளுள் முதலாவது; மறறவை - திருவாசிரியம, பெரியதிருவநதாதி, திருவாயமொழி என்பன இநநானகும, முறையே நான்குவேதஙகளின சாரமாம. ஸ்ரீவைஷ ணவநாலாயிரபபிரபநததததில மூன்றுவது ஆயிர மாகிய 'இயறபா' என்பதில சோககபபட்ட பதநதுபபிரபநதஙகளில, இது ஐநதாவதாகும.

'திரு' என்னும பலபொருளொருசொல - வடமொழியிலே 'ஸ்ரீ'என்பது போல, தமிழிலே தேவாகள்,அடியாாகள், ஞானநூலகள, மநதிரஙகள, புணணியஸதலஙகள், புணணியதீாததஙகள் முதலிய மேன்மையையுடைய எபபொருளகளுககும விசேஷணபதமாகி, அவறறிறகுமுன்னே மகிமைப பொருளைக காட்டிவரும ஸ்ரீமகாவிஷ்ணு, ஸ்ரீபக்திசாரா, ஸ்ரீராமாயணம, ஸ்ரீஅஷ்டாக்ஷரம, ஸ்ரீரஙகம, ஸ்ரீகைரவிணி, ஸ்ரீபாதம எனவும; திருமால, திருமழிசைபபிரான், திருவாயமொழி, திருவெட்டெழுதது, திருவரஙகம, திருவலலிககேணி, திருவடி எனவும வழஙகுமாறறால அறிக; இனி, இதனை 'ஸ்ரீ'என்பதன் சிதைவென்பாருமுளா. இஙகே,இது-நூலுக்கு அடைமொழி. மேன்மையாகிய விருதத மெனப பணபுததொகையாகவாவது,மேனமையை யுடைய விருதத மென இரணடனுருபுமபயனுநதொகககதொகையாகவாவது விரிக்க.

விருததம - வ்ருத்த மென்னும வடசொலலின் திரிபு, ஏழாம உயிர் இஙகே இருவாகத திரிநதது [நனனூல - பதவியல - உ0] இதறகுப பலபொருள்கள் உள்ளனவாயினும, இஙகே, செயதியென்று பொருள. இந நூலில ஆழவாா தமது அன்புமிகுதி முதலிய செயதிகளை எமபெருமான்முன் னிலையில விணணபபஞசெயகையால இதறகு 'விருததம' என்று பெயராயி றறு என்பது, பூர்வாசாரியாகள் கொளகை செயதியின் பெயா செயதியைக் கூறுமநூலை உணாத்துதல, காரியவாகுபெயரினபாறபடும வடமொழியில செய்யுளைக் குறிககிற விருதத மென்கிற பொதுமொழி, இஙகே சிறபபாயக கட்டளைககலித்துறையெனனும ஒருவகைசசெயயுளை உணாததி, நூலுககுக் கருவியாகுபெயரா மெனபது, பினபுள்ளாாகருதது இருவகையிலும, 'திரு விருததம' எனற தொடா - அடையடுதத ஆகுபெயராம, அன்மொழித தொகையாகக கொள்ளவும இடமுணடு.

தாழிசை, துறை, விருததம என்ற பாவின் இனம மூன்றனுள் ஒன்றான துறையின்பாறபடுங கட்டளைககலிததுறையாகிய இந்நூலை விருததமென் பது பொருநதுமோ? எனின,—இஙகே 'விருததம' என்ற சொல அவ்வின மொன்றை உணாததுவ தன்றிச செய்யுட்பொதுபபெயராதலின், பொருநது மென்க கலிததுறையின் வேறொருவகையாகிய கலிநிலைததுறையை'விருதத க்கலித்துறை' என்பதும,* "துறையடுதத விருதததத தொகைக்கவி",†"உரை செயும விருததம பன்னீ ராயிரத தொருபத தாறு", ‡"விருததமென்னு, மொண்பாவிலுயாகமபன்," §"சிறநதசெவிக்கமுதமெனத தமிழமொழியின் விருதததறாற செயக" எனக் கலிததுறையுமுட்படப பொதுவாக விருதத மெனபபடுவதுங காணக. [அன்றியும, கட்டளைககலிததுறையைத திருவிரு த்தமென வழஙகும மரபு, சைவசமயததிலும, திருநாவுக்கரசுநாயனாாதேவா

---

* கமபராமாயணம - சிறபபுபபாயிரபபடலம - அ

† ,, பாயிரம.

‡ தனிப்பாடல.

§ விலலிபுததூராா் பாரதம் - சிறப்புப்பாயிரம - உக.

ரத திருமுறை, பட்டணத்துப்பிள்ளையார் பாடல் திருமுறை என்பவற்றில் உண்டு.]

இப்பிரபந்தத்திற் பெரும்பாலும் ஆழ்வார் தம்மைப் பிராட்டியாக வைத்துத் தமது விருத்தத்தை [=செய்தியை]க் கூறுகின்றாராதலால், திருவிருத்த மென்பதற்கு - திருமகளினது நிகழ்ச்சியைக் கூறும் நூல் என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று

தொல்காப்பியத்துச்செய்யுளியலிற் கூறப்பட்ட அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்ற எண்வகைவனப்பினுள் இந்நூல் விருந்தென்னும் வனப்பின்பாற்படும். *"விருந்தேதானும், புதுவது கிளந்த யாப்பின்மேற்றே" என்ற தொல்காப்பியச்சூத்திரவுரையில், ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'விருந்துதானும் பழங்கதைமேலதன்றிப் புதிதாகத் தாம் வேண்டியவாற்றாற் பலசெய்யுளுந் தொடர்ந்துவரத் தொடுத்துச்செய்யப்படுந் தொடர்நிலைமேலது' என்றும், 'அது - முத்தொள்ளாயிரமும், பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச்செய்யுளும் என உணர்க; கலம்பகம் முதலாயினவுஞ் சொல்லுப' என்றும் உரைத்துள்ளமை காண்க

இனி, இதனைச் சிறுகாப்பியத்துள் அடக்குவர் பிற்காலத்தார்; வடநூலார் 'கண்டகாவ்யம்' என்பர் [பெருங்காப்பியவிலக்கணத்திற் கூறியவாறு பல வருணனைகளைப் பெற்றும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினுள் ஒன்றும் பலவும் குறைந்தும் வரும் நூல் - சிறுகாப்பியமென்றும், காப்பியமென்றுங் கூறப்படும்; அவை - அந்தாதி, ஆற்றுப்படை, உலா, கலம்பகம், மடல், மாலை முதலியன.]

இன்னும், இது - அந்தாதித்தொடையாற் பாடப்பட்ட நூலாதலின், சொற்றொடர்நிலை பொருட்டொடர்நிலை என்னும் இருவகையுள் சொற்றொடர்நிலையாம், [அந்தாதித்தொடையாவது - முன்நின்றபாட்டின் இறுதி எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் பின்வரும்பாட்டின் முதலாகப் பாடுவது] இந்நூல் இறுதிச்செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையும்படி மண்டலித்துப்பாடப்பட்டுள்ளமையுங் காண்க

இந்நூலின் பாடல்கள் பொருளில் ஒன்றையொன்று தொடர்ந்து நிற்றல் தோன்ற ஆன்றோரால் உரையிடப்படுதலால், இது பொருட்டொடர்நிலையுமாம்.†

தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் அகப்பொருட்கோவைக்கு உரிய துறைகள் பல இந்நூலிற் கூறப்படினும், அத்துறைகள் யாவும் முறையே கூறப்படாமையால், இது கோவையாகாது கோவைபோலியேயாம்

---

கட்டளைக்கலித்துறையின் இலக்கணம் —பெரும்பாலும் முதல் நான்கு சீர்கள் ஈரசைச்சீர்களும் ஐந்தாஞ்சீர் விளங்காய்ச்சீருமான நெடிலடி நான்கு கொண்டு, அடிதோறும் வெண்டளை பிறழாமல், நேரசை முதலாயின் ஓரடிக்கு ஒற்றொழிந்தெழுத்துப் பதினாறும், நிரையசை முதலாயின் அவ்வெழுத்துப் பதினேழுமாய் ஏகாரவீற்றதாய் வருவது. இது - வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற நால்வகைப்பாவில் கலிப்பாவின் இனமான கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம் என்ற மூன்றில் ஒன்றாகிய கலித்துறையினும் வேறுபட்டு வருவது.

---

* தொல்காப்பியம் - பொருளதிகாரம் - செய்யுளியல் - ௨௪௦.

† "பொருளினுஞ் சொல்லினு மிருவகை தொடர்நிலை" என்னுந் தண்டியலங்காரசூத்திரத்தின் உரையில் 'இரண்டென்றது வகையென்ற மிகையான், மூன்றாவது பொருளினுஞ்சொல்லினுந் தொடர்தலும் உணர்ந்துகொள்க' என்றமை காண்க.

# திருவிருத்தம்.

## தனியன்.

சிறப்புப்பாயிரத்துக்கு வைஷ்ணவசம்பிரதாயத்தில் 'தனியன்' என்று பெயர் வழங்கும். அது - நூலின்சிறப்பையாயினும் ஆசிரியர்சிறப்பையாயினும் இரண்டையுமாயினும் எடுத்துக்கூறுவது. நூலினுட் சேராமல் அதன் புறத்தே தனித்துநிற்றலபற்றி, 'தனியன்' என்பது காரணப்பெயராம்; இதில், 'அன்' என்னும் ஆண்பாலவிகுதி, உயர்வுகுறித்தற்பொருட்டு அஃறிணைப்பெயரோடு வந்த தென்பா; 'திருக்கோவையார்,' 'நாலடியார' என்பவற்றில், 'ஆர்'விகுதிபோல.

கருவிருத்தக்குழிநீத்தபின்காமக்கடுங்குழிவீழ்ந்
தொருவிருத்தம்புக்குழலுறுவீருயிரின் *பொருள்கட்
கொருவிருத்தம்புகுதாமற்குருகையர்கோனுரைத்த
திருவிருத்தத்தோரடிகற்றிரீர்திருநாட்டகத்தே

இத்தனியன் கிடாம்பியாச்சான் என்ற பூர்வாசாரியரால் அருளிச்செய்யப்பட்டது; இதனை, சீராமப்பிள்ளை அருளிச்செய்த தென்றும், ஆளவந்தார் அருளிச்செய்த தென்றுஞ் சொல்வாரு முளர்.

இதில், மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து இறந்து சமுசாரக்கிலேசத்தில் அலைகிற சனங்களை நோக்கி 'இனி உங்களை அந்தத்துக்கம் தொடராமல் உங்களுக்கு முத்தியுலகத்து நிரதிசயப்பேரின்பம் உண்டாகுமாறு, திருவிருத்தமென்ற திவ்வியப்பிரபந்தத்தின் ஓரடியையாவது கற்றுக்கொள்ளுங்கள்' என்று உபதேசிக்கிறார்.

(இதன்பொருள்) கரு - கருப்பமாகிற, விருத்தம் குழி - வட்டமான குழியை, நீத்த பின்- விட்டபின்பு [பிறந்த பின்பு], காமம் கடு குழி வீழ்ந்து- சிற்றின்பபோகமாகிய கொடியகுழியிலே விழுந்து, ஒரு விருத்தம் புக்கு - ஒப்பற்ற [மிக்க] கிழத்தனத்தை யடைந்து, உழலுறுவீர் - அலைதலமிக்க சனங்களே! உயிரின் பொருள்கட்கு- (உங்களுடைய) உயிர் அடைதற்குஉரிய பயன்களுக்கு, ஒரு விருத்தம் புகுதாமல் -இடையூறு சிறிதும் நேரிடாதபடி, குருகையர் கோன் உரைத்த திருவிருத்தத்து ஓர் அடி கற்று - திருக்குருகை நகரத்திலுள்ளார்க்குத் தலைவரான நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய திருவிருத்தமென்னும் நூலில் ஒருபாதத்தைப் படித்து அறிந்து, திரு நாடு அகத்தே இரீர் - பரமபதத்தினிடத்திலே வாழ்ந்திருப்பீர்; (என்றவாறு)

கரு - வடசொல் திரிபு. விருத்த மென்ற வடமொழித் திரிபு-அடிதோறும் தமிழில் எழுத்தொப்புமையுடையதாயினும், முதலடியிலும் நான்காமடியிலும் வ்ருத்தம் [வ்ருத்தம்] என்றது திரிந்ததாகவும், இரண்டாமடியில் வ்ருத்தம் [வ்ருத்தம்] என்றது திரிந்ததாகவும், மூன்றாமடியில் விருத்தம் [விருத்தம்] என்றது திரிந்ததாகவும் உணர்க. புகுதாமல், து - சாரியை. குருகா என்னும் வடசொல், ஈறுதிரிந்தது. இரீர் - ஏவற்பன்மை

* 'பொருளுக்கு' என்றும் பாடம்

நலம அநதமிலலதோர் நாடாகிய ஸ்ரீவைகுணடம எலலாநாடுகளினுஞ் சிறநததாதலால, திருநாடென்று சிறபபித்துக்கூறபபடும. உயிரின்பொருள் கட்கு ஒருவிருததம புகுதாமற் கற்று என வூனையும; புகுதாமல உரைதத என்று இயைத்து உரைபபினுமாம். காபப ஜநம பாலய யெளவந ஜரா மரண நரகஙக ளாகிற ஏழுஅவஸதைகளையும 'கருவிருததக்குழிநீததபின் காமக்கடுஙகுழிவீழநது ஒருவிருததமபுக்கு உழலுறுவீர்' என்றதனுற குறித தவாறு.

இனி, முதலடியில கரு விருத்தம் [வ்ருத்தம்] குழி எனக்கொணடு கருபப மாகிய ஓவ்வாதகுழி யென்றும, கரு இருதது அக்குழி யென எடுத்துக் கருப பததில இருக்கசசெயதலாகிய அநதக் குழி யென்றும், இரணடாமடியில ஒரு விருததம [வ்ருததம] புககு எனக் கொணடு வெறுககததகக பொலலா வொழுக்கததிலே புகுநது என்றும, மூனறுமடியில ஒரு விருததம [வ்ருத தம] புகுதாமல எனககொணடு (தீஙகாகிய) செயலொன்றும நிகழாதபடி யென்றும உரைத்தலும பொருநதும. இரணடாமடியில 'உருவிருததம' எனப பாடஙகொணடு-வடிவமமூதத லென்றுவது, மிககமுதுமை யென்று வது பொருளகொள்ளுதலும ஒன்று.

'காமமாவது - ஒருகாலத்து ஒருபொருளான் ஐமபுலனும நுகாதறசிறப புடைததாய இன்பம' என்பா, திருக்குறளுரையிற பரிமேலழகா 'வீழநது' என்றதனால, மீளுதறகருமை தோனறும. உயிரின்பொருள்கட்கு, இன் - சாரியை. உயிா இன் பொருளகட்கு என எடுதது, உயிருக்கு இனிமையாகிய பிரயோசனஙகளுக்காக எனினுமாம். 'உழலுறுகையாவது - ஜராமரணநரக வேதனைகளிலே அடிபபடடு அதுவேயாதரையாயப போருகிறவாக ளென்ற படி, அமமைவயிறரோடு யமன் கழுவோடு வளையவளைய உழனறிறே திரிவது' எனபது, பிள்ளைலோகாாயஜீயா வியாககியானம.

"இததால, 'இழககிறது ஹேயமான ஸமஸாரம, பெறுகிறது விலக்ஷண மான பரமபதம: இதுக்குஉடலாக ஸதாசாாயன் அருளிசசெயத ஒரு நல வார்ததையை ஸததுககளிடததிலேஅபபியஸிததுசிாபபரனுயிருககககடவன' என்னும ஆததனு சொலலிறறுயதது" என்பதும மேறபடி வியாககியானம.

இபபாடடில எதுகையை யமதது 'விருததம' என்ற ஒருசொல வெவ் வேறுபொருளில வநதது திரிபென்பாறபடும.

---

## பிரபந்தசாரம்.

"முன்னுரைதத திருவிருதத நூறு பாட்டு
முறையின்வரு மாசிரிய மேழு பாடடு
மன்னியநற பொருட்பெரிய திருவந் தாதி
மறவாத படியெணபத் தேழு பாட்டும
பின்னுரைதத தோாதிருவாய மொழியெப போதும
பிழையறவா யிரததொருநூற றிரணடு பாட்டு
மிநநிலத்தில வைகாசி விசாகந் தன்னி
லெழிறகுருகை வருமாறு விளஙகு நீயே."

---

# திருவிருத்தம்.

## நூல்.

க. பொய்ந்நின்றஞானமும்பொல்லாவொழுக்குமழுக்குடம்பு
மிந்நின்றநீர்மையினியாமுறாமையுயிரளிப்பா
னெந்நின்றயோனியுமாய்ப்பிறந்தாயிமையோர்தலைவா
மெய்ந்நின்றுகேட்டருளாயடியேன்செய்யும்விண்ணப்பமே.

இப்பாட்டில், எம்பெருமானை அகக்கண்ணுக்கு இலக்காகக் கண்ட ஆழ்வார், அப்பெருமானை விளித்து, அவன் முன்னிலையில், தாம் சொல்லும் விநய வார்த்தைகளைக் கேட்டருளவேணுமென்கிறார்.

(இ - ள்) உயிர் - எல்லாவுயிர்களையும், அளிப்பான் - பாதுகாத்தருளும்பொருட்டு, எ நின்ற யோனியும் ஆய் - பலவகையாய் நின்ற பிறப்புக்களையுமுடையனாய், பிறந்தாய் - திருவவதரித்தவனே! இமையோர் தலைவா - தேவர்களுக்குத் தலைவனே! பொய் நின்ற ஞானமும் - பொய்ம்மை நிலைபெற்ற அறிவும், பொல்லா ஒழுக்கும் - தீயநடத்தையும், அழுக்கு உடம்பும் - அசுத்தங்களோடுகூடின சரீரமும், (என்னும் இவற்றோடு கூடி), இ நின்ற நீர்மை - இவ்வாறு நிலைபெற்ற இயல்பை [பிறப்புத்துன்பத்தை], இனி யாம் உறாமை - இனிமேல் நாங்கள் அடையாதபடி, அடியேன் செய்யும் மெய் விண்ணப்பம் - (உள்ளது) அடியவனாகிய யான் சொல்லும் உண்மையான வணக்கத்தோடுகூடியசொல்லை, நின்று கேட்டருளாய் - நின்று (நீ) கேட்டருளுவாய், (எ - று)

பொய்ந்நின்றஞானம் - பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களாலன்றி உண்மையாலுணரும் மெய்யுணர்வாகிய தத்துவஞானத்துக்கு மறுதலையான விபரீதஞானம்; 'விபரீதவுணர்வாவது - மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் இல்லையெனவும் மற்றும் இத்தன்மையவுஞ் சொல்லும் மயக்கநூல்வழக்குக்களை மெய்ந்நூல்வழக்கெனத் துணிதல், குற்றியை மகனென்றும், இப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதலும் அது' என்றார், திருக்குறளுரையில் பரிமேலழகர். இது - சந்தேகஞானத்துக்கும் உபலக்ஷணம். 'ஐயமாவது - பலதலையாய உணர்வு, அஃதாவது - மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் உளவோ இலவோ வென ஒன்றில் துணிவு பிறவாது நிற்றல், பேய்த்தேரோ புனலோ, கயிறோ அரவோ எனத் துணியாது நிற்பதும் அது' என்ப பரிமேலழகருரைத்ததையுங் காண்க. திருவள்ளுவர் மெய்யுணர்தலென்னும் அதிகாரத்தில் "பொருளல்லவற்றைப் பொருளென் றுணரும், மருளானாம் மாணாப் பிறப்பு", "இருணீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி, மாசறு காட்சி யவர்க்கு", "ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின், வானம் நணிய துடைத்து" என்றபடி நிரதிசயஇன்பத்ததான முத்தியைப் பெறுதற்கு நிமித்தகாரணமான தத்துவஞானத்துக்கு மாறான திரிபுணர்வும், ஐயவுணர்வும், பிறப்புக்கு முதற்காரணமாதலால், இவை முதலிற் கூறப்பட்டன. காரணமாகிய இவற்றை ஒழித்தாலன்றிக் காரியமாகிய பொல்லாவொழுக்கு அழுக்குடம்புகள் ஒழியாவாதலால், பொய்ந்நின்றஞானம் முன்பு நிறுத்தத் தக்கதேயாம். இதனை 'அஜ்ஞாநம்' என்னாமல் 'ஞானம்' என்று சொல்லாற் குறித்தது, இகழ்ச்சி. 'பொய்ந்நின்ற' என்றதை - பொய்யிலே நின்ற என்றும், பொய்யாய் நின்ற என்றும் விரிக்கலாம்.

பொல்லா வொழுக்கு - தானல்லாத உடம்பை யானென்றும், தன்னோடிலையில்லாத பொருளை எனதென்றுங் கருதி அவற்றினிடத்துப் பற்றுச்செய்து அவ்வகங்காரமமகாரங்களுக்கு ஏற்றபடி நடக்கும் நடத்தைகள். அறிவுக்கு ஏற்றபடி நடத்தை யுளதாதலால் பொய்ந்நின்றஞானத்தின்பின் பொல்லாவொழுக்கும், நித்தியமாய் ஞாநாநந்தலக்ஷணமாயப் பரமாத்மாவுக்கு அடிமையாயிருக்கிற சீவாத்மாவுக்கு இந்தத் தீயஅறிவொழுக்கங்கள் உண்டாகக் காரணம் அசுத்தமானதேகத்தின் சம்பந்தமே யாதலால் அதன்பின் அழுக்குடம்பும் நிறுத்தப்பட்டன. * "வினையின் வந்தது வினைக்கு விளைவாயது, புனைவன நீங்கிற் புலால் புறத்திடுவது, மூத்து விளிவுடையது தீப்பிணி யிருக்கை, பற்றின் பற்றிடம் குற்றக் கொள்கலம், புற்றடங்கரவிற் செற்றச் சேக்கை, யவலக் கவலை கையா றழுங்கல், தவலா வுள்ளந் தன்பா லுடையது, மக்கள் யாக்கை" என்ற மணிமேகலையடிகளாலும், உடம்பின் சுத்தமல்லாத்தன்மையை அறிக. பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும் - இதுஒருவெட்டு இதுஒருவெட்டு என்பாரைப் போலே காட்டியபடி. இந்நின்றநீர்மை - இவ்வாறு நின்ற இயற்கை எனச் சுட்டாற் குறித்துக்காட்டி இழிவு விளக்கி அதன் ஒழிவை வேண்டியபடி. 'இந்நின்ற நீர்மை - இப்படிப்பட்டுள்ள ஸ்வபாவம் ✱உதிரக்கூறைகாட்டுகிறாரென்று அம்மாள் ஸ்ரீதண்டகாரண்யத்தில் ருஷிகள் பெருமாளுக்கு ராக்ஷஸாதிநின்ற உடம்பைக் காட்டினாற்போலே பரகுருதிநின்ற ஆத்மாவைக் காட்டுகிறாரென்று ஆளவந்தார்,' 'யாம் - பராநாத்தம் நெஞ்சிலே படுகையாலே, நாட்டுக்காகத் தாம் மன்றாடுகிறார்'—இவை பெரியவாச்சான் பிள்ளைவியாக்கியானம். நின்ற - நெடுங்காலமாயத்தொடர்ந்துநின்ற. இனி - உன்னை யாம் அடைந்த பின்பும் யாம் - இயல்புபற்றிய தனித்தன்மைப்பன்மை யென்றுவது, எல்லாவுயிர்களையும் உளப்படுத்திய தென்றுவது கொள்க 'இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை' என்றது, பிறப்பற்று முத்தி பெறுமாறு என்றபடி மீளாவுலகமாகிய பரமபதத்தை யடைந்த உயிர்க்கு மீண்டு மற்றொருபிறப்பை யெடுத்தல் இல்லை யென்க உறாமை கேட்டருளாய் என இயையும், உறாமைச் செய்யும் என இயைத்தலும் ஒன்று

எந்நின்றயோனியுமாய்ப்பிறத்தல் - மீனும் ஆமையும் பன்றியும் சிங்கமும் குறளும் முதலிய வடிவங்களாக அவதரித்தல் 'உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப்பிறந்தாய்' என்றது சௌலப்யத்தையும், 'இமையோர்தலைவா' என்றது பரத்துவத்தையும் விளக்கும், † "பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய வித்தகன்" என்பர் திருவாய்மொழியிலும் [சௌலப்யம் - அடியவர்க்குஎளியனாந்தன்மை, பரத்துவம் - எல்லாப்பொருளுக்குந் தலைமையாகப் பரமபதத்தில் வீற்றிருக்கும் நிலை.] எம்பெருமானது திருவவதாரம் மற்றையோரது பிறப்புக்களைப்போலக் காமசம்பந்தத்தால் ஆவதன்றி இச்சாமாத்திரத்தால் துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலநஞ் செய்தற்பொருட்டு உளதாகிற தன்மையை 'உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்' என்பதனால் வெளியிட்டார் அவன்பிறக்கிற பிறவி நம்பிறவிஅறுக்கைக்காகவன்றோ? அளிப்பான் - அளித்தற்காகவே, வேறொருபயனைக்கருதியன்று. 'எந்நின்றயோனியுமாய் - இன்ன தண்ணியதிற பிறவே னென்றுதான் உன்றை சொல்லலாமோ? இவனுடைய ஜந்மத்துக்கு ஓர்அடைவு உண்டாயிருக்குமிறே, காமமடியாகவருகிற தாகையாலே, தன்அநுக்ரஹத்தாலே எல்லார்க்குமாகப் பிறக்கையாலே, அவனுடைய ஜந்மத்துக்கு ஓர் அடைவில்லையிறே,' 'என்ஜந்மத்தைப் போக்கித்தரவேணுமென்று உன்னைக் காலைக்கட்டுகிற என்

* மணிமேகலை, பளிக்கறைபுக்ககாதை, ௧௧௩ - ௧௨௦.

† திருவாய்மொழி - மூன்றாந்திருப்பதிகம் - ௧.

பிறவிபோலேயோ, என்னை எடுக்கப் பிறக்கிற உன் பிறவி என்கிறார்,' 'பிறந்தாய் - தூணிலே தோற்றினாற்போலே யாதல் ஆனைக்கு உதவினாற்போலே யாதல் ஆவிர்ப்பவித்துக் கடுக்க நின்று காரியந்தலைக்கட்டித் தான் போனாயோ? நாட்டார் பத்துமாசம் கர்ப்பவாசம் பண்ணினால், பன்னிரண்டுமாசம் கர்ப்பவாசம் பண்ணியன்றோ நீ அவதரித்தது!' என்பவை நம்பிள்ளையீடு.

நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்தில் *"இமையோர் தேஎத்தும்" என்றவிடத்து, 'இமையாக்கண்ணராகலின் இமையோரென்றார்' என்றும், சீவகசிந்தாமணியில் † "இறங்குதுகண்ணிமையார்" என்றவிடத்து 'கண்ணிமையார் - தேவர்க்கு ஓர்பெயர்' என்றும் உரைத்தவை இங்கு உணரத்தக்கன. ‡"அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன்," §"அச்சுதாவமரரேறே" என்னுமிடங்களில் 'அமரர்' என்பதுபோல, இங்கு 'இமையோர்' என்றது, பரமபதத்திற் பொருந்திய நித்தியமுக்தர்களைக் குறிக்கும். 'இமையோர்தலைவா' என்றதனால், பரமபதநிலையை இவர் ஆசைப்பட்டமை தோன்றும். இமையோர் என்றது - இங்கு, அகநோக்காகிய ஞானக்கண் குவியாதவர் என்பதை விளக்கும் என்பர். நித்தியவிபூதியாகிய பரமபதத்துக்குத் தலைவனென்றது, லீலாவிபூதியாகிய இப்பிரபஞ்சத்துக்குத் தலைவனென்பதற்கும் உபலக்ஷணம். இனி, இரட்டுறமொழிதலால், இமையோர் - இமமையோர் என்பதன் தொகுத்தலாக, இவ்வுலகத்தாரையும் உணர்த்துமெனினுமாம். மெய் - 'விண்ணப்பத்துக்கு அடைமொழி. மெய்ந்நின்று என இயைத்து, திருமேனிகாட்டி உண்மையாக நோக்கி நின்று எனினுமாம். நின்று - விரையாது நின்று, முடியக்கேட்டருள வேணுமென்றபடி. 'ஜகத்வ்யாபாரத்திற் பரபரப்பற்று நின்று' என்று விண்ணப்பத்தை நீ கேட்டருளுதல்மாத்திரமே உயிர்கள் உய்தற்கு உபாயமென்பார், 'கேட்டருளாய்' என்றார். 'கேட்டருளாய் என்று - கேட்கை தானே அருளென்று கருத்து,' 'யாமுறுமை என்று பன்மையாயிருக்க, அடியேன் என்று ஒருமையாலே, ஈச்வரனுக்கு விஜ்ஞாபிப்பார் தாம் ஒருவருமாய், பல்லாயிரம் ஸம்பந்திஸம்பந்திபரம்பரைக்கும் ஒக்குமென்று கருத்து' என்பன, வாதிகேசரிஅழகியமணவாளஜீயர் உரை. 'நான்' என்னாது 'அடியேன்' என்றதற்கு ஏற்ப, 'சொன்னவார்த்தை' என்னாது 'செய்யும்விண்ணப்பம்' எனப்பட்டது

ஞானம், யோனி, விண்ணப்பம் - ஜ்ஞாநம், யோநி, விஜ்ஞாபநம் என்ற வடசொற்களின் திரிபுகள். ஒழுக்கு - ஒழுகு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். 'யாம்' என்றதனோடு 'அடியேன்' என்றது, பன்மையொருமைமயக்கம். உறுமை - எதிர்மறைவினையெச்சம். அளிப்பான் - பான்விகுதிபெற்ற எதிர்காலவினையெச்சம். எந்நின்றயோனி - எகரவினா, எஞ்சாமையையுணர்த்தி பன்மையை விளக்கும். யோனியும், உம் - இழிவுசிறப்போடு முற்றுப்பொருளது. 'எந்நின்றயோனியிற் பிறந்தாய்' என்னாது, 'எந்நின்றயோனியுமாய்ப் பிறந்தாய்' எனக் கூறினது, அந்தந்தப் பிறப்பிற் பிறந்தபோது சிறிதும் வேறுபாடுதோன்றாதபடி அதனதன் தன்மையாகவே இருந்ததை உணர்த்தும்.

'இமையோர்தலைவா' என்கையாலே பரப்ரஹ்மஸ்வரூபமும், 'அடியேன் செய்யும் விண்ணப்பம்' என்கையாலே சீவாத்மாவினது தன்மையும், 'உயிரளிப்பான் எந்நின்றயோனியுமாய்ப் பிறந்தாய்' என்கையாலே பரமாத்மாவை அடையும் உபாயமும், 'கேட்டருளாய்' என்கையாலே அங்ஙனம் அடை

* தொல்காப்பியம் - பொருளதிகாரம் - பொருளியல் - ௫௪.
† சீவகசிந்தாமணி - நாமகளிலம்பகம் - உகக
‡ திருவாய்மொழி - முதல்திருப்பதிகம் - க
§ திருமாலை - உ.

தலின் பயனும், 'பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை' என்கையாலே அச்சரணாகதிக் குப்பகையும் ஆக இப்பாட்டில் அர்த்தபஞ்சகமும் குறிக்கப்பட்டதாயிற்று என்பது பூர்வாசாரியர்கள் கொள்கை (க)

### தலைவிவேறுபாடுகண்ட தோழி வியந்துரைத்தல்.

௨. செழுநீர்த்தடத்துக்கயன்மிளிர்ந்தாலொப்பச்சேயரிக்க
ணழுநீர்துளும்பவலமருகின்றனவாழியரோ
முழுநீர்முகில்வண்ணன்கண்ணன்விண்ணாட்டவர்மூதுவராந்
தொழுநீரிணையடிக்கேயன்புசூட்டியசூழ்குழற்கே.

(இ - ள்) முழு நீர் முகில் வண்ணன் - நிறைந்த நீரையுடைய காள மேகம் போன்ற திருநிறமுடையவனான, கண்ணன் - திருமாலினது, மூதுவர் ஆம் விண்ணாட்டவர் தொழு நீர் இணை அடிக்கே - (யாவர்க்கும்) முற்பட்டவரான பரமபதத்து நித்யசூரிகள் வணங்குந் தன்மையையுடைய ஒன்றோடு ஒன்றொத்த திருவடிகளிலே, அன்பு சூட்டிய - (தனது) அன்பைச் செலுத்தின, சூழ் குழற்கு - அடர்ந்த கூந்தலையுடைய இந்தத் தலைமகளுக்கு,—செழு நீர் தடத்து கயல் மிளிர்ந்தால் ஒப்ப - மிக்க நீரையுடைய தடாகத்தில் கயல் மீன் பிறழ்ந்தாற்போல, சேய அரி கண் - சிவந்த இரேகைகளையுடைய கண்கள், அழு நீர் துளும்ப - (தலைமகனது பிரிவை யாற்றாமையால்) புலம்பின நீர் ததும்ப, அலமருகின்றன - தடுமாறுகின்றன; வாழி - (இந்த அன்புநிலை) என்றும் நிலைத்திருப்பதாக, (எ - று)—அரோ - ஈற்றசை. வாழி-(இத்துன்பம் நீங்கி) வாழ்ந்திடுக என்றுமாம்.

சர்வேசுவரனாகிய தலைமகனைப் புணர்ந்து பிரிந்து அப்பிரிவை ஆற்றாதவளான தலைவியினுடைய வேறுபாட்டைக் கண்டு வியந்த தோழியின் வார்த்தை, வெளிப்படைப்பொருள், இதற்கு உள்ளுறைபொருள் - எம்பெருமான் திருவடிகளில் ஆழ்வார்க்கு உண்டான அன்புமிகுதியாலாகிய கண்கலக்கத்தைக் கண்டு வியப்புற்ற நண்பர்கள் வார்த்தை. இவர்க்குப் பிரிவாற்றாமை - எம்பெருமான் ஒருகால் இவரது ஞானக்கண்ணுக்கு இலக்கானபொழுது அவனை உடனே சேரவிரும்பிய இவரை அப்பெருமான் அப்பொழுதே சேர்த்துக்கொள்ளாது மறைய அதனாலுண்டான துயரம். தடத்துமிளிர்ந்தகயலை நீர்ததும்பின கண்ணுக்கு ஒப்புச்சொல்லுகையாலே, அந்நீரோடு கண்ணுக்கு உண்டான சோதி தோற்றுதலால் ஆழ்வாரது அகக்கண்ணாகிய ஞானத்தின் ஊற்றுடைமை சொல்லியவாறு. 'சேயரிக்கண்' என்று அந்தக்கண்ணுக்குச் செம்மையமைதி கூறுதலாலே, அந்த ஞானம் பக்தியாயினமை தோற்றுகிறது. 'அழுநீர் துளும்ப அலமருகின்றன' என்கையாலே, அந்தப்பக்தியின் முதிர்ந்தமை தோன்றும். 'கண்ணன்' என்பதனால், சௌலப்பியம் தோற்றும்; 'கிருஷ்ணனென்றால் பெண்கள்பக்கலிலே மேல்விழுவானொருவனென்று பிரசித்தமிறே' என்ற நம்பிள்ளையீட்டையும் அறிக. 'அன்புவைத்த' என்னாது 'அன்புசூட்டிய' என்கையாலே, ஆழ்வாரது அன்பு எம்பெருமான் திருவடிகளுக்கு அலங்காரமென்று தோற்றுகிறது; *"ஆவமென்பதோர்பூ" என்றார் பெரியாழ்வாரும். 'இணையடிக்கே யன்புசூட்டிய சூழ்குழற்கு' என்ற சொற்போக்கால், எம்பெருமான் திருவடிகள் ஆழ்வார் திருமுடிக்கு அலங்காரமென்னுமிடமுந் தோற்றுகிறது. கீழ்ப்பாட்டில் 'இமையோர்' என்றதுபோலவே இங்கு 'விண்ணாட்டவர்' என்றது, தேவரைக் குறியாது, எல்லாவுலகங்களுக்கும் மேலுள்ள பரமபதத்திலுள்ளாரைக் குறித்தது. 'மூதுவராம் விண

* பெரியாழ்வார் திருமொழி - முப்பத்தைந்தாந்திருப்பதிகம் - ௫.

ளுட்டவர்' என்றது, இவ்வுலகங்களிலிருந்து பரமபதஞ்சேர்ந்த முக்தரன்றிப் பரமபதத்திலேயே என்றும் நிலைத்துள்ள அநந்த கருட விஷ்வக்ஸேநர் முதலிய நித்யரென்றபடி.

கண்ணன்-க்ருஷ்ணன் என்னும் வடசொல்லின் சிதைவு, கருநிறமுடையவனென்று பொருள். 'முழுநீர்முகில் வண்ணன்' என வந்ததனால், இங்கே 'கண்ணன்' என்றது பெயர் மாத்திரமாய் நின்றது. திருக்கோவையாரில் *"கருங்கண்ணன்" என்றவிடத்துப் பேராசிரியர் 'கண்ணனென்பது-கரியோனென்னும் பொருள்தோர் பாகதச் சிதைவு, அஃது அப்பண்புகுறியாது ஈண்டுப் பெயராய் நின்றமையின், 'கருங்கண்ணன்' என்றார், 'செந்நிறப் பங்கயம் என்றாற்போல' என வுரைத்ததை யுணர்க. இனி, கிருஷ்ணன் என்பதற்கு யாவர் மனத்தையுங் கவர்பவனென்னும் பொருளும் உண்டு. சூழ்குழல் - தலைமகனை வசப்படுத்தவல்ல மயிர்முடி யென்றுமாம். மூதுவர் - முதுமையென்னும்பண்படியாப்பிறந்த பெயர், பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டது.

முதலில் 'இமையோர் தலைவா' என்று எம்பெருமானுடைய உத்தமபுருஷத்தன்மையைக் கருதுகையாலே, அப்பொழுதே அவனைக் கிட்டவேண்டும்படியான ஆசை யுண்டாய், அங்ஙனம் அவனைக்கிட்டப்பெறுமையாலே, ஆழ்வார் ஆற்றாமை மீதூர்ந்து தளர்ந்தார், அத்தளர்ச்சியாலே தாமான தன்மையழிந்து ஆண்பெண்ணும்படியான நிலைமை தோன்றி, ஒருபிராட்டிநிலையை யடைந்தார். ஆண்பெண்ணாதல் கூடுமோ? எனில்,—†"கண்ணிறைந்த காண்டரேல் ஆடவர்பெண்மையை அவாவும் தோளினாய்", ‡"வாராக வாமனனே யரங்கா வட்டநேமிவலவா ராகவா உன்வடிவுகண்டால் மன்மதனும் மடவாராக வாதரஞ்செய்வன்" என்பவாதலாலே, இது கூடும் § "பெண்டிருமாண்மை வெஃகிப் பேதுறு முலையினாள்" எனப் பெண்ஆணுகுமிடமும் உண்டு. அங்ஙனம் ஆண்பெண்ணாகிலும் சாதாரணப்பெண்மையையேயன்றி ஒருபிராட்டியின் நிலைமையை யடையுமாறு எங்ஙனமெனில்,—பரமாத்மாவினது தலைமையும், ஜீவாத்மாவினது அடிமையும், ஜீவாத்மா பரமாத்மாவுக்கே உரியதாயிருக்கையும், தாம் எம்பெருமானது சேர்க்கையால் இன்பத்தையும் பிரிவினால் துன்பத்தையும் அடைதலும், அவனையே தாம் கரணங்களெல்லாவற்றாலும் அநுபவித்து ஆநந்தித்தலும் முதலிய காரணங்களால், தம்மைப்பிராட்டிமாரோடொக்கச்சொல்லத் தட்டில்லை. தோழிநிலைமையும் தாயார்நிலைமையும் முதலியன ஆகிறபடி எங்ஙனே யென்னில், தாம்விரும்பியபொருளின்வரம்பின்மையால் அங்ஙனமாகுமென்க.

தலைமகன் வேட்டைக்குப் புறப்பட்டானாய், தலைமகளுந் தோழியுமாகப் பூக்கொய்துவிளையாடவென்று புறப்பட்டவளவிலே, ஒருவியாசத்தாலே தோழியும் பிரிந்தசமயத்திலே, தலைமகனும் ஊழ்வினையுண்மையாலே அங்கே வர, அங்கே அவனோடே கண்கலவியேகூட்டக் கூடி ஊழ்வினைபிரித்தலால் உடனேபிரிந்து நாணத்தால் தன்உயிர்த்தோழிக்கும் தன துங்கலக்கத்தைத் தெரிவியாதபடியிருக்க, மீண்டுவந்ததோழி இவளதுநிலைமையைக் குறிப்பாலறிந்து கூறியது, இது. இனி, இயற்கைப்புணர்ச்சியலன்றித் தோழியிற்கூட்டத்தில் நிகழ்ந்த தலைமகன்பிரிவுக்கு ஆற்றாத தலைவியின் வேறுபாட்டைக் கண்ட தோழியின் வார்த்தை யென்பாரும் உளர். 'இயற்கைப்புணர்ச்சி'யென்பது - பொருளதிகாரத்திற் கூறப்பட்ட தலைமகனும் தலைமகளும் அவ்வாறு ஒருபொழில்வத்து எதிர்ப்பட்டுத் தெய்வமிடைநிற்பப் பான்மைவழியோடி

* திருக்கோவையார் - ருஅ.

† கம்பராமாயணம் - பாலகாண்டம் - தாடகைவதைப்படலம் - உச.

‡ திருவரங்கத்தந்தாதி - சு0.

§ சீவகசிந்தாமணி - காந்தருவதத்தையாரிலம்பகம் - கரு.

ஓராவிறகு இருகோடு தோன்றினாற்போலத் தம்முள்ளொத்த அன்பினராய அவ்விருவர்ஒத்தார் தம்முள் தாமே கூடுங் கூட்டம்' என்பது, பேராசிரியருரை. இது, தெய்வப்புணர்ச்சி, முன்னுறுபுணர்ச்சி யெனவும்படும். இது, எண்வகை மணத்தினுள் காந்தருவவியாகமாம். [எண்வகைமணங்களாவன - பிரமம், தைவம், பிராஜாபத்தியம், ஆர்ஷம், ஆசுரம், காந்தருவம், இராக்கதம், பைசாசம் என்பன.] 'காந்தருவமாவது-தனியிடத்து இருவருடையவும் காமமோகத்தாலே கூடுகை; இதுக்கு யாழோர்கூட்டமென்று பெயர்' என்பது, வாதிகேசரி அழகியமணவாளஜீய ருரை. தோழியிற் கூட்டம் - தோழிமூலமாக ஒருவரையொருவர் கூடுதல்.

'செழுநீர்த் தடத்துக் கயல் மிளிர்ந்தால் ஒப்ப - தர்சநீயமாய் ப்ரஸந்நமான ஜலஸம்ருத்தியை யுடைத்தாய ஏகார்ணவம் போலே யிருப்பதொரு தடாகத்திலே அப்பரப்படங்கலும் விம்மும்படி மிளிர்ந்ததொரு கயல் *"அலை கடல்நீர்குழம்ப" என்கிறபடியே அது அடங்கலுங் குழம்பும்படி இடம்வலங் கொண்டாற்போலே பாய்த்து, கண்களிறப்புரட்சிஇருக்கிறபடி, உபமானமே தொடங்கித் திருத்திக்கொடுசெல்லவேண்டுகிறது, உபமேயத்தினுடைய வைலக்ஷண்யம். ஒப்ப என்கிறது - ஸர்வதாஸாம்யமன்று; ஒருவகைக்கு உபமித்ததனை' என்ற நம்பிள்ளையீடும், 'முழுநீர்முகில்வண்ணன் - கடலைக் கழுத்தே கட்டளையாகப் பருகின காளமேகம் போன்ற திருநிறத்தையுடையவன்' என்ற அழகியமணவாளசீயருரையும் அறியத்தக்கன.

செம்மை + அரி = சேயரி பண்புப்பெயர்த்திரிபு. அலமருகின்றன, அலமா - பகுதி. வாழிய என்னும் வியங்கோள், ஈற்றுயிர்மெய்கெட்டு வாழி என நின்றது, வாழியரோ என்பதில், வாழியர் என்பதை ரகரமெய்யீற்று வியங்கோளெனக்கொண்டு, ஓகாரத்தை அசையென்னலுமாம். 'விண்ணாட்டவர் மூதுவராம்' என்பது, மொழிமாற்றுப்பொருள்கோள். 'தொழுநீர்' என்பதில், நீர்மை யென்னும் பண்பு ஈறுபோயிற்று. அடிக்கே, ஏ - பிரிநிலை; குழற்கே, ஏ - ஈற்றசை. சூழ்குழல் - வினைத்தொகையன்மொழி. உவமையணி. (௨)

பிரிவாற்றாத தலைவி நெஞ்சழிந்து உரைத்தல்.

௩. குழற்கோவலர்மடப்பாவையுமண்மகளுந்திருவு [ழா
நிழற்போல்வனர்கண்டுநிற்குங்கொல்மீளுங்கொறண்ணந்து
யழற்போலடுஞ்சக்கரத்தண்ணல்விண்ணோர்தொழக்கடவுந்
தழற்போற்சினத்தவப்புள்ளின்பின்போனதனிநெஞ்சமே.

(இ - ள்) தண் அம் துழாய் - குளிர்ந்த அழகிய திருத்துழாயையும், அழல் போல் அடும் சக்கரத்து - (கொடியவர்களை) நெருப்புப்போல அழிக்கிற சக்கராயுதத்தையு முடைய, அண்ணல் - தலைவனான எம்பெருமான், விண்ணோர் தொழ கடவும் - மேலுலகத்தார் வணங்கும்படி ஏறிநடத்துகிற, தழல் போல் சினத்த அ புள்ளின் பின் - (பகைவர்திறத்தில்) நெருப்புப் போன்ற கடுங்கோபத்தையுடைய அக்கருடாழ்வானது பின்னே, போன - சென்ற, தனி நெஞ்சம் - (எனது) தனிப்பட்ட மனம்,—குழல் - வேய்ங்குழலையுடைய, கோவலர் - இடையரது, மடம் பாவையும் - மடப்பத்தையுடையமகளான நப்பின்னைப்பிராட்டியும், மண்மகளும் - பூமிப்பிராட்டியும், திருவும் - பெரியபிராட்டியும், நிழல் போல்வனர் - (எம்பெருமானுக்கு) நிழல் போலேயிருக்க அவர்களை, கண்டு - பார்த்து, நிற்குங்கொல் - (அவ்விடத்தை விடாதே) நிற்குமோ? மீளுங்கொல் - மீண்டுவருமோ? (எ - று)

* பெரியதிருமொழி - நூற்றுநான்காந்திருப்பதிகம் - ௧.

தலைமகன்பிரிவாற்றாத தலைமகள் தனது வேறுபாடுகண்டு வியந்துரைத்த தோழியை நோக்கி 'அவன்பக்கல் போன என் நெஞ்சு மீண்டுவருமோ? வாராதே போய்விடுமோ?' என்கிறாள், ஆழ்வார் தமது அன்புமிகுதியாலாகிய கண் கலக்கத்தைக் கண்டு வியந்த நண்பரைநோக்கி எம்பெருமான்விஷயத்திலே தமதுநெஞ்சு பிரமாணபூர்வமாகச் சென்றுவிட்டதனை உரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். ஆழ்வார் தம்திருவுள்ளம் வேதமயனான புள்ளின்பின் போனமை சொல்லுகையாலே, சிறந்தபிரமாணமான வேதத்தை யநுசரித்தது அவரது திருவுள்ளமென்பதும், 'அப்புள்' என்ற அகரச்சுட்டினால் அவ்வேதத்தின் மகிமையும், 'தழற்போர் சினத்த அப்புள்' என்று பகைவரை யழிக்கவல்ல பராக்கிரமங் கூறுதலால் அவ்வேதப்பிரமாணம் பரமதங்களை யழிக்குந்திறத்ததென்பதும், 'சக்கரத்தண்ணல் கடவும் புள்' என்றதனால் அப்பிரமாணந்தான் ஈச்வராதீனமென்பதும், 'விண்ணோர்தொழக்கடவும்' என்றதனால் அந்தப்பிரமாணபலத்தாலே தேவர்களியாவரும் எம்பெருமானுக்கு அடிமைப்படுவரென்பதும், 'தண்ணந்துழாயழற்போலுஞ்சக்கரத்தண்ணல்' என்றதனால் எம்பெருமானது இனிமை ஆற்றல் தலைமை என்னுங் குணங்களும், 'நிழற்போல்வனர்' என்றதனால் பிராட்டிமார்களும் அடிமை யியல்பென்பதும், நப்பின்னைப்பிராட்டியை முதலாகச் சொல்லுகையாலே மேன்மையிலும் சீர்மைக்கு உள்ள மேம்பாடும், 'தனிநெஞ்சம் கண்டு நிறக்குங் கொல் மீளுங்கொல்' என்றதனால் இப்படிப்பட்ட சிறந்தவிஷயத்தில் பின்பற்றிய பெருமையுற்ற தம்நெஞ்சு அந்நிலைமாறாதுநின்று நிரந்தரானுபவம் பண்ணுமோ? அன்றி நீங்கிவிடுமோ வென்று கவலைப்படுதலுந் தோன்றும்.

'குழற்கோவலர்மடப்பாவை' என்பதற்கு - வேயங்குழலொலியால் அறிவில்லாத பசுக்களையும் வசப்படுத்தவல்ல இடையர்குலத்திற் பிறந்ததனாலே தன்மொழியழகால் முற்றுமுணர்ந்த எம்பெருமானை வசப்படுத்தவல்லவளென்று விசேஷார்த்தம் உரைப்பர். குழல் - கோவலர்க்கு அடைமொழி; மயிர்முடி யென்று உரைத்து, நப்பின்னைக்கு அடைமொழியாக்கினுமாம். கண்ணனது திருக்குழலிலே தான்ஈடுபட்டிருக்கையாலே, அதுதோன்ற 'குழல்' என்றஅடைமொழி கொடுத்தார். கோவலர் - கோபாலரென்னும் வடசொல்லின் திரிபு, பசுக்களைக் காப்பவரென்று பொருள்; கோ வலர் என 'வலர்' என்பதை வல்லார் என்னுந் தமிழ்மொழியின் தொகுத்தலென்றுமாம். மடம் - எல்லாம் அறிந்தும் ஒன்றுமறியாதுபோலிருக்குந் தன்மை; 'கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை' என்றுங் கூறுவர். இது, நாணம் அச்சம் பயிர்ப்பு முதலிய மற்றைப் பெண்குணங்களுக்கும் உபலக்ஷணம். பாவை- சித்திரப்பதுமைபோல அழகியவள், கண்மணிப்பாவைபோல அருமையானவள். உவமையாகுபெயர். நப்பின்னை -ஓர் இடையர்மகள்; இவள், கிருஷ்ணாவதாரத்தில் எம்பெருமானது திருவுள்ளத்துக்கு மிக உகப்பாக இருந்தனள்: எவராலும் அடக்கவொண்ணாதனவும் அசுரத்தன்மைபூண்டனவும் பெருவலியினவுமான ஏழெருதுகளைக் கண்ணபிரான் தன்வலியால் அடக்கி வென்று அழித்து அவ்வெற்றியையே இவள்தந்தையின் கொள்கைப்படி கந்யாசுல்கமாக்கி இவளை மணஞ்செய்துகொண்டனன் என்பது கதை. இவள் நீளாதேவியின்அம்சமாதலால், ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி யென்னுந் தேவிமார் மூவரையுங் கூறியவாறும். திரு - எம்பெருமானுக்கு எல்லாச்செல்வமுமாக வுள்ளவள். 'நிழற்போல்வனர்' என்றதனால், இவர்கள் அவனை விடாது தொடர்ந்திருக்குந் தன்மையும், அவனது குளிர்ச்சிக்கு இவர்கள் காரணமாகுந் தன்மையும், இவர்கள் பரதந்திரைகளாயிருக்குந் தன்மையும் புலப்படும்: இவர்கள் தம்மில் ஒருவர்க்கொருவர் நிழல்போல ஒத்து விளங்குக எனவுரைத்தலும் ஒன்று. அடியார்களுக்கு நிழலாயிருப்பர்

கள் என வுரைப்பினுமாம; 'ஆசிரிதர்குறறத்தைப பொறுப்பிக்கும, பிராட்டி; குறறம காணபபானென்ன் பொறுபபானென் என்றிருக்கும, ஸ்ரீபூமிபபிராட்டி, நப்பின்னைபபிராட்டி, க்ஷமைதான் ஓருவடிவாயிருக்கும' என்பது, பெரியவாச சான்பிள்ளை வியாக்கியானம. நிறகுங்கொல மீளுங்கொல- இவாகள் அவனை டு நீஙகாதவாறு போல, நமது தலைவிக்கும சேர்க்கை நேரவேண்டு மனக்க நதி அவருக்கு நிறகுமோ? அலலது இவாகளகூழசசியால அவனைக கிட் ல அரிதென்று மீளுமோ என்றவாறு. கொல இரண்டும - ஐயம

'தண்ணநதுழாயழற்போ லடுஞ் சக்கரத தண்ணல' என்பதற்கு - (கூடின நிலையிற) குளிர்சசியைததருகிற அழகிய திருததுழாயினிடததி லுள்ள கூடாதநிலையிலவநததாததருகிறவெபபமபோல நலிகிற திருவாழியையுடைய சர்வேசுவரனென்னு கநதுபபட உரைபபா அடபிள்ளை, பிரிநத நிலை யாதலால, திருததுழாயின் வெபபததை பாராட்டிக் கூறியபடி அந நிலையில அது காலாக்கினியினுஞ் சுடுமன்றோ? அநுகூலரையே வருததுகிற துழாயின் வெபபம பிரதிகூலரை வருததுகிற திருவாழியின் வெபபததுககு ஏறற உவமையாயச் சிறக்கும. பகைவரையழிததறகு கருவியான சககரபடையினும, அபபடைககலததைப பிரயோகிததறகு உரிய பராக்கிரமமுடைய திருமாலினும, பகைவாதிறததுச் சீறறம பெரியதிருவடிககு மிகுதியென்பதும, அதனால அபபுளளரசு (சிறறின்பததுஆசையிக்க இராசகுமாரனைக் காலங்கட்டிழுததிரி அடக்கி அழைததுககொண்டு போவதுபோலத) தன்னுடன்கூடியிருக்கிற நாயகனை எழுநதருளபபணணிககொண்டுபோகும்பொழுது தன்னைச் சினநது பாரததுககொண்டே போயிற றெனபதும தோன்ற, 'தழறபோற சினதத அபபுள' என்றார் தனி நெஞ்சம - என்னையுமவிட்டு அங்கும முகமபெறாமல தனிபபட்ட நெஞ்சம சுவதநதிரமான நெஞ்சமென்றுமாம, வேண்டா என்றால மீளமாட்டாத நெஞ்சு.

துழாய, சக்கரம - துளஸீ, சக்ரம என்னும வடசொறகளின் சிதைவுகள். அண்ணல - ஆண்பாற சிறபபுபெயா. (௫)

## தலைவனைப்பிரிந்த தலைவி வாடைக்குஆற்றாது வருந்திக்கூறல்.

௬. தனிநெஞ்சமுன்னவாபுளளேகவாநதது தண்ணநதுழாயக்
இனிநெஞ்சமிங்குககவாவதியாமிலநீநடுவே
முனிவஞ்சபபேயச்சிமுலைசுவைததானமுடிசூடுதுழாயப
பனிநஞ்சமாருதமேயெமமதாவிபனிப்பியலவே.

(இ - ள்) தனி நெஞ்சம - (என்னோடு) உறவறறு நீஙகிய (என) மனம முழுவதையும, முன் - முன்னமே, அவா புளளே - அததலைவரது கருடபபறவையே, கவாநதது - (பிறாககு மிசசமிலலாதபடி) கவாநதுகொண்டுபோயிறறு, தண அம துழாயககு - (அவரது) குளிாநத அழகிய திருததுழாயக்கு, கவாவது - கவாநதுகொணடுபோதறகு, இனி இங்கு யாம நெஞ்சம இலம - இனி இவ்விடததில நாம வேறொருமனததை உடையோமலலோம; (அங்ஙனம இருக்க), முனி - கோபிக்குநதன்மையுள்ள, வஞ்சம பேயசசி - வஞ்சனையையுடைய பேயமகளான பூதனையினது, முலை - முலையை, சுவைததான் - (பசையற) உருசிபாாததுஉண்டருளின கண்ணனது, முடி - திருமுடியிலே, சூடு - சூடப்பட்ட, துழாய - திருததுழாயினது, பனி - குளிாசசியையுடைய, நஞ்சம மாருதமே - விஷமபோன்ற காறறே! நீ நடுவே - நீ இடையிலே (புகுநது), எமமது ஆவி பனிபபு - (முன்னமே நோவுபட்டிருக்கிற) எமமுடைய உயிரை மேலும நடுஙகசசெய்தல, இயலவே - (உனககுததகக) இயறகையாமோ? [தகாது என்றபடி], (எ - று.)

பிரிந்துசென்ற தலைவனது பின்னே தன்மனம் போய்விட அதனையிழந்த தலைவி அத்தலைவனது திருத்துழாய்மாலையினிடத்துத் தனக்கு உண்டான ஈடுபாட்டால் தளர்ந்திருக்கும்பொழுது, அத்திருத்துழாயின்சம்பந்தத்தையுடைய காற்று வந்து வீசி வருத்தாநிற்க, அதனைப் பொறாது, 'நெஞ்சையிழந்து வருந்துகிற எம்மை அத்தலைவரோடு தொடர்ச்சியையுடைய நீ பகைவர்போல வருத்துதல் தகாது'என்று கூறினாள், பிரமாணபூர்வமாக எம்பெருமான் பக்கலிலே மனத்தைச் செலுத்திய ஆழ்வார் அப்பெருமானைச் சேருமளவும் வேறெப்பொருளும் தமக்குப் பிரியமாகாதென்னுந்தன்மையைக் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள் 'தனிநெஞ்சம் முன் அவர்புள்ளே கவர்ந்தது' என்றதனால் வேறுமதங்களை அநுசரியாமல் தனிப்பட்ட ஆழ்வாரது திருவுள்ளம் எம்பெருமானையறிதற்குச் சிறந்த பிரமாணமாய் வேறுபிரமாணத்தை வேண்டாத வேதவழியிலே முற்றுறச் சென்று நிலைத்துநின்ற தன்மையும், 'தண்ணந்துழாய்க்கு இனிநெஞ்சம் இங்குக் கவர்வது யாமிலம்' என்றதனால் இப்படி முதலிலே வேதவழிச்சென்று நல்ஞானங்கைவந்தவர்க்கு வேறு அறியலாவது எதுவுமில்லை யென்பதும், பிரதிநவாக்கியத்தால் தீங்குவிளைப்பதாயினும் இனியதுபோலத் தன்னைக்காட்டுகிற பிரகிருதியை [மாயையை]ப் பசையறுக்குந்தன்மையுள்ள எம்பெருமானது குணநிசயத்தோடு சம்பந்தப்பட்ட ஞாபகம் விரைவையுண்டாக்குவதாயினும் அப்பெருமானது சோகக்கைக்கு அவனது விரைவே வேண்டுதலால் இது இடையிலே வந்து வருத்துதல் தகுதியன்றென்பதும் தோன்றும்.

தனிநெஞ்சம் என்பதற்கு - ஒப்பில்லாத மன மென்றும் உரைக்கலாம், தமிற்காட்டிலும் எம்பெருமானிடத்தில் உண்டான அன்புமிகுதியால் தாம் ஆசைப்படுகிற பொருளினிடத்துத் தமக்குமுன்னமே சென்று சேர்ந்து ஈடுபட்ட மனம் போன்ற சிறப்புடைய பொருள் வேறுகிடைப்பது அரிதன்றோ? அன்றியும், 'தனிநெஞ்சம்' என்றதனால், கருடாழ்வான் திருத்துழாய் மந்தமாருதம் என்னும் இவற்றுக்கெல்லாம் ஈடுகொடுத்தற்கு ஒருமனம் பற்றுமோ வென்பதும் தோன்றும். கூடியகாலத்து இன்பந்தரும்பொருள்யாவும் பிரிந்தகாலத்துத் துன்பந்தருதலால், திருத்துழாயையும் அதனோடு சம்பந்தப்பட்ட காற்றையும் அஞ்சியவாறு ; 'எங்குக்கவர்வது' என்று பாடமோதி, இரண்டு வாக்கியமாகக் கொண்டு, 'இனி, அந்தஅழகியதுழாய்தான் விழுங்குவது எந்தப்ரதேசத்தை? இந்நெஞ்சத்திற்புள் அயர விழுங்கினதாய் அயர மிக்கதோ? நிரவசேஷமாக அடப்புள்ளே விழுங்கிற்றே, இப்படி நெஞ்சுபறியுண்ட நாம் இங்கே இருக்கிறோமென்றிருக்கிறாயோ? யாம் இலம்' என்று உரைப்பர் பெரியபரகாலஸ்வாமி. யாம், இலம், எம்மது - தனித்தன்மைப்பன்மைகள். 'முனிநஞ்சப்பேய்ச்சி முலைசுவைத்தான்' என்ற பாடத்துக்கு, நஞ்சப்பேய்ச்சி என இயைத்து - விஷம்போலத் தவறாமற் கொல்லுங் கொடுமையையுடைய ராக்ஷசி யென்றுவது, நஞ்சமுலையென இயைத்து - நஞ்சுதீற்றிவந்த கொங்கை யென்றுவது பொருள் கொள்க. 'முனிவஞ்சப்பேய்ச்சிமுலைசுவைத்தான்' என்பதற்கு - 'வெறுத்து வஞ்சித்தாரை நலிகை யன்றிக்கே உகந்து செவ்வையுடையாரையும் நலிவானென்? *"பேயினாருயிருண்டிடும் பிள்ளை நம்பெண்ணுயிர்க்கு இரங்குமோ" என்று பேயென்றுபாராதே பெண்ணுக்அமையுமிறே பிணமாகைக்கு; அவள்பாடும் முலைநலங்கொண்டுகொள்ளும் முடியச்செய்தது' என்று விசேஷார்த்தமுரைப்பர், அழகியமணவாளஜீயர். துழாய்ப் பனி நஞ்ச மாருதம் - திருத்துழாயின் குளிர்ந்த தேனினால் நனைந்து நஞ்சூட்டினாற்போலே வந்த காற்று, தனக்கு அவ்விடத்திலுள்ள சம்பந்தத்தைக் காட்டி

* பெரியதிருமொழி - எழுபத்தைந்தாந்திருப்பதிகம் - ௩.

அதனால் மிகவருத்தவந்த காற்று என்க. இனி, துழாய்ப் பனி நஞ்சு என்பதற்கு - திருத்துழாயின் குளிர்ச்சியாலே தான் குளிர்ச்சியடைந்த என்றும் உரைக்கலாம், காற்றுக்குங் குளிர்ச்சியுண்டாக்கும்படி மிக்க குளிர்ச்சியுள்ளது திருத்துழாய் என்பது தோன்றும்: இதுபற்றியே, அடுத்தடுத்து 'தண்ணந் துழாய்' என்கிறது இவ்வுரைக்கு. நஞ்சு என்பது - நைந்த என்பதன் போலி. மாருதமே எமது ஆவி பனிப்பு இயல்வே என்றது - காற்றாகிய நீ காற்றுமயமான பிராணனை உன்னினமானதென்று பாராது வேற்றினமான புள்ளூர்ந் துழாயும்போல வருத்தலாமோ? என்றவாறு. ஈற்று ஏகாரம் - எதிர்மறை.

'முனிவஞ்ச' என்ற விசேஷணத்துக்குக் கருத்து - 'பூதனை முலையிலே நஞ்சைக் கலந்துகொண்டுவந்தாற்போலே, காற்றுத் திருத்துழாயிற் பரிமளத்தைக் கொண்டுவந்து பாதகமாகிறபடி' என்பது, அப்பிள்ளையுரை, 'அவள் தன் முலையிலே விஷத்தை ஊட்டிக்கொண்டுவந்தாற்போலேயாயத்து, இது தானுந் தன்மைக்குமேலே திருத்துழாயோடே கலந்துவந்தபடி' என உரைப்பர் நம்பிள்ளை. 'நெஞ்சம் புள்ளேகவாந்தது' என்றா, 'பருந்தெடுத்துப் போகிறது' என்றாற்போல துழாய்க்கு நெஞ்சம் யாமிலம் - நெஞ்சிரண்டு உடையோமல்லோம். 'எமது ஆவி' என்றது, நெஞ்சம்போல எம்மைவிட்டு அவர்பக்கலிலேசெல்லவல்ல துணிவில்லாத உயிரென்றபடி. பனிப்பியல்வே - எல்லோரது தாபத்தையுந் தணிப்பதற்கு உரிய நீயோ நெஞ்சுபிரிவுண்டாரை இப்படிக்கொலைசெய்தற்கு ஏற்பட்டாய்?

இப்பாட்டில் 'அவர்' என்ற பன்மையோடு 'சுவைத்தான்' என்ற ஒருமை மாறுகொள்ளக்கூறலாகாதோ? எனின் — அவன்பிரிந்துபோனபடியைக் கருதிச் சினந்து கீழ் 'அவர்' என்று உயர்த்துக்கூறினவள், அவன் முன்பு செய்த உபகாரத்தைக் கருதித் தணிந்து 'சுவைத்தான்' என இயல்பாக ஒருமையாற் கூறினளாதலால், இது வழுவாகாது வழுவமைதியாமென்க, ஒருமைப்பன்மை மயக்கம்.

விசேஷமான பலம் சாமர்த்தியம் அழகு முதலிய சிறப்புக்களையுடைய குழந்தைகளைக் கொல்லும்படி கம்சனாலேவப்பட்ட பூதனையென்னும் ராக்ஷசி, நல்லபெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்குவந்து, தூங்கிக் கொண்டிருந்த கண்ணனாகிய குழந்தையையெடுத்து, நஞ்சு தீற்றிய தனது முலையைக் கொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் முலைகளைக் கைகளால் இறுகப்பிடித்து அவளுயிரோடும் உறிஞ்சிப் பேரிரைச்சலிட்டுக் கதறி விழுந்து இறக்கும்படி செய்ததென்பது கதை.

நெஞ்சம், நஞ்சம் என்பவற்றில், அம் - சாரியை. புள்ளே, ஏ - பிரிநிலை. கவர்வதியாம் - குற்றியலிகரம். பேய்ச்சி - பேயன் என்பதன் பெண்பால். மாருதம் - வடசொல். எமது - ஆறாம்வேற்றுமைவிரியென்றாவது, ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயரென்றாவது கொள்க. பனிப்பு - பு விகுதி பெற்ற தொழிற்பெயர். (ச)

## வாடைக்குவருந்தி மாமையிழந்த தலைமகளைக் கண்டு தோழி இரங்கல்.

ரு. **பனிப்பியல்வாகவுடையதண்வாடையிக்காலமிவ்வூர்ப்**
**பனிப்பியல்வெல்லாந்தவிர்ந்தெரிவீசுமந்தண்ணந்துழாய்ப்**
**பனிப்புயல்சோருந்தடங்கண்ணிமாமைத்திறத்துக்கொலாம்**
**பனிப்புயல்வண்ணன்செங்கோலொருநான்றுதடாவியதே.**

(இ - ள்.) பனிப்பு இயல்வு ஆக உடைய - குளிர்ப்பண்ணுதலையே இயற்கைத்தொழிலாகவுடைய, தண் வாடை - குளிர்ந்த காற்று, இ காலம் - இந்தக் காலமொன்றிலே, இ ஊர் - இந்த ஊரொன்றிலே, பனிப்பு இயல்வு எல்லாம் தவிர்ந்து - குளிர்செய்தலாகிய (தன்னுடைய) இயற்கையை முழு

வதுமவிட்டு, எரி வீசும - வெபபததை (எஙகும் வெளிப்படையாக) வீசுகி ன்றது, (இவ்வாறு), பனி புயல வணணன் செஙகோல ஒரு நான்று தடாவி யது - குளிர்நதகாளமேகமபோன்ற தன்மையையுடைய எமபெருமானது (என்றுமமாறாத) கட்டளை இவ்வொருகாலததில செவ்வைகுலைநதுகோடினது, —அம தணணம துழாய - அழகிய குளிரநத (அவனது) திருததுழாயின் விஷயமாக (ஆசைபபட்டு), பனி புயல சோரும - மழைதுளிததலையுடைய மேகமபோல நீரசொரிகிற, தட கணணி - பெரியகணகளையுடைய இவளது, மா மை திறதது கொல ஆம - மேனிநிறததை அழிபபதறகோ போலும? (எ-று)

எவ்வகைததாபததையும தணிககவலல மநதமாருதம, இபபொழுது இவ் வூரில இவளை எரிக்கின்றது. இஙஙனம பொருளின்நிலைமை மாறுபட்டது, இவளது நிறததை யழிககககருதி அபபெருமான தனது செஙகோன்மையை ததவிரநது வாடையை வேறுபடுததிவரககாட்டியதனாலாககூடும் என்று தோழி இரஙகினாள், எமபெருமானைச சேர்தறகு விரைகிற ஆழவாரககு இவ் வுலகபபொருளயாவும வெறுபபுவிளைததலை நணபா கணடு கூறுதல, இதறகு உளளுறைபொருள். இபபாட்டின் முன்னிரணடடிகளால எமபெருமானை அடைதற்கு விரைகிற இவாககு இவ்வுலகதது இனபநதருமபொருள துன் பந தருவதாகத் தோன்றுதலும், மூன்றுமஅடியால எமபெருமானது குண விசேஷம காலநீட்டிததலால இவாககுததளாசசியுணடாகினமையும், நான் காமஅடியால இவரது பிரிவாறறாததிலைமை 'எமபெருமானது சஙகலபததுக் கும ஒருமாறுபாடுநேரநததோ?' என்று சஙகிபபதற்கு இடமாயிருநத தெனப துந தோன்றும ஸவாபதேசததில 'தண' என்றது ஞானமாதலால, 'சோருந தடஙகண' என்றதில அன்புமிகுதியாற் பேரறிவுகலஙகினமை தோன்றும.

தொழிறபணபையும குணபபணபையும கருதி 'பனிபுஇயலவாக வுடைய,' 'தண' என்ற இரணடு அடைமொழி கொடுததது இககாலம இவ்வூர்-பஞசபூதஙகளுள ஒன்றாகிய காறறு மறறொன்றாகிய அககினியின் தனமை யை அடைநத இநத அநதி, காலாநதரததிலுமிலலை, தேசாநதரததிலுமிலலை அவனைபபிரிநத காலததிலே, பிரிநது தனியிருககிற ஊரிலே யென்க அவ் வாடை முன்பு இவளுககே இனியதாயிருநததைக கருதி, 'இககாலம' என்றது. 'இவவூர' என்றது, இவளது ஆறறாமையைக கணட ஊராரையும வாடை தபபிததலால நெஞசைக கருடாழவான கொணடுபோனதலால, நிறததைத தான அழிபபதறகு வாடையைக கொடியதாகுமாறு சஙகறபி தது ஏவினனாதலகூடும என்பது தோன்ற, 'மாமைத திறததுககொலாம' என் றது 'புயலவணணன' என்றது, மேகமபோற கரிய வடிவததையும, அது போலத தாபநீரததுக கைமமாறு கருதாது உதவுகிற தனமைககுணத தையும உடையவனென்றவாறு, இபபொழுது வருததததொடஙகினவனது இயறகை இன்னதென்று குறிததாள *"நெடுஙகடல நிறபதும ஞாயிறு காயவதும நிறறலும கால், ஒடுங்கி நடப்பதும் தணகார பொழிவதும ஊழி தனிற, சுடுஙகனல பறறிச சுடாதேயிருபபதும துமபையுநதது, அடுஙகன லாழி யரங்கேசர்தந் திருவாணையினே" என்றபடி உலகததில சிருஷ்டிப பொருளகள யாவும புடைபெயாதல எமபெருமானது கட்டளைபபடியே யாத லால, வாடைகுணமமாறினதை எமபெருமானது ஆஜ்ஞை கோணுதலினா லாகிய தெனக குறிததாள். 'ஒருநான்று தடாவியது' - என்றும நிலைகுலை யாத இசசெஙகோல இவளநிறததையழிததறகாக ஒருபொழுது குலைநதது. தடாவியதே - நாமபட்டதுபடுகிறோம, அவனது ஆணைககு ஒருதீஙகுவாரா தொழியவேணுமே' என்று இரஙகியபடி

---

* திருவரஙகததுமாலை - கரு

'இப்படி வாடையாலே நலிவுபடுகிற பிராட்டியுடைய தசையை அநுசந்தித்த திருத்தாயார், 'காற்றுக்குளிரக்கடவதாக ஈச்வரன் நியமித்தவதுவும் அந்யதாவாகிறது, என்பெண்பிள்ளைநிமித்தமாகவன்றே' என்று இன்னாதாகிறாள்; இது தோழிவார்த்தை யாகவுமாம்' என்ற அப்பிள்ளை உரையும், 'வீசும் - ஒளிக்கும்வாணனுதபடி போனஇடமெல்லாந் தூவாநின்றது' என்ற அழகிய மணவாளஜீயா உரையும், 'வீசும் - இவளுடைய விரஹாக்நி தன்மேற்படாதபடி கடக்கநின்று வீசாநின்றது, தம் தாம் மேற்படாமை இருந்து நின்று எதிரிகளை எய்வாரைப் போலே' என்ற நம்பிள்ளைஈடும், அறியத்தக்கன.

மூன்றுநான்காமடிகளிலும் 'பணிப்பியல்' என்று பாடம் உண்டு அப்பொழுது, துழாய் பணிப்பு இயல் சோரும் எனப்பிரித்து, துழாயின் குளிர்ச்சியிலே தன்னுடையதன்மையை இழக்கிற என்று பொருள்கொள்க. நான்காம் அடியில், பியல்-புயலென்னும் பொருளது. பியல் எனினும், புயல் எனினும் ஒக்கும்; 'பியல் புயல் மழை இத்யாதிகளெல்லாம் வாஷத்துக்குப்போ' என்பர் நம்பிள்ளை.

தண்ணம் - தண்மை, அம் - பண்புப்பெயர்விகுதி இனி, அம் -சாரியையுமாம். 'தடங்கண்ணி' என்பதில், தட - பெருமை யுணர்த்தும் உரிச்சொல். *"தடவென்கிளவி கோட்டமுஞ் செய்யும்" என்றதனால், 'தட' என்னும் உரிச்சொல் - வளைவையும் உணர்த்துவ தாதலின், 'தடாவியது' என்பதை அதனடியாகப் பிறந்த தென்னலாம். றகரத்தால், இரக்கமும் தோன்றும்.()

தலைமகளெழில்கண்டு வியந்த தலைமகன்வார்த்தை.

சு. தடாவியவம்புமுரிந்தசிலைகளும்போகவிட்டுக்
கடாயினகொண்டொல்கும்வல்லியிதேனுமசுரர்மங்கக்
கடாவியவேகப்பறவையின்பாகன்மதனசெங்கோ
னடாவியகூற்றங்கண்டீருயிர்காமின்கண்ஞாலத்துள்ளே.

(இ - ள்.) தடாவிய - வளைந்த, அம்பும் - அம்புகளையும், முரிந்த - ஒடிந்த, சிலைகளும் - விற்களையும், போக விட்டு - கொள்ளாமல் ஒழித்து, கடாயின கொண்டு - உபயோகிக்கத்தக்க அம்புகளையும் விற்களையும் ஏந்தி, ஒல்கும் - துவண்டு நடக்கிற, வல்லி ஏனும் - ஒரு பூங்கொடிபோன்ற பெண்வடிவமாயிருந்ததேயாயினும்,—இது—,—அசுரர் மங்க - அசுரர்கள் அழியும்படி, கடாவிய - ஏறிநடத்தப்படுகிற, வேகம் - விரைவையுடைய, பறவை - பக்ஷிராசனாகிய வாகனத்துக்கு, இன் பாகன் - இனிய பாகனாகிய எம்பெருமானது, (சம்பந்தம் பெற்ற), மதனன்-மன்மதனது, செங்கோல் - ஆளுகையை, நடாவிய-நடத்துகிற, கூற்றம் - யமனாயிருக்கும், ஞாலத்துள்ளே - இந்நிலவுலகத்திலே, கண்டீர் - (இந்த அழகிய வடிவத்தைப்) பார்த்தவர்களே! உயிர் காமின்கள் - (உங்களுயிரைக்) காத்துக்கொள்ளுங்கள், (எ - று)

ஒரு தலைமகளது அழகிய வடிவத்தைக் கண்டு அதனிடத்து மிக ஈடுபட்ட தலைமகன் உலகத்தாரை நோக்கி 'இவ்வடிவம் காட்சிக்கு ஒரு மெல்லியல் வடிவமாகத் தோன்றினும் உண்மையில் மன்மதனது ஆஜ்ஞையை முழுவதுந் தவறாமற் செலுத்துகிற தொரு கூற்றமாகும். இந்த உலகத்திலே அந்த மிருத்யுவைத் தப்பினாலும் இந்த மருத்யுவைத் தப்புதல் அரிது: இது கண்டவர்களுயிரைத் தன்வசமாக்குந் தன்மைய தாதலால், உங்களுயிரை இதன்பக்கல் இழக்காது நீங்கள் குறிக்கொண்டு காத்துக்கொள்ளுங்கள்' என்று இங்ஙனம் வியந்து கூறினான், ஞானசாதனங்களாற் சிறந்துமைதியோடிருக்கிற ஆழ்வாரது பிரபாவத்தைக் கண்ட அன்புடையரான பாகவதர் திருவுள்ளமுகந்து உலகத்தாரை நோக்கி 'இவர் தம்மையடுக்கிற

* தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - உரிச்சொல்லியல் - உங.

சம்சாரிகளை முக்தராகச் செய்யவல்லவர்: நீங்கள் சமுசாரத்திலேயே நிலைத்திருக்க விரும்புவீராயின், ஊரும் நாடும் உலகமும் தம்மைப்போலேயாகச் வல்ல இவர்க்கு வசப்படாமல் தப்புங்கள்' என்று ஆழ்வாரின் மகிமையை வியந்து கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். ஸ்வாபதேசத்தில், தலைமகள் - ஆழ்வார்; தலைமகன் - பாகவதர்.

கீழ் எம்பெருமானைத் தலைமகனாகக்கூறிவந்தவர் இங்கு ஸ்ரீவைஷ்ணவர்களைத் தலைமகனாகக் கூறலாமோ? எனின்,—எம்பெருமான் பாட்டுடைத்தலைமகனென்றும், ஸ்ரீவைஷ்ணவர்கள் கிளவித்தலைமகனென்றும் வேறுபாடறிக. கிளவித்தலைமகனும் பாட்டுடைத்தலைமகனுமாக இரண்டு தலைமகன் அமைதல், இறையனாரகப்பொருளுரையாலும் விளங்கும். ஆழ்வார் எம்பெருமான்பக்கலிற்போல *“மாயப்பிரானடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்று கொலோ?” என்று அவனது சம்பந்தம்பெற்ற அடியார்களிடத்தும் மிக்கபக்தி கொண்டு அவர்களையும் தமக்குத் தலைவராகக்கொள்ளுந் தகுதியுடையவராதல், ஸ்ரீவைஷ்ணவர்களைக் கிளவித்தலைமகனாகக் கொண்டதற்குக் காரணம். †“உற்றதும் உன்னடியார்க்கடிமை” என்றாரிறே திருமங்கையாழ்வாரும்.

‘தடாவிய அம்பும் முரிந்த சிலைகளும் போகவிட்டுக் கடாயின கொண்டு’ என்றதனால் மாறுபடும் இயல்புடைய உலகத்தாரது அறிவு உபாயங்களினும் நிலைத்த இயல்புடைய ஆழ்வாரது ஞானசாதனங்களுக்கு உள்ள மேன்மையும், ‘வல்லி’ என்றதனால் கொள்கொம்பை ஆதாரமாகப் பற்றியல்லது தானே நிலைத்திருக்கமாட்டாத கொடிபோல ஆழ்வார் எம்பெருமானைப்பற்றியல்லது தரியாது பரவசப்பட்டுத் தம்வசமிழந்தவரென்பதும், ‘அசுராமங்கக் கடாவிய வேகப்பறவையின்பாகன் மதனசெங்கோல் நடாவிய கூற்றம்’ என்றதனால் கொடுந்தன்மையையுடைய புறச்சமயத்தார் நிலைகெடும்படி உபயோகிக்கப்படுகிற சிறந்த பிரமாணமான வேதத்துக்குத் தலைவனான எம்பெருமான்திறத்தில் மிக்ககாதலையுண்டாக்கி முத்திபெறுவித்து அதனால் ஊழ்வினைத்தொடர்ச்சிக்கு ஒரு யமனாகவுள்ளவர் ஆழ்வாரென்பதும், ‘கண்டீருயிர்காமின்கள் ஞாலத்துள்ளீர்’ என்றதனால் உலகத்தில் இவரைத்தரிசித்தவர்களில் எவரும் சுவதந்திரராகார் ஆதலால் ‘உங்களுயிர் உங்களுக்கு உரியதாக வேண்டின் நீங்கள் காத்துக்கொள்ளுங்கள்’ என்பதும் தோன்றும். உள்ளுறைபொருளில் ஞானமென்றுகொள்ளப்படுகிற கண்ணுக்கு, குறித்தவற்றை எய்யுந்தன்மையதான அம்பை உவமைகூறியதனால், இவரது ஞானம் பரம்பொருளைத் தவறுதுபற்றுந் தன்மையதெனக் குறித்தவாறு. வில் என்பது அம்பைச்செலுத்துங்கருவியாதலால், உள்ளுறைபொருளில், அது - ஞானசாதனங்களைக்குறிக்கும். ஞானமாகிய அம்புக்கு, வளைவு - விஷயாந்தரங்களிற்செல்லுதல். ஞானசாதனங்களாகிய விற்களுக்கு, ஒடிவாவது - ஒருகால தவறுகை. இங்ஙனங்கெடுதலில்லாது நிலைபெற்ற ஞானசாதனங்களையுடையரென்பது தோன்ற, ‘கடாயின கொண்டு’ என்றது. ‘கண்டீருயிர்காமின்கள் ஞாலத்துள்ளீர்’ என்றது, ஆழ்வாரைச் சேவிக்கவே சம்சாரம் அடியறுமென்றபடி.

‘தடாவியவம்பும் முரிந்தசிலைகளும் போகவிட்டுக் கடாயினகொண்டு’ என்றது, மற்றை மகளிரது கண்புருவங்களினது அழகினும் இத்தலைமகளினது கண்புருவங்களின் அழகின் சிறப்பைக் கூறியவாறு. மன்மதனது அம்பும் சிலையும் வளையுந்தன்மையன வென்று கருதி அவற்றை யொழித்து

* திருவாய்மொழி - பதின்மூன்றாந்திருப்பதிகம் - ௧௦.
† பெரியதிருமொழி - எண்பதாந்திருப்பதிகம் - ௩.

அவனாணையை உலகத்தில் தவறாது நடத்தும்பொருட்டுத் தன்கண்புருவங்களையே தக்க அம்புசிலைகளாகக் கொண்டு உலாவுபவ ளென்க. மன்மதனது ஐந்துமலரம்புகளினும் ஒருகருப்புவில்லினும் இவளது இருகண்பார்வையும் இருபுருவங்களும் வேட்கைவிளைத்தலிற் சிறப்புடையன என்பதும் தொனிக்கும். 'அம்பு' என்றது - பால்பகாஅஃறிணைப்பெய ராதலால், பலபாணங்களையுணர்த்தி, அவற்றால் பலவகைநோக்கங்களைக் குறிக்கும். 'பறவையின் பாகன் மதனன்' என்றது, மன்மதன் திருமாலின்மகனாதலால், கண்ணபிரானது மனைவியும் திருமகளின் திருவவதாரமுமான ருக்மிணிப்பிராட்டியினிடம் மன்மதன் பிரத்யும்ந னென்னுங் குமாரனாகத் தோன்றின னென்ன வரலாறு காண்க, பிறரும் *"நெடியான்மகன்" என்றார். உலகத்துப்பொருள்களெல்லாவற்றையும் எம்பெருமானோடு ஒ நவகைச்சம்பந்தமுடையன வென்றல்லது சொல்லவறியாத அன்புமிகுதியால், வேட்கைவிளைத்து வருத்துபவனான மன்மதனையும் அவனதுசம்பந்தந்தோன்ற 'பறவையின்பாகன் மதனன்' என்றது. †"படைமங்கையர்" என்றபடி மன்மதனுக்குச் சேனையெனப்படுகிற மகளிருட் சிறந்தவளான இவள் அவனது சேனைத்தலைவியாய் அங்கங்குச் சென்று மாரனாந்தம்மன காமவேதனையை உயிர்களுக்கு உண்டாக்கி இங்ஙனம் மன்மதனாணையைச் செலுத்துவ ளென்பது தோன்ற, 'மதனசெங்கோல் நடாவிய கூற்றம்' என்றது, ‡"மீனசோ குழாமனைய மேகலையும் வெம்முலையுங் கூற்றங் கூற்றம், ஊனசே ருயிருயக் கொண்டோடிப் போமினங் ஞுரைத்தேம்", §"இக்கொடியையின்றாளபோலும், கொள்வா னுலகுக்கோர் கூற்றின்றாளம்மவோ கொடியவாறே" என்பவற்றோடு இதை ஒப்பிடுக.

'கீழே தாயப்பேச்சாலே தமக்குப் பிறந்த ஞானவைபவத்தைப் பேசின ஆழ்வார் நாயகன்வாராததையாலே தம்முடையவைபவத்தைப்பேசுகிறாரென்று சங்கதி' என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்து வேறொருஅரும்பதமும், 'கிளவித்துறையில், இப்பாட்டு - 'நலம்பாராட்டு' என்னுதல், 'மருங்கணைதல்' என்னுதல், 'காட்சி' என்னுதல், பராயென காட்சியாயிருக்கிறது. இம்மூன்றுந்தான் நாயகன் வாராததை. இதிற காட்சியாகிறது - நாயகனுக்கும் நாயகிக்கும் ப்ரதமத்திற பிறக்கும் தருஷ்டிபந்தம் இதுதான் பின்னை ப்ரதமத்திலே யாகவேண்டாவோ? முதற்பாட்டுத்தான் தாமான தன்மையிலே நின்றாராகில் இரண்டாம் பாட்டிலே தான் உண்டாகவேண்டாவோ? என்னில்,—இப்ப்ரபந்தந்தன்னில் இப்படியிருப்பதொரு கிளவியடைவில்லாமையாலே, ஓரிடத்தே சொல்லுமித்தனை வேண்டுவது அதில் இவ்விடத்தே சொல்லிற்றுகிறது, அன்றிக்கே,கண்டபோதெல்லாம் நித்யாபூர்வமாயிருக்குமிறே அத்தாலே சொல்லிற்றாகவுமாம், அங்ஙனன்றிக்கே, இனி, பாகவதர்களைத் தலைமக்களாகச் சொல்லுகிற இடத்தில் முதற்பாட்டு இதுவாகையாலே, இதை முதற்பாட்டாகச் சொல்லிற்றாகவுமாம். வேனெடிற்று ஆகிறது' என்ற நம்பிள்ளை யீடும் இங்கு அறியத்தக்கன.

'முறிந்த' என்றும்பாடம். கடாயின-கடாவின என்பதன்விகாரம், பெயரெச்சம், ஒலகு - பகுதி. அசுரர் - சுரர்க்கு எதிரானவர். இன்பாகன் - பண்புத்தொகை; 'இன்' என்பதைச் சாரியையாகக் கொண்டு, பறவையினதுபாகன் எனினுமாம். பாகன்-செலுத்துபவன். மதநன் - வடசொல், களிப்பை விளைப்பவன். நடாவிய - நடவிய என்பதன் விகாரம், வு - பிறவினைவிகுதி கூற

* சீவகசிந்தாமணி - காந்தருவத்தத்தையாரிலம்பகம் - ௧௮௯.
† இரத்தினச்சுருக்கம் - ௮.
‡ சீவகசிந்தாமணி - காந்தருவத்தத்தையாரிலம்பகம் - ௧௪௫.
§ " " ௧௪௬

றம் - உடலையும் உயிரையும் வேறுகூறுக்குபவன். 'காமின்' என்ற ஏவற் பன்மையின்மேல், கள் - விகுதிமேல்விகுதி. (௬)

## காலமயக்கு.

எ. ஞாலம்பனிப்பச்செறித்துநன்னீரிட்டுக்கால்சிதைந்து
நீலவல்லேறுபொராநின்றவானமிது திருமால்
கோலஞ்சுமந்துபிரிந்தார்கொடுமைகுழறுதண்பூங்
காலங்கொலோவறியேன்வினையாட்டியேன்காண்கின்றவே.

(இ - ள்.) ஞாலம் பனிப்ப - உலகம் நடுங்கும்படி, செறித்து - (தம்மில் தாம்) நெருங்கி, நல் நீர் இட்டு - (தம் உடம்பின்) நீரை நன்றாக வெளிச் சிந்தி, கால் சிதைந்து - கால்களால் தரையைக் கீறிக்கொண்டு, நீலம் வல் ஏறு - நீலநிறத்தையுடைய வலிய எருதுகள், பொராநின்ற - போர்செய்யப்பெற்ற, வானம் - ஆகாயமாகும், இது —, திருமால் கோலம் சுமந்து - திருமகள்கணவனான எம்பெருமானது வடிவத்தையுடையதாய், பிரிந்தார் கொடுமை குழறு - பிரிந்துபோனதலைவரது கொடுந்தன்மையைக் கூறுகிற, தண் பூ காலம் கொல் ஓ - குளிர்ந்த அழகிய கார்காலந்தானோ? வினையாட்டியேன் - தீவினையுடைய நான், காண்கின்ற - காண்கின்றவற்றை, அறியேன் - (இன்னதென்று) அறிகிறேனில்லை, (எ - று)

'கார்காலத்திலே மீண்டுவருகின்றேன்' என்று சொல்லிக் காலங்குறித்துப் பிரிந்து சென்ற தலைமகன் அக்கார்காலம் வந்த அளவிலும் தான் வாராதொழிய, அக்காலவரவை நோக்கி வருந்துகிற தலைவியைத் தோழி 'இது, அவன் சொல்லிப்போன கார்காலம் வந்ததன்று; வானத்தில் நெருங்கி நீர் சொரிபவை, மேகங்களல்ல, ஒன்றோடொன்று போர்செய்கிற கறுத்த எருதுகள்காண்' என்று காலத்தை மாறுபடக்கூறி ஆற்றுவித்தாள். இத்துறை, திருக்கோவையாரில் 'காலமறைத்துரைத்தல்' என்றும், தஞ்சைவாணன்கோவையில் 'இகுளைவம்பென்றல்' என்றும், தணிகைப்புராணத்துக் களவுப்படலத்தில் 'ஆயிடைத்தோழியழிந்தியற்பழித்தல்' என்றும் கூறப்பட்டுள்ளது. 'பருவங்குறிக்கப்பட்ட தலைமகள் பருவவரவின்கண் ஆற்றாளாகக் கார்ப்பருவம் வரும்வழி, அவர் பாணிப்பாரல்லர் வந்தார் வாராநின்றார் வருவர் எனவும் இதனைப் பருவமன்றென்றும் பழித்து, அதனைப் பருவமேயெனக் கருதினாயேயெனில் அவரால் குறிக்கப்பட்ட பருவமன்று, என்னை?— அவர் பொய்யுரையுளராயாராகலான், யாம் தெளியேம் எனவும், கலங்காட்டியுஞ் சகுனஞ்சொல்லி யாழ்ப்பண்ணியும் எல்லாப் பாசுரத்தானும் தலைமகளை ஆற்றுவிக்கும் என்றவாறு, தலைமகன்றன்னை அன்பிலன் கொடியன் எனவும் இத்தொடக்கத்தனவெல்லாஞ் சொல்லியும் ஆற்றுவிக்கும், அவற்றுள், பருவவரவின்கண் ஆற்றாளாய தலைமகளை ஆற்றுவித்தற்குப் படைத்துமொழிந்து பருவமன்றென்றதற்குச் செய்யுள்' என்ற இறையனாரகப்பொருளுரையையும் அறிக. *"பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்குமெனின்" என்பவாதலால், இது பொய்ம்மைக்குற்றத்தின்பாற் படாது, அங்கு 'குற்றந்தீர்ந்தநன்மைதருதலாவது - பெருந்தீங்கையாயினும் மரணத்தையாயினும் அடையநின்றதோர் உயிர் தான்கூறுஞ்சொற்களின் பொய்ம்மையால் அத்துன்பத்தினின்று நீங்கி இன்பமடைதல்' என்றபடி, இங்குப் பிரிவாற்றாமையால் தலைமகளுக்கு உண்டாகும் அபாயத்தைப் புனைந்துரையால் ஒழித்தவாறு காண்க.

ஞாலம்பனிப்ப - உலகத்தவர் கண்டு நடுக்கமடைய, ஞாலம்பனிப்ப நன்னீரிட்டு என இயைத்து, பூமி முழுவதும் நனையும்படி நன்றாக நீரைச்

* திருக்குறள் - வாய்மை - ௨.

சொரிந்து என்றுமாம். நீர் - வியர்வைநீரும், சிறுநீரும். எருதுகள் கால் சிதைத்தற்குக் காரணம், சினமிகுதி. மேகத்துக்கு, ஞாலம் பனிப்பச் செறித்து நன்னீரிடுதல் - உலகம் நடுங்கும்படி நெருங்கி நல்ல நீரைச் சொரிதல்; அல்லது, நெருங்கி உலகம் குளிரும்படி நீரைச் சொரிதலுமாம். கால்சிதைத்தல் - மழைக்கால் இறங்குதல்; அல்லது, காற்றினால் ஒன்றின்மேலொன்று அடர்தலுமாம். பொராநின்ற வானம் - பூமியில் இடம்போதாமல் ஆகாயத்திலே பிணங்குகின்றன என்றவாறு. கார்காலத்து மேகம் விளங்குகிற மின்னலாலும் கறுத்த நிறத்தாலும் திருமகளை மார்பிற்கொண்ட கரிய திருநிறமுடைய ஸ்ரீமகாவிஷ்ணுவைப் போலுதலால் 'திருமால் கோலஞ்சுமந்து' என்றும், மேகம் முழங்குதல் பிரிந்து போய இக்காலத்திலே வாராத தலைவரது கொடுமையை ஞாபித்து வருத்துதலால் 'பிரிந்தார் கொடுமை குழறு' என்றுங் கூறினது. திருமால் கோலஞ்சுமந்து நீலவல்லேறு பொராநின்ற என இயைத்து, நீலநிறமுள்ள எருதுகளுக்கு அந்நிறமுடைய திருமால் உவமையென்றலும் ஒன்று. கொடுமை - சொன்னபடி வாராத குற்றம். 'தண்பூங்காலம்' என அடைமொழிகள் கொடுத்துக் கூறினது, அக்காலத்தினது கலவிக்கு உரிய தன்மையைக் காட்டியபடி. 'தண்பூங்காலமன்று' என்னாது 'தண்பூங்காலங்கொலோ அறியேன்' என்று ஐயந்தோன்றக் கூறினது, எங்ஙனமாயினும் தன்னையாற்றுவித்தற்பொருட்டுக் கற்பனைவகையால் முழுப்பொய் கூறுகின்றாளென்று தலைமகள் கருதாமல் தன்வார்த்தையை நம்பித் துணிவு பிறவாது ஐயப்பட்டு ஆராய்ந்துகொண்டாயினும் சிறிதுபொழுது ஆறியிருத்தற்பொருட்டென்க, அங்ஙனம் அக்காலமேயாக ஆறுக அவன் விரைவில் வந்திடுவானென்பது பற்றியுமாம். விளையாட்டியேன் - உன்னை இப்படி வருந்தக் காணுதற்கேற்ற பாவத்தையுடைய நான் என்றபடி. 'அவன் வாராமல் நீ வருந்துதற்குக் காரணம், அவனது இரக்கமின்மையுமன்று, உனது ஆற்றாமையுமன்று, காலமுமன்று, காண்கிற எனது பாவமே' என்று தனது இரக்கந்தோன்றக் கூறினள், 'இராமபிரான் வனஞ்சென்றதற்குக் காரணம், மந்தரை சூழ்ச்சியும், கைகேயி சூழ்வினையும், தசரதசக்கரவர்த்தியின் அநுமதியும், சக்கரவர்த்தி திருமகனாரது பணிவும் அன்று என்னது தீவினையே' என்று பரதாழ்வான் கூறினாற்போல.

இனி, உள்ளுறைபொருள் - இவ்வாறுகொண்ட அன்புநிருத்திக்கு ஏற்றபடி உடனே எம்பெருமானைச் சேர்ந்து அனுபவித்துப் பேரானந்தம்பெறுதற்கு உரிய காலமாயிருக்க, அங்ஙனம் நேராமல் விளம்பித்தலாலே 'அவிவேகமாகிற மேகம் மூடிப் பலவாறு துன்பங்களைச் சொரிகிற சமுசாரமாகிற விடாப்பெருமழைக்காலத்திலே அகப்பட்டேன்' என்று வருத்தமடைந்த ஆழ்வாரை நண்பர்கள் ஆற்றியுரைத்தல். 'நீலவல்லேறு ஞாலம் பனிப்பச் செறித்து நன்னீரிட்டுக் கால்சிதைந்து பொராநின்ற வானமிது' என்றதனால் தமோகுண ரஜோகுணங்களையுடையார் உலகம் நடுங்கும்படி ஒருவர்க்கொருவர் மாறுபாடுகொண்டு நெருங்கி நல்லகுணத்தைப் போக்கி நிலைகுலைந்து ஒருவரையொருவர் மேலிட்டு நடக்கிற இடங்காணும் இது என்றும், 'திருமால் கோலஞ்சுமந்து பிரிந்தார் கொடுமை குழறு தண்பூங்காலங்கொலோ' என்றதனால் அங்ஙனம் ரஜோகுண தமோகுணங்களையுடையவர் தாம் எம்பெருமானைச் சேர்ந்தாராக வெளிக்காட்டிப் பிரிந்தவரது கொடுமையைக் குறிப்பிக்கிறதனால் இது பொருமல் வருந்துதற்குரிய காலமாகாதோ? என்றும் இரண்டுவகையாகக் கூறி ஆழ்வாரது பிரிவாற்றாமையை ஸ்ரீவைஷ்ணவர்கள் தணிக்கத்தொடங்கினரென்க. 'நீலவல்லேறு' என்றதில், 'நீலம்' என்றது - தமோகுணத்தையும், 'வல்' என்றது - செருக்காகிய ரஜோகுணத்தையும், 'ஏறு' என்றது - அக்குணங்களையுடையாரது அடங்காமிடுக்கையுங்

குறிக்கும். ஸ்வாபதேசத்தில், சீர்-சீர்மையென்னும் பணிப்படி இவருக்கு 'அறி யேன் வினையாட்டியேன் காண்கின்ற' என்றது, சமுசாரத்தைத் தொலைப்பித் தலையாவது எம்பெருமானை உடனே கூட்டுவித்தலையாவது செய்ய வழியறி யாது உமதுகண்கலக்கத்தைப் பார்த்துநிற்கும் பாவத்தையுடையோம் யாம் என்றபடி.

]செறுத்து' என்றும் பாடம். ஏறு - பசுவின் ஆண்பாற் பெயர். பொராநின்ற, ஆநின்று - நிகழ்காலஇடைநிலை. பொராநின்ற வானம்-பெய ரெச்சம் இடப்பெயர்கொண்டது. 'இது'என்றது - மதிமதீபமாய், முன்வா க்கியத்திலநின்ற 'வானம்' என்றதனோடும், பின்வாக்கியத்திலநின்ற 'காலங் கொலோ' என்றதனோடுங் கூடும். குழறுதல் - தெளிவில்லாது கூறுதல். காலங்கொலோ—கொல் ஓ இரண்டனுள், ஒன்று- ஐயம், மற்றொன்று-அசை. வினையாட்டி என்ற படர்க்கைச்சொல், ஏன் என்னுந் தன்மையொருமை விகுதியோடுகூடி, தன்மையாயிற்று. வினையாட்டி- வினையையாள்பவள், ஆளு தல் என்றது, உடைமையை. இது - வினையாளன் என்பதன் பெண்பால், ஆட்டி என்றதில், ஆள் - பகுதி, இ - பெண்பால் விகுதி, ட் - எழுத்துப் பேறு. இனி, வினையாட்டி என்பதற்கு-வினையினால் ஆட்டப்படுபவள் எனப் பொருள்கொள்ளுதலும் ஒன்று 'வினை'எனப் பொதுப்படக்கூறினும் சந்தர்ப் பத்தால் தீவினையைக் குறிக்கும். காண்கின்ற-பெயர் தற்குறிப்பேற்றவணி.

'கலந்துபிரிகிறதலைமகன் கார்காலத்திலே வரவைக்குறித்துப் போக, அவன்சொன்னபோதே பிடித்து வர்ஷாவாயிருக்குமிறே இவளுக்கு அதுக் குமேலே மெய்யான அக்காலம் வந்தால் மிகவும்பொறுக்கப்போகாதே; அத னாலே தோழியைப்பார்த்து 'கண்டாயே, அவன்குறித்துப்போனகாலம் வர ச்செய்தேயும் அவன்வந்திலன்' என்று நோவுபட, அவளும் 'இது நீநினைக்கிற வர்ஷாகாலமன்றுகாண், புகுந்தபடி கேளாய், இங்ஙனே விஸஜாதீயமாயிருப் பன இரண்டு ருஷபங்கள் தன்னிலேயெதிர்ந்து பொருகிறபடிகாண்' என்று காலத்தை மயக்கித் தரிப்பிக்கிறாள்,' 'இவை மேகமாகில் சிறிதுபோது நின்று வர்ஷித்து வெளுத்துப்போகாதோ?கண்டாயே, இவை ஒருபடிப்படக் கறுத்திருக்கிறது, மேகமாகில் சிறிதுபோது நின்று வர்ஷித்துவிடுமே, இவை பொருவதாக உத்யோகித்தவையாய் அதிகரித்த கார்யத்தினின்றும் மீளக் கடவதன்றிக்கே யிருந்துள்ள ருஷபங்கள்,' 'கொடுமை - பிரியவுமாமிறே குறித்துப்போனகாலத்திலே வரப்பெறறதாகில், அக்காலத்துக்கு முன்னே வரவேண்டியிருக்க,அதிலும்வாராமையாலே, இது ஒரு க்ரௌர்யமே' என்கி றாள்,' 'குழறு - அக்காலத்து அடைத்தபடியே தான் குமுறிற்றுமாய் அவனு க்குப்போலியானவடிவோடேகூட நின்று, நான் வந்தபின்பும் அவன்வந்தி லன்கண்டாயே யென்று அவனுடைய குற்றத்தை இவளுக்கு முன்னிடுகிற தாயிருக்கை' என்கிற நம்பிள்ளையீடு அறியத்தக்கது. (எ)

தலைவன்பொருள்வயிற்பிரிதல் குறிப்பாலறிந்த தலைவி தோழிக்குக் கூறல்.

அ. காண்கின்றனகளுங்கேட்கின்றனகளுங்காணில்இந்நாட்
பாண்குன்றநாடர்பயில்கின்றனவிதெல்லாமறிந்தோ
மாண்குன்றமேந்திதண்மாமலைவேங்கடத்தும்பர்நம்பும்[வே.
சேண்குன்றஞ்சென்றுபொருள்படைப்பான்கற்றதிண்ணனவே.

(இ - ள்.) குன்றம் நாடர் - மலைகளையுடைய நாட்டையுடைய தலை வர், இ நாள் - இன்றைத்தினத்தில், பயில்கின்றன - பலவாறாக நடத்துகின் றவையான, காண்கின்றனகளும் - காணப்படுகிற செய்கைகளும், கேட்கின் றனகளும் - கேட்கப்படுகிற சொற்களும், காணில் - ஆராய்ந்துபார்க்குமிட த்து, பாண் - வெளிப்பசார மாத்திரமாம், இது எல்லாம் - இந்த மிக்கஉப

சாரமெல்லாம்,—மான் குன்றம் ஏந்தி - மாட்சிமையையுடைய கோவர்த்தன கிரியை இளைப்பின்றியெடுத்த கண்ணபிரானது, தண் மா மலை வேங்கடத்து - குளிர்ந்த பெரிய திருவேங்கடமலையின், உம்பர் நம்பும் சென்னி குன்றம் - மேலுலகத்தார் விரும்புந்தன்மையதான உயர்ந்த சிகரத்தை, சென்று - போய் அடைந்து, பொருள் படைப்பான் - (அங்குப்) பொருளீட்டும்பொருட்டு, கற்ற - (புதிதாகப்) பயின்ற, திண்ணனவு - வலிமையின் செயல், (என்று), அறிந்தோம்—; (எ - று.)

பொருளீட்டுதற்பொருட்டுத் தலைமகளைப்பிரியக்கருதிய தலைமகன் அப்பிரிவுக்காலத்தில் அவள்நினைந்து ஆறியிருத்தற்பொருட்டு அவள்பக்கல் சில பணிவான செய்கைகளைப் புரிதலும் சிலபணிவானசொற்களைச் சொல்லுதலுஞ் செய்ய, அதுநோக்கி, தலைமகள், இதற்குமுன்பு கண்டுங் கேட்டும் அறியாமல் இப்பொழுது புதிதாகக் காண்கின்றவற்றையுங் கேட்கின்றவற்றையும் ஆராய்ந்துபார்க்கில், அவை பொய்யாகத் தோன்றுகின்றன; இங்ஙனம் வரம்புகடந்தவற்றைச் செய்தற்கு ஒருகருத்து உளதாதல் வேண்டும்; அது, பொருளீட்டுதற்பொருட்டு எம்மைப்பிரியநினைத்த வன்மையே' என்றுகூறுகின்றாள். 'தலைவன்கண் நிகழ்ந்த மிக்கதலையளி, வஞ்சமென்று தலைவி உட்கொண்டு பிரியுங்கொலென நினைத்தற்கு நிமித்தமாயிற்று' என்ற தொல்காப்பிய உரையும், *"முள்ளுறழ் முளையெயிற் றமுதூறுந் தீநீரைக, கள்ளினு மகிழ்செயு மெனவுரைத்து மமையாரென், ஒளியிழை திருத்துவா காதலா மற்றவர், குள்ளுவ தெவன்கொ லறியே னென்னும்", "கழிபெரு நலக்கல் ஒன்று உடைத்து" என்ற பாலைக்கலியும் இங்குஅறியத்தக்கன. இதற்கு, †"நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும்" என்பது, விதி.

'பொருள்வயிற்பிரிவு என்பது - பொருளீட்டுதல்காரணமாகப் பிரியும் பிரிவு. எனின், முன்பொருளிலனும், ஆகவே, எள்ளுநர்ப்பணித்தலும் இரந்தோர்க்கீதலும் நள்ளுநர்நாட்டலும் நயவாரொறுத்தலும் என்னும் இவையெல்லாம் பொருட்குறைபாடுடையார்க்கு நிகழாமையான், இக்குறைபாடெல்லாம் உடையனும் அவைஉடையானது பொருவிறப்பு என்னையோ வெனின்,—பொருளிலனாய்ப் பிரியுமென்பதன்று, தன்முதுகுரவரால் படைக்கப்பட்ட பலவேறுவகைப்பட்ட பொருள்களெல்லாங் கிடந்ததுழுன் அதுகொடுதுய்ப்பது ஆண்மைத்தன்மையன் றெனத் தனது தாளாற்றலாற் படைத்த பொருள்கொண்டு வழங்கிவாழ்தற்குப் பிரியு மென்பது, அல்லதூஉம், தேவகாரியமும் பிதிருகாரியமும் தனதுதாளாற்றலாற் படைத்த பொருளாற் செய்ததனைக்குப்பயன்படுவன, என்னை?—தாயப்பொருளாற்செய்தது தேவரும் பிதிரரும் இன்புறா. ஆகலான், அவர்களையும் இன்புறுத்தற்குப் பிரியுமெனக் கொள்க' என்ற தஞ்சைவாணன்கோவையுரையாலும், 'பொருள்வயிற்பிரிதலென்பது - குரவர்களாற் படைக்கப்பட்ட பொருள்கொண்டு இல்லறஞ் செய்தால் அதனான் வரும்பயன் அவர்க்கு ஆம் அத்துணையல்லது தமக்கு ஆகாமையால், தமது பொருள்கொண்டு இல்லறஞ்செய்தற்குப் பொருள்தேடப் பிரியாநிற்றல்' என்ற திருக்கோவையாருரையாலும், செல்வமநிறைந்த தலைமகன் பொருள்வயிற்பிரிதற்குக் காரணம் அறிக.

காண்கின்றனகள் - காலைப்பிடிப்பது, கையைப்பிடிப்பது, கும்பிடுவது, அஞ்சலிசெய்வது, மனந்தடுமாறுவது முதலியன. கேட்கின்றனகள் - பிரியேன், பிரியிலுந்தரியேன் என்றுகூறுதல் முதலியன. 'இந்நாள்' என்றதனால் முன்பு இப்படி வரம்புகடந்தசெயல்களில்லாமையும், 'பயில்கின்றன' என்றதனால் ஒருகாற் செய்ததையே மீண்டும் பலகாற்செய்தலும், ஒருகாற்சொ

---

* கலித்தொகை - பாலைக்கலி - ௩.

† தொல்காப்பியம் - பொருளதிகாரம் - அகத்திணையியல் - ௪௩.

ன்னதையே மீண்டும் பலகாற் சொல்லுதலும் தோன்றும். பாண் என்பது - பாணருடைய தொழிலாய், அதாவது - மனப்பூர்வமாகவன்றி வெளிக்குச்செய்யுந் தோத்திரமாய், இங்கு, பொய்யாகச்செய்யும் உபசாரத்தைக் குறித்தது. இனி, பாண்குன்றம் என இயைத்து, (வண்டுகளின்) இசைப்பாட்டையுடைய மலையெனினுமாம். "இருப்புனலும் வாய்ந்த மலையும் வருபுனலும், வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு" என்றபடி மழைக்காலத்தில் உட்கொண்ட நீரை வெயிற்காலத்தில் வெளிப்படுத்துந்தன்மையுடையதாய வாய்ந்த மலையின் வளம் பெற்ற நாட்டையுடையவரென்பார் 'குன்றநாடர்' என்றார். 'குன்றநாடர்' என்றது, வன்னெஞ்சரென்ற குறிப்பு, 'குறிஞ்சி நிலத்துத் தலைமகனென்றபடி' என்பர் பெரியவாச்சான்பிள்ளை. குறிஞ்சி - கூடுமிடம்; கூடியேயிருக்கவேண்டியிருக்கப் பிரியநினைக்கக்கூடுமோ வென்னுங் கருத்தாலே, 'குன்றநாடர்' என்றதென்க. மிகப்பலவான பசுக்களுங் கன்றுகளும் ஆயர்களும் எத்தனைநாள் வேண்டுமென்றாலும் இனிது தங்குதற்கு இடமான மலையென்பது தோன்ற, 'மாணகுன்றம்' என்றது. 'மாண குன்ற மேந்தி' - மாணுமாயக் குன்றமேந்தியு மானவனென்று வாமந கிருஷ்ணாவதாரங்களைச் சொல்லிற்றாகவுமாம். 'மாணகுன்றமேந்தி தண்மாமலை வேங்கடத்து' என்றதனால், ஒருமலையை மேலெடுத்தும் ஒருமலையின்மேல் நின்றும் சமயோசிதமாக உயிர்களைக் காத்தருள்பவன் எம்பெருமான் என்க. 'தண்மலை' என்றதனால், சோலைகளும் பலவகையினைப் பையுந் தணிக்குந்தன்மை தோன்றும். மாமலை - திருவேங்கடத்துக்கு 'பெரியதிருமலை' என்று ஒருபெயர். உம்பர்நம்புஞ் சேண்குன்றம் - *"மாண்டு பிறக்குந் துயர்போய வைகுந்தம் புக்கவரும், மீண்டு தொழக் காதலிக்கும் வேங்கடமே" என்றபடி எல்லா உலகங்களுக்கும் மேலுள்ள பரமபதத்திலுள்ள நித்தியசூரிகளும் விரும்பி விரைய வந்து தொழுதற்கு அணியதாம்படி உயர்ந்ததும் சிறந்ததுமாயுள்ள சிகரம் என்றபடி; பரமபதத்தில் தாங்கள் அனுபவிக்கிற பரத்துவத்தினும் திருவேங்கடத்தில் எம்பெருமான் அனுபவிப்பிக்கிற சௌலப்பியம் மேம்பட்டதென்று அதில் ஆழ்தலால், அங்குள்ளார் இவ்விடத்தை விரும்புவரென்க இதனால், இவ்வுலகத்தாரால் விரும்பித் தொழப்படுந்தன்மை தானே விளங்கும். அருஞ்சுரமேறியும் பொருள்தேடலுற்ற ஊக்கத்தைக் காட்டுதற்கு, 'சேண்குன்றஞ் சென்று பொருள்படைப்பான்' என்றது. 'கற்றதிண்ணனவு' என்றதனால், பொருளின்பொருட்டுப் பிரியக்கருதிய இவ்வன்மை இவர்க்கு இயற்கைக் குணமன்று, எவ்விடத்தோ புதிதாகக்கற்றுவந்த செயற்கைக்குணமென்றவாறு. முன்பு தலைமகன் தன்னைநோக்கி 'நீயே பொருள்' என்றும், 'எனக்கு இனிப்பெறவேண்டும் பேறு வேறுண்டோ?' என்றும் உபசாரமாகக்கூறினவை இப்பொழுது பொருள்படைக்கச்செல்லக்கருதியதனால் பொய்யாகிற்ற தன்மையை 'பொருள்படைப்பான்கற்ற திண்ணனவே' என்றதனாற் கூறிப் பரிகசித்தபடி.

இப்பாசுரத்தைத் தோழியைநோக்கிக் கூறியதாகக் கொள்ளாமல், தலைவனைநோக்கியே முன்னிலைப்படர்க்கையாக்கூறியதென்றலுமாம், இனி, தலைமகன்பொருள்வயிற்பிரிவறிந்த தோழி தலைவனைநோக்கியுரைத்ததாகவுமாம்.

எம்பெருமானது பிரிவை ஆற்றாமல் வருந்தியநிலையிலே தம்மையாற்றுவித்த அன்புடைய பாகவதர் பின்பு பரமபொருளைத் தேடிப்பெறும்பொருட்டுத் திவ்வியதேசயாத்திராபேக்ஷையுடையராய்த் திருவேங்கடத்துக்குச் செல்லத் தொடங்கியதை அறிந்த ஆழ்வார் அவர்கள்பிரிவை யாற்றாமையால் அருளிச்செய்த வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். முன்இரண்டு அடி ஆழ்வாரைப்பிரிந்துபோகலுற்ற பாகவதர் இவரனுமதியோடே விடைகொள்ள

* திருவேங்கடமாலை - ௧௦.

வேணுமென்று நினைதது இவர்பக்கலிலே பலவாறு பணிந்து வணக்கத்தோடு சிலவார்த்தை விண்ணப்பஞ்செய்ய, இவர்கள்பிரிவுக்கு அடியாம் இது வென்று அறிந்து, பொறுததருளாமல் 'இவர்கள்பணிவுகளெல்லாம் பாணர்செயல் போல வெளிக்காட்டாயுள்ளன, இதன் அபிப்பிராயம் அறிந்தோம்' என்றபடி. இவர்களை 'குன்றநாடர்' என்றது, *"வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர் காள்" என்றபடி திருமலையை இடமாகக்கொண்டு வாழ நினைந்தவர்க ளாதலால. பின் இரண்டடி - †"குன்றமேந்திக் குளிர்மழை காத்தவன், சென்றுசேர் திருவேங்கட மாமலை" யிலே ‡"நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும்" உயர்ந்தசிகரத்தைச் சென்றுசேர்ந்து அங்கு §வைத்தமாநிதியாம் மது சூதனனைப் பெறுதற்குத் துணிந்த துணிவே இது என்றபடி. அந்யாபதேசத்தில் தோழியைநோக்கிக் கூறியதாயின், ஸ்வாபதேசத்தில் அன்பரை நோக்கிக் கூறியது, தலைமகனை நோக்கி முன்னிலைப்படர்க்கையாகக் கூறியதாம் போது, பாகவதரை நோக்கி அவ்வாறு கூறிய தென்னலாம், பிரிவறிந்த தோழி தலைவனைநோக்கி யுரைத்ததாகக் கொள்ளின், பிரியலுற்றபாகவதரை நோக்கி இவ்வாழ்வாரியல்பறிந்த அன்பர்கள் கூறியதாம்.

கூடியநிலையிலும் பிரிவைக்கருதி இரங்கும்படி அன்புமிக்கமை, இதனால் தோன்றும் 'இணையனவு' என்றதனால், பாகவதரோடு கூடியிருக்கும் இருப்பொழிய வேறு எம்பெருமான்உகந்தருளின திவ்யதேசத்துக்குப்போகநினைக்கையும் தவறு மென்று, பாகவதசகவாசத்தின்சிறப்பைக் கொண்டாடியபடி.

குன்றமேந்தியகதை — திருவாய்ப்பாடியில் ஆயர்களெல்லாருங் கூடி மழையின்பொருட்டாக இந்திரனை ஆராதித்தற்கென்று சமைத்த சோற்றைக் கண்ணபிரான் அவனுக்கு இடாதபடி விலக்கிக் கோவர்த்தநமலைக்கு இடச்சொல்லித் தானே ஒருதேவதாரூபங்கொண்டு அமுதுசெய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பலமேகங்களை ஏவி, கண்ணன்விரும்பிமேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையர்க்கும் இடைச்சியர்க்கும் தீங்குதரும்படி கல்மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணன் கோவர்த்தநமென்னுமமலையை யெடுத்துக் குடையாகப்பிடித்து மழையைத் தடுத்து எல்லாவுயிர்களையும் இடையூறு சிறிதுமின்றிக் காத்தருளினன் என்பதாம். இவ்வரலாற்றால், தேவராசனையும் வெல்லத்தக்க எம்பிரானது திவ்யசக்தியும், மநுஷ்யாவதாரத்திலும் அவ்வற்புதசக்தியைக் காட்டித் தன் அடிமைகளை ஆதரித்தருளும் வாற்சல்யமும் விளங்கும்.

இதுஎல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். இது - சாதியொருமை. மாணகுன்றம் - பண்புத்தொகை. குன்றம், அம் - சாரியை. நாடர் - உயர்வுப்பன்மை. குன்றமேந்தி - பெயர். ஏந்தி, இ - கருத்தாப்பொருள் விகுதி. ஏந்திதணமாமலை - உயர்திணைப்பெயரின்முன் வலி இயல்பு. வேங்கடத்துக் குன்றமென இயையும். உம்பர் என்னும் மேலிடத்தின்பெயர், அங்குள்ளாரைக் குறித்ததனால், இடவாகுபெயர்; இதில், உகரச்சுட்டு - மேலிடத்தை யுணர்த்திற்று: இதன்எதிர்மொழி - இம்பர். ||"நம்பும் மேவும் நசையாகும்மே" என்றதனால், நம்பு என்பது - விரும்புதலுணர்த்தும் உரிச்சொல்லாம். படைப்பான் - பான்விகுதிபெற்ற எதிர்காலவினையெச்சம். 'இன்னனவு' என்றலுந் தகுதி.

* நாய்ச்சியார்திருமொழி - எட்டாந்திருப்பதிகம் - க.
† திருவாய்மொழி - இருபத்துமூன்றாந்திருப்பதிகம் - அ.
‡ ,, அறுபதாந்திருப்பதிகம் - க0.
§ ,, ஐம்பத்தேழாந்திருப்பதிகம் - கக.
|| தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - உரிச்சொல்லியல் - ௩௩.

வேங்கடம் - திருமாலினது திவ்யதேசங்கள் நூற்றெட்டனுள் ஒன்றும், வடநாட்டுத்திருப்பதிகள் பன்னிரண்டனுள் முதலதுமாகிய தலம். தன்னையடைந்தவர்களது பாவமனைத்தையும் ஒழிப்பதனால், இப்பெயர் பெற்றது; வேம் - பாவம், கடம் - எரித்தல். இனி, வேம் - அழிவின்மை, கடம் - ஐசுவரியம் எனக்கொண்டு, அழிவில்லாத ஐசுவரியங்களைத் தன்னையடைந்தார்க்குத் தருதலால், இப்பெயர்கொண்ட தென்றலும் உண்டு: இப்பொருள், இவ்விடத்துக்கு ஒத்தது. (௮)

## தலைவன் தலைவியின் நீங்கலருமை கூறல்.

௯. திண்பூஞ்சுடர்நுதிநேமியஞ்செல்வர்விண்ணாடனைய
வண்பூமணிவல்லியாரேபிரிபவர்தாமிவையோ
கண்பூங்கமலங்கருஞ்சுடராடிவெண்முத்தரும்பி
வண்பூங்குவளைமடமானவிழிக்கின்றமாயிதழே.

(இ - ள்.) திண் - வலிய, பூ - அழகிய, சுடர் - ஒளியுள்ள, நுதி - கூர்மையையுடைய, நேமி - (சுதரிசனமென்னும்) திருவாழியையுடைய, அம் - அழகிய, செல்வர் - எல்லாஐசுவரியங்களையு முடைய எம்பெருமானது, விண் நாடு - பரமபதத்தை, அனைய - ஒத்த, வண் மணி பூ வல்லி - அழகிய சிறந்த பூங்கொடிபோன்றவளை, யாரே பிரிபவர் தாம் - எவர் தாம் பிரியவல்லவர்? [எவரும் பிரியவல்லரல்லர் என்றபடி], (ஏனெனில்),—இவையோ கண் - இவளுடைய கண்கள் கண்கள்மாத்திரமாயிருக்கின்றனவோ? பூ கமலம் - தாமரை மலர்களாய், வண் பூ குவளை - அழகிய செங்கழுநீர்மலர்களுமாய், மா இதழ் - பெரிய இதழ்களையுடையவையாய், கரு சுடர் ஆடி - கரிய (அஞ்சனத்தின்) ஒளியை யணிந்து, வெண் முத்து அரும்பி - (நம்மைப்பிரிதலாற்றாமையாலுண்டான கண்ணீராகிற) வெளுத்த முத்துக்கள் தோன்றப்பெற்று, மட மான் விழிக்கின்ற - மடப்பத்தையுடைய மான்போல நோக்குகின்றன, (எ - று.) —ஈற்று ஏகாரம் - தேற்றத்தோடு, வியப்பு.

கீழ்ச்சொன்னபடி தலைமகன் பிரிதலைக் குறிப்பா லறிந்து கூடியுள்ளபோதிலும் பிரிவைநோக்கி ஆற்றாது பிரிந்தாலுண்டாம்வருத்தத்தை யடைந்த தலைவியினது எழிலையும் வேறுபாட்டையுங் கண்டு பிரியமாட்டாத தலைவனது உட்கோளான வார்த்தை இது.

ஆயுதகோடி ஆபரணகோடி யென்னும் இரண்டிலும் திருவாழி சம்பந்த முடையதாய்ப் பகைவர்க்குக் கொடுமையையும் அன்பர்க்கு இனிமையையும் விளைத்தல் தோன்ற, 'திண்', 'பூ' என்ற அடைமொழிகள் கொடுக்கப்பட்டன. 'நேமியஞ்செல்வர்' என்றது, கையுந் திருவாழியுஞ் சேர்ந்த சேர்த்தியாலுண்டாகும் அழகையும், செல்வமகளான திருமகளோடு கூடியிருக்குந் தன்மையையுங் கூறியதா மென்பர். 'விண்ணாடனைய வல்லி' என்றது, பரமபதம்போலச் சேர்ந்தவர் மீளவொண்ணாததாய எல்லையிலானந்தத்தைத் தரவல்ல கொடி யென்க. மேனியினது மெல்லிதாய் ஒல்கி ஒசியுந்தன்மையையும் கண் கை கால் முகம் வாய் முதலிய உறுப்புக்கள் பலவகைமலர்கள் போன்ற தன்மையையுங் கருதி, 'பூவல்லி' என்றது. 'ஆரேபிரிபவர்தாம்' - மனிதர்க்கு உரிய விவேகமுடையார் பிரியார் என்றபடி. கமலம் - செந்தாமரை. 'கமலம்' என்றது - செவ்வரிசிதறுதலையும், 'குவளை' என்றது - கடைச்சிவப்பையும் குறிக்கும். குவளை - கருநெய்தலெனக் கொண்டால், கருநிறத்துக்கு உவமைகூறியதாம். தான்பிரிந்துசெல்லவியலாதபடி அழகிதாகநோக்கித் தன்னைக் கவருந்தன்மையை, 'மடமான்விழிக்கின்ற' என்று கூறினன். 'இதழ்' என்றது, கண்ணின் மேலிமை கீழிமைகளை. 'மாயிதழே' என்று சிறந்த அதரத்தின் தன்மையை வியந்ததாக வுரைப்பாரும் உளர். 'மாயிதழே' என்பதை,

சிறந்த அதரத்தையுடையாய் என விளியாக் கொள்ளின், 'வல்லி' என்றது - முன்னிலைப்படர்க்கையாம்.

இதற்கு உள்ளுறைபொருள் - பிரியநினைத்த பாகவதரை நீங்கமாட்டாது வருந்திய ஆழ்வாரது தன்மையையும் ஞானமிகுதியையுங் கண்டு பிரியமாட்டாமல் அப்பாகவதர் கூறும் வார்த்தை. 'ஸ்ரீவைஷ்ணவர்கள் இவரைப் பிரிந்து தங்களுக்குத் தரிக்கவொண்ணாமையை இவர்க்கு அறிவித்து அவ்வழியாலே இவரைத் தரிப்பித்தபடியைச் சொல்லிற்று' என்ற அப்பிள்ளையுரை அறியத்தக்கது. இப்பாட்டின் முதல்வாக்கியத்தால், சக்கரச்செல்வனும் திருமகள்கேள்வனுமான எம்பெருமானுடைய பரமபதம்போல ஆநந்தமின்பந் தருவதும் சிறந்ததையுமொழியுஞ்செல்லாநிலைமையதும் ஒளிமயமானது மாயக்கொள்கொம்பையே அவாவிநிற்குங்கொடிபோலப் பரதந்திரமாகவுள்ள சொரூபத்தையுடைய இவ்வாழ்வாரை ஞானங்கைவந்தவரில் விடுவாருண்டோ? என்றபடி. 'வண்மை - ஔதார்யம்; தமக்கு மாநஸாநுஸந்தாநமாக அநுபவித்திருக்க அமைந்திருக்கச்செய்தே ஜகத்துக்கு உபகாரமாகப் பிரபந்தத்தையருளிச்செய்தபடி, எம்பெருமான் தம் ஒருவர்க்கும் மயர்வற மதிநலம் அருளத் தாம் ஜகத்துக்கு மயர்வறமதிநலம் அருளினபடி; தாமே சொல்லிலும் *"வண்சடகோபன்" என்றிறே சொல்லுவது' என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை இங்கே அறிக. 'இவையோ கண்' என்றதனால் இவரது ஞானம் மற்றஉலகத்தார்ஞானம்போலவன்றென்றும், 'பூங்கமலங்கருஞ்சுடராடி' என்றதனால் இவரதுஞானம் செந்தாமரைநிறத்தவளான திருமகளையும் மைநிறத்தவனான திருமாலையும் இலக்காகக்கொண்டு தன்மயமாயுள்ளதென்றும், 'வெண்முத்தரும்பி' என்றதனால் இவரதுஞானம் சுத்தசத்துவகுணமயமானதென்றும், எம்பெருமானை யனுபவித்ததலால் ஆநந்தக்கண்ணீர்பெருகப்பெற்றதென்றும், 'குவளை','மாயிதழ்' என்றவற்றால் செம்மையையும் பெருமையையுங் குறித்து, இவரதுஞானம் ஸ்ரீவைஷ்ணவர்பக்கல் அநுராகமிகுதியையுடையதென்றும், 'மடமான்விழிக்கின்ற' என்றதனால் பிரிவாற்றாமை தோற்றும்படியுள்ளதென்றுந் தோன்றும்.

நுதி, நேமி, வல்லீ, கமலம் - வடசொற்கள். 'வண்பூவணிவல்லி' என்றும் பாடம். யார் என்ற வினா எதிர்மறைகுறித்தது. ஏகாரம்-வாக்கியாலங்காரம். தாம் - அசை. முத்து - உவமையாகுபெயர். மான்விழிக்கின்ற - உவமைத்தொகை. விழிக்கின்ற - அன்சாரியைபெறாத பலவின்பால்முற்று. மாயிதழ்—மாஎன்பது உரிச்சொல்லாதலால், அதன்முன் யகரந் தோன்றிற்று. [நன் - மெய் - ௩௬] (௯)

## மதியுடம்படுத்தலுற்ற தலைவன் குறையுறவுரைத்தல்.

௧௰. மாயோன்வடதிருவேங்கடநாடவல்லிகொடிகா
ணோயோவுரைக்கிலுங்கேட்கின்றிலீருரையீர்நுமது
வாயோவதுவன்றிவல்வினையேனுங்கிளியுமெள்கு
மாயோவடுந்தொண்டையோவறையோவிதறிவரிதே.

(இ - ள்.) மாயோன் - ஆச்சரியகரமான குணஞ்செயல்களையுடைய எம்பெருமானது, வட திரு வேங்கட நாட - வடக்கிலுள்ள திருவேங்கடமலையை இடமாகவுடைய, வல்லி கொடிகாள்-பூங்கொடிபோன்ற இளமகளிரே! நோய் ஓ உரைக்கிலும் கேட்கின்றிலீர் - (என்னுடைய) காதல்நோயையோ (நீங்கள் தாமாக அறியாவிடினும் நான்) சொன்னாலுங் கேட்கிறீரில்லை; நுமது - உங்களுடைய, வாயோ - வாயின் அழகோ? அது அன்றி - அதுவல்

* திருவாய்மொழி - பதினோன்காந்திருப்பதிகம் - ௧௧.

லாமல், வல்வினையேனும் கிளியும் எஃகும் - கொடிய தீவினையையுடைய நானும் கிளியும் தளருமபடியான, ஆயோ - (உங்களது) ஆயோ என்கிற சொல்லோ? தொண்டையோ - தொண்டைப்பழம்போலச் சிவந்த (உங்கள்) அதரமோ? அடும்-(என்னை) உயிர்க்கொலை செய்யா நிற்கும், இது அறிவு அரிது - இவற்றில் இன்னது என்னை வருத்துமென்பது அறியஅரிதாயிராநின்றது, உரையீர் - சொல்லுங்கள்; (எ - று)—'அறையோ' என்றது, அறியவொண்ணாமையால் முறையிட்டுக்கூறும் வார்த்தை.

*"இரந்துகுறையுறாது கிழவியுந் தோழியு,மொருங்கு தலைப்பெய்த செவ்வி நோக்கிப், பதியும் பெயரும் பிறவும் வினாஅய்ப், புதியோன் போலப் பொருந்துபு கிளந்து, மதியுடம்படுத்தற்கு முரிய னென்ப" என்றபடி பாங்கற்கூட்டத்தினாலாவது இடந்தலைப்பாட்டினாலாவது தலைமகளைக்கூடிய தலைமகன் அதன்பின்பு தோழிமாட்டுச்சென்று இரந்துகுறையுறாமல் தலைமகளுந் தோழியும் ஒருங்குகூடிப் புணர்ங்காத்திருக்கிற அமயம் நோக்கி அவர்களருகிற் சென்று நின்று புதியான்போலச் சிலகூறித் தன்குறையை யறிவித்துத் தோழியை மதியுடம்படுத்த துறை இது. இங்கு மதியுடம்படுத்தலாவது தலைமகளது வேறுபாட்டையுந் தனதுசெய்கையையும் நோக்கி இவற்றிற்குக் காரணமென்னோவென்று கவாசிப்பட்ட தோழியினது அறிவைத் தலைமகன் தன்கருத்தறிவித்தலாலே இவற்றின் உண்மைக்காரணமறிவதென்றுதெளிந்தொருவழிப்படச்செய்தல்.

'காட்சியில் தலைவி ஆயவெள்ளம்புடைசூழ்ந்து குற்றேவல்செய்ய வீற்றிருந்தா ளென்று கூறி, இங்ஙனந் தினைப்புனங்காத்திருந்தா ளென்று கூறியதும், தலைவனும் பற்பலநூறாயிரங் கூர்வேலிளைஞர் புடைசூழத் தேரேறி வேட்டையாடவந்தா னென்று கூறி, இங்ஙனம் தமியனாய்த் தழையேந்திவந்தா னென்றுங் குறையிரந்தானென்றுங் கூறியது மாறுபாடன்றோவெனின்,— மாறுபாடன்று, என்னை?—தலைவி ஆயக்கூட்டமும் முன்போலே சூழ்ந்துபிரிந்து விளையாடாநிற்ப இவளும் பற்பலவிளையாட்டினுள் இதுவும் ஓர்விளையாட்டாகவும் தலைவன் குறியிடத்துவரின் தனித்து அவனைக் கூடவேண்டுமென்னுங் கருத்தாகவும் புனங்காத்தா ளென்றும், தலைவன் கூர்வேலிளைஞரும் வேட்டைவிருப்பாற் சூழ்ந்துபிரிந்துசெல்லாநிற்ப, இவனும் வேட்கைமீதூரப்பட்டுப் பாங்கியாற் கூடவேண்டுமென்னுங் கருத்தினால், தலைவி குலமுறைமை ஒருவர்க்கொருவர் தழையுங் கண்ணியுங் கொடுத்துக் காண்டலும் இவர் அவற்றையேற்றுக்கோடலுந் தொன்றுதொட்டு நடந்துவரும் இயல்பாதலால், தழையுங் கண்ணியும் ஏந்திவந்துநின்று குறையிரந்தா னென்றுங் கூறியது மாறுபாடன்றென வுணர்க. எனவே, எளியளாய்ப் புனங்காத்தாளுமல்லள், எளியனாய்க் குறையுற்றிரந்தானுமல்லன் என்பது தோன்றியவாறு உணர்க' என்ற தஞ்சைவாணன்கோவையுரையால், தலைமகள்புனங்காத்தற்காரணம் தெற்றெனவிளங்கும்.

வேங்கடமெவ்விடத்திலுள்ளதென்றால், வடக்கிலுள்ளதெனவேண்டுதலின், 'வடதிருவேங்கடம்' என அதனை விளங்கக்கூறினார், எனவே, இங்கு, வடக்கு - இனமவிலக்கவந்ததன்றி இயற்கைவிளக்கவந்த அடைமொழியாம் அல்லது, தமிழ்நாட்டுக்கு வடக்கெல்லையாதல் தோன்றக் கூறியதுமாம். கொடி என்றது - பெயர்மாத்திரமாய், மகளிரை யுணர்த்தியதனால், வல்லி யென்வந்த உவமையோடு கூறியதுகூறலாகாது, †"முகில்வண்ணனன் கண்ணன்" என்றாற்போல. தலைமகளைக்கூட்டுதற்குத் துணையாயநின்று உதவுந் தன்மையைக் கருதி, தோழியையும்'கொடி'என்று ஒப்பச்சொல்லி விளித்தது.

* இறையனாரகப்பொருள் - ௬.
† திருவிருத்தம் - ௨

'கொடிகாள்'என்றதனால், குறிஞ்சிநிலத்துத் தலைமகளென்பது தோன்றுமென்பர், கொடிச்சியரென்று குறிஞ்சிநிலத்துமகளிர்க்குப் பெயர். கேட்கின்றிலீர் உரையீர் - 'கேளாதவர்களைச் சொல்லீரென்கிறது, ஆசையின்மிகுதியிருந்தபடி' என்பர் பெரியவாச்சான்பிள்ளை 'நோயோ உரைக்கிலும் கேட்கின்றிலீர்' என்றது, என்துயரிவால் நீங்கள் நோவுபடுகின்றிலலையென்ற குறிப்பு. 'கேட்கின்றிலீர்' என்றதனால், கேட்டமாத்திரத்தையும் தான் பயனாகக்கருதினமை தோன்றும். தினைப்புனங்காப்பவர் கிளிகடிதற்பொருட்டு வாய்திறந்து ஆடலிடுகிற குரலொலியைக் கேட்டும், அவர்வாயினழகைக் கண்டும் தான்ஈடுபட்டதுபற்றி, இங்ஙனங்கூறினான். இவர் கூறும் ஆயோ வென்கிற சொல்லைக் கேட்டுக் கிளிகள் அஞ்சிப் பின்செல்லுதலும், இச்சொல்லிற்குத் தாம் கொஞ்சிக்கூறுஞ் சொல்லும் ஈடாகாதென்று அக்கிளிகள் நாணுதலும் தோன்ற, 'கிளியுமெள்கும் ஆயோ' என்றது. இப்படிப்பட்ட காதல்நோயில் தான் அகப்பட்டு வருந்துதலைக் காட்டுதற்கு, 'வல்வினையேன்' என்றான். இவர்கள்சொல்லிற்குத் தோற்றல் தனக்குங் கிளிகட்கும் பொதுத்தன்மையாதல்பற்றி, 'வல்வினையேனுங் கிளியும் எள்கும்' எனச் சேர்த்து உரைத்தது. 'அறையோ' என்றது, இவர்கள்வார்த்தைகேட்கையில் விருப்பத்தால் முறையிட்ட சொல்லாகவுமாம். தொண்டையோ - கண்டது தொண்டையோ என்றுமாம். இது அறிவரிது - காரியந் தெரிகிறதேயொழியக் காரணந்தெரிகிறதில்லையென்றபடி.

ஆழ்வாரைப்பிரியமாட்டாத அன்பரானபாகவதர் அவரது அவயவவிஷயகத்திலும் அருளிச்செய்யும்மொழிகளிலும் ஈடுபட்டுச் சொல்லுகிற வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். 'மாயோன்வடதிருவேங்கடநாட வல்லிக்கொடிகாள்'- ஆச்சரியகரனான எம்பெருமான் லோகஸம்ரக்ஷணார்த்தமாகப் பரமபதத்தைவிட்டுப் பெரியதிருமலையில் வந்து நிற்கிற நீர்மையை நாடுந்தன்மையையும் அதனாற்பரவசப்படுதலையுமுடையவரே'என ஆழ்வாரை விளித்தபடி, பன்மை - உயர்வுபற்றினது. 'நோயோ உரைக்கிலும் கேட்கின்றிலீர்' - உமமிடத்து அன்புமிகுதியால் நாங்களபடும்பாட்டை விண்ணப்பஞ்செய்தாலும் (உமது பரவசத்தால்) கேட்கிறீரில்லை என்றபடி. நுமது வாயோ - உமமுடைய திருமுகமண்டலமலர்ச்சியோ? அது அன்றி - அதுவல்லாமல், வல்வினையேனும்-உம்மைப்பிரிந்துபோகலாகாதபடிகட்டுகிறவலியபாசபந்தத்தையுடைய யாமும்,கிளியும் - (பசுஞ்சாமநிறத்தாலும் செய்வாயினாலும் இன்சொல்லாலும்)கிளிபோன்ற எம்பெருமானும்,எள்கும்-ஈடுபடும்படியான, ஆயோ - (உமது) சொற்போக்கோ? தொண்டையோ - அப்படிப்பட்ட சொற்களைக் கூறும் வாயிதழ்களோ? அல்லது, குரலோசையோ' அடும் - (எம்மை) நெகிழச்செய்யும், இது அறிவு அரிது - இவை தனித்தனியே நெகிழச்செய்யுந்தன்மையனவாதலால் இவற்றில் எம்மை நெகிழ்விப்பது இன்னதென்று பகுத்து அறிதல் அரிது, உரையீர் - நீதாமே இதனைநிச்சயித்துச்சொல்வீர் என்க. 'அறையோ' என்றது, தம்மை அடுவது இன்னதென்று உணராமையாற் கூறும் முறைப்பாடு.

மாயன் என்பது- மாயோன என னகரவீற்று அயல் அகரம் ஓவாயிற்று. நாட - நாடு என்பதன்மேற் பிறந்த குறிப்புப்பெயரெச்சம் கிளிகாள - ஈற்றயலுதிரிந்த விளி. நோயோ, ஓ - இழிவுசிறப்பு, இரக்கமுமாம். 'நுமது' என்றதை, ஆயோ, தொண்டையோ என்றவற்றோடுங் கூட்டுக. 'கிளியும் வெள்கும்' என்றும் பாடம். (௧0)

## பிரிவாற்றுததலைவியின் வேறுபாடு கண்டு தலைவன் உரைத்தல்.

௧௧. அரியனயாமின்றுகாண்கின்றனகண்ணனைவிண்ணனையாய
பெரியனகாதமபொருட்கோபிரிவெனஞாலமெய்தற்

குரியனவொண்முத்தும்மைம்பொன்னுமேந்தியொரோகுடங்கை
பெரியனகெண்டைக்குலமிவையோவந்துபோகின்றவே. [ப்

(இ - ள்.) யாம் இன்று காண்கின்றன - நாம் இப்பொழுது பார்க்கின்றவை, அரியன - (உலகத்தில் வேறு எங்கும் பார்த்தற்கு) அருமையானவை; 'கண்ணன் விண் அனையாய் - எம்பெருமானது பரமபதம்போல எல்லையில்லின்பந்தருபவளே! பொருட்கோ பெரியன காதம் பிரிவு - பொருளீட்டுதற் பொருட்டாகவோ அதிதூரங்களான பலகாதங்களில் தலைமகன்பிரிவு (நிகழ்தல் உண்டு)', என-என்று (யான் உலகநிகழ்ச்சியை எடுத்துக் கூற,—ஞாலம் எய்தற்கு உரியன - எல்லாவுலகங்களையுந் தம்வசமாகப்பெறுதற்கு உரியவையும், ஓரோ குடங்கை பெரியன - தனித்தனி ஒரு அகங்கையவ்வளவு பெரியவையும் ஆகிய, கெண்டை குலம் இவை - கெண்டைமீன்களின் இனமான இக்கண்கள், ஒள் முத்தும் பை பொன்னும் ஏந்தி - (பிரிவாற்றாமையால் வந்த கண்ணீர்த்துளிகளாகிய) ஒள்ளிய முத்துக்களையும் (பசலைநிறமாகிய) பசும்பொன்னையுங் கொண்டு, வந்து போகின்ற - (என்முன்னே) வந்து உலாவுகின்றன, ஓ - இது என்ன வியப்பு! (எ - று)

பொருளீட்டுதற்பொருட்டுத் தலைமகளைப் பிரிந்துசெல்லக்கருதிய தலைமகன், சொல்லாது சடக்கெனப்பிரிந்தாலும் அன்றிச் சடக்கெனப் பிரிவதையுணர்த்தினாலும் தலைவி இறந்துபடலுளைக் கருதி, அவள்ஆற்றுமாறு சிறிது சிறிதாகப் பிரிவையுணர்த்தத்தொடங்கி, 'உலகத்தில் பொருள்வயிற்பிரிவென்பது ஒன்று உண்டு' என்று பலபிரஸ்தாபங்களில் ஒருபிரஸ்தாபமாக இதனையெடுத்துச்சொல்ல, அதுகேட்டவுடன் அவள் 'இதுகூறினது என்னைப்பிரிதற் பொருட்டன்றோ?' என்றும், 'அப்பிரிவு எனக்கு நிகழுமாயின், யான் என்செய்வேன்?' என்றுஞ் சங்கித்துப் பிரிந்தாற்போலவருந்திப் பிரிவாற்றாமையாலுண்டாகும் பசப்பென்கிற நிறவேறுபாட்டை அடைந்து கண்ணுங்கண்ணீருமாய் நிற்க, அதுகண்ட தலைமகன் பின்பு தோழியை நோக்கிக் கூறியது என்றாவது, நெஞ்சை நோக்கிக் கூறியது என்றாவது இதற்குத் துறை அறிக. இது, திருக்கோவையாருரையில் 'வாட்டங்கூறல்' என்ற பெயரால் வழங்கப்படும். 'வாட்டங்கூறலென்பது - பொருள்வயிற்பிரியலுறுகின்ற தலைமகன், 'இருமையும் பொருளானே முற்றப்பெறுமென்று யான் பொதுவகையாற் கூற, அக்குறிப்பறிந்து கண்பனிவர இத்தன்மையளாய் வாடினாள், இனி என்னை பிரிவுரைத்தலரிது நீ உணர்த்துமாறென்னை உணர்த்து' எனத் தோழிக்குத் தலைமகளது வாட்டங் கூறுநிற்றல்' என்ற உரையையும், "பிரிவுகேட்ட அரிவைவாட்டம், நீங்கலுற்றவன் பாங்கிக்குரைத்தது" என்ற கொளுவையுங் காண்க.

கண்ணன் விண் அனையாய் - தலைவியை நோக்கிய விளி' என்றது, இவளையடைந்தவர் மீண்டு செல்லவொண்ணாமையைக் குறிப்பிக்கும்; தோழியை நோக்கியதுமாம். பொருட்கோ, ஓ - தெரிநிலை 'ஞாலமெய்தற்குரியன' என்பதற்கு-உலகமுழுவதையும் விலையாகப்பெறுதற்கு உரியவையென்றும், உலகமெல்லாம் பெறவிரும்புதற்கு உரியவையென்றும் பொருள்கொள்ளலாம் முத்தும், பொன்னும் - கண்ணீர்க்கும், பசப்புக்கும் உவமையாகுபெயர். 'தட' என்பதுபோலக் 'குட' வென்பது - வளைவுணர்த்துவதோர் உரிச்சொல் லாதலால், குடங்கை யென்றது - வளைந்த கையெனப் பொருள்பட்டுச் சேரங்கையைக் குறிக்கும். குடக்கையென வலிமிகாது குடங்கையென மெலிமிக்கதற்குக் காரணம், உரிச்சொற்புணர்ச்சியாதலே, [நன் - மெய் - ௩௪] குளிர்ச்சியாலும் மிளிர்ச்சியாலும் ஓடுதலாலும் மதமதப்பாலும் கண்கள் கெண்டைமீன்போலுதலால், 'கெண்டைக்குலம்' என்றது. குலக்கெண்டை யென மாற்றி இயைத்து, உயர்ந்தசாதிக்கெண்டை

மீ னெனவுமாம். ஓ - வியப்பிடைச்சொல். பொருட்பிரிவைக் கூறலுற்ற என்முன், பரந்தகண்கள், உலகையிலேபெறத்தக்கவையாய்ச்சிறந்த முத்தை யும் பொன்னையும் ஏந்திவந்து எதிர்நின்று 'நீ பொருளின்பொருட்டுப் பிரிந்து செல்லவேண்டா; இப் பொருள்கள் உனக்கு உரியவையேகாண்' என்று கூறுகின்றனபோன்றன என்பதுந் தோன்றும். பெரியன்காதம்பொருட் கோபிரிவென - பொருளுக்காகவோ நெடுங்காதம் பிரிவதென்று, இவள்கண் கள் முத்தையும் பொன்னையும் ஏந்தி (என்முன்) வந்துபேர்கின்றன என்க. [இதற்கு உள்ளுறைபொருளில், பகவத்ஸேவைக்காக நெடுந்தூரஞ்செல்ல வேண்டுமோ? என்று ஆழ்வாரது ஞானவகைகள் சுத்தசத்துவகுணத்தையும் பகவத்ஸ்வரூபத்தையும் தம்மிடத்தேகொண்டு எங்கள்முன் வந்து பரவுகின் றன என்க.] பிரிவென ஓ பெரியன்காதம் என்றுஇயைத்து, பிரிவென்றுசொன்ன மாத்திரத்திலே (இவளுக்கு) நெடுங்காததூரம் பிரிந்தாய்விட்டன என்றலும் ஒன்று. பிரிவைக் கருதலாற் கண்ணீரும் நிறவேறுபாடுமா யிருந்த இருப்பும் புதிதாக ஒருமுத்தணியையும் பொன்னணியையும் அணிந்தாற்போலத் தன க்கு ஒருஅழகுவிளைத்த தென்பது தோன்ற, 'ஒண்முத்தும் பைம்பொன்னு மேந்தி'என்றனெ்ன உரைத்தனு முண்டு. குடங்கை கண்ணுக்கு வடிவுவமை யாதலை*"கொண்டார்குடங்கையளவேயுள்கண்ணிணையை" எனவுங்காண்க.

பகவத்ஸேவையின்பொருட்டு ஆழ்வாரைப் பிரிந்து தேசாந்தரஞ்செல் லக்கருதிய பாகவதர் தமதுபிரிவைப் பொறுக்கமாட்டாதபடியான அவரு டைய ஞானவிசேஷத்தைக் கண்டு கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். 'அரியனயாமின்றுகாண்கின்றன' என்றதனால், இவருடைய ஞானவிசேஷம் வேறுஎவ்விடத்திலுங் காணவரிதென்றபடி. கண்ணன்விண்ணனையாய் - எம் பெருமானது பரமபதம்போல அளவிடப்படாத மகிமையையும் அந்தமி ல்லின்பமளித்தலையும் பிரகிருதிசம்பந்தமில்லாமையையும் என்றும் வேறுபா டில்லாத இயல்பையு முடையவரே! என ஆழ்வாரை விளித்தபடி. பெரி யன்காதம் பொருட்கோ பிரிவு என - பகவத்ஸேவைக்காக நெடுந்தூரம் திவ் யதேசயாத்திரை செல்லுதலுண்டு என்று யாம் சொல்ல, ஞாலம் எய்தற்கு உரியன - எல்லாஉலகங்களையும் வேண்டியவேண்டியவாறு பெறுதற்கு உரிய வையும், அல்லது, உலகத்தாரையெல்லாம் வசப்படுத்த வல்லவையும், ஒண் முத்தும் பைம்பொன்னும் ஏந்தி - சுத்தசத்துவகுணத்தையும் ஒளிமயமான எம்பெருமான்வடிவத்தையும் தன்னுட்கொண்டவையும், ஒரோகுடங்கைப் பெரியன - †"அள்ளிக்கொள்வற்றே" என்றாற்போலக் கைகளால் மொண் டெடுத்துஅநுபவிக்கும்படி அன்பர்க்கு எளியவையும், மிகவுள்ளவையும், அல் லது, கைவசப்பட்டவையும், கெண்டைக்குலம்-எம்பெருமானது மத்ஸ்யாவதா ரத்திலே இறங்கி ஈடுபட்டுத் தந்மயமானவையும் ஆகிய, இவை - ஆழ்வாரது ஞானத்தின்வகைகள், வந்து போகின்ற - பரவிவந்து (பிரியவொண்ணாதபடி) ஆசையை மூட்டுகின்றன ஓ - இது என்னவியப்பு! என்க. ஸ்வாபதேசத்தில் 'முத்து' என்றதனை, முத்தியில் குறிக்கப்பட்ட தென்னலுமாம். ‡"உலக மென்பது உயர்ந்தோர் மாட்டே" என்பவாதலால், 'ஞாலமெல்லாம் எய்தற் குரியன' என்பதற்கு - விசேஷஞானமுடைய ஸ்ரீவைஷ்ணவர்களெல்லோ ரும் அநுபவித்தற்குத் தக்கவை யென்றுங் கொள்ளலாம். பிரிவென்றுஒன்று உலகத்தில் உண்டென்னுமளவில் ஸ்ரீவைஷ்ணவர்கள்பிரிவுதமக்குஒருகால் பிறந்திடுமோவென்று வெருவும்படி ஆழ்வார்க்கு அவர்கள்விஷயத்திலுள்ள பிரிவாற்றாமை விளங்கும்.

---

* சீவகசிந்தாமணி - பதிகம் - கஎ

† திருக்குறள் - பசப்புறுபருவரல் - எ.

‡ திவாகரம் - மக்கட்பெயர்த்தொகுதி.

அனையாய - அனையா ளென்பதன் ஈறுதிரிந்த விளி. எய்தற்கு என்ற எதிர்காலவினையெச்சத்தில், எய்து - பகுதி ஓரோ, ஓ - அசை. போகின்ற - முற்று. (கக)

**தலைவன்பிரியப்பெற்ற தலைவி தன்ஆற்றாமைகூறி நெஞ்சோடுகலாய்த்தல்.**

கஉ. பேர்கின்றது மணிமாமைபிறங்கியள்ளற்பயலை
யூர்கின்றது கங்குலூழிகளேயிதெல்லாமினவே
யீர்கின்றசக்கரத்தெம்பெருமான்கண்ணன்றண்ணந்துழாய
சார்கின்றநன்னெஞ்சினார்தந்துபோனதனிவளமே.

(இ - ள்.) மணி மாமை - (எனது) அழகிய நிறமானது, போகின்றது - வேறுபடாநின்றது, பிறங்கி அள்ளல் பயலை - விளங்கி அடர்த்தலையுடைய பசலைநிறமானது, ஊர்கின்றது - மேன்மேற் பரவாநின்றது, கங்குல் - இராத்திரி, ஊழிகளே - அநேககற்பங்களாகாநின்றது, இது எல்லாம் இனவே - இத்தன்மையனவான இவையெல்லாம்,—ஈர்கின்ற சக்கரத்து - (கொடியாரை) அறுத்திடுகிற திருவாழியையுடைய, எம் பெருமான் கண்ணன் - எமது தலைவனான கண்ணபிரானது, தண் அம் துழாய- குளிர்ந்த அழகிய திருத்துழாயிலே, சார்கின்ற - ஆசைப்பட்டுச்செல்கிற, நல் நெஞ்சினார்- (எனது) நல்லமனம், தந்து போன - (தான்செல்கிறபொழுது எனக்குக்) கொடுத்து விட்டுச் சென்ற, தனி வளமே - ஒப்பில்லாத வளப்பங்களேகாண, (எ - று) என்று பாங்கியைநோக்கித் தலைமகள் தன் ஆற்றாமை சொன்னாளாகவுமாம்.

மாமையாவது - மங்கையர்க்கு இளமைப்பருவத்திலுள்ள ஒளிபெற்ற நிறம். 'மணிமாமை' என்றது, தன்நிறத்தை அவன்புகழும் விதத்தாலே சொல்லியதாயத் தற்புகழ்ச்சியாகாது. அள்ளற்பயலை - பசலை வண்டல் விழுந்தன்மையைக் குறிக்குமென்றுங் கூறுவர். கங்குல் ஊழிகளே - *"ஊழி பலவோ ரிரவாயிற்றே வென்னும்", †"ஊழியிற்பெரிதால் நாழிகை யென்னும்"என்றபடி கூடியநிலையில்ஒருக்ஷணமாகக்கழிகிறஇரவு பிரிந்தநிலையில் கல்பகோடிகாலமாக நீட்டிக்கிற தன்மையைக் கூறியபடி. 'எல்லாம்' என்றதனால், அன்றில் தென்றல் திங்கள் கடல் குயில் முதலியவை வருத்துவனவாதலுங் கொள்ளப்படும். ஈர்கின்ற சக்கரத்து எம்பெருமான் - கையுந் திருவாழியுஞ் சேர்ந்த சேர்த்தியா லாகிய அழகினால் என்னைப்பிரிக்கிற தலைமகனென்றபடியுமாம், 'பிரதிகூலரை ஆண்மையாலே கொல்லும், அநுகூலரை அழகாலே கொல்லும்'என்பர் பெரியவாச்சான்பிள்ளை 'உகவாதாரை அணுகிநின்று முடிக்கும், உகப்பாரை அகல நின்று முடிக்கும்' என்பர் நம்பிள்ளை. கண்ணன் துழாய் சார்கின்ற நெஞ்சு - அவனது சம்பந்தம் பெற்ற திருத்துழாயோடேனும் தனக்குச்சம்பந்த முண்டாதலைப் பெறக்கருதி ஈடுபட்ட மன மென்க. 'சார்கின்ற' என்றதனால், கிடைக்கும் கிடையாது என்று விசாரியாதே பதறிவிழுந்தமை தோன்றும். நல்நெஞ்சு - உடையவளாகிய தன்னை வருந்தவிட்டுக் காதலனிடத்துச் சென்ற வேட்கைமிகுதியையுடைய நெஞ்சு என்றவாறு. நெஞ்சினார் - கோபத்தினால் அஃறிணை உயர்திணையாகவும், ஒருமைப்பால் பன்மைப்பாலாகவுங் கூறியது திணைபால்வழுவமைதி; உயர்வினுமாம் [நன் - பொது - உஅ.] மாமையிழத்தல் முதலியவற்றை 'வளம்' என்றது, எதிர்மறையிலக்கணை. பசலை - நிறவேறுபாடு.

அகக்கண்ணாற்கண்ட எம்பெருமானைச் சேரப்பெறாது நெஞ்சிழந்து தனித்துவருந்துகிற ஆழ்வார் தமது ஆற்றாமையைக் கூறுதல்,இதற்கு உள்ளுறை

---

* நளவெண்பா - சுயம்வரகாண்டம் - கoஅ.

† பெரியதிருமொழி - பதினோராந்திருப்பதிகம் - ௬.

பொருள். 'பேர்கின்றது மணிமாமை பிறங்கி அள்ளற்பயலை ஊர்கின்றது' என்றது, இயற்கைகுலைந்து அன்பின்மிகுதியாலாகிய செயற்கை மெய்ப்பாடு மிக்கபடியைக் கூறியவாறு. கங்குல ஊழிகளே - பிரிந்திருக்குங்காலம் பிரிவாற்றாமையால் நெடும்பொழுதாக நீட்டித்துத் தோன்றுகிறது. 'கங்குல்' என்றது, மோகாந்தகாரத்தோடு கூடிய பொழுதாதலால். இறுதிவாக்கியத்தால், இப்படிப்பட்ட இவையெல்லாம் எம்பெருமானுடைய மாலையழகிலே யீடுபட்ட மனம் தானுபோன ஒப்பற்றசெல்வமே என்றதாயிற்று.என்று ஆழ்வார் அன்பரை நோக்கி யருளிச்செய்ததாகவுமாம்.

கீழ்ஆறுபாசுரங்களில் பாகவதர்களைத் தலைமகளுக்குப் பேசிவந்து, இதில் பகவானைத் தலைமகளுக்குப்பேசுகிறது, பாகவதரதுசேர்க்கை பகவானதுசேர்க்கையை முடிவாகக் கொள்ளவேண்டுதலால்.

அள்ளல் - தொழிற்பெயர். பயலை - இடைப்போலி. இன - இன்ன என்பதன் தொகுத்தல். இதெல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். (கஉ)

## பிரிவாற்றாத் தலைவி இருளுக்கும் வாடைக்கும் இரங்கல்.

கந. தனிவளர்செங்கோனடாவு தழல்வாயரசவியப்
பனிவளர்செங்கோலிருள்வீற்றிருந்ததுபார்முழுதுந்
துனிவளர்காதற்றுழாயைத்துழாவுதண்வாடைதடிந்
தினிவளைகாப்பவரார்எனையூழிகளீர்வனவே.

(இ-ள்) தனி வளர் - ஒப்பில்லாமல் வளருந்தன்மையதான, செங்கோல் - (தனது ஒளியாகிய) அரசாட்சியை, நடாவு - (எங்குமொப்பத் தடையறச்) செலுத்துகிற, தழல் வாய் அரசு - வெப்பமவாய்ந்த சூரியனாகிய அரசன், அவிய-ஒழிய, பனி வளர் செங்கோல் இருள்-(சனங்களுக்கு)நடுக்கத்தைச் செய்கிற ஆட்சியையுடைய இருளாகிய சிற்றரசு, பார் முழுதும் - பூமிமுழுவதும், வீற்றிருந்தது - அரசுவீற்றிருந்தது, இனி - இனிமேல், துனி வளர் காதல் துழாயை துழாவு தண் வாடை தடிந்து - துன்பத்தைமிகச்செய்கிற என் வேட்கைக்கு இலக்கான (தலைவனது) திருத்துழாய்மாலையை அளைந்து வருகிற குளிர்ந்தகாற்றை யழித்து, வளை காப்பவர் - (பிரிவாற்றாமையால் மெலிந்த எனது கைகளினின்று கழன்றுவிழத்தொடங்கின)வளைகளை(க் கழல வொட்டாது தடுத்து)ப் பாதுகாப்பவர், ஆர் - யார் உளர்? [எவருமில்லை யென்றபடி], ஊழிகள் - கற்பவடிவங்கொண்ட இராத்திரிகள், எனை - என்னை, ஈர்வன - பிளக்குந்தன்மையன, (எ - று.)

'ஆதலால்,என்னைக் காக்கமுடியாது என்று கருத்து. அஸ்தமிக்கிற ஆதித்யன் காக்கவோ? அறிவழிக்கிற அந்தகாரம் காக்கவோ?வருத்துகிற வாடை காக்கவோ? வருந்துகிற நான் காக்கவோ? என்றதாயத்து' என்பது, அழகிய மணவாளசீயர்உரை.

பகலில் இந்திரியங்கள் பலவேறுவகைப்பட்ட பொருள்களை நாடுதல் கூடுமாதலால், ஒருவாறு பிரிவை ஆற்றியிருக்கலாம்; இரவில் அங்ஙனமன்றி எல்லாப்பொருளும் அடங்க இந்திரியங்களோடு மனம் பிரிந்தபொருளொன்றையே நாடுதலாலும், கலவிக்குஉரியகாலமாதலாலும், அதில் ஆற்றமாட்டாது வருந்துகிறாள். சூரியனுடைய ஒளியிலே சந்திரன் நக்ஷத்திரம் விளக்கு முதலிய எல்லாவொளிகளும் இருந்தவிடந்தெரியாதபடி மறைந்திடுதலால், 'தனிவளர்செங்கோல்' என்றது. சூரியனது உஷ்ணகிரணமும் அரசனது பிரதாபமும் ஆகிய இரண்டும் 'தழல்வாய்' என்றதனாற் பெறப்படும். சூரியாஸ்தமனத்தை 'மறைய' என்னாது 'அவிய' என்றது, மீண்டும் விடியக்காணாது இராப்பொழுது நீட்டித்ததாகத் தோன்றுதலால், சூரியன் அழிந்

தான்போலும் என்று கருதி. பிரிந்தார்க்கு வருத்தத்தைவளர்க்கிற நிலைமையையுடைய இருளின் ஆட்சியை 'செங்கோல்' என்றது, எதிர்மறையிலக்கணையாய்க் கொடுங்கோன்மையைக் குறிக்கும்; பிறகுறிப்பு. பார்முழுதும் வீற்றிருந்தது - உலகமுழுவதையுந் தனக்குள்ளே யாக்கிக்கொண்டு தன்னையெதிர்ப்பாரில்லாமையால் தன்பெருமைதோற்றும்படி யிருந்தது; அன்றி, சூரியன்அரசாண்ட இடம்முழுதும் இருளுக்கு வீற்றிருத்தற்குரியதிரமே இடமாயிற் றென்பதுந் தோன்றும். 'தணவாடை' என்றது, முன்புகூடியிருந்தபொழுது இன்பஞ்செய்த நிலையைக் கருதி, அன்றி, வெவ்வாடையைத் தணவாடையென எதிர்மறையாக் கூறி வெறுத்தபடியுமாம். தடிந்து - வெட்டி, உருவமில்லாதபொருளாகிய காற்றை 'தடிந்து' என உருவுடைய பொருள்போலக் கூறியது, அதுசெய்யுந் துயர்மிகுதி நோக்கி. 'இனி' - காப்பவனான தலைவன் நீங்கி வருந்துவதான இரவு நேர்ந்தபின்பு. 'துணிவளர் காதல்' என்றதனால் கர்மம் மரணாந்தமான வேதனையைச் செய்யும் இயல்பும், 'வளைகாப்பவர்' என்றதனால் பிரிவாற்றாமையாலாகிய மேனிமெலிவுந் தோன்றும். வளைகாக்குகை - புணர்ச்சியை யுண்டாக்குகை. ஈற்றுஏகாரம் - இரக்கமுமாம். எனை ஊழிகள் ஈவன - எத்தனை கற்பங்கள் வருந்துவன? என்றுங் கொள்ளலாம், ஓரிரவையே பலகற்பங்களாகக் குறித்தது.

எம்பெருமானதுபிரிவை யாற்றாமல் அறிவுகுலைந்து மோகமமிக்குத் தளர்ச்சியிழந்து தனுசந்தேடும்படியான தமது நிலைமையை ஆழ்வார் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். தனி வளர் செங்கோல் நடாவு தழல்வாய் அரசு அவிய - இருளையொழிப்பதும் வெவ்வியதும் தடையற்றதும் ஒப்பில்லாததுமான சூரியனொளிபோல, மதாந்தரங்களை யொழிக்கவல்லதும் அதனால் பிரதாபமிக்கதும் எங்குந் தடையற எம்பெருமான்கட்டளையை நடத்துவதும் அதனால் ஒப்பில்லாததுமான விவேகமுங் குலையும்படி, பனி வளர் செங்கோல் இருள் வீற்றிருந்தது - வருத்தத்தை வளரச்செய்கிற பெருமையுடைய மோகாந்தகாரமானது பரவிவிட்டது, இனி - இனிமேல், துணி வளர் காதல் துழாயை துழாவு தண் வாடை தடிந்து - பிரிந்தநிலையில் துன்பமாய் முடிவதான எனது அன்புமிகுதிக்கு விஷயமான எம்பெருமானது இனிமையை நினைப்பூட்டி விரைவையுண்டாக்கிக்கொண்டு நடக்கிற இவ்வுலகத்துப்பொருளை விலக்கி, வளை காப்பவர் ஆர் - மறந்தும்புறந்தொழாதபடி எனக்குஉள்ள அடிமைக்குணத்தை நீங்காமற் பாதுகாப்பவர் ஆர்? வளையென்பது, வாழ்மகளிர்க்கு மங்கலவாழ்க்கைக்குஉரிய அறிகுறியாதலால், அது ஸ்வாபதேசத்தில், எம்பெருமானது சம்பந்தத்துக்கு அறிகுறியான அடிமையை யுணர்த்தும். எனை ஊழிகள் ஈவனவே - காலநீட்டிப்பு என்னை அழிக்கமுயல்கிறது என்றபடி.

வீற்றிருத்தல் - வேறொன்றற்கில்லாத சிறப்புடன் இருத்தல். வாடை என்றது, காற்றுமாத்திரமாயின்றது, சிறப்புப்பெயர் பொதுப்பொருளையுணர்த்திற்று. எனை - என்னை யென்பதன் தொகுத்தல், அநேகமென்று பொருளில், எனை - எத்தனை யென்பதன் மரூஉ.

'என வளை காப்பவர்' என்ற பாடத்துக்கு, என - என்னுடைய எனக்.

* "பொருவிலாழியொன் றுருட்டியெப்புவனமும்விளக்கு, மிரவிமன்னவனிறத்தலுமெதிர்ந்தபுன்மாலை, பரவைமாநிலமுழுவதும்பரிப்பவனிறப்ப,விரவுவெந்தொழிற்குறுநிலவேந்துபோன்றுளதே" என்பதை இப்பாட்டின் முதலவாக்கியத்தோடு ஒப்பிடுக. இதில் உருவகவணி தோன்றும். (௧௫)

---

* நைடதம் - மாலைப்படலம் - ௫.

## நலம்பாராட்டு.

௧௪. ஈர்வனவேலுமஞ்சேலுமுயிர்மேன்மிளிர்ந்திவையோ
போவனவோவல்லதெய்வநல்வேள்கணைப்பேரொளியே
சோர்வனநீலச்சுடர்விடுமேனியம்மான்விசும்பூர்
தேர்வனதெய்வமன்னீரகண்ணோவிச்செழுங்கயலே.

(இ - ள்.) ஈர்வன வேலும - (பகையைப்) பிளப்பனவான வேல்கள் போலவும், அம சேலும - அழகிய சேலமீன்களைபோலவும் உள்ளனவான, இவை—, உயிர்மேல மிளிர்ந்து - (எனது) உயிரை வசப்படுத்தும்பொருட்டு அதன்மேற் பாய்ந்து, போவனவோ அல்ல - (அதனைவிட்டு) நீங்குவனவல்ல; தெய்வம நல வேள் கணை பேர் ஒளியே சோர்வன - தெய்வத்தன்மையுடைய அழகிய மன்மதனது அம்புகளின் சிறந்தவொளியையே தாம வெளியிடுவன; நீலம சுடர் விடு மேனி அம்மான் விசும்பு ஊர் தேர்வன - நீலரத்தினத்தினது ஒளியை வீசுகிற திருமேனியையுடைய எம்பெருமானது திருநாடாகிய பரமபதத்தைத் (தனக்குறுபபாகத்) தேடுந்தன்மையன; இ செழு கயல - கொழுத்த கயல்மீன்களென்று சொல்லத்தக்க இவை, தெய்வம அன்னீர கண்ணே - (மோகினியென்னும்) பெண்தெய்வத்தை யொத்த உமது கண்களோ? (எ - று.)

நலம்பாராட்டு - தலைமகன் தலைமகளது நன்மையைக் கொண்டாடுதல். தலைவிகண்ணழகுகண்டு வியந்த தலைவன் வார்த்தை இது. 'நாயகனானவன் தலைமகளோடே கலந்து பிரிகிற சமயத்திலே தன்னீடுபாட்டாலும் தனக்குத் தாரணார்த்தமாகவும் மேல பிரிந்தால் இவன் நம்மையொழியவுஞ்சீவிக்கவல்லனென்று அவளநெஞ்சிற படாமைக்காகவும் அவளழகைக் கொண்டாடுகிறான்' என்ற நம்பிள்ளையீடு இங்கு அறியத்தக்கது. பாங்கியுடன்தலைவியைப்புனத்திடைக்கண்டுமதியுடன்படுத்தலுற்றதலைவன்குறையநேர்ந்துரைத்தலுமாம்.

கூரியநுனியால் எதிரியையழிக்கும் வேல்போலக் கூர்மையான நோக்கத்தால் தன்னைவருத்துதல் தோன்ற 'ஈர்வன வேல' என்றும், மடப்பமும் பிறழ்ச்சியும் தோன்ற 'அம் சேல' என்றும், இலக்குத்தப்பாது மார்பத்திலே பட்டுவிடாதுதைத்து உயிரைக்கவரும் அம்புபோல இவையும் உயிர்நிலையிலே பட்டு அதனைக் கவராது தவறுவென்பது தோன்ற 'உயிர்மேல்மிளிர்ந்து இவையோ போவனவோவல்ல' என்றும், மன்மதனது பஞ்சபாணங்கள் செய்யும் சிந்தை திறவேறுபாடு துயப்பனதெவிட்டல அழுங்கல அயர்ச்சி என்னுந் தொழில்களையெல்லாம் இவ்விரண்டுந் தாமே செய்வனவென்பது தோன்ற 'தெய்வநல்வேள் கணைப் பேரொளியே சோர்வன' என்றும், தம்மை ஒருகாலஅனுபவித்தவர் மீளவொண்ணாத திறத்தில மீளாவுலகமாகிய ஸ்ரீவைகுண்டத்தை யொப்பனவென்பது தோன்ற 'நீலச்சுடர்விடு மேனியம்மான்விசும்பூர்தேர்வன' என்றும், உலகத்துக்கயன்மீன்களினும் இவற்றிற்குஉள்ள சிறப்புத் தோன்ற 'இச்செழுங்கயல' என்றும், இவ்வுலகநடையைக்கடந்து மேம்பட்டுள்ள உங்களகண்களோ வென்பது தோன்ற 'தெய்வமன்னீரகண்ணோ' என்றுங் கூறினான். 'ஈர்வனவேலு மஞ்சேலும' என்பதை 'தெய்வநலவேளகணைப் பேரொளியே சோர்வன' என்பதனோடு இயைத்து, (மன்மதபாணங்கள்), ஈர்வனவேலும- (பிராணிகளைத்தவறாமற்கொடிதாகப்) பிளப்பனவேயாயினும, அஞ்சேலும- தாம ஐந்தேயாகிலும், அவற்றின் மிக்கவொளியை இவ்விரண்டுமே கொண்டு ஆசைமூட்டுகின்றன என்று உரைப்பாரும் உளர்; இவ்வுரைக்கு, ஏலும - என்னிலும் என்பதன் மரூஉ: அஞ்சு - ஐந்து என்பதன் போலி. இவையோ, ஓ - இரக்கம், வியப்புமாம். போவனவோ அல்ல, ஓ - தெரிநிலை. எல்லாவுயிரையுந் தவறாது தன்வசப்படுத்தி

யின்பஞ்செய்யும் அழகிய மன்மதனென்பான 'தெய்வநலவேள்' என்றான். 'விசும்பூர் தேவன்' என்பதற்கு - இந்த லீலாவிபூதியை வசப்படுத்தினது போதாமல் அந்த நித்யவிபூதியையும் வசப்படுத்தத் தேடுவன் வென்றும், மீளாவுலகத்தில் நிரதிசயவின்பமநுபவிக்கும் நித்யமுக்தராலும் ஆசைப்பட்டு நாடுதற்கு உரியன் வென்றும் உரைக்கலாம். 'உயிர்மேலமிளிர்ந்து' என்றது, அநித்தியமாய் அழியும் இயல்பினதான உடம்பையேயன்றி நித்தியமாய் அழியாவியல்பினதான உயிரையும் அழிக்கத்தொடங்கினமையைக் காட்டும். பேர்வனவோ அல்ல - பறித்துமருந்திடுகைக்கேயன்றிப் பறித்துத் திருப்பிக்குத்தவேண்டுமென்றாலும் பறிக்கப்போகின்றனவில்லையென்றபடி.

ஆழ்வாரது ஞானவிளக்கத்தைக் கண்டு கொண்டாடுகிற பாகவதர்வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள் இப்பாட்டுக்கு ஸ்வாபதேசத்தில் தலைமகள் ஸ்ரீவைஷ்ணவர்கள். 'ராவணவேலுமஞ்சேலும்' என்றதனால் இவரது ஞானத்தின் கூர்மையும் நீர்மையும் பரசமயத்தவரைத் தோற்கடித்துத் தம்மவரையுகப்பிக்குந்தன்மையும், 'உயிர்மேலமிளிர்ந்து இவையோ போவனவோ வல்ல' என்றதனால் இவரது ஞானம் சேதநராயாவரிடத்தும் பூர்ணமான அருளைத்தவறாமற்கொண்டுள்ளமையும், 'தெய்வநலவேள்கணைப்பேரொளியேசோரவன' என்றதனால் பரமபொருளைநாடுதல் தவறாத நித்யமுக்தரது மனமொழிமெய்களின் விளக்கத்தை இவரதுஞானந் தான்கொண்டுள்ளமையும், 'நீலச்சுடர்விடுமேனியம்மான்விசும்பூர்தேவன' என்றதனால் எம்பெருமானது பரமபதத்தையே நாடுந்தன்மையது இவரதுஞான மென்பதும், 'இச்செழுங்கயல' என்றதனால் இவரதுஞானம் மத்ஸ்யம்முதலிய அவதாரங்களில் ஆழ்ந்துள்ளமையும், 'தெய்வமன்னீர்கண்ணே' என்றதனால் இவர் இவ்வுலகத்திலிருந்து கொண்டே நித்யசூரிகளையொத்திருத்தல்போல இவரது ஞானமும் இவ்வுலகநடையைக் கடந்து மேம்பட்டுள்ள தென்று வியத்தலுந் தோன்றும்.

அன்னீர - அன் என்னும் உவமவிடைச்சொல்லடியாப் பிறந்த அன்னீர் என்னும் முன்னிலைப்பன்மைக் குறிப்பு வினையாலணையும்பெயரின் ஆறும் வேற்றுமைவிரி, அ - ஆறனுருபு அசையென்றும், குறிப்புப்பெயரெச்சவிகுதியென்றும் கொள்ளுதலும் ஒன்று 'அந்நீர' என்றபாடத்துக்கு அப்படிப்பட்ட தன்மையுடையன வென்க. (௧௪)

## தலைமகன்கருத்தறிந்த தோழி அவனைநோக்கி யுரைத்தல்.

௧௫. கயலோ நுமகண்க ளென்று களிறு வினவிநிற்றீ
ரயலோரறியிலுமீதென்னவார்த்தைகடல்கவர்ந்த [மொடும்
புயலோடுலாங்கொண்டல்வண்ணன் புனவேங்கடத்தெம
பயலோவிலீர்கொலைகாக்கின்ற நாளும் பலபலவே.

(இ - ள்.) களிறு வினவி - யானை (இங்குவரக்கண்டதுண்டோ? என்று) கேட்கத்தொடங்கி, கயலோ நும கண்கள் என்று நிற்றீர் - உங்கள்கண்கள் கயல்மீன்கள்தாமோ? என்று (எங்கள்கண்களை) கொண்டாடி நீங்கா துநின்றீர்; அயலோர் அறியிலும் ஈது என்ன வார்த்தை - அயலார் அறிந்தாலும் இது என்ன பொருந்தாதவார்த்தை? கடல் கவர்ந்த புயலோடு உலாம் கொண்டல் வண்ணன் - கடல்நீரை முழுவதுங் கொள்ளைகொண்டு உண்டதும் மழையோடு மந்தமாகச் சஞ்சரிப்பதுமான காளமேகம்போன்ற குளிர்ந்த திருநிறத்தையுடைய எம்பெருமானது, புனம் வேங்கடத்து - (பல) கொல்லைகளையுடைய திருவேங்கடமலையில், கொல்லை காக்கின்ற நாளும் பல் பல் - (நாங்கள்) கொல்லைகாத்துவருகிற மிகப்பலநாள்களி லொன்றிலும், எம்மொடும் பயலோ இலீர் - எங்களோடு (நீர்) பாகமுடையீரல்லீர், (எ - று.)

பயல என்று பாகமாய, எங்களோடு உமக்குக் கூட்டுப்பயிரிலலையே யெ ன்றபடி; ஆதலால, புதியராயவந்தநீர கூட்டுப்பயிராபாரப்பவாபோல இங்கு எம்முடன் நெடும்பொழுது நிறறல தகா தெனபதாம பயல - பாகமாதலை *"பாதியும சிறறுருமப பளளமுமப பயலெனல" என்ற பிங்கலநதையாலும அறிக. 'பயிலோ இலீர' என்ற பாடத்துக்கு - பழக்கமுடையீரலலீ ரென்று பொருள்; பயில - முதனிலைத்தொழிறபெயா புதியரான நீா பழகினுர் போல இங்கு நிறபது தகுதியன்று என்றவாறு களிறுவினவி நுமகணகள கயலோ வென்று நிற்றீா - களிறுதேடிவிஞவிவநதநீா அதுகாணுவிட்டால அபபாறபோவதன்றி எங்கள்கணகளைக கொணடாடுகைக்கும போகாமல எஙகளருகு நிறறறகும என்ன சோதகியுணடு? என்றபடி அயலோா அறி யிலும ஈது என்ன வாாததை - இதுகேட்டால களிறுவினவிவநதவாக்குக் கணகொணடுகாரியமென் னென்று அயலாா நினைபபரே யென்று கருதது. அநேகவருஷகாலமாகத தினநதோறும புனங்காததுவருகிற நாஙகள இப புதுமையை ஒருநாளுங கணடதிலலை யெனபது தோன்ற,'கொலலைகாககின்ற நாளும பலபல' என்ருள்.

மதியுடமபடுக்கூறற தலைமகன தலைமகளுந தோழியும தினைபபுனங் காததிருநத சமயமநோககி அஙகேசென்று தான்பேசுதறகுவியாஜமாகச சில வறறை விஞவததொடஙகித தலைமகளது நோககததில ஈடுபட்டு அவள் கணணழகைக கொணடாடித தன ஆறறுமையைத தெரிவிககு, அவன்கருத தைக குறிபபாலறிநத தோழி கேட்பாாககு அவனது ஆசையை மறுபப தாகத தோன்றுமாறு பேசித தலைவியினது ஆறறுமையையுங குறிபபால உணாததுகிருள். 'கயலோ நுமகணக ளென்று களிறுவினவிநிறறீா' என்ற தனுல எஙகளகணகளையே விஞவாது நீா களிறறையும விஞவலாமோ? என் றும, 'அயலோா அறியிலும ஈது என்ன வாாததை' என்றதனுல மெயககாத லுடைய பிறா கேட்டால இவவாாததை கொணடாடததககதன்றென்றும, மறறையோரை 'அயலோா' என்றதனுல நாஙகள் உமககு உரியோ மென றும, நீா எஙகளுககு உரியீ ரென்றும,'ஈதென்னவாாததை' என்றதனுல இவ் வாாததை வெகுஅழகிய தென்றும, 'கொலலைகாககின்றநாளும பலபல' என் றதனுல உமது வருகையை யெதிாபாாததுநாஙகள கொலலைகாததலென்று ஒருவியாஜமவைதது நெடுநாளாகக்காததிருகக நீா இதுகாறும வநதிலிரே யென்றும, 'பயலோ இலீா' என்றதனுல நெடுநாளபழகினுலும கணடறியா தனபோல என்றும்புதியனவாயுள்ள உமது அழகுடைமைமுதலியன என றுங கூறித தோழி தலைமகளது காதலைக குறிபபிததபடி.

ஆழவாரது ஞானவிளககததைக கொணடாடுகிற நிலையிலே இநதிரிய நிககிரகமமுதலிய உபாயாநதரஙகளிலும நாட்டமுடையாாபோலத தோறற விருநத பாகவதரை நோககி ஆழவாாருகிலுளள அன்பாகள் அவாகளகருத தைச சோதிககும்பொருட்டுக கூறும வாாததை,இததறகுஉள்ளுறைபொருள். 'கயலோநுமகணக ளென்று' என்றதனுல ஆழவாரது ஞானததைக் கொண டாடுதலும, 'களிறுவினவி' என்றதனுல இவ்வுலகததுபபொருளகளாகிய காடுகளிலே ஓடுகிற தமது இநதிரியமாகிய மதயானையைத தமது அறிவாகிய தோட்டியால வசபபடுததததொடஙகுதலும,'நிறறீா' என்றதனுல ஆழவா ரதுஞானததினிடததிலுளள ஈடுபாட்டால இதனைவிட்டு வெளிசசெலலமாட் டாமையுந தோன்றும. 'அயலோா அறியிலும' - ஆழவாரது ஞானததில ஈடுபடாது தமஞானததாலே இநதிரியநிககிரகம பணணததொடஙகுவாா (அறியததகாத மறைபொருளான இதனை) அறிநதாலும, ஈது என்ன வாா த்தை - உபாயாநதரஙகளைபபறறுத பிரபநநரான ஆழவாரது ஞானததைக்

---

* பிஙகலநதை - ஒருசொறபலபொருளவகை.

கொண்டாடுதலும், இந்திரியங்களைத் தம்முயற்சியால் அடக்கத்தொடங்கி உபாயாந்தரத்திற் பற்றுகையும் என்னும் இரண்டுமே ஒருத்தர்க்குப் பொருத்தமல்ல வென்று நினைப்பரே யென்றபடி. கடல்கவர்ந்தபுயலோடுலாங்கொண்டல்வண்ணன் - குணபூர்த்தியாலும் பக்ஷபாதமில்லாமற் கைம்மாறு கருதாது உதவுதலாலும் எல்லாவுயிர்களுக்கும் இன்றியமையாமையாலும் அழகியவடிவத்தாலும் மேகம்போன்ற எம்பெருமானது, புனவேங்கடத்து அடியவர்க்கெளியனா யெழுந்தருளியிருக்கும் திருப்பதியான திருமலையாகிய போகஸ்தானத்தில், எம்மோடும் பயலோ இலீர் - (வேறுஉபாயந்தேடாது பிரபந்நரான) எங்களோடு (உபாயாந்தரங்களிலும் நாட்டமுடைய உங்களுக்கு) ஒக்க இன்பமநுபவித்தல் இல்லை யென்றபடி. கொல்லை காக்கின்ற நாளும் பலபல - இந்தப்போகஸ்தானத்தைப் பலநாளாக நாங்கள் பாதுகாத்துக் கொண்டு அவ்வக்காலத்துக்குத்தக்கபடி இடையறாத இன்பம் நுகர்ந்துவருகின்றேம் என்றபடி 'கொல்லைகாக்கின்ற' என்றதனால், பிரபந்நருடைய சோக்கையே இந்தப்போகஸ்தானத்துக்குப் பாதுகாவ லென்றவாறு.

'இயற்கையிலேகலந்துபிரிந்த தலைமகன், இரண்டாங்கூட்டத்துக்காகப் புனத்திலேவந்து கிட்டக்கடவதாகக் குறிவரவிட்டுப்போய்க் காலாதிக்ரமம் பிறந்து பின்பு அங்கேசென்று கிட்டினவன், இவர்களைக்கண்டு கலங்கி அனங்கத்பாஷணம்பண்ண, அவர்களும் அதனைக்கொண்டு, இவர்வருவதாகப் போனபடிக்கும் வந்தபடிக்கும் இப்போது ஆற்றாமைதோற்றப் பேசுகிற பேச்சுக்கும் ஒருசேர்த்திகண்டிலோ மென்று சிரித்துக்கொண்டாடுகிறார்கள். இவன்தான் விரஹத்தையாலே, என்றும் ஆனைவேட்டைக்குப்போய்ப்பழக்கத்தாலே, ஆனைவேட்டையை வினவிக்கொண்டு செல்லக்கடவதாக நினைக்கின்றான் பிடியையிழந்ததொரு களிறு தன்ஆற்றாமையாலே அமணனைப்பட்டுத்திரியுமாபோலே இவர்களையிழந்து தான் ஆற்றாமையோடே திரிகிறபடியை அந்யாபதேசத்தாலே ஆவிஷ்கரிக்கிறான்' என்ற பெரியவாச்சான் பிள்ளைவியாக்கியானம் அறியத்தக்கது

கயலோ, ஓ - வினா. உலாம் - உலாவும் என்பதன் விகாரம் பயலோ, ஓ - தெரிநிலை. (௧௫)

## தலைவனைப்பிரிந்த தலைவி பாங்கியைநோக்கி இருளவியந்துரைத்தல்

௧௬ பலபலவூழிகளாயிடுமன்றியோர்நாழிகையைப்
பலபலகூறிட்டகூறாயிடுங்கண்ணன்விண்ணனையாய்
பலபலநாளன்பர்கூடிலுநீங்கிலும்யாமெலிதும்
பலபலசூழலுடைத்தம்மவாழியிப்பாயிருளே.

(இ - ள்.) கண்ணன் விண் அனையாய் - கண்ணபிரானது பரமபதம் போல மிகப்பிரியமானவளே! பல பல ஊழிகள் ஆயிடும் - (தலைவரைப்பிரிந்தநிலையில் இருட்பொழுது) மிகப்பலகற்பங்களாகாநிற்கும், அன்றி - அதுவல்லாமல், ஓர் நாழிகையை பல பல கூறு இட்ட கூறு ஆயிடும் - (தலைவரைக்கூடியநிலையில் இந்தப்பொழுதுதானே) ஒருநாழிகையைப் பலபலபகுப்புகளாக்கிய கூறுகளில் ஒன்றுகாநிற்கும், பல பல நாள் அன்பர் கூடிலும் நீங்கிலும் யாம் மெலிதும் - பல பல நாள் காதலர் கூடிநின்றாலும் (காலம் மிகச்சுருங்குதலால்) யாம் வருந்துகின்றேம், பலபலநாள் காதலர் நீங்கிநின்றாலும் (காலம்மிகவளர்தலால்) யாம் மிகவருந்துகிறேம், (ஆதலால்), இ பாய இருள் - இந்தப் பரந்த இருட்பொழுது, பல பல சூழல் உடைத்து - சிறுமைக்கும் பலஉபாயமுடையதாய்ப் பெருமைக்கும் பலஉபாயமுடையதாயிராநின்றது, அம்ம வாழி - (எந்தநிலையிலும் வருத்துகிற இவ்விருட்பொழுது) அந்தோ வாழ்ந்திடுக! (எ - று.)

கலந்துபிரிந்ததலைமகனது பிரிவை ஆற்றாத தலைமகள் அவனில்லாமல் இரவுகழித்தற்கரியதாயிருக்கிறபடியைத் தோழிக்குச் சொன்னது இது. புணர்ந்துநீங்கின தலைமகன் சிறைப்புறத்தானாதல் கண்டு தலைமகள் தோழியைநோக்கிக்கூறுகிற வியாஜத்தால் தனக்குஉண்டான பிரிவாற்றாமையை அவனுக்குஉணர்த்துகிறாளெனக் கொள்வர். இதனால், என்றும் பிரிதலில்லாத கலவியிலே தனக்குக்கருத்தென்னுமிடந் தோற்றும். அன்றி, புணர்ச்சிநிகழ்ந்தபின் அந்நிகழ்ச்சியின் தன்மையை வினவிய பாங்கிக்குத் தலைவி 'பிரியிற் காலம் நெடுகுதல்போலக் கூடிற் காலம் குறுகும்படி என்னே!' என்று கலவிநிலையிற் காலங் கழிவதுதெரியாதுகழிந்த இன்பச்சிறப்பைக் கூறினாளாகவுமாம். இதனைத் தோழிவார்த்தையென்னவும் இடமுண்டென்பர். *"கொடியார் கொடுமையிற் றாங்கொடிய இந்நாள், நெடிய கழியு மிரா" என்ற திருக்குறளையும், 'காதலரொடு நாம் இன்புற்ற முன்னாள்களில் குறியவாய், அவர்பிரிவாற்றேமாகின்ற இந்நாள்களிலே நெடியவாய்ச் செல்கின்ற கங்குல்கள்' என்ற அதன் உரையையும் இங்கு அறிக.

பலபலவூழிகள் - பல அவாந்தரகல்பத்தையுடைத்தான மகாகல்பங்கள். நாழிகையைப் பலபலகூறிடுதல் - கலை காஷ்டை நிமிஷம் முதலியவற்றால் இனிக் கூறிடவொண்ணாதென்னும்படி பங்கிடுதல். 'கூடிலும் பலபலவூழிகள் ஓர்நாழிகையைப் பலபலகூறிட்ட கூறாயிடும், அன்றி, நீங்கிலும் ஓர்நாழிகையைப் பலபலகூறிட்ட கூறு பலபலவூழிகளாயிடும்' என்ற வேறொரு அரும்பதவாக்கியம் அறியத்தக்கது. அன்பர் - பிரிந்தநிலையிலும் அன்புடையாரென்னும்படி யிருந்தது, கூடியநிலையில் தலைமகன் காட்டிய அன்பெனக். 'அன்பர் என்று, பிரிந்துதரித்திருக்கப்போகாமையைச் சொல்லுகிறது' என்பது, அப்பிள்ளையுரை. 'அம்ம' என்றதனால், வியப்பும் வருத்தமுந் தோன்றும். வாழி - மிக்கவெறுப்பினால் வைதபடி, எதிர்மறையிலக்கணை.

பாகவதரைக் கூடிய நிலையில் அதிஅற்பமும் அவர்களைப் பிரிந்த நிலையில் அதிமகத்தும் ஆகிற காலத்தினால் இருவகையிலும் தாம்படுகிற தளர்ச்சியை ஆழ்வார் தமது அன்பர்க்குக் கூறுதல், உள்ளுறைபொருள். 'இப்பாயிருள்' என்றதனால், மோகாந்தகாரத்தைச்செய்வதான காலமென்றபடி. கண்ணன்விண்ணனையாய் - காலபரிணாமமில்லாத பரமபதம்போலுள்ளீர் நீங்களெனக்கொண்டாடியபடி. 'அம்மவாழி' என்றது, தாம்நினைத்தவடிவுகொள்ளவல்லகாலத்தின் தன்மையை வியந்து நொந்தபடி. மற்றவை, வெளிப்படை.

நாழிகை - நாடிகா என்னும் வடமொழியின் திரிபு. நீங்கில் ஊழியாயிடும், கூடில் நாழிகைக்கூறாயிடும் என்று மாறிச்சென்றியைதலால், **எதிர்நிரனிறைப்பொருள்கோள்**, மொழிமாற்றுநிரனிறை, மயக்கநிரனிறை யென்பதும் இது. மெலிதும், 'தும்' விகுதி - காலமுணர்த்தாது தன்மையுணர்த்திற்று. சூழல் - சூழ்ச்சி, விரகு. அம்ம - இடைச்சொல். பாயிருள் - வினைத்தொகை.

## தலைவி கடலைநோக்கித் தேர்வழிதூர லென்றல்.

௧௭. இருள்விரிந்தாலன்னமாநீர்த்திரைகொண்டுவாழியரோ
விருள்பிரிந்தாரன்பர்தேர்வழிதூரலரவணைமே
லிருள்விரிநீலக்கருஞாயிறுசுடர்கால்வதுபோ
லிருள்விரிசோதிப்பெருமானுறையுமெறிகடலே.

(இ - ள்.) இருள் விரி - இருளை வெளியுமிழ்கிற, நீலம் - நீலரத்தினம் போன்ற, கரு - கருமைநிறமுடைய, ஞாயிறு - சூரியமண்டலமொன்று, சுடர் கால்வது போல - ஒளிவீசுவதுபோல, இருள் விரி சோதி பெருமான் - கரு

* திருக்குறள் - படர்மெலிந்திரங்கல் - ௬.

மைநிறம் மிக்க ஒளியையுடைய திருமால், அர அணை மேல் - ஆதிசேஷனாகியசயநத்தின்மேல், உறையும்-நித்தியவாசஞ்செய்யப்பெற்ற, எறி கடலே- அலை வீசுகிற கடலே! வாழி - வாழ்ந்திடுக, இருள் விரிந்தால் அன்ன - இருள் பரம்பினாற்போன்ற, மா நீர் திரை கொண்டு - கறுத்த நீரையுடைய அலைகளால், இருள் பிரிந்தார் அன்பர் தேர் வழி தூரல் - இருளிலே பிரிந்துசென்ற தலைவரது தேர் சென்ற வழியை அழியாதொழிவையாக, (எ - று.)

களவினால் தலைமகளைப் புணர்ந்துநின்ற தலைமகன் அதனால் ஊரெங்கும் பழிபரவுதலை அறிந்து அப்பழிதூற்றலடங்குமாறு அவளைச் சிலநாள் பிரிந்திருக்கக்கருதி அதனைத் தலைமகளுக்குக் கூறுமளவில் தான்பிரிதலை அவள் அறிந்தால் வருந்துவளென்று அவளறியாதபடியும் ஊரார்அறியாதபடியும் அவளுறங்குகின்றபொழுது தான் போகமாட்டாமையாலும் இருளிலே பிரிந்து செல்ல, பின்பு அப்பிரிவையறிந்து ஆற்றாதுவருந்துகின்ற தலைமகள், அவனதுதேர்ச்சக்கரம்சென்றசுவட்டை நோக்கி அவன்மீண்டுவருமளவும் அதனையே தனதுஉயிர்க்குப் பற்றுக்கோடாகப் பாவித்துப் பார்த்துக்கொண்டிருக்கையில், அங்ஙனம் பிரிந்திருந்து இரங்குமிடம் கடற்கரையாகிய நெய்தல்நிலமாதலாலே, அத்தேர்ச்சுவட்டைக் கடலின்அலை வீசிவந்து அழிக்கப்புக, அழித்திடாதே யென்று அதனை வணங்கி வேண்டியது இது. இத்துறை, திருக்கோவையாரில் 'தேர்வழிநோக்கிக் கடலொடுகூறல்' என்றும், தணிகைப்புராணத்தில் 'ஆற்றுவதெனத் தேராற்றினைப் போற்றல்' என்றுங் கூறப்படும். *"உள்ளுருகி யுரோமஞ்சிலிர்ப்ப வுடையவனுட், கொள்ளுமவரி லொர்கூட்டந் தந்தான் குனிக்கும் புலியூர், விள்ளும் பரிசு சென்றார் வியன்றேர்வழி தூரல் கண்டாய், புள்ளுந் திரையும் பொரச் சங்க மார்க்கும் பொருகடலே" என்ற திருக்கோவையாரையும், "மீன்றோய் துறைவர் மீளுமளவும், மான்றேர் வழியை யழியே லென்றது" என்ற அதன்கொளுவையும், 'இனி அவர்வருகின்றாரல்லர், எமதுயிர்க்குப் பற்றுக்கோடு இனி இதுவே இதனை நீ அழியாதொழிவாய் என அவன்சென்ற தேர்வழி நோக்கிக் கடலொடுகூறுகிற்றல்' என்ற அதனுரையையுங் காண்க.

மாநீர் - மிக்கநீரென்றுமாம். இருள்பிரிந்தார் அன்பர் - உடன்சென்ற அயோத்திநகரத்துச்சனங்கள் அறியவொண்ணாதபடி இராமபிரான் இரவிலே தேரேறிச்சென்றாற்போலச் சென்றார் என்க, அதற்கும் இதற்கு முள்ளவாசி, தேர்க்காலவழியை மறைத்துப்போகாமல் தெரியும்படி போதல். மூன்றாமடி - எம்பெருமானது திருமேனியின் மிக்கவொளியும் கரியதிருநிறமும் பற்றி வந்த அபூதோபமை. இல்பொருளுவமை கூறியதனால், உலகத்திலுள்ளபொருள்களுள் ஒன்றும் இப்புருஷோத்தமனுக்கு ஒப்பாகா தென்று உணரப்படும் †"ஓர்கருநாயிறு, அந்தமில்லாக் கதிர்பரப்பி யலர்ந்ததொக்கும் அம்மான்" என்பர் பின்பும், ‡"கருநாயிறுபோல்பவர்," §"கண்டாமரை போற் கருஞாயிறென" என்பர் கம்பரும். வாழி - தேர்வழிதூராமல் தனக்குஉதவும்பொருட்டு வாழ்த்தினாள் பின்இரண்டடிகளால், உனதுதலைவனை பெருமான் எப்பொழுதும் உன்னிடத்துப்பிரியாது வாசம்பண்ணுதலால் பிரிவுத்துயரறியாது களித்துக்கிளர்ந்துள்ளாய் நீ யென்றபடி. இருள்விரி, நீலம், கரு என்ற மூன்றையும் ஒருபொருட்பன்மொழியாகக் கொள்ளலுமாம் கருஞாயிறு நீலச்சுடர் கால்வதுபோல என இயைத்தலுமாம். வாக்கியத்திடையில் 'வாழியரோ' என்றது, திரைக்கடலாகையாலே காரியஞ்சொல

---

* திருக்கோவையார் - ௧௮௬.

† திருவாய்மொழி - எழுபத்தைந்தாந்திருப்பதிகம் - எ.

‡ கம்பராமாயணம் - பாலகாண்டம் - கடிமணப்படலம் - ௪.

§ ,, ஆரணியகாண்டம்-சரபங்கர்பிறப்புநீங்குபடலம்-௨௪

ளுமளவுங் கேளாதே அழிக்கும்படியைக் கண்டு நடுவிலே சரணம்புக்கவாறு. திரைகொண்டு - அலைகளைக் கைகளாகக் கருதியபடி. பகலிற் பிரிந்துசென்றாராகில் அவர் ஆற்றாமையால் தளர்ந்துசெல்லும்நிலையைக் கருதியாயினும் உயிர்தரிக்கலாம், அங்ஙனமில்லாதபடி இருளிற் செல்லுகையால், இத்தோக்காற்சுவட்டையன்றி வேறு தஞ்சம் இல்லை யென்றாள். இருள்பிரிந்தார் என்று, சேர்தற்கு உரிய காலத்திலே பிரிந்துபோனமையைக் கூறியதுமாம். 'பகல் பிரிந்துபோனாராகில் ஆற்றாமையாலே நடக்கமாட்டாதொழிகிறபடியையும், அவர்முகத்திலுண்டான குளிர்த்தியையும் ஸ்மிதத்தையுங் கண்டு தரித்திருக்கலாயத்து, அவர்தாமும் பகல்போகில் இவளைக்கண்டுவைத்துக் காலநடைதாராதென்னும்படி இருளிலே போனார். எங்ஙனும் போனாருஞ் சேருங்காலத்திலே போனார் பதார்த்தங்களாலே ஆறியிருக்கவொண்ணாத காலத்திலே போனார் ஸம்போககாலத்திலே போனார். நான்செய்யவேண்டுவதென்னென்றுங்கேட்க, தேர் வழி தூரல் - உள்ளதெல்லாத்தையுங் கொடுத்து உஞ்சவ்ருத்திபண்ணி ஜீவிப்பாரைப்போலே அவரைப்போகவிட்டு வழியைப்பார்த்துக்கிடந்தோம் இதனையழியாதேகொள் என்கிறாள்' என்று பெரியவாச்சான்பிள்ளைவியாக்கியானம் அறியத்தக்கது.

அன்பரான பாகவதரைப் பிரிந்து வருந்துகிற நிலையில் அவர்கள்பக்கல் தமது மநோரதத்தை இடைவிடாதுசெலுத்தி அதனாலேனும் ஒருவாறு ஆறியிருக்கிற ஆழ்வார் அம்மநோரதப்போக்கையிடையிற்குலையாதொழியவேணுமென்று ஸம்ஸாரமாகிற கடலைநோக்கிப் பிரார்த்தித்துக்கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். ஸம்ஸாரத்தை 'அலைவீசுங்கடல்' என்றது, பலதுன்பங்களை மேன்மேல்தந்து அகப்பட்டவராழ்ந்திடும்படி பரவுந்தன்மையதாதலாலும், அளத்தற்கரியபரப்புடைமையாலுமென்க. பின் இரண்டடி - சமுசாரம் எம்பெருமானது லீலாவிபூதி யென்பதைக் குறிக்கும், எம்பெருமானடியார்கள்பக்கல் ஈடுபட்ட தமக்குத் தீங்குசெய்திடாமைப்பொருட்டு, சமுசாரத்துக்கு உள்ள பகவத்சம்பந்தத்தை யெடுத்துக்காட்டி உறவுகொண்டாடியபடி. இருள்விரிந்தாலன்ன மாநீர் திரைகொண்டு - மோகாந்தகாரப்பெருக்கை உண்டுபண்ணுகிற பலசமுசாரக்கவலைகளாகிற அலைகளால், இருள்பிரிந்தார் அன்பர் தேர்வழி தூரல் - இருள்தருமாஞாலமான இவ்வுலகத்திலே எம்மைவிட்டுப்பிரிந்துசென்ற ஆப்தபந்துக்களான பாகவதவிஷயத்தில் யான்செலுத்துகிற மநோரதநெறியைக் குலைத்திடாதே என்று வேண்டியபடி. வாழி - தமக்கு இத்தீங்குசெய்யாமல் உதவும்பொருட்டு வாழ்த்தினார். பின்புள்ளாரும் மநோரதத்தை *"உள்ளமான தேர்" என்பது காண்க.

வாழியரோ - கீழ் இரண்டாம்பாசுரத்திற் காண்க. தூரல் - எதிர்மறையேவலொருமை. பெருமான் - பெருமையையுடையவன்.

இப்பாட்டில் அடிதோறும் எதுகையில் 'இருள்' என்ற ஒருசொல்லே வந்தது, யமகமாகாது, பொருள்வேறுபாடு இன்மையால்; முன்பின்பாடல்களுக்கும் இதுகொள்க. (௧௭)

## கார்காலங்கண்டழிந்த தலைவியின் ஆற்றாமை கண்டு பாங்கி இரங்கல்.

**௧௮. கடல்கொண்டெழுந்தது வானம் அவ்வானத்தையன்றிச்**
**சென்று, கடல்கொண்டொழிந்தவதனாலிது கண்ணன் மண்ணும்**
**விண்ணுங், கடல்கொண்டெழுந்தவக்காலங்கொலோ புயற்காலங்**
**கொலோ, கடல்கொண்ட கண்ணீர் அருவிசெய்யாநிற்குங்காரிகையே.**

---

* வில்லிபுத்தூரார்பாரதம் - பதினேழாம்போர்ச்சருக்கம் - ௫௧.

(இ - ள்.) வானம் கடல் கொண்டு எழுந்தது - ஆகாயம் கடலைக்கவர்ந்துகொண்டு கிளம்பியதென்னலாம்; அன்றி - அல்லாமல், கடல் அவ்வானத்தைச் சென்று கொண்டு ஒழிந்த அதனால் - அக்கடல்தான் ஆகாயத்தைப் போய்க் கவர்ந்துகொண்டுவிட்ட தென்னலாம்படியாயுள்ளதனால், இது - இந்நிலை, கண்ணன் மண்ணும் விண்ணும் கடல் கொண்டு எழுந்த அக்காலம் கொல் ஓ - திருமாலினது உடைமையான மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் பிரளயசமுத்திரம் தன்னுள் ஆக்கிக்கொண்டு மேற்கிளர்ந்த அந்தக் கற்பாந்தகாலந்தானோ? புயல் காலம் கொல் ஓ - (அன்றி) மழைக்காலந்தானோ? (இக்காலத்து), காரிகை - அழகுமயமான இவள், கடல் கொண்ட கண் நீர் அருவி செய்யா நிற்கும் - கடலளவினதான கண்ணீர்வெள்ளத்தைச் சொரிந்து நிற்கின்றாள், (எ-று.)

கார்காலத்திலே மீண்டுவருவே னென்று காலங்குறித்துப் பிரிந்துசென்ற தலைமகன் அக்காலம்வந்தும் தான்வாராததால், காலத்தைநோக்கித் தலைமகள் ஆற்றாது வருந்த, அதுகண்டு பாங்கி இரங்கிக்கூறியது இது. கீழ் ஏழாம்பாட்டைப்போல இதனையும் காலமயக்குத்துறை யென்னலா மென்பது, அப்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை நம்பிள்ளை இவர்கள் கொள்கை, வானங் கடலைக்கொண்டதோ கடல் வானத்தைக்கொண்டதோ என்று விகற்பிக்கலாம்படியுள்ள இது, எல்லாப்பொருள்களையும் முடிக்கவந்த பிரளயகாலமோ? நம்மை முடித்தற்காகவே வந்த கார்காலமோ? என்று இருவகையிலும் அதனது வருத்தந்தருந்தன்மையையே குறித்தலால், தலைவியை ஆற்றுதற்கு உறுப்பான காலமயக்கென்றல் இனிதன்றென்பது, வாதிகேசரி அழகியமணவாளசீயர் கருத்து. அதுவே இங்குக் கொள்ளப்பட்டது, பரகால ஸ்வாமிக்கு இரண்டுவகையும் இருவுள்ளம்

'கடல்கொண்ட' என்றது, கண்ணீருக்கு அடைமொழி, கண்ணுக்கு அடைமொழியாக்கின், கடல்போன்ற கண்ணென்னப் பொருள்படும். கொண்ட - உவமவுருபு, பரப்பில் உவமை: கடலைவென்றுகொண்ட கண்ணென்னவுமாம். 'காரிகைக்கு' என்ற பாடத்துக்கு - இவளது கண்ணீர் அருவிசெய்யாநின்றது என உருபுமயக்கமாக்கி யுரைக்க. காரிகை - அழகு, உடையவளுக்கு, ஆகுபெயர்.

சேர்தற்குரியகாலத்தில் எம்பெருமானை அல்லது பாகவதரைச் சேரப்பெறாது பிரிந்துவருந்துகிற ஆழ்வாரது ஆற்றாமையைக் கண்டு பொறுக்கமாட்டாத அன்பர்கள் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். வானம் கடல் கொண்டு எழுந்தது - பரமாகாசமானது ஸம்ஸாரஸாகரத்தை உண்டொழித்த தென்னும்படியும், அன்றி - அல்லாமல், கடல் அவ்வானத்தைச் சென்று கொண்டு ஒழிந்த அதனால் - ஸம்ஸாரஸாகரந்தான் பரமாகாசத்தோடு ஒற்றுமைப்பட்டதென்னலாம்படியும் உள்ளதனால், இது, கண்ணன் மண்ணும் விண்ணும் கடல் கொண்டு எழுந்த அக்காலம் கொல் ஓ - எம்பெருமானது லீலாவிபூதியும் நித்யவிபூதியு மாகிய இரண்டையும் ஒழிக்கும்படியான ஒருகாலம் வந்திட்டதோ? அல்லது, புயல் காலம் கொல் ஓ - இவருக்கு விரைவையுண்டாக்கி ஆற்றாமையைச் செய்கிற காலவிசேஷமோ? காரிகை கடல் கொண்ட கண் நீர் அருவி செய்யாநிற்கும் - (பிரிவாற்றாமையால்) இவரது எல்லையில்லாத ஞானம் கலக்கமடைகின்றது என்று பொருள் கண்டுகொள்க. இவரது தளர்ச்சியை நோக்கித் தமக்குஉண்டான மனக்கலக்கத்தால், இவரது பிரிவாற்றாமைக்காலத்தை, அழிவில்லாத நித்யவிபூதியையுமுட்பட எல்லாப் பொருள்களையும் அழிக்குங்காலமாகச் சங்கித்தன ரென்க

செய்யா நிற்கும் என்பதை, செய்து நிற்குமென இரண்டுசொல்லாகக் கொள்ளுதல் எளியவழி, இதில், ஆநின்று என்னும் நிகழ்காலஇடைநிலை விகா

ரப்பட்டதென்றலும் ஒன்று அன்றி - எதிர்மறைக்குறிப்புவினையெச்சம்; இனி, உடன்பாட்டுத்தெரிநிலைவினையெச்சமாக, கோபித்து என்றும் பொருள் கொள்ளலாம் அன்றுதல - கோபித்தலாதலை *"அன்றிய வாணன்" என்னு மிடத்துங் காண்க.'நீரை நிசசேஷமாக வானம் பருகிக்கொண்டுபோகக் கண்டு அதனைச் சிறித தொடராநதுசென்று கடலானது மீட்டுக்கொண்டது அவ வாகாசத்தை' என்ற அடியிளையுரையைக் காண்க. கீழ் ஏழாமபாட்டில் 'எருதுகள் போர்செய்கின்றன காண் இது' என்று வேறொன்றுகூறிக் கால தனத மறைத்தாறபோல, இங்கு 'கடலுக்கும் வானத்துக்கும் நடபப தொரு பெருமபோர்காண் இது' என்று தோழி காலத்தைமறைதது உரை த்ததாகக் கொளளுதல், காலமயக்கெனபாாகருதது, இவாக்கு, ஈற்றடி - தலைமகளைநோக்கிய விளியாதலுமாம் அப்பொழுது, 'செயயாநிற்கும்' என் பது - பெயரெச்சம். அவவுரைக்கு, நான்காமஅடியும் - இது மழைவெள்ள மன்று,உன்கண்ணீாவெள்ளமே என்று காலத்தைமறைத்துஉரைத்தவாறும்

## செவிலி பழிக்கு இரங்கல்.

கக. காரிகையாா்நிறைகாப்பவாயாரெனறுகாா்கொண்டினனே
மாரிகையேறியறைமிடுங்காலத்துமவாழியரோ
சாரிகைப்புளளா்நதண்ணநதுழாயிறைகூயருளாா
சேரிகையேறுமபழியாயவினைநதெனசினமொழிக்கே.

(இ - ள) 'காரிகையாா - மகளிருள், நிறை காப்பவா - (எமமுன) நிறையை அழியாமற பாதுகாததுக்கொளளவலலவா, யாா - யாவா உள ளாா?' என்று - என்றுகருதிசசெருக்கி, மாரி - மேகங்கள், கார் கொண்டு - கருமைநிறங்கொண்டு, இனனே - இவவாறு, கை ஏறி - ஒழுங்காக (வானத் தின்மீது) ஏறி நின்று, அறைமிடும் காலத்தும் - அறைகூவுகிறகாலததிலும், சாரிகை புளளா- விரைநதநடையையுடைய கருடபபறவையையுடைய இவள தலைவா, அம தணணம துழாய - அழகிய குளிாநத (தமது) திருததுழாயை, கூய இறை அருளாா - (இவளை) அழைதது(இவளுக்கு)ச சிறிதுங்கொடுத்தரு ளுகின்றாரிலலை, (ஆகவே), என சில மொழிக்கு - சிலபேசசுக்களையுடைய என மகளான இவளுக்கு, சேரி கை ஏறும பழி ஆய வினைநதது - (அவாபக்கல கொணட காதலதான்) இவ்வூாமுழுவதும்பரவுமபழியாயப பலிததது, வாழி யரோ - (இவள இததுனபமநீங்கி) வாழநதிடுக, (எ - று.)

காலங்குறிததுசசென்ற தலைமகன் அக்காாகாலம் வநதவளவிலும் தான் வநது அருளாமையால ஆற்றாத தலைவிக்கு நிகழும பழிக்குச செவிலி அஞ்சிய துறை இது. 'என்சின்மொழிக்கு' என்று தனது உடைமையாதல தோன் றக் கூறினமையால, இது,தாயவாாததையேயாம,தோழிவாாததையாகாது. பெருமபாலும தாயவாாததை 'என்மகள' என்ற வாயபாடு தோன்றவும், தோழிவாாததை அவ்வாயபாடுதோன்றாமலும வரும, இது, இவ்விருவா வாாததைக்கும எளிதில வேறுபாடறியததக்க நுட்பங்களுள ஒன்றும. இததன்மை சிறுபானமை பிறழதலும உணடு இப்பாட்டைத தாயவாா ததையென்பது மற்றையெல்லாவுரைகாராகளது திருவுள்ள மாதலால, அழ கியமணவாளசீயாஒருவாமாததிரம 'பாங்கி பழிக்கிரங்கின பாசுரம்' என றமை கொளளப்படவிலலை, அன்றியும், மேகமுழக்கத்தைக் கேட்டுத் தலை மகள கலங்க, அக்கலக்கத்தைக் கணடு தேற்றியாற்றுவிக்கவொண்ணாமை யால தோழியுங் கலங்க, இவ்வளவிலே அந்நிலையையறிநத தாயாா அவாக்க ளுக்கு மங்கலவாழத்துப்பாடிக் காப்புஅமைததலோடு இங்ஙனம் இரங்கிக

* பெரியதிருமொழி - மூன்றாந்திருப்பதிகம் - அ.

கூறினளென்பர். இப்படிப்பட்டதைச் செவிலித்தாய்வார்த்தை யென்றலே மரபு, நற்றாய்வார்த்தையென்றல் மரபன்று தொல்காப்பியத்தில் *"தாயக் கும் வரையார் உணர்வுடம்படினே" என்ற சூத்திரத்தில் 'தாயக்கும் என்றார், இவட்கு அத்துணைப்பயின்றுவாரார் என்றற்கு, அது, நற்றாய் இல்லறம் நிகழ்த்துங்கருத்து வேறுஉடைமையின், உற்றுநோக்கான் செவிலியே தலைவியை உற்றுநோக்கியொழுகுவாளாதலின் இலக்கணமுண்மையின், இலக்கியம் வந்துழிக் காண்க' என்றும், †"ஆய்பெருஞ் சிறப்பி னருமறை கிளத்தலின், தாயெனப் படுவோள் செவிலி யாகும்" என்ற சூத்திரத்தில் 'எனவே, ஈன்றதாயினும் களவின்கட்சிறந்தாள் இவள் என்றார் கற்பிற்கு இருவரும் ஒப்பாராயிற்று; செவிலிசிறந்தமை சான்றோர்செய்யுளுட் பலருங் கூறிய வாறு காண்க' என்றும் நச்சினார்க்கினியர் உரைத்தது காண்க.

காரிகையார் - அழகையே தலைமையாகவுடைய மெல்லியலாரென்றபடி, மகளிர்க்கு வடமொழியிலே 'அபலை' என்று ஒரு பெயர். நிறையாவது - மனத்தில் அடக்கத்தக்கவற்றை வாய்விடாமல் அடக்குதல், ‡"நிறையெனப்படுவது மறைபிறரறியாமை" என்றதையும், 'நிறையென்று சொல்லப்படுவது - மறைந்ததொருகாரியம் பிறரறியாமல் ஒழுகுதல்' என்ற அதனுரையையுங் காண்க. இனி, நிறை - நாணம் முதலிய பெண்மைக்குணநிறைவுமாம். யார் என்ற வினா, எவருமிலரென எதிர்மறைப்பொருள் குறிக்கும். இனி, 'காரிகையார் நிறை காப்பவர் யார்' என்பதற்கு - மகளிரது நிறையை அழியாது பாதுகாக்கவல்லார் ஆர்? என்றும் பொருள் கொள்ளலாம், தோழி செவிலி முதலியோராலும் அது காத்தற்கு அரிது என்றபடி. 'காரிகையார்நிறைகாப்பவர் யார்' என்றது, அர்த்தாந்தரந்யாஸம். கார் - கருமை யென்னும் பண்பின் விகாரம். இனி, 'கார்கொண்டு' என்பதற்கு - கோபங்கொண்டு என்றும் பொருள் கொள்ளலாம், §"கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப்பொருள" ஆதலால். கார் மாரிகொண்டு கையேறி என மாற்றி, மேகங்கள் மழையைக் கொண்டு அணிந்து ஏறி என்றும் உரைக்கலாம். கையேறுதல் - படையணி வகுத்தாற்போல வரிசைப்பட்டு நிற்றல். அறைகூவுதல் - வலியப்போருக்கு அழைத்தல். முழங்குதலையே, போருக்குக்கூவுமொலியாகக் கற்பித்தது. காற்றுக்கு ஏற்றபடி மிகவிரைந்துவருவதான மேகத்தின் வருகைக்கு ஏற்பத் தலைமகன் நடந்துவரவல்லனோ வெனில், மிக விரைந்த நடையையுடைய கருடனை வாகனமாகவுடையவ ராதலால், இவர்க்கு எவ்வளவுதூரத்திலிருந்தாலும் வரவேண்டுமென்றால் முடியாமையில்லை யென்பது தோன்ற, 'சாரிகைப் புள்ளர்' என்றது. சாரிகை - வட்டமிட்டநடையுமாம். துழாய் அருளார் - இவளிடம்பமடையுமாறு கலந்தாராயினும் இவள் ஆறியிருந்து உய்ந்து வாழ்தற்பொருட்டுத் தமதுசம்பந்தம்பெற்ற திருத்துழாயைத்தானும் தருகின்றிலரென்றவாறு. உயிர்தருமூலிகைபோலத் திருத்துழாய் போன வுயிரையும் மீட்கவல்லதென்பது தோன்ற, அதனை 'தண்ணந்துழாய்' என விசேடித்துக்கூறினது. 'கூயருளார்' என்றதனால், திருத்துழாய்தாராவிடினும் அன்போடு அழைத்தல்தானும் அரிதாயிருந்தது என்றபடி. 'இறை கூயருளார்' என்றதனால் காதலராக இதுசெய்யாவிடினும் தலைவராகவாயினும் இதுசெய்யலாகாதோ? என்பதும் தோன்றுமென்பர், இதற்கு, இறை - தலைவர் தானேவந்து கொடுக்கப் பிரியமில்லையாயினும் இவளைத் தாமுள்ள விடத்திலே அழைப்பித்தாயினுந் தரலாமே: அதுவுஞ்செய்கின்றிலர் என்ப

* தொல்காப்பியம் - பொருளதிகாரம் - களவியல் - உரு.
† " " " ௩௰.
‡ கலித்தொகை - நெய்தற்கலி - ௧௬
§ தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - உரிச்சொல்லியல் - எ௪

தும் 'கூயருளார்' என்பதனால் தோன்றும். அருளார் - தமது காதலியென்று சம்பந்தம்பற்றி உளதாகும் அன்பு இல்லாவிடினும் தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்களின்மேலுங் கொள்ளும் அருளும் இவள்பக்கல் இன்றுவதே! என்க. ஊரிற்சிறுபான்மையன்று, ஊர்முழுவதும் என்பது, 'சேரி கையேறும்' என்றதனால் விளங்கும். 'சேரி கையேறும்' என்பதற்கு - ஊரார் கையெடுத்துக் கூறத்தக்க என்றும் உரைப்பர். பழி - இந்நிலையிலும் வந்திலனென்றும், இவள் மேல்விழுந்தாசைப்படுகின்றாளென்றும், அவனிடத்தீடுபட்ட இவளுக்கு இவ்வளவும் வேணுமென்றும், மிக்க இளமையிலே இவள் இங்ஙனமாயினளென்றும், இப்படியும் ஒருதுடிப்புண்டோ என்றும் இவை முதலாகப் பலபடியாலும் தத்தமக்குத் தோன்றினவாறெல்லாம் பேசுவன. சின்மொழி - மிதமாகப்பேசுபவள், குளிர்ந்தபேச்சுடையவளெனினுமாம். செயல்முழுவதும் அற்றுச் சில்சொல்மாத்திரமே மிச்சமாகவுள்ளவளென்பர், 'சின்மொழி' என்றாளென்பர்.

எம்பெருமானை அனுபவித்தற்கு உரிய காலத்தை நோக்கி ஈடுபட்ட ஆழ்வார்க்கு அப்பெருமான் விரைய அருள்செய்யாது விளம்பிக்க, அதனால் அவர் படும்பாட்டைக் கண்டு அறிவுடையார் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். காரிகையார்நிறைகாப்பவர்யார் என்று - மகளிர்போலப் பரதந்திரரான இவரது அறிவிருக்குமிலையை அழியாது காத்திடுவார் உண்டோ என்று, கார்கொண்டு இன்னே மாரி கையேறி அறையிடுங்காலத்தும் - பகவானது சொரூபத்தையும் குணமழையையும் நினைப்பூட்டிக்கொண்டு காலம் நோந்து விரைவையுண்டாக்கவும், சாரிகை புள்ளர் அம் தண்ணம் துழாய் இறை கூய் அருளார் - அழகிய சிறந்த வாகனத்தையுடைய அல்லது தவறாத பிரமாணமுடைய எம்பெருமான் ஆனைக்கு அருள்செய்தாற்போலே விரையவந்து கம்பீரமான தனது திருமிடற்றோசையால் இவரை அழைத்து இனிய தனது அருளை இவர்க்குச் சிறிதுஞ்செய்தருளுகின்றிலன். என் சின்மொழிக்கு - சுருங்கச்சொல்லி விளங்கவைக்குஞ் சொல்லழகுடையவரும், எங்களுக்கு விரும்பும்பொருளுமாகிய இவருக்கு, சேரி கை ஏறும் பழியாய் விளைந்தது - (தமது அன்பு) உலகத்திலுள்ள சாத்துவிக ஜநங்களெல்லாம் இரங்கிக் கையெடுத்துக் கூப்பிடும்படி பழிப்பாயப் பரிணமித்தது என்க. நிறை - குணபூர்த்தியுமாம். எம்பெருமான் ரக்ஷகனாயிருக்கையில், எத்தனை விளம்பம் வந்தாலும் பொறுத்திராமல் தானே தன்காரியந் தலைக்கட்டிக்கொள்வதாக விரைதல் குற்றத்திறங்கிடமாம் என்பது தோன்றும். 'இப்போது இவர் பழியென்கிறது, பகவத்பராவண்யத்தையிறே, அதைப் பின்னைப் பழியென்பானென்னென்னில்,—அத்தலையாலே வரக்கண்டிருக்கை மத்தனையொழிய இத்தலையாலே பெறப்பரவாதிக்குமிது பழியாயிருக்குமிறே ஆனபின்பு பழியென்னத் தட்டில்லையிறே' என்ற நம்பிள்ளையீடு இங்கு அறியத்தக்கது. எம்பெருமானைப் பிரிந்துள்ள நிலையில் அவனது சம்பந்தம் பெற்ற பொருள் யாதானுமொன்றிலாவது தரித்திருக்கலாம்படி ஆழ்வார்க்கு ஆற்றாமைமிக்கமை இதில் வெளியாம்.

நிறை - நிறுத்துதல்: தொழிற்பெயர்; ஐ - விகுதி. நிறையென்றபொருளில், முதனிலைத்தொழிற்பெயராம். முந்தினபொருளுக்கு, 'கையேறும்' என்பதில், கை - [illegible], 'கைகூடும்' என்பதிற்போல. காலத்தும், உம் - இழிவுசிறப்பு. சின்மொழி - பண்புத்தொகையன்மொழி. முன்னிரண்டடி - தற்குறிப்பேற்றவணி. (௧௯)

## வெறிவிலக்கு.

௨௰. சின்மொழிநோயோ கழிபெருந்தெய்வம் இந்நோயினதென்
றின்மொழிகேட்குமிளந்தெய்வமன்றிது வேலநின்னீ

யென்மொழிகேண்மினென்னம்மனைமீருலகேழுமுண்டான்
சொன்மொழிமாலையந்தண்ணந்துழாய்கொண்டுசூட்டுமினே.

(இ - ள்) சில மொழி நோயோ - சிலசொற்களையுடைய இவளது நோயோ, கழி பெரு தெய்வம் - மிகப்பெரிய தெய்வமான எம்பெருமானை விஷயமாக உண்டானது இந்நோய் இனது என்று இல மொழி கேட்கும் இள தெய்வம் அன்று இது - இந்தநோய் இப்படிப்பட்டதென்று வரையறுத்து இல்லாதமொழிகளைப் படைத்துச் சொல்லக் கேட்கத்தக்க சிறுதெய்வத்தினை விஷயமாக வந்ததன்று இது, வேல நீ நில - வெறியாட்டாளனே! நீ விலகிநிற்பாயாக, என் அம்மனைமீர் - என்னுடைய தாய்மார்களே! என் மொழி கேண்மின் - (இவள் தன்மையை உண்மையாக அறிந்த) என் துவார்த்தையைக் கேளுங்கள், உலகு ஏழும் உண்டான் சொல் மொழி கொண்டு - ஏழுலகங்களையும் (பிரளயகாலத்தில்) திருவயிற்றிற்கொண்டு காத்தருளிய எம்பெருமானது திருநாமத்தைச் சொல்லுதலைச் செய்துகொண்டு, மாலை அம் தண்ணம் துழாய் சூட்டுமின் - (அவனது) மாலையாகவுள்ள அழகிய குளிர்ந்த திருத்துழாயை (இவளுக்கு)ச் சூட்டுங்கள், (எ - று)

களவொழுக்கத்தால் தலைமகளைக் கூடிய தலைமகன் பின்பு அவளை வெளிப்படையாக மணஞ்செய்துகொள்ளும்பொருட்டுப் பொருள்தேடிவருதற்காக அவளைப் பிரிந்து சென்று வரவுகுறித்தகாலத்தில் வாராது நீட்டிக்க அந்நிலையிற் பிரிவாற்றாமைச் வருந்திய தலைமகளைச் செவிலித்தாய்மார் எதிர்ப்பட்டு அவளது வடிவுவேறுபாட்டை நோக்கி 'இவள் இங்ஙனம் மெலிதற்குக் காரணம் என்னோ?' என்று கவலைப்பட்டுக் கட்டுவிச்சியைக் குறிகேட்க, அவளும் தன்மரபின்படி ஆராய்ந்து 'இவளுக்கு முருகக்கடவுள் ஆவேசித்ததொழியப் பிறிதொன்றுமில்லை' என்றுகூற, அதுகேட்ட செவிலித்தாயர் உடனே வெறியாட்டாளனை அழைப்பித்து வெறிகொண்டு ஆவேசமாடுவிக்க முயல, அதற்குத் தலைமகள் மிகவருந்தாநிற்க, அச்சமயத்தில் அவளது துன்பத்தின் மெய்க்காரணத்தை யறிந்த தோழி வேலனையும் செவிலியரையும் நோக்கிச் சிலகூறி வெறிவிலக்குகிற துறை இது. ஆழ்வார் திருவாய்மொழியில் "தீர்ப்பாரையாமினி" என்றுதொடங்குகிற வெறிவிலக்குப்பதிகத்திலும் * "இசைக்கின்றதே யிவள்நோ யிதுமிக்க பெருந்தெய்வம், இசைப்பின்றி நீ அணங்காடு மிளந்தெய்வ மன்றிது, திசைப்பின்றியே சங்குசக்கரமென்றிவள் கேட்க நீ, இசைக்கிற்றியாகில் நன்றே யிற்பெறுமிது காண்மினே", "இதுகாண்மின் அன்னைமீர் இக்கட்டுவிச்சிசொற்கொண்டு நீ, ரெதுவானுஞ்செய்தங்கோர் கள்ளுமிறைச்சியுந் தூவேன்மின், மதுவார் துழாய்முடி மாயப்பிரான் கழல்வாழ்த்தினால், அதுவே யிவளுற்றநோய்க்கு மருமருந் தாகுமே" என்று அருளிச்செய்தமை அறிக.

சின் மொழி - வாய்விட்டு வார்த்தைசொல்லவும் மாட்டாத இளமையையுடையவள், மிதபாஷிணி, மழலைச்சொல் மிழற்றுபவள் குளிர்ந்த மொழியாளுமாம் ஓ - இரக்கம், நோயின்முதிர்ச்சிக்கு வருந்தியபடி. பரதேவதையான பகவானுக்கும் க்ஷுத்திரதேவதைகளுக்கும் உள்ள பாவத்யமாணுப்பிரமாணமான வாசி தோன்ற 'கழிபெருந்தெய்வம்,' 'இளந்தெய்வம்' என்றது. இன்மொழிகேட்கும் என்று எடுத்து, இனியமொழியைக் கேட்டுப் பயன்கொடுக்கிற [ஸ்தோத்ரப்ரியமான] என்றும் உரைக்கலாம் 'ஆத்தரகிதமான மொழி கேட்கும் இளந்தெய்வமன்று இது, தனக்கு இல்லாததை உண்டாகச் சொல்லப்புக்கால் கேட்டுக்கொண்டாடுந் தெய்வமன்று இது. கைக்கூலிகொடுத்துக் கவிபாடுவித்துக்கொள்ளுந் தேவதைக ளன்று'

* திருவாய்மொழி - நான்காம்பத்து ஆறாந்திருப்பதிகம் - ௨, ௩.

என்பர் பெரியவாச்சான்பிள்ளை. முருகக்கடவுளது வேலைத் தனக்கு அடையாளமாக ஏந்திக்கொண்டு நின்று ஆடுதலால், வேலனெனப்பட்டான்; 'வேன்மகன்' என்றும் வழங்கும். வேல நில் நீ - இவ்வகம் தேவதாந்தரசம்பந்தமுடையார் புகும் அகமன்றுகாண் என்று வெருட்டியபடி. 'வேல- * "கூராராழிவெண்சங்கேந்தி" என்றுசொல்லுகிறபடியே கையுந் திருவாழியுமாகக் காணவேண்டியிருக்கிறவிடத்தே நீ கையும் வேலுமாக வந்துதோற்றவதே" என்பது, பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம். அம்மனைமீர்- உண்மைக்காரணமுரைக்கப்படுத்தற்கு உரிமையையும், இவளியல்பிற்கு ஏற்றபடி நன்மைசெய்யும் வாற்சல்யத்தையும் உடையவர்களே! என்றபடி. 'உலகேழுமுண்டான்' என்றது, லோகஸம்ரக்ஷணத்தில் எம்பெருமானுக்கு உள்ள ஆதரத்தையும் அற்புத சக்தியையும் குறிக்கும். உலகேழுமுண்டான் சொல் மொழி - இவள்நோயைப் பரிகரித்தற்கு, உலகமுழுவதுக்கும் வந்தநோயைப் பரிகரித்தவனது பேரானே தக்கதென்றபடி, †"ஒருங்காகவே யுலகேழும் விழுங்கி யுமிழ்ந்திட்ட, பெருந்தேவன் பேர்சொல்லகிற்கில் இவளைப் பெறுதிரே" என்பர் திருவாய்மொழியிலும். சொல்மொழிகொண்டு துழாய்சூட்டுமின் எனஇயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள்; கிரமாலங்காரம். இந்நோய்தீர்த்தற்கு எம்பெருமானது திருநாமம் தக்கமந்திரமும், அவனது பிரசாதமான திருத்துழாய் பசுமருந்துமாம் என்க. 'சூட்டுமின்' என்றதனால், அந்தச் சஞ்சீவிமூலிகைதான் உட்கொள்ளக்கடவதன்றியே தலைமேற்கொண்டு நன்குமதிக்கக்கடவதென்று தோன்றும். வியாதிஸ்தர்க்கு உட்செலுத்துவதொரு மருந்தும், மேற்பூசுவதொரு மருந்தும் உபயோகித்தல்போல, எம்பெருமானது திருநாமங்களை அவள்செவிவழியே உள்ளேபுகும்படி உச்சரித்துப் புறம்பே அவன்சாத்தின திருத்துழாய்மாலையைக் கொண்டுவந்து சூட்டுங்கோளென்று பரிகாரங் கூறினாள்.

எம்பெருமானது சேர்க்கையைப் பெறாமல் வருந்துகிற ஆழ்வாரது துயரத்தைத் தீர்த்தற்பொருட்டு, அவர்பக்கலுள்ள பரிவா லுண்டான கலக்கத்தால், எம்பெருமான்உபாயாந்தரங்களால்அடையத்தக்கவனல்ல னென்பதை மறந்து, தேவதாந்தரபஜனத்தாலாவது இவரது ஆற்றாமையைத் தணிப்பிக்கலாமோ வென்று தொடங்கிய ஞானிகளைக்குறித்து, ஆழ்வாரதுதன்மையையறிந்த அன்பர்கள் விலக்கிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். சின்மொழி - இவர் பிறரதுநன்மைக்காகப் பேசுதலேயன்றித் தன்காரியந் தலைக்கட்டிக்கொள்ளுகைக்காக மிகுதிப்பேச அறியாதவரென்றபடி. 'நோய்' என்றது, எம்பெருமானை அநுபவிக்கவேண்டுமென்னும் ஆசையாகிய பக்தியின் மிகுதியா லான ஆற்றாமையை. கழிபெருந்தெய்வம் - ஒப்புயர்வற மிகச்சிறந்த சர்வேச்வரன்விஷயமென்றபடி. இத்தெய்வத்துக்குக் கழிபெருமை - வேதாதிபிரமாணங்களுக்கும் மனமொழிமெய்களுக்கும் எட்டுதற்கு அருமை. நோய் இனது என்று கேட்கும் இளந்தெய்வம் அன்று இது- இந்தஆற்றாமை இத்தன்மைத்தென்று வரையறுத்துக்கூறும்படி பொருள் சேரப்பொய்ப்புகழ்கேட்கும் க்ஷுத்திரதேவதைகளுக்குப் பரிகரிக்கத்தக்கதன்று. ஆகையால், வேல நில் நீ - தேவதாந்தர சம்பந்த முடையாரது சேர்க்கையும், மறந்தும்புறந்தொழாமாந்தரான பாகவதர்க்குக் குறிக்கொண்டு விலக்கத்தக்கதாம். 'என்மொழி கேண்மின்' என்றதனால், ஆற்றாமைதீர்த்தற்கு ஆ[illegible] உபதேசம் மூலமாமென்பது தோன்றும். 'என் அம்மனைமீர்' என்றதனால், முதியரானநீர் இளையரான எமது வார்த்தையை உபேக்ஷிக்கலாகாது என்றபடி. உலகேழுமுண்டான் சொல்மொழி கொண்டு - காக்குங்கட

* திருவாய்மொழி - ஐம்பத்தொன்பதாந்திருப்பதிகம் - க.
† ,, முப்பத்தாறாந்திருப்பதிகம் - ௬.

வுளது நாமோச்சாரணமே சகலரோகசாந்திகரம் என்றதாம். மாலையந்தண்ணந்துழாய்சூட்டுமின் - அவனது சம்பந்தம் பெற்ற பொருளின் சேர்க்கை தானும் ஆநந்தகரமாய் ஆற்றாமைதீர்க்கும் என்றபடி. 'சூட்டுமின்' என்றதனால், பகவத்பிரசாதம் சிரசாவகிக்கத்தக்க தென்றவாறு.

கழிபெரு - ஒருபொருட்பன்மொழி. கழி - மிகுதியுணர்த்தும் உரிச்சொல். தைவம் - வடசொல். இனது - இன்னது என்பதன் தொகுத்தல். இன்மொழி - பண்புத்தொகை. அம்மனைமீர் - அம்மனைமார் என்பதன் விளி, இதில், மார் - பலர்பாற்பெயர்விகுதி. உலகுஏழ - கீழேழும், மேலேழும். மொழி - மொழிதல் முதனிலைத்தொழிற்பெயர்.

வேல்! நில், நீ: உலகேழுமுண்டான்சொல் மொழி, என்அம்மனைமீர்! என்மொழி கேண்மின் மாலையந்துழாய் கொண்டு சூட்டுமின் என்று முறையேயியைத்துப் பொருள்கொள்ளவும் அமையும், இதற்கு, மொழி - ஏவலொருமை. (௨௦)

ஏறுகோள்கூறி வரைவுகடாதல் ✓

௨௧. சூட்டுநன்மாலைகடூயனவேந்திவிண்ணோர்கணன்னீ
ராட்டியந்தூபந்தராநிற்கவேயங்கோர்மாயையினாற் [கூன்
ஈட்டியவெண்ணெய்தொடுவுண்ணப்போந்திமிலேற்றுவன்
கோட்டிடையாடினைகூத்தடலாயர்தங்கொம்பினுக்கே.

(இ - ள்) அங்கு - அவ்விடத்தில் [நித்யவிபூதியாகிய பரமபதத்தில்], விண்ணோர்கள் - நித்யசூரிகள், நல் நீர் ஆட்டி - பரிசுத்தமானதீர்த்தத்தால் (உனக்குத்)திருமஞ்சனஞ்செய்து, தூயன சூட்டு நல் மாலைகள் ஏந்தி - பரிசுத்தமானவையாய் (உனக்கு)ச் சூட்டுதற்குத்தக்க அழகியமாலைகளைக் கைகளில் ஏந்திக்கொண்டுநின்று, அம் தூபம் தராநிற்க - அழகியதூபத்தைச் சமர்ப்பித்துக்கொண்டுநிற்க, ஓர் மாயையினால்-(உனது) ஒப்பில்லாத மாயையொன்றினால், ஈட்டிய வெண்ணெய் தொடு உண்ண போந்து-(இங்குத் திருவாய்ப்பாடியிலுள்ளார் நாள்தோறும் கடைந்து) சேர்த்த வெண்ணெயை எடுத்து அமுதுசெய்ய விரும்பிவந்து, அடல் ஆயர் தம் கொம்பினுக்கு - வலிமையையுடைய இடையரது குலத்திற் பிறந்த பூங்கொம்புபோன்ற மகளான நப்பின்னைப்பிராட்டியை மணஞ்செய்துகொள்ளுதற்காக, இமில ஏறு வல் கூன் கோட்டிடை கூத்து ஆடினை - முசுப்பையுடைய எருதுகளின் வலிய வளைந்த கொம்புகளின் நடுவிலே கூத்தாடியருளினாய், (எ - று)

'ஈண்டுக்கூறுவாளுந்தலுகின்றது முல்லைத்திணை யாகலின், அந்தமுல்லைத்திணைக்கு மரபாவது - ஓரிடத்து ஒருபெண் பிறந்தால் அப்பெண்ணைப் பெற்றவர் தம்தொழுவில் அன்றுபிறந்த சேங்கன்றுள்ளனவெல்லாம் தன்னூட்டியாகவிட்டு வளர்த்து அப்பரிசினால் வளர்ந்த ஏற்றைத் தழுவினவொருவனுக்கு அப்பெண்ணைக் கொடுத்தல் மரபென்ப' என்ற திருக்கோவையாருரை இங்கு அறியத்தக்கது. முல்லைநிலத்துத் தலைமகளைக் களவொழுக்கத்தாற் கூடிநின்ற தலைமகனை நோக்கித் தோழி 'இனி நீ இவள்குலத்துக்குஉரிய மரபின்படி வெளிப்படையாக விரைந்து வந்து ஏறுதழுவி இவளை மணந்துகொள்வாயாக' என்று வற்புறுத்திக்கூறுதல், இத்துறையின் இலக்கணம். முன்பு நப்பின்னையை வரைதற்பொருட்டு நீஏறுதழுவினாயென இது கூறியதனால், தோழி தலைவனை 'இப்பொழுது ஏறுதழுவி இவளை வரைந்து கொள்வாயாக' எனக் குறிப்பால் ஏறுகோள்கூறி வரைவுகடாயினவாறு. இதனைத் தலைமகள்கூற்றாகவுங் கொள்ளலாம். இனி, அடலாயர்தம் கொம்பினுக்கு என்பதற்கு - இந்த முல்லைநிலத்தலைமகளுக்கு எனப் பொருள்கொண

டால், தலைமகளை வரைந்துகொள்ளுதற்பொருட்டுத் தலைமகன் ஏறுதழுவின அருமையைக் கண்டு பிறர் வியந்துரைத்த துறை யென்னலாம்.

சூட்டு நன் மாலைகள் தூயன - எம்பெருமான் முடியிற் சூடுதற்கு உரியபடி குறையொன்றுமில்லாத திருத்துழாய்மாலை முதலியன. 'சூட்டுமாலைகள்' என்றதனால், அடியார் அன்போடு கொண்டுவந்து சமர்ப்பிக்கிற எவற்றையும் எம்பெருமான் அவற்றின் எளிமைபாராது அவரது அன்பையே நோக்கி முடிமேற்கொண்டு கொண்டாடுவனென்பதும் போதரும். 'நல்' என்பதை மத்தியமதீபமாக்கி, நற்சூட்டு, நன்மாலைகள் என இயைத்து, திருமுடிசூட்டும் திருத்தோள்மாலைகளும் என்றும் உரைப்பர். இந்த மாலைகளுக்குத் தூய்மை - வேறொருபிரயோசனத்தை வேண்டாமல் சாத்துகையே பிரயோசனமாகக் கொடுக்கப்படுகை. 'ஏந்தி' என்றது, எம்பெருமான் திருவுள்ளமுவந்து ஏற்றுக்கொள்ளுமளவும் அடியார் சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டு காத்திருக்கும் நிலைமை. நன்னீராட்டுதல் - அழுக்கறுத்தற்காக வன்றி இவனே யெல்லாவுலகங்களுக்குந் தலைவனென்று காட்டுதற்காக எப்பொழுதுஞ் செய்யும் பட்டாபிஷேகம். இங்கு 'மாயை' என்றது, பகவானது சங்கற்பத்தை. புகைவழியில் ஒளித்துவருவார்போல அங்குநின்று இங்குவந்தனை யென்பான், 'அந்தூபந்தராநிற்கவேஅங்கு ஓர்மாயையினாற் போந்து' என்றான். 'கோட்டிடைக்கூத்தாடினை' என்றது, அவற்றை யடக்கும்பொருட்டு மிக்கதைரியத்தோடு அவற்றின்கொம்புகளினிடையிலே புகுந்து விரைந்து தொழில்செய்த நிலைமை, இதனை *"மருப்பிடைக் குளிக்கு மாறும்" எனச் சிந்தாமணியில், தனித்து யானையுடன் போர்செய்கையில் அது கொல்லுதற்கு இறங்கினால் அதன்கொம்பிரண்டிற்கும் நடுவே யாகும் விதங் கூறப்பட்டாற்போலக் கொள்க. அடல்ஆயர் - பிரபலரான இடையரென்றபடி.

பிரிவாற்றாத ஆழ்வாரது துயரத்தைத் தீர்க்கக்கருதிய அன்பர்கள் எம்பெருமானை நோக்கி 'நீ வெண்ணெயை விரும்பி நித்யவிபூதியினின்று லீலாவிபூதிக்கு வந்து நப்பின்னைப்பிராட்டியைக் கூடுதற்கு இடையூறாகவுள்ள ஏறுகளைத் தவிர்த்து அவளைக்கூடினாய்' என்றுகூறியதனால், 'பாரதந்திரியத்தாற் பெண்தன்மையையடைந்துள்ள ஆழ்வாரது இனியபத்தியை விரும்பி அங்குநின்று இங்குவந்து அவரது பிரதிபந்தங்களைப் போக்கி அவரை அனுபவித்தலாகாதோ" என்றுகுறிப்பித்தல், இதற்கு உள்ளுறைபொருள். அகக்கண்ணுக்கு எதிர்ப்பட்ட எம்பெருமானை நோக்கி ஆழ்வார் தாமேகூறினாராகவுமாம். அங்கு விண்ணோர்கள் நன்னீராட்டிச் சூட்டுநன்மாலைகள் தூயன ஏந்தி அம் தூபம் தராநிற்க - நித்யவிபூதியிலுள்ளார் உனதுதிருவாராதனத்தைக் கருத்தோடுநடத்திக்கொண்டுவர, ஓர்மாயையினால் ஈட்டிய வெண்ணெய் தொடு உண்ண போந்து - தயிரான நிலைமையைக் கழிந்து நெய்யாகுநிலையிற் புகாமல் நடுநிலையில் நிற்கிற வெண்ணெய்போலச் சம்சாரசாகரநிலையை அறிவென்னும்மத்திட்டுக்கடைதலாற் கழிந்து பரமபதத்திற் புகப்பெறாமல் நடுவில் நிற்கிற †முமுக்ஷுக்களுடைய இனியபத்தியை அனுபவித்தலிலுண்டான ஆதரத்தாலே இந்த லீலாவிபூதியில் வரச் சங்கற்பித்துக்கொண்டு வந்து, அடல் ஆயர் தம் கொம்பினுக்கு - தமவலிமையால் ஊழ்வினையொழிக்க வேண்டுமென்றிருப்பவரது நடுவிலே பரதந்திரமாய் வேறுசரணமில்லாததொரு ஆத்மாவை அனுபவித்தற்பொருட்டு, இமிலேற்றுவன்கூன்கோட்டிடைக்கூத்தாடினை - ரஜோகுணமிகுதியாற்செருக்கையுடைய சரீரத்தினது காப்பம் முதலிய ‡ஏழுஅவஸ்தைகளிலும் உள்ள மிகவலிய அடக்குதற்கரிய

* சீவகசிந்தாமணி - கனகமாலையாரிலம்பகம் - ௧௨௧.

† முமுக்ஷுக்கள் - முத்திபெறவிரும்புபவர்.

‡ ஏழுஅவஸ்தைகள், தனியனுரையிற்கூறப்பட்டன, ௧௬ - ஆம் பக்கம்.

நல்வினை தீவினை யென்னும் இருபகுப்பையும் எளிதில் அழித்தருளினை. என இதனால், ஓராத்மாவைச்சேர்த்தற்பொருட்டு அதன்காமத்தைப் போக்கியரு ளிய நீ ஆழ்வாரது இடையூற்றைத்தவிர்த்து இவரையும் சேர்த்தருளவேணும் என்றவாறு

தொடு - தொட்டு என்பதன் தொகுத்தல்விகாரம்; *"வரிப்புனை பந்து" என்பதில் 'வரி' என்பதுபோல, பகுதியே வினையெச்சப்பொருள்தந்த தெனி னுமாம். இனி, தொடு உண்ண - களவினால் உண்ண எனினுமாம், †"மாயை தொடு பட்டிமை வஞ்சனையாகும்" என்பது காண்க. கொம்பு - ஆகுபெயர்.

ஸ்நாநமும் அலங்காரமும் நித்யவிபூதியிலும், போசனமும் படுக்கை யும் லீலாவிபூதியிலுமாகக் கூறியதனால், இரண்டும் அவனுக்கு வேறுபாடி ன்றி ஒருநிகராக உரியவை யென்பது விளங்கும். முன்இரண்டடிகளில் பர த்வத்திலும், பின்இரண்டடிகளில் ஸௌலப்யத்திலும் ஈடுபட்டவாறு. திரு வாய்மொழியின் இருபத்தோராம்பாட்டிலும்‡ எம்பெருமானது பரத்துவத் தையும் கிருஷ்ணாவதாரஸௌலப்யத்தையுங் கருதி ஆழ்வார் ஈடுபட்டமை காண்க. (உக)

## தோழி தலைவனை நகுதல்.

உஉ. கொம்பார்தழைகைசிறுநாணெறிவிலம்வேட்டைகொண்டா
டம்பாரகளிறுவினவுவதையா புள்ளூருங்கள்வா [ட்
தம்பாரகத்தென்றுமாடாதனதம்மிற்கூடாதன [தே.
வம்பாரவினச்சொல்லவோவெம்மைவைத்ததிவ்வானபுனத்

(இ - ள்.) ஐயா - இப்பெரியவரது, கை - கையில் உள்ளது, கொம்பு ஆர் தழை - மரக்கிளையிற்பொருந்திய தழையாகும், சிறு நாண் எறிவு இலம் - (இவர் கையில் வில்இல்லாமையால்) சிறியநாணியை (கைவிரலால்) தெறித்து ஒலிசெய்தலைக் கேட்டிலோம், கொண்டாடு - (இவர் தமக்குப்) பிரிய மாக வெளிக்காட்டுவது, வேட்டை - வேட்டையாம், வினவுவது - (இவர் நம்மைக்) கேட்பது, அம்பு ஆர் களிறு - (எய்யப்பட்ட) அம்போடு பொருந் திய யானையாம், (இவரது செயல்களும் சொற்களும்), புள் ஊரும் கள்வர் தம் பார்அகத்து என்றும் ஆடாதன - கருடப்பறவையை ஏறிநடத்துகிற மா யவரான திருமாலினது உரியபொருளாகிய இவ்வுலகத்தில் எக்காலத்திலும் நடவாதனவும், தம்மில் கூடாதன - தமக்குள் (ஒன்றோடொன்று) பொருந்த மில்லாதனவுமாகவுள்ளன, வம்பு ஆர் வினா சொல்லவோ - புதுமை மிக்க கேள்விகளுக்கு விடைகூறும்பொருட்டோ, எம்மை இ வான் புனத்தே வைத்தது - நம்மை இந்தப்பெரியகொல்லையிலே (நமதுமுதுகுரவர் காவல்) வைத்தது? (எ - று)

இயற்கைப்புணர்ச்சியும் பாங்கற்கூட்டம் அல்லது இடந்தலைப்பாடும் நிகழ்ந்தபின்பு தோழிக்குத் தன்கருத்தைப் புலப்படுத்தி அவள்மூலமாகத் தலைமகளைச் சேர்தலாகிய தோழியிற்கூட்டத்திற கருத்துவைத்த தலைமகன் அத்தோழியைத் தனியே கண்டு தன்கருத்தை வெளிப்படையாக விரையக் கூறி யிரவாமல் குறிப்பாகக்கூறக்கருதித் தலைமகளுந் தோழியும் இனைப்பு னங்காத்துநின்றவிடத்துத் தழையுங் கண்ணியு மாகிய கையுறைகளை ஏந்திக்

* திருமுருகாற்றுப்படை - சுஅ.
† பிங்கலந்தை - பண்பிற்செயலிற்பகுதிவகை - கஉரு.
‡ "பத்துடையடியவர்க்கெளியவன்பிறர்களுக்கரிய, வித்தகன் மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறலடிகள், மத்துறுகடைவெண்ணெயகளவினி லுர விடையாப்புண்ட, எத்திறம் முரலினொடிணைந்திருந்தேங்கிய வெளிவே!"

கொண்டு சென்று அவர்களை நோக்கி வேட்டைக்கு வந்தவன்போல 'என்னுடைய அம்போடு ஒருமதயானை இவ்விடத்து வரக் கண்டீரோ?' என்று வினவ, அத்தலைமகனது தன்மையைப் பரிகசித்துத் தோழி தலைமகளோடு கூறியது இது அன்றி, தோழி அத்தலைமகனை நோக்கிக் கூறியதெனினுமாம்; அப்பொழுது, 'ஐயா' என்றது - முன்னிலைப்படர்க்கை. அண்மைவிளியுமாம். முன் உரைக்கு, 'எம்மை' என்பது - முன்னிலையை உளப்படுத்திய தன்மைப்பன்மை; பின்உரைக்கு, படர்க்கையை உளப்படுத்தியதாம். 'மதியுடம்படுத்தற்குக் களிறுவினவிவந்து குறையுற்ற தலைமகனைத் தோழி நகைத்துரைத்த பாசுரம்' என்ற அழகியமணவாளசீயருரை அறியத்தக்கது.

இவன் குறிஞ்சிநிலத்துத் தலைவியாதலாலும், இவளது குலமுறைமை தழையுங் கண்ணியுங் கையுறையாகக் கொண்டு கொடுத்துக் காணுதலாதலாலும், தான் கொண்டுசெல்லுந் தழையை அவர் ஏற்பின் அது தன்னை அவர் ஏற்றுக்கொள்ளுதற்கு அறிகுறியாதலாலும், தழையைஉடையாகப்புனைந்து உடுத்தலும் மரபாதலாலும், இவன் கையில் தழைகொண்டு சென்றான். அன்றியும், மரக்கொம்பிலிருந்து பறிக்கப்பட்ட தழை வாட்டத்தோடுகூடியிருக்குமாதலால், தலைமகளைக்கூடாமையால்தனக்குஉண்டாயிருக்கிற வாட்டத்தைக் குறிப்பித்தற்கு ஒருகருவியாகவும் தழையைக்கொண்டுசென்றான். அத்தன்மையிற் கருத்தறிந்த தோழி 'கொம்பார்தழைகை' என்றதனால், இத்தழைதான் இவர் கைப்பட்டதனால் தளிர்ச்சிபெற்றது, தலைமகனுக்கு இத்தன்மை நிகழ்கிறதில்லையே யென்று இரங்கியபடி. 'சிறுநாணெறிவில்லம்' என்பதற்கு - இப்பொழுது கையில் வில்இல்லாமையேயன்றி முன்புவில்நாணெறிந்த தழும்புங்கூடக் கண்டிலோமென்றும், சிறுநாண் எறியப்படுவதான வில்லைக் கண்டோமில்லோமென்றும் உரைப்பர் இரண்டாமுரைக்கு, 'சிறுநாணெறிவு' என்பது - வில்லுக்குத் தொழிலாகுபெயர். 'வேட்டைகொண்டாட்டு' - வேட்டையென்பது வெளிவியாஜமாத்திரமே, வந்தது, தலைவிபக்கல் வேட்கைவிஞ்சுதலாலே 'அம்பார்களிறு வினவுவது' - * "பண்ணுற்ற தென்மொழிப் பாவைநல்லீரோ பகழி மூழ்கப், புண்ணுற்றமாவொன்று போந்ததுண்டோ நும்புனத்தயலே," † "கவளத்தின் வீங்கிக் கடுகிய வேழங் கடுக்குமுவாத், துவளத் தொடுத்துவிட்டேன் வந்ததோ விங்குத் தூங்கைகே!", ‡ "மணப்பட்டகோடும் மதம்பட்ட வாயும் வடிக்கணைதோய், புண்பட்டமேனியுமாய் வந்ததோ வொருபோக்களிறே" என்றாற்போல்வன; § "கருங்களியார் மதயானை யுண்டோ வரக்கண்டதுவே,' * "பொருமால் களிறொன்று போந்ததுண்டோ நும்புனத்தயலே,' * "பிடியொடு போந்ததுண்டோ வுரையீரோ பெருங்களிறே" இவைமுதலியனவுங் காண்க இங்ஙனம் வினவுதலால் 'அம்புதைத்துஊடுருவுங்களிற்றின் நிலைமை போன்றது, இவள்கண்ணுக்கு இலக்காய நான்படுகிற பாடு' எனக் குறிப்பித்தானாம். 'நீ இங்குப்போந்தது என்?' என்ன, 'வேட்டைக்கு' என்றான், ஆயின், 'வில் எங்கே?' என்ன, தழையைக் காட்டினான், 'அது இல்லாவிடினும், அம்பாயினும் உண்டோ?' என்ன, 'ஆனையிலேபட்டுக் குளித்தது' என்றான், இங்ஙனம் "பல புனைந்துரைகளை வேட்கைமிகுதியால் நாணமின்றிக்கூறினவனது பணிவை 'ஐயா' என்ற உயர்சொல்லாற் குறித்து நகையாடியபடி.

களவர் - உயிர்களை அவையறியாமல் உரிமைகொள்பவர். சோரச்சேதியான இச்சொற்செயல்கள் இந்தலீலாவிபூதியில்லை, அந்தநித்யவிபூதிய

* இறையனாரகப்பொருளுரை, ௬ - ஆம் சூத்திரத்தின்கீழ்க் கண்டது.
† தணிகைப்புராணம் - களவுப்படலம் - ௧௯௫.
‡ தஞ்சைவாணன்கோவை - ௭௨.
§ திருக்கோவையார் - ௫௨.

னுண்டோ அறியோம் என்பது தோன்ற, 'தம்பாரகத்து என்றும் ஆடாதன, தம்மிற் கூடாதன' என்றது. தம்மிற்கூடாதன - கையில்தழைக்கும் வேட்டைக்கும் என்னசம்பந்தம்? என்றபடி, 'தழைகொண்டுவருகையும் அம்போட்டை ஓராணைபோந்ததோ என்று தேடுகையும் அற அஸங்கதங்கள்' என்பது அப்பிள்ளையுரை. இப்படிப் பொய்கலந்ததவையாயிருப்பினும் அவன் கேட்குங்கேள்விகள் தமக்குப் புதியனவாய் வியப்புவிளைத்தல் தோன்ற, 'வம்பாரவினை' என்றாள்; 'வம்பாரவினைச் சொல்லவோ' என்பதற்கு - வீணகேள்விகள் கேட்கப்படுத்தற்கோ? என்றும் பொருள்கொள்ளலாம். வம்பாரவினை - இதுவரையிலுங் கேட்டறியாத வார்த்தைகள் 'எம்மைவைத்ததிவ்வான்புனத்ததே' என்றதனால், நாங்கள் எங்கள்பெரியோர்களுக்குப் பரதந்திரைகள், ஸ்வதந்திரைக ளல்லோம்: ஆதலால், அம்முதுகுரவரையடுத்துப் பலரும் அறிய வரைந்துகொள்ளுதல் முறைமையென்றாளாம். 'வான்புனத்து' என்றதனால், பரந்த இக்கொல்லையைப் பாதுகாத்தற்கேயொழியக் கேட்பார்க்கு விடைசொல்ல எங்களுக்கு அவகாசப்படுமோ? என்றபடி.

எம்பெருமானுக்கு உகப்பாயிருக்கிற இவ்வாழ்வார்பக்கலிலே நம்முடையசிலகேள்விகளைக்கேட்போமென்று வந்த கல்விச்செருக்குடையாரை நோக்கி 'இவர்கள்சொற்செயல்கள் ஒன்றோடொன்று ஒற்றுமையின்றிப் பரஸ்பரவிரோதமுடையன' என்று ஆழ்வாருக்குள்ள அன்பர் ஆழ்வாரோடு கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள், அக்கல்விச்செருக்கினரை முன்னிலைப்படுத்திய தெனினுமாம். கொம்பார்தழைகை - ஐம்புலவாசையாகிய தளிர்களை இவர்கள் கைவிட்டதில்லை, இதனை, *"செடியார் வினைகள்" என்றாற்போலக் கொள்க. சிறுநாணெறிவில்லம் - பிரணவமகாமந்திரமாகிய வில்லினது உச்சாரணமாகிய நாணையும் இவர்களிடத்து இல்லை. வேட்டைகொண்டாட்டு - சம்சாரமாகிய காட்டிலுள்ள காமவெகுளிமயக்கங்களாகிய கொடியவிலங்குகளைத் தொலைக்கத்தொடங்கிவிட்டோம் நாங்க ளென்கின்ற கொண்டாட்டமாத்திரமே இவர்களுக்கு உள்ளது. 'அம்பு ஆர் களிறு வினவுவது' - கல்வியறிவாகிய அம்பால் தாமெய்யாநிற்கையில் தமது இந்திரியமாகிய யானை புலன்களாகிய காட்டில் விரைந்தோடிற்றென்று அதனைப் பின்தொடர்ந்து துரத்துவதே இவர்கள்செயல். ஐயர் - இவர்களதுஅறிவின்பெருமிதத்தை இகழ்ந்தபடி. புனத்துருங்களவா தம்பாரகத்து என்றும் ஆடாதன தம்மிற்கூடாதன வம்பாரவினைச் சொல்லவோ எம்மை வைத்தது இவ்வான்புனத்தே - வேதமாகிய பிரபலப்பிரமாணத்தை எங்கும்பரவச்செய்கிறவனும் யாவரும்அறியாமல் மறைந்துநின்று எல்லாப் பொருளையும் பாதுகாப்பவனு மான எம்பெருமானது உலகத்தில் ஒரு காலத்திலும் இல்லாததவையும் ஒன்றோடொன்றுஒற்றுமைப்படாதவையு மாகிய புதிய இவர்கள்வீணகேள்விகளுக்கு உத்தரஞ்சொல்லுதற்கோ எம்பெருமான் அடிமைகளாகிய எங்களை இந்தலீலாவிபூதியில் நியமித்துவைத்தது? என்க. தத்துவஞானமும் பிரபத்திமார்க்கமு மில்லாமல் போலிமார்க்கத்தாற் செருக்குடைய குதர்க்கரைச் சீர்திருத்தும்பொருட்டு இங்ஙனங் கூறியவாறு. இதற்கு ஸ்வாபதேசம் வேறுவகையாக உரைப்பது முண்டு

இல்லம்-இல்லோம். தன்மைப்பன்மையெதிர்மறைக்குறிப்புமுற்று. வேட்டை- வேடு என்னுங் குற்றியலுகரம் தன்னொற்றிரட்டி ஐகாரச்சாரியை பெற்றது. கொண்டாட்டு - கொண்டாடுதல், முதனிலைதிரிந்த தொழிற்பெயர்.

† "தழை கொண்ட தங்கை யுரை கொண்ட தாற் றனி வேட்டையுளங், கழை கொண்ட வார்சிலைக் காமரு வே ளைங்கணை கொண்டதால்,"

---

* திருவாய்மொழி - அறுபதாந்திருப்பதிகம் - ௭.

† தஞ்சைப்புராணம் - களவுப்படலம் - ௨௧௧.

*"பிதற்றினார்போலப் பலதொடுத்தார் பிறங்கெக்கலைக்கும், வித்தினர்போல விடையும் விடுத்தனர் மெய்ம்மையுள்ளம், பொத்தினார்போல வுரைக்கொத்த வில்லினரல்லா பொறப்பூங்,கொத்தினர் யாவர்கொல் செயருமல்லாக் குறிப்பினரே", †"மின்னே தழைகொண்டு வேழமெய்தா ரந்தவேழமவந்து, பின்னே பிணிபிரியுங்கலையானது பேசி வினாவங், கொன்னேபுகழுங்குறுமுயலாகவுங் கூடுங்கொல்லோ, வென்னேயுலகிலிவரையொப்பாரில்லையேயினுக்கே" என்பனவும் இக்கருத்துப் பொருந்துதல் காண்க. (௨௨)

## தலைமகன் குறையுறவுரைத்தல்.

௨௩. புனமோபுனத்தயலேவழிபோகுமருவினையேன்
மனமோமகளிர்நுங்காவல்சொல்லீர்புண்டரீகத்தங்கேழ்
வனமோரனையகண்ணானகண்ணன்வானாடமருந்தெய்வத்
தினமோரனையீர்களாயிவையோநும்மியல்வுகளே.

(இ - ள்.) மகளிர் - பெண்மைக்குணமுடையவர்களே! புனமோ - இத்தினைப்புனமோ, புனத்து அயலே வழி போகும் அரு வினையேன் மனமோ - இப்புனத்தினருகிலே வழிச்செல்லுகிற அரியதீவினையையுடையஎனது நெஞ்சமோ, நும் காவல் - உங்கள் காவலுக்கு உரியபொருள்? சொல்லீர் - சொல்லுங்கள், புண்டரீகத்து அம் கேழ் வனம் ஓர் அனைய கண்ணான் - செந்தாமரைமலரின் அழகிய ஒளியையுடைய காட்டை ஒருபுடையொத்த திருக்கண்களையுடையவனாகிய, கண்ணன் - கண்ணபிரானது, வான் நாடு - பரமபதத்திலே, அமரும் - வாசம்பண்ணுகிற, தெய்வத்து இனம் - நித்யசூரிவர்க்கத்தை, ஓர் அனையீர்கள் ஆய - ஒருபுடையொத்தவர்களாய, நும் இயல்வுகள் - நீங்கள் கொண்டுள்ள தன்மைகள், இவையோ - (அயலாமனத்தைக் கொள்ளைகொள்ளுதல் முதலிய) இச்செய்கைகளோ? (எ - று)

புனங்காத்திருந்த தலைவியையுந் தோழியையுங் கண்டு தலைமகன் தான் குறைவேண்டுதலைக் கூறிய துறை, இது இது, திருக்கோவையாரில் 'கருத்தறிவித்தல்' என்றும், தஞ்சைவாணன்கோவையில் 'தலைவனுட்கோள்சாற்றல்' என்றும், தணிகைப்புராணத்தில் 'இருவருமுள்வழி யேந்தல்வினாதல்' என்றுங் கூறப்பட்டுள்ளது. தன்மனம் இவர்கள்வசப்பட்டதைக் கூறின குறிப்பால், தன்கருத்தைப் புலப்படுத்தினவனாவன்

நீங்கள் புனத்தைவிட்டுநீங்காததுபோல என்மனத்தைவிட்டுநீங்குகிறீரில்லை யென்றும், புனம்போலவே என்மனமும் உங்கள்பாதுகாப்புக்கு உட்பட்டுக்கிடக்கிற தென்றுங் கருத்து 'புனத்தயலேவழிபோகும்' என்றதனால், அவர்களழகைத் தான் காணும்பொருட்டும் தன்முகத்தை அவர்கள் பார்க்கும்பொருட்டும் இவர்களுள்ளவிடத்தின் சமீபத்தில் இவன் தடுமாறித் திரிந்தமை தோன்றும் அருவினையேன் - அகப்பட்டால் தப்பமாட்டாது வருந்துதற்குக் காரணமான முற்பிறப்புத்தீவினையையுடையேன் என்றபடி மகளிர் - பெண்களுக்குஉரிய எல்லாநல்லிலக்கணமும் அமைந்தவர். புண்டரீகமென்னும் வெண்டாமரையின் பெயர், இங்கே செந்தாமரையைக் குறித்தது, 'புண்டரீகாக்ஷன்' என்பது காண்க வனம் - வனப்புமாம். ஓரனைய, ஓரனையீர்கள் என்பவற்றால், கண்ணின்சிறப்பு முழுவதுக்கும் தாமரையும் இவர்கள்சிறப்பு முழுவதுக்கும் நித்யசூரிவர்க்கமும் எல்லாப்படியாலும் உவமையாதற்குப் போதாமை விளங்கும்

பாகவதர் ஆழ்வார்பக்கலிலே தமது நெஞ்சு துவக்குண்டபடியைச் சொல்லுதல், இதற்கு உள்ளுறைபொருள். புனமோ - உமது எல்லைக்கு

* தணிகைப்புராணம் - களவுப்படலம் - ௨௦௩.
† அம்பிகாபதிகோவை - ௬௨.

உட்பட்ட இடமோ, புனத்தயலே வழிபோகும் அருவினையேன் மனமோ - அவ்விடத்தின்ருகிலே வழிச்செல்லுகிற உம்மிடத்துப்பாசபந்தமுடைய எங்கள் மனமோ, மகளிர் நும் காவல்-பரதந்திரரான உமது பாதுகாப்புக்கு உரியது? சொல்லீர் - சொல்லும்; புண்டரீகத்து அம் கேழ் வனம் ஓர் அனைய கண்ணன் கண்ணன் வான் நாடு அமரும் தெய்வத்துஇனம் ஓரனையீர்களாய் நும் இயல்வுகள் இவையோ - கண்ணழகுமிக்கவனும் சாவசுலபனுமான எம்பெருமானது பரமபதத்தில் வசிக்கிற நித்யசூரிவர்க்கத்தோடு ஒருபுடையொப்புமை சொல்லுமபடி *"வினைனுளாரிலுஞ் சீரியர்" என்றவாறு அவர்களினுஞ் சிறந்துள்ளவராய நீர் செய்யுஞ் செயல்கள் உபாயாந்தரத்திலனுக்கமுடையராயவேறுவழிச்செல்வோரையும் உமவழிப்படுத்திச் சீர்திருத்தியருளும் இவையோ? என வியந்தவாறு 'தெய்வத்துஇனம் ஓரனையீர்களாய்' என்கிறது, ஆழ்வாரொருவரும் எழுந்தருளியிருக்கிற இருப்பு அயர்வறும்அமரர்கள் எல்லாரும் திரள இருந்தாற்போலேயிருக்கை' என்ற அப்பிள்ளையுரையும் அறியத்தக்கது

ஓகாரங்கள் - வினா மகளிர் - அண்மைவிளி காவல - ஆகுபெயர். சொல்லீர் - உடன்பாடு 'அனையீர்களாய' என்பதன்பின் 'உள்ள' என ஒரு வினை வருவித்தலும், 'ஆய' என்பதை 'ஆய' என்பதன் தொகுத்தலாக் கொள்ளுதலும் பொருந்தும் (உரு)

## பிரிவாற்றுத்தலைமகளைப்போடுகண்ட செவிலி இரங்கல்.

**௨௪. இயலவாயினவஞ்சநோய்கொண்டுலாவுமோரோகுடங்கைக்,கயலபாய்வனபெருநீர்க்கண்கடமமொடுங்குன்றமொன்றூற, புயல்வாயினநிரைகாத்தபுள்ளூர்திகளூருந்துழாயக, கொயலவாயமலர்மேனமனத்தொடென்னுங்கொலெங்கோலவளைக்கே.**

(இ - ள்.) இயலவு ஆயின - சுவபாவமானதும், வஞ்சம் - பிறரறியாதபடியுள்ளதுமான, நோய - காதலநோயை, கொண்டு - [illegible], உலாவும் - (ஆற்றாமைமிகுதியால எங்கும்)பரந்துபாககிற, ஓரோ குடங்கை கயல பாயவன பெரு நீர் கண்கள்தமமொடும் - ஒவ்வொன்று ஒவ்வொருஅகங்கையளவாகவுள்ளவையும் கயலமீன்போலப்பிறழவனவு மாகிய மிக்கநீரபெருக்கையுடைய கண்களுடனும், குன்றம் ஒன்றால புயலவாய இனம் நிரை காத்த புள் ஊர்தி கள் ஊரும் துழாய கொயல வாய மலர்மேல மனத்தொடு - கோவர்த்தனமலையாலே பெருமழையிற பசுக்கூட்டங்களைப பாதுகாத்தருளினவனும் கருடவாகனனுமான கண்ணபிரானது தேன்பெருகுந் திருத்துழாயினுடைய பறிக்கப்படுதலைப்பொருந்தின பூவின்மேல (ஆசைபபட்டுச்சென்ற) மனத்தோடும், எம் கோல வளைக்கு என் ஆம் கொல - அழகியவளையல்களையுடைய எமதுமகளுக்கு (இனனும்) என்னநிலைமை நேருமோ? (எ - று.)

கணகலக்கமும நெஞசழிவு மானவளவன்றியே இனி ஏதாயமுடியுமோவென்று அஞசியுரைத்தா ளெனக. 'கோலவளைக்கு' என்றதனால், உடம்பு மெலிதலாற கைவளைகழலுமபடியானநிலைமை நேருமோ வென்று வளைக்குக் கவலைபபட்டமை தோன்றும். 'எம' என வந்ததனால, இது தாயவார்த்தையெனக் கொள்ளபபட்டது, இனி, 'எமகோலவளைக்கு' என்பதற்கு - எமது தலைவிக்கு என்றுஉரைத்து, இதனைத் தோழியிரங்குத லென்பாரும உளர்; அது அதறகேற்ப சிறபபனறு. 'இயலவாயினவஞசநோயகொணடுலாவும கோலவளை' என்று அநவயமாகவுமாம.

---

* திருவிருத்தம - எக.

இப்பாட்டு, பாட்டுடைத்தலைவனைக் கிளவித்தலைவனாகக் கூறியது; இதற்கு விதி *"காமப் பகுதி கடவுளும் வரையார், ஏனோர் பாங்கினு மென்மனார் புலவர்" என்பதனுள் 'ஏனோர் பாங்கினும்' என்பதனால் அமைக்கப்பட்டது.

†"வாயிற் பல்லு மெழாதில மயிரும் முடிகூடிற்றில, . . .. ....... . ... மாயன் மாமணிவண்ணன்மே லிவள் மாலுறுகின்றாளே" என்னும்படி இவள் மிக்க இளமை தொடங்கிக் கண்ணபிரானிடங் காதல்கொண்டமை தோன்ற, 'இயல்வாயின நோய்' என்றாள்; இந்நூலின் அறுபதாம்பாசுரத்தையுங் காண்க. 'வஞ்சநோய்' என்பதற்கு - தலைமகன் பிரிந்து சென்று வாராது வஞ்சித்ததனாலாகிய வருத்தமென்றும் உரைக்கலாம். அன்றி, வஞ்சநோய்கொள்ளுதல் - பிறரைப் பார்வையழகால் வசப்படுத்தி வருத்துந்தன்மையைக் கொள்ளுதலுமாம். கயல் - பருத்து நீண்ட வடிவத்துக்கு உவமை. கயல் பெருநீர்பாய்வன கண்கள் என்று இயைத்து, கயல்மீன் மிக்கநீர்ப்பெருக்கிலே பாய்தல்போலக் கண்ணீர்வெள்ளத்திற் புரளுகிற கண்க ளென்று உரைத்தலும் ஒன்று.

எம்பெருமானைச் சேரப்பெறாது வருந்துகிற ஆழ்வாரது தன்மையை நோக்கின ஞானிகள் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். அந்யாபதேசத்தில் தோழிவார்த்தை யென்பார், ஸ்வாபதேசத்தில் அன்பர்கள்வார்த்தையென்பர். இயல்வாயின - செயற்கையாகவன்றி ‡"அறியாக் காலத்துள்ளே யடிமைக்க ணன்புசெய்வித்து, அறியா மாமாயத் தடியேனை வைத்தாயால்" என்னும்படி இயற்கையாகவுள்ளதும், வஞ்சம் - தானுலன்றிப் பிறரால் அறியப்படாததுமான, நோய் - ஆற்றாமைத்துயரை விளைக்கிற பக்திமிகுதியை, கொண்டு - உடையவையாய், உலாவும் - ஒருநிலையிலில்லாமல் தடுமாறுகிற, ஒரோ குடங்கைக் கயல் பாய்வன பெருநீர் கண்கள்தம்மொடும் - அகங்கைகளால் மொண்டெடுத்து அனுபவிக்கும்படி அழகியநிலைமையுடையவையாய் ஆற்றாமையாலாகிய கண்ணீர்வெள்ளத்திலே அலைபடுகிற ஞானவகைகளோடும் கண்களோடும், குன்றமொன்றால் புயல்வாய் இனநிரைகாத்த புள்ளூர்தி கள்ளூரும் துழாய் கொயல்வாய் மலர்மேல் மனத்தொடு - சரணாகதரக்ஷணத்தின்பொருட்டு அருந்தொழில்செய்பவனும் பசுப்ராயமான ப்ராணிகளைப் பாதுகாப்பவனும் மிக்கவிரைவையுடையவனுமான எம்பெருமானது மிக்கினிய திருத்துழாய்மாலையழகை யனுபவித்தலில் ஆழ்ந்த மனத்தோடும், எம் கோல்வளைக்கு - எமக்கு மிக்கிஷ்டரான இவர்க்கு, என் ஆம்கொல் - இன்னும் யாதுநிலைமை நேர்ந்திடுமோ? என்க. 'வளை' என்பதற்கு ஸ்வாபதேசம், பிறர்க்குரிமையன்மை யென்று முன்னமே கூறப்பட்டது, ஆகவே, 'கோல்வளைக்கு' என்றதனால், ஆழ்வாரது ஆற்றாமைமிகுதியைக் கண்ட சாதுக்கள் கலங்கி இவரது பாரதந்திரியத்துக்குங் குறைவுநேருமோ வென்று சங்கித்தவாறு. ஸ்வாபதேசத்திலும் 'வஞ்சநோய்கொண்டுலாவுங் கோல்வளை' என இயைத்து, 'உலாவும்' என்பதை ஆழ்வார்க்கு அடைமொழியாகக்கொள்ளலாம். 'வஞ்சநோய்' என்பதற்கு - எம்பெருமான் தரிசநந்தந்தபோதே இவர்க்குப்பேறுதவாமல் வஞ்சித்தது காரணமாக உண்டான வருத்தமென்றுங் கொள்ளலாம்.

ஆயின - பெயரெச்சம் பலவின்பால்வினையாலணையும்பெயரன்று, 'நோய்' என்றது, இங்கு ஒருமையாதலால். ஒரோ, ஓ - அசை. புயல்வாய், வாய் - ஏழனுருபு. புள்ளூர்தி, கோல்வளை - பண்புத்தொகையன்மொழிகள். ஊர்தி - ஊரப்படுவது, இ - செயப்படுபொருள்விகுதி. 'கள்ளூறும்' என்றும் பாடம். கொ

* தொல்காப்பியம் - பொருளதிகாரம் - புறத்திணையியல் - ௨௮.
† பெரியாழ்வார்திருமொழி - இருபத்தேழாந்திருப்பதிகம் - ௨.
‡ திருவாய்மொழி - பதின்மூன்றாந்திருப்பதிகம் - ௩.

யல-தொழிறபெயர்; கொயதல வாயமலா-வினைத்தொகை கோல-கோலம எனபதன் விகாரம; 'சீல' என்பதுபோல. 'குயல வாய மலர்' என்ற பாடத்துக்கு - 'குவிநதவாயையுடைய பூ' என்று பொருள். (௨௪)

தலைமகனதுதாரில்ஈடுபட்ட தலைவி ஆற்றாதுகூறல்.

௨௫. எஙகோலவளைமுதலாக்கண்ணனமண்ணுமவிண்ணும்மளிக்
செஙகோலவளைவுவிளைவிக்குமாறிறல்சேரமரா [குஞ
தங்கோனுடையதஙகோனுமபரெலலாயவர்க்குந்தங்கோ
னங்கோனுக்குநதுழாயெனசெயயாதினிநானிலததே.

(இ - ள்.) திறல சேர் அமரர்தம கோனுடைய தம கோன்-வலிமை பொருநதிய தேவாகளெலலார்க்குந தலைவனான பிரமதேவனுக்குந தலைவனும, உமபர் எலலாயவர்ககும தம கோன்-பரமபததநிலுள்ள நிததியசூரிகளெலலோர்க்குந தலைவனும, நம கோன் - (இவ்வுலகததிலுள்ள) நமககுந தலைவனும ஆகிய எமபெருமான், உககும - விருமபித தரிததுள்ள, துழாய-திருததுழாயானது, எம கோல வளை முதல ஆ- எமது(கையிலுள்ள) அழகிய வளைநிமித்தமாக, கண்ணன மண்ணும விண்ணும அளிக்கும செங்கோல வளைவு விளைவிக்கும- அபபெருமானது லீலாவிபூதியையும நிததியவிபூதியையும பாதுகாககிற தட்டிலலாதகட்டளையின் நேர்மைககும ஒருகோடுதலை உண்டாக்காநின்றது, இனி நானிலதது என செயயாது - இஙஙனமானபின்பு (அததுழாயதான) இவ்வுலகததில வேறு எததீஙகைததான செயயமாட்டாது? (எ - று)—ஆல-ஈற்றசை, தேற்றமுமாம

கூடியநிலையில தலைமகனுடனபின்பரிசததால இன்பநதநத திருததுழாய, பிரிநதநிலையில அவ்வின்பததை ஞாபகபபடுததி ஆற்றாமையை மிகசசெயது, அதனால உடமபுமெலிநது கைவளைகள கழன்றுவிழபபண்ணி, பக்ஷபாதமிலலாமல எலலாவுயிர்களையும பாதுகாககிற எமபெருமானது செஙகோன்மைககும என்னைபபாதுகாவாமையாகிய ஒருகுறையை உண்டாக்குகிறது, இன்னும என்னபாடுபடுததுமோ? என்று தலைவி இரஙகினாள். 'எஙகோல வளைமுதலா' எனபதற்கு-அழகிய வளையையுடைய எமதுமகள்காரணமாக என்று உரைதது, இதனைச செவிலிததாயவார்ததையென்றலும ஒககும 'எம' என வநததனால, தோழிவார்ததையென்றல சிறபபன்று. கீழ ஐநதாம பாட்டோடு இதற்குஉள்ள ஒற்றுமைவேற்றுமைநயஙகளை உயததுணாக, இனி, தலைவனான கண்ணபிரானேதானே (பிரிநது மீண்டுவாராது உபேக்ஷிததலால) எமகோலவளைகாரணமாக மண்ணும விண்ணும அளிகநந தன செஙகோலுக்கு ஒருவளைவை உண்டாககுகிறான், இனி, அவனதுபரிவாரமான திருததுழாயதான் என்செயயமாட்டாது? என்றும பொருளகொளளலாம; அவன் உபேக்ஷிததமாததிரததிலே இது அழிககுமெனறு கருதது. என்னுடைய வளைநிமித்தமாக இவனே அழிககததொடஙகினால வேறு ரக்ஷிபபார் ஆர்? என்க.

இரண்டாம அடியில, மால என எடுதது, திருமாலென உரைததலுமாம 'அமராதஙகோன்' - இநதிரனெனக கொளளுதல சிறபபன்று. நம கோன் உககும துழாய - *"தோளிணைமேலும நனமாாபின்மேலும சுடாமுடிமேலும, தாளிணைமேலும புனைநத தணணநதுழாயுடை யமமான்" என்றபடி திருததுழாய திருமாலுக்கு மிகபபிரியமாதல அறிக. இனி, 'உகக்குந துழாய' என்றதில, அவனது காரியததைத தான முன்னின்று தலைககட்டிததரவல்லதாய அஙஙனஞசெயதலால அவனுககுத தன்னிடம பிரியததை

* திருவாயமொழி - ஒனபதாநதிருபபதிகம - எ.

வளர்த்து அதனால் அவனைத் தனக்குச் சுவாதீனப்படுத்தியுள்ள திருத்துழா யென்பதுந் தோன்றும். 'திறலசேரமரர்தங்கோனுடைய தங்கோன்' என்பதற்கு- மகிமைமிக்க நித்தியசூரிகளுக்குத் தலைவரான சேனைமுதலியாருக்குந் தலைவனாகவுள்ளவ னென்று உரைத்து, 'உம்பரெல்லாயவர்க்குந் தங்கோன்' என்பதற்கு - தேவாதிதேவனென்று உரைப்பர், நம்பிள்ளை.

நானிலம - நான்காகிய நிலங்களை யுடைய தென்பது பூமிக்குக் காரணப பெயர்; நாலவகைநிலங்கள் - முலலை, குறிஞசி, மருதம, நெயதல என்பன: முல்லை - காடும, காடுசார்ந்தஇடமும்; குறிஞசி - மலையும, மலைசார்ந்தஇடமும; மருதம - நாடும, நாடுசார்ந்தஇடமும; நெயதல - கடலும, கடலசார்ந்த இடமும். மற்றொன்றாகிய பாலைநிலம, பிராணிசஞசாரத்துக்கு உரியதன் றென்று இங்கே விலக்கபபட்டது; அது, நீருமநிழலு மிலலாத கொடுநிலம பாலைக்குத் தனியே நிலமிலலை யென்பதும, நாலவகைநிலங்களுந் தத்தநதன்மைகெட்டவிடததே பாலையா மென்பதும சிலஆசிரியாகொளகை.

எமபெருமானது இனிமையிலே ஈடுபட்ட ஆழவார் அவ்வினிமைமிகுதிமக்குஆற்றாமைமிகுவிதது வருததுவதாதலைக் கூறுதல,இதற்கு உள்ளுறைபாருள். திறலசேரமராதங்கோனுடைய தமகோன உமபரெலலாயவர்குந தங்கோன் நங்கோன் உகக்கும துழாய - இம்மை மறுமை வீடு என்னும மூன்றுஉலகங்களி லுள்ளார்க்கும ஒபபததலைவனாகவுள்ளவனது இனிமை, எம கோலவளை முதலா - எமமிடததுவிளங்குகிற பாரதாதிரியம காரணமாக, கணணன் மனனும விணணும அளிக்கும செஙகோல வளைவு விளைவிக்கும - உபயவிபூதியையும நிலைநிறுததுகிற பகவத்சங்கலபததைப பின்பற்றி ஆறியிருக்கவொட்டாதபடி விரைவையுணடாக்கி அவனதுபாதுகாபபு எமமிடம நிலைகுலைநத தென்று கருதுமபடி செயகிறது; இனி நானிலதது என் செயயாது - இனி அது பிரபஞசததில எதைததான்செயயமாட்டாது? என்க. அன்றி, 'எம கோலவளை முதலா' என்பதற்கு - நமஆழவாாவிஷயமாக என்று உரைததால, இது அவாபககல அன்புடைய ஞானிகளவாாததையாம.

'எலலாயவா' என்பதில, 'எலலாம'- பகுதி, மகரம கெட்டது ய்- எழுத்துபபேறு, அ - சாரியை, வ் - சநதி, அர் - விகுதி. நாலநிலம - பணபுததொகையன்மொழி. விணணுமமளிக்கும, மகரவொற்று - விரிததல. (௨௫)

## நகர்காட்டல்.

௨௬. நானிலம் வாயககொண்டு நனனீரறமென்று கோதுகொணட, வேனிலஞ்செலவனசுவைத்துமிழபாலைகடநதபொனனே, கானிலநதோயநது விண்ணோாதொழுங்கண்ணன்வெஃகாவுதமபூந, தேனிளஞ்சோலையப்பாலதெப்பாலைகருஞ்சேமத்ததே.

(இ - ள.) நால நிலம வாய கொணடு - (முலலை குறிஞசி மருதம நெயதல என்னும) நாலவகைநிலங்களையும (தனகிரணமுகததாலே) வாயிற பெயதுகொணடு, நல நீா அறமென்று - சாரமான நீாபபசை அறுமபடி மென்று, கோது கொணட - அசாரமானபாகம (இதுவென்று) அறிநத, வேனில அம் செலவன - வெப்பததைத தனககுரிய சிறந்தபொருளாகவுடைய சூரியன், சுவைத்து உமிழ- உருசிபாாதது வெறுத்துக்கழித்த,பாலை - பாலைநிலத்தை, கடநத - தாணடிவநத, பொன்னே - பொன்போன்றவளே! விணணோர் - மேலுலகததோாயாவரும, கால நிலம தோய்நது தொழும் - (நிலநதோயதலிலலாத தமது) காலகள் நிலநதோயும்படி (இங்குவநதுநிலைததுநின்று) வணஙகும்படியான, கண்ணன் வெஃகா - கணணபிரானது திவ்யதேசமாகிய திருவெஃகாவானது, உது - அடுததுள்ளது, அம பூ தேன இள

சோலை அப்பாலது - அழகிய பூவையுந் தேனையுமுடைய இளமைமாறாத சோலை அவ்விடத்துஉள்ளது, எ பூலைக்கும் சேமத்தது-(அது நமது) எல்லாத் துன்பங்களுக்கும் (மாறாய) இன்பந்தருவதோரிடமாம்; (எ - று)

நகர்காட்டலென்பது- தலைமகளை உடன்கொண்டு இடைவழிப்பாலைகடந்து தன்னூர்க்குச் செல்கின்ற தலைமகன் அவளுக்கு வழிநடையிளைப்புத்துன்பந் தோன்றாதிருத்தற்பொருட்டு அவளைநோக்கி 'அப்பெரியநகர்காண் நம்முடைய நகராவது' என்று தனதுநகரைக் காட்டி அணிமைதோன்றக் கூறுதல் என்று திருக்கோவையாருரையால் தெரிகிறது, "கொடுங்கடலுஞ்சூழ்ந்த குழைமுக மாதர்க்குத்,தடங்கிடங்குஞ்சூழ் தன்னகர் காட்டியது" என்ற கொளுவையுங் காண்க. இது,தஞ்சைவாணன்கோவையில் 'தலைவன் தன்பதியடைந்தமை சாற்றல்' என்று கூறப்பட்டுள்ளது;இதனையே 'புணர்ந்து உடன்போன தலைமகன் நடந்துஇளைத்ததலைவியைக்குறித்து இடந்தலைப்பெய்தமைசொன்ன பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயர். தலைமகனுந் தலைமகளும் தாம் ஒருவர்க்கொருவர் தனிநிழலாயிருக்கையாலே இவர்களுக்கு இந்நிலத்தின் கொடுமையாலுண்டாகு மிளைப்பு இல்லையேயாகிலும் பொழுதுபோக்குக்காகத் தலைவன் தலைவியை நோக்கி இங்ஙனங்கூறின தென்றலு முண்டு.

*"கோத்தொழிலாளரொடு கொற்றவன் கோடி,வேத்தியல் இழந்த வியனிலம் போல,வேனிற் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்,தானலந் திருகத் தன்மையிற் குன்றி,முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து,நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" என்றபடி இயற்கையில் பாலைக்குத் தனியே நிலமின்மையும், நால்வகைநிலங்களும் தந்தம்தன்மைதிரிந்து பாலையாதலு மாகிய உண்மை, 'நானிலம் வாய்க்கொண்டு நன்னீரறமென்று கோதுகொண்ட வேனிலஞ்செல்வன் சுவைத்துமிழ் பாலை' என்றதனால் விளங்கும். 'நிலந்தான் நாலென்பாரும் அஞ்சென்பாருமாயிருக்கும்; ஐந்தென்கிறவர்கள், பாலைநிலத்தையும் தன்னிலே ஒன்றாக்கிச் சொல்லுவார்கள் நாலென்றவர்கள், இப்பாலைநிலந்தான் மற்றைநாலிலுமுண்டென்கிறார்கள், அதாகிறது - நீரும் நிழலு மில்லாத விடம் பாலையாமத்தனையிறே' என்ற நம்பிள்ளையீட்டையுங் காண்க. †"நீரின்றி வேனில் தெறுநிலம் பாலை" என்றபடி நீரின்மையே இந்நிலத்திற்குச் சிறப்பாதல் 'நன்னீரற' என்றதனாலும், சூரியன் தன்கிரணங்களால் பூமியிலுள்ளநீரைக் கவருந்தன்மை 'நானிலம்வாய்க்கொண்டு நன்னீரறமென்று' என்றதனாலும், நால்வகைநிலத்துள்ளும் இது அசாரமென்பதும் இன்பத்திற்கன்றிப் பிரிதற்றுன்பத்திற்கு உரிய இதன் கொடுமையும் 'கோதுகொண்ட', 'மென்று சுவைத்துமிழ்' என்றவற்றாலும்,இந்நிலத்துக்குஉரிய காலமாகிய நட்பகலும் இளவேனில்முதுவேனில்களும் 'வேனில்' என்றதனாலும்,இதற்குத்தெய்வம் சூரியனென்பது 'வேனிலஞ்செல்வன்' என்றதனாலும் குறிக்கப்பட்டன. 'வேனிலஞ்செல்வன் சுவைத்துமிழ் பாலை' என்றதனால், உஷ்ணகிரணங்களை இயல்பிலுடைய சூரியனும் வெறுக்கும்படியுள்ளது பாலையின்கொடுமை யென்பது தோன்றும். ‡"பருதிவானவ னிலம்பசையறப் பருகுவான்,விருந்துமேற்கொண் டுலாம் வேனிலே யல்லதோ, திருந்துவேறின்மையா லெரிசுடர்க்கடவுளும், கருதின்வே முள்ளமுங் காணில்வேம் நயனமும்" என்பதுங் காண்க 'நன்னீரறமென்று கோதுகொண்ட வேனிலஞ்செல்வன்' என்றபின் மீண்டும் 'சுவைத்து' என்றது, சிறிதுமநீரில்லாதபடி பசையறப்பருகினமை தோன்றுதற்கு. பாலை - நீரும் நிழலு மில்லாத வறு நிலம். 'பாலை கடந்த பொன்னே' என்றது, இப்படிப்

* சிலப்பதிகாரம், காடுகாண்காதை, ௬0 - ௬௬.
† திவாகரம் - இடப்பெயர்த்தொகுதி.
‡ கம்பராமாயணம் - பாலகாண்டம் - தாடகைவதைப்படலம் - ௫.

பட்டகொடிய அந்நிலத்தைக் காலால் நடந்து கடந்துவந்து மிகவருந்தவேண்டியநிலையிலும் தலைமகனைப்பிரியாது அவனுடன் வருதலையே ஓரின்பமாகக் கருதி எரிகிறநெருப்பில் ஓட்டவைத்த பொன்போல ஒளிவிடுகிற தன்மையைக் கூறி விளித்தபடி.

காலநிலந்தோயாமை, தேவர்க்கு இயல்பு; இங்கு, அதுமாறிக் காலநிலந் தோய்வரென்று கூறினது, அவ்வுலகத்தினும் இத்திவ்யதேசத்துக்கு உள்ள மகிமையைக் காட்ட. கால்நிலந்தோய்பவரான மண்ணுலகத்தோருங் கால பொருந்துதற்கரிய பாலையின் வெப்பத்தைத் தணிக்கவல்ல வெஃகா காலநிலந் தோயாதவரான விண்ணுலகத்தோருங் காலபொருந்துமடியான தென நயங் காண்க. அன்புமிகுதியால், இடம்பாராது காலதோயவர் திருவெஃகாவிலெழுந்தருளியுள்ள எம்பெருமான் பத்துடையடியவாக் கெளிமையால் *கணிகண்ணனென்னும் பாகவதா சொன்னபடி தான்செய்து 'சொன்னவண்ணஞ்செய்த பெருமாள்' என்றும், 'யதோக்தகாரீ' என்றும் திருநாமம்பெற்றமை தோன்ற, சௌலப்யத்தைக் குறிக்கிற 'கண்ணன்' என்றபெயரால் குறித்தது. வெஃகா-திருமாலினது நூற்றெட்டுத்திருப்பதிகளுள் தொண்டைநாட்டில் காஞ்சீபுரமென்கிற பெருமாள்கோயிலிலுள்ளதொரு திவ்யதலம் [ஆழ்வார்களுட் சிறந்த இந்நம்மாழ்வார் தமது முதல்திவ்யப்ரபந்தமாகிய இத்திருவிருத்தத்தில் திருவேங்கடம் திருவெஃகா திருவரங்கம் என்ற மூன்று திருப்பதிகளைமாத்திரமே கூறியுள்ளதுபற்றியும், அம்மூன்றும் 'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்று சிறப்பித்துக்கூறப்படுமென்பர் அறிந்தோர்] உது என்றது, தன்முன் சிறிதுசேய்மையிலுள்ளதைக் குறித்தது; †"செய்குன்றுவ யிவைசீர்மலர்வாவி . ..பொய்குன்றவேதியரோதிட மூந்திடம்" என்பதில், 'உவை' 'உந்திடம்' என்றவற்றைக் காண்க. இளஞ்சோலை எப்பொழுதும் இளவேனிலாகிய வசந்தகாலமாகவே செழித்துத்தோற்றுகிற சோலை, இதுகூறினது, தாபந்தணிதற்குத் தக்கஇடமென்று காட்ட. நல்லகுறிஞ்சிநிலத்திலேகூடி அரியபாலைநிலங்கடந்து இனியமருதநிலம்புகுகிறோமென்று காட்டியபடி. 'எப்பாலைக்கும்' என்பதில், பாலை என்பது - இலக்கணையாய், துன்பத்தைக் குறித்தது, பான்மையென்னும் பண்புப்பெயர் மைவிகுதிபோய் ஐ விகுதி பெற்றுப் பாலையென நின்றதெனக்கொண்டு, எந்தநிலைமைக்கும் எனவுரைத்தலும் ஒன்று 'எப்பாலைக்குஞ் சேமத்தே' என்பதற்கு, நம்பிள்ளையீடு:—'எல்லாப்பாலைநிலங்களாலவந்த வெம்மையையும் போக்கி நமக்குரக்ஷகமுமான தேசங்காண் அது; இந்தப்பாலைநிலமேயன்றிக்கே இன்னமுஞ் சில பாலைவனமுங் கடக்கலாங்காண் இந்நிலமுண்டாக' என்பது

ஆழ்வார் கொடியசம்ஸாரமாகத்தைக் கழித்த தன்மையையும், எம்பெருமானுகந்தருளின நிலத்தின் மிக்கஇனிமையையும், அணிமையையும், அவர்க்குப் பாகவதா எடுத்துக்கூறி, அவரருமையைத் தவிர்த்தல், இதற்கு உள்ளுறைப்பொருள். முன்இரண்டடி-ஒளிவடிவனான எம்பெருமான் பலவகை நிலைகளையும் திருவுள்ளத்திற்கொண்டு ஆராய்ந்து அவற்றில் அசாரமென்று கழித்ததும் பசையற்றதும் வெப்பம்மிக்கதுமான சம்ஸாரத்தைக் கடந்து மிக்கஒளிபெற்றவரே' என்று ஆழ்வாரைப் பாகவதா விளித்தபடி. பின்இரண்டடி - மீளாவுலகத்தவரான நித்யஸூரிகளும் மீண்டுவந்து வசிக்கும்படியான மகிமையுள்ள ஸர்வசுலபனான ஸர்வேச்வரனது ஆசசாவதாரஸ்தலம் அதிசமீபமாய் மிகஇனிமைதருவதாய் எவ்வகைத்துன்பமுந் தவிர்ப்பதாய் க்ஷேமகரமான புகலிடமாய் உள்ளதென்றபடி.

---

* இச்சரித்திரத்தை யாம் எழுதிவெளியிட்டுள்ள **ஆழ்வார்கள்சரித்திரத்**தில் திருமழிசையாழ்வார்வரலாற்றினுட் பரக்கக் காண்க.

† திருக்கோவையார் - ௨௨௫.

பாலைவனத்து நடந்துசெல்கிற ஸ்ரீராமலக்ஷ்மணர்க்கு விசுவாமித்திரமகாமுனிவன் உபதேசித்த பலை அதிபலை என்னும் மந்திரவித்தைகள்போல, இத்தலைவன்வார்த்தை தலைவிக்குத் தாபந்தணிக்குமென்க.

'அம்பூந்தேனிளஞ்சோலை அப்பாலது' என்றது, திருவெஃகாவுக்கு அருகிலுள்ள 'திருத்தண்கா' என்னுந் திருப்பதியைக் குறித்த தென்னவுமாம்: [திருத்தண்கா-விளக்கொளியெம்பெருமான் சந்நிதி]

'வேணிலஞ்செல்வன்' என்பதில், அம் - சாரியையாகவுமாம். பொன்-உவமையாகுபெயர்; திருமகள்போன்றவளுமாம். உது - உகரச்சுட்டடியாப்பிறந்த பெயர்; இதில், உகரச்சுட்டு - மிக்கசேய்மையும் மிக்கஅண்மையு மல்லாத இடையிடத்தைக் குறித்தது. சேமம்- க்ஷேமமென்னும்வடசொல்லின் திரிபு.

திருவெஃகாவிலெம்பெருமான், பிரமன்செய்த வேள்வியை அழிக்க வந்த வேகவதிநதியைத் தடுக்கும்பொருட்டு அதற்கு அணையாகக் குறுக்கிற பள்ளிகொண்டருளினவ னாதலால், அப்பிரானுக்கு, வடமொழியில் 'வேகா ஸேது' என்று பெயர், அது தமிழில் 'வேகவணை' என்று மொழிபெயர்ந்து அது பின்(நாகவணையென்பது நாகணையென விகாரப்படுதல்போல)'வேகணை' என விகாரப்பட்டு, அது பின்னர் 'வெஃகணை' எனத் திரிந்து, தானியாகு பெயராய்த் தலத்தைக் குறித்து, அது பின்பு 'வெஃகா' என மருவிவழங்கிற்றென நுண்ணிதின் உணர்க.

'தேனலஞ்சோலை' என்றும் பாடம். (௨௬)

## தலைவி தார்பெற்று மகிழ்தல்.

௨௭. சேமஞ்செங்கோனருளேசெறுவாருநட்பாகுவரென்
றேமம்பெறவையஞ்சொல்லுமெய்யேபண்டெல்லாமறைகூ
யாமங்கடோறெரிவீசுநங்கண்ணனந்தண்ணந்துழாய்த்
தாமம்புனையவவ்வாடையீதோவந்துதண்ணென்றதே.

(இ - ள்.) செம் கோன் அருளே- (எல்லாப்பொருள்களுக்கும்) நேரிய தலைவனான எம்பெருமானது திருவருளே, சேமம்-(நம்மைப்) பாதுகாப்பது, (என்று கொள்ள), செறுவாரும் நட்பு ஆகுவர்-பகைப்பவரும் அநுகூலராவர், என்று—, ஏமம் பெற - உறுதிபொருந்த, வையம் சொல்லும்-உலகத்தோர் கூறுகிற, மெய்யே - உண்மைமொழியின்படியே,—பண்டு எல்லாம் அறைகூய் யாமங்கள்தோறு எரி வீசும்-முன்பு எல்லாம் [பிரிந்திருந்தகாலத்துப்] பகைத்து எதிர்வந்து போருக்கு அழைத்து இரவுகள்தோறும் அக்கினிச்சுவாலையை (எம்மேல்)வீசுந்தன்மையுள்ள, அ வாடை-அந்தக்காற்று, நம் கண்ணன் அம் தண் அம் துழாய் தாமம் புனைய - நமது தலைவனான எம்பெருமானது அழகிய குளிர்ந்த திருத்துழாய்மாலையை (யாம்பெற்று)த் தரித்ததனால், ஈதோ வந்து தண்ணென்றது - இதோ வந்து (இப்பொழுது) குளிர்ச்சியாயிராநின்றது; (எ - று.)—ஏ-தேற்றம்.

'நாயகனான ஈசுவரனுடைய திருத்துழாய்மாலையைத் தரிக்கையாலே, முன்புநலிந்துபோந்த வாடை தணிந்தபடியை நாயகி உட்கொண்டுரைத்த பாசுரம்' என்றார் அழகியமணவாளசீயரும். 'தலைவி ஆற்றாமைதீரத் தலைமகன் இரவிடத்துக்கலந்தமை தோற்றுவித்தது' என்றலும் உண்டு.

எம்பெருமானதுகுணவிசேஷத்தைஅநுசந்தித்து அதனால் ஒருவாறுஆற்றாமைதணிந்தஆழ்வார்,முன்புஅப்பெருமானைஞாபகப்படுத்திக்கொண்டுஇடைவிடாதுவருத்திவந்த இவ்வுலகத்துப்பொருள் இப்பொழுதுஇனியதாகிற தன்மையைக் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். சர்வேசுவரனது கருணையே ரக்ஷகமானால் அவனுக்குஅடங்கியஅனைவரும் அநுகூலிப்ப ரென்று நம

புதலுண்டாமபடி உயர்ந்தோர்சொலலுஞ் சததியவாக்கின்படியே, முன்புபிரி வாற்றாத நிலையில வலியவந்து எதிரபபட்டு எபபொழுதுந் தாபஹேதுவாய நின்ற லௌகிகபதார்த்தம சாவகலபரூன எமபெருமானது பிரசாதத்தைப பெற்றவளவிலே அநுகூலித்து ஆற்றாமைதணிபபதாயதது எனக் காணக.

செஙகோன் - நீதிதவறாத தலைவனுமாம. அருளே, ஏ - பிரிநிலை. செறு வார்-எதிர்கால வினையாலணையும்பெயர். நட்பு-ஆகுபெயர். வையம-பொருள் கள் வைக்கபபடும இடம. அறைகூய - இறநதகாலவினையெச்சம. கூய+ யாமம=கூயாமம், தனிக்குறிலைச்சாராத யகரம, யகரம வரக் கெட்டது. யாமம - காலபபகுதியுமாம, வடசொல ஏழரைநாழிகைகொண்டது. வீசும வாடை யென இயையும. தாமம-வடசொல. ஈதோ - இதே என்னும வட சொலலின் பிராகிருதச்சிதைவான 'இதோ' என்பதன் நீட்டல. செஙகோன ருளே சேமம, வையம மெயயே சொலலும என்று தனிவாக்கியஙகளாக முடித்தலுமாம. 'மெயயே' என்றவரையில பொதுபபொருளும, மற்றது சிறபபுபபொருளு மாதலால, வேற்றுப்பொருள்வைப்பணி, [அர்த்தாநதர நயாஸாலஙகாரம]. 'செருவார்' என்று பாடமோதி, போருக்கு உரியா ரென்றலும ஒன்று (உஎ)

## தலைவனைப்பிரிந்த தலைவி வாடைக்கு வருந்தி யிரங்கல்.

உஅ. தண்ணந்துழாயவளைகொளவதுயாமிழப்போநடுவே
வணணந்துழாவியோர்வாடையுலாவுமவளவாயலகாற்
புணணந்துழாமேபொருநீர்த்திருவரஙகாவருளா
யெணணந்துழாவுமிடத்துளவோபணடுமினனன்னவே.

(இ - ள்) வள் வாய அலகால-கூர்மையான வாயின் நுனியினால, புள்- பறவைகள், நந்து உழாமே- (தன்னிடத்து உள்ள) சஙகுகள் கொத்தாதபடி, பொரு- அலைமோதுகிற, நீர்- காவிரிநீர்சூழநத, திரு அரஙகா- ஸ்ரீரஙகமென் னுந திருப்பதியுடையவனே! தண அம துழாய - குளிர்நத அழகிய (உனது) திருத்துழாய, வளை கொளவது - (எமது) கைவளைகளைக் கொள்ளைகொள் ளாநின்றது; யாம இழபபோம - (உன்பக்கல ஈடுபட்ட) நாம (அதற்கு வளையை) இழக்கக்கடவோம, (இஙஙனமிருகக), ஓர வாடை - (எமக்கும தனக்கும யாதொருசமபந்தமுமிலலாத)ஒருகாறறானது, நடுவே-இடையிலே (பிரவேசித்து), வணணம துழாவி உலாவும - (எமது) மாமைநிறததை (க்க வாதறபொருட்டு)த தடவித்தேடிக்கொணடு சஞ்சரிக்கத தொடஙகுகிறது; அருளாய- (அதற்கு யாம மாமையிழககாதபடி எமபக்கல நீ) கருணைசெயது வந்துசேர்ந்தருளவாய, எணணம துழாவும இடத்து - மனந்தடுமாறுமளவி லும, பணடும இன்னன்ன உளவோ - முன்பும இபபடிப்பட்ட [எமநிலைமை களபோன்ற] நிலைமைகள (வேறெஙகேனும) உள்ளனவோ? (எ - று)

'வாடையாலேநோவுபட்டு நாயகனான எமபெருமானைநோக்கி நாயகி தன் னிலஇரஙகின பாசுரம' என்பர் அழகியமணவாளசீயரும. ஆற்றாமைமிகுதி யால தலைவனை எதிரில நிறகிறபபோலப பாவித்து முன்னிலைபபடுத்திக்கூறி யது இது, அன்றி, உருவெளிப்பாட்டில கணட தலைவனை நோக்கி யுரைத்த துமாம. உனதுசமபந்தத்தை நேரிறபெற்ற திருத்துழாய பிரிந்தநிலையில கூடியநிலையை ஞாபகபபடுத்தி மிகவருத்தி மேனிமெலிவை யுணடாக்குத லும, அதற்கு ஆற்றாது நாம மெலிந்து வளையிழத்தலும இயலபே; அதுவ ன்றி,இயலபிலஉளக்குஅஞ்சிநடக்குநதன்மையதான காற்று உன் துசமபந்தம பெற்ற நம்மைச சமயமபார்த்து வருத்திக் கொள்ளைகொள்ளத் தொடங்கு வது தகுதியோ? அஙஙனமஆகாதபடி எமமைக் காத்திடவேணடும; உன்பக்

கல்அன்புவைத்தாரில் எம்மைப்போல் வருந்தியவரும் உன்னுடைய உபேக்ஷிக்கப்பட்டவரும் இதுவரையிலும் எங்கும் எவரு மில்லையே யென்றாள்.

ஓவாவடை - பிரிந்தாரை வருத்துதலில் துணைவேண்டாமல் அஸஹாயமான திறமையுள்ள வாடை 'உலாவும்' என்றதனால், கம்பீரமான செருக்கு நடை தோன்றும். மூன்றும்அடியால், உன்துநாட்டுக்கு உறுப்பான நீரும் தன்னையடைந்த பொருளை எதிரிகவராதபடி திரைக்கையாற் பொருது காத்திடுகின்றதே;உனக்குமாத்திரம் அது இயல்பாகாதோ?எனக் குறிப்பித்தபடி.

திருவரங்கம் - நூற்றெட்டுத் திருப்பதிகளுள் முதலதும் முக்கியமுமான தலம்; சோழநாட்டுத் திவ்யதேசம். இது - கோயிலென்றும், பெரிய கோயிலென்றும் வழங்கப்படும். அரங்கம் - ரங்க மென்னும் வடசொல்லின் திரிபு. திருப்பாற்கடல் சூரியமண்டலம் யோகிகளது உள்ளக்கமலம் இவை யெல்லாவற்றிலுங்காட்டில் திருமால் இங்கு ரதியை [ஆசைப்பெருக்கத்தை] யடைந்து திருவுள்ளமுகந்து எழுந்தருளியிருத்தலால், 'ரங்கம்' எனப் பெயர் பெற்றது. இங்கு, அரங்க மென்பது - விமானத்தின் பெயர் திருப்பதிக்காதோர் ஆகுபெயர் [தானியாகுபெயர்] திருமகளாருக்குத் திருநிருத்தஞ்செயுமிடமா யிருத்தலாலும், ஸ்ரீவைஷ்ணவர்களது திருவுக்கு [மேன்மைக்கு]க் கூத்துப்பயிலிடமா யிருத்தலாலும், உபயகாவேரிமத்தியி லுள்ளதோர் ஆற்றிடைக்குறையாதலாலும், இப்பெயர் வந்த தெனினும் அமையும்

அருளாய் - நீ அருளுகிறாயில்லை யென்றுமாம், செய்யாய என்னும் வாய்பாட்டுச்சொல், உடன்பாடு எதிர்மறை இரண்டுக்கும் பொது.

எம்பெருமானைச் சேராதநிலையில் அவனது இனிமையும் இவ்வுலகத்துப் பொருளும் அவனை நினைப்பூட்டுவனவாய்த் தம்மை வருத்தும் நிலைமையை ஆழ்வார் அப்பெருமானை முன்னிலைப்படுத்திக் கூறுதல், இதற்கு உள்ளுறை பொருள். தண்ணந்துழாய் வளைகொள்வது யாமிழப்போம் - குளிர்ந்ததன்மையையும் அழகியகுணத்தையுமுடைய உனது இனிமை எமது பிறர்க்குஉரிமையல்லாததன்மையைக் கவர்ந்துகொள்ளவுமாம், அதனை அவ்வினிமைக்கு நாம் இழக்கவுமாம் (அதுவன்றி), ஓவாவடை நடுவே வண்ணம் துழாவி உலாவும் - உன்கட்டளையை அனுசரித்து நடக்கக்கடவதான லௌகிகபதார்த்தம் எமது உருவத்தை மாற்றலுற்றது, புள் நந்து வள் வாய அலகால் உழாமே பொரும் நீர் திருவரங்கா - வஞ்சனையுள்ள மாயை சுத்தமான ஆத்துமாவைக் கொடியஊழ்வினைமூலமாக வருத்தாதபடி தடுத்துக்காக்கிற குணத்தையுடைய ஸ்ரீரங்கநாதனே! அருளாய் - (அதுபோல) எம்மிடத்தும் கருணை செய்வாய், எண்ணம்துழாவுமிடத்து பண்டும் இன்னன உளவோ - துன்பத்தால் மனந்தடுமாறுகிறநிலையிலும் இப்படிஇரங்காதிருந்தவை முன்பும் உண்டோ? இல்லை யென்றபடி ஸ்ரீஜாநகிபிராட்டி, திரௌபதி, கஜேந்திராழ்வான், பிரகலாதன், விபீஷணன், காகாசுரன் தொடக்கமான அளவற்ற அடியார்களிடத்தெல்லாம் இப்படிப்பட்ட உபேக்ஷை கண்டதில்லையே எனக்கே இங்ஙனமாயிற்று என்று ரென்க

உழாமே - மே விகுதி பெற்ற எதிர்மறைவினையெச்சம் உழுதல் - கொத்திக்கிளறுதல் உளவோ, ஓ - எதிர்மறை. இன்னன்ன - பெயர்; இன்ன அன்ன என்பதன் தொகுத்தல்: இவைபோல்பவை யென்க 'எண்ணந்துழாவுமிடத்து' என்பதற்கு - மனத்தினால் ஆராய்ந்துநோக்குமிடத்து என்றுபொருள்கொள்ளுதலும் ஒன்று (௨௮)

## தலைமகள் அன்னப்பறவையை வெறுத்துரைத்தல்.

௨௯. இன்னன்னதூதெமமையாளற்றப்பட்டிரந்தாளிவளென்
றன்னன்னசொல்லாப்பெடையொடும்போய்வருநீலமுண்ட

மின்னன்னமேனிப்பெருமானுலகிற்பெண்டூதுசெல்லா
வன்னனனநீர்மைகொலோகுடிச்சீர்மையிலன்னங்களே.

(இ - ள்.) குடி சீர்மை இல அன்னஙகள் - உயர்குடிபபிறபபால வருஞ சிறபபு இலலாத இவ்வன்னபபறவைகள்,—'இவள்—, ஆள் அற்றம பட்டு - (வேறுதனக்கு)ஆளிலலாமையால, இன்னன்ன தூது-இப்படிப்பட்ட தூதாக, எமமை—, இரநதாள் - குறைகூறி வணக்கததோடு வேண்டிக்கொண டாள்,' என்று - என்றுநினைத்து, அன்னன்ன சொலலா - அபபடிபபட்ட தூதுமொழிகளை(த தலைவனிடஞ சென்று) சொல்லாமல, பெடையொடும போய வரும - (தமககுஇனிய) பெணபறவைகளுடனே (மநதகதியாக மகிழ சசியோடு) உலாவிததிரிகின்றன,(இதறகுக்காரணம:—), நீலம உணட மின் அன்ன மேனி பெருமான் உலகில - நீலநிறததையுட்கொணட மின்னல போன்ற திருமேனியையுடைய எமபெருமானது உலகததில, பெண தூது செலலா - பெணகளுககாகத தூதுசெலவ திலலாத, அன்னனன நீரமை கொலோ - அபபடிபபட்டதனமையை யுடைமையோ? (எ - று.)

'நாயகனை ஈசுவரவிஷயததிலே தூதாக அபேக்ஷிக்கசசெயதேயும அதுசெயயாதன சிலஅன்னஙகளைககுறிதது வெறுததுசசொலலுகிற நாயகி பாசுரம'என்பர அழகியமணவாளசீயரும இததுறை, திருக்கோவையாரில 'அனனமோடழிதல' எனபபடும 'உலகமெலலாந துயிலாநின்ற இநநிலை மைககணணும யான் துயிலாமைக்குக காரணமாகிய என்வருததததைச சென்று அவர்க்குசசொலலாது தான தன்சேவலைப பொருநதிக் கவற்சியின் றித துயிலாநினறது என அனனததோடு அழிநது கூறுநிறறல' என்ற உரை யும,*"சேவலதழீஇசசென்று தானதுஞசும யான் துயிலாச செயிரஎம,காவல தழீஇயவாககு ஓதாது அளிய களியன்னமே" என்ற திருக்கோவையாரும, "இன்னகையவ ளிரவுநதுயரம, அன்னததோ டழிநதுரைத்தது" என்ற கொளுவும இஙகுக காணததககன

இன்னனன தூது - எலலாபபொருள்களினும மேலான பொருளாகிய புருஷோததமனிடததுககுச செலலுந தூது, தாழ்நத இடத்துக்குத தூது செலவதோ என்று இகழததககதனறு எமமை - விரைநதுதூதுசெலலு தறகுஉரிய சிறகமைதி முதலிய கருவிகளிற குறைவிலலாத எமமை, எமமா லாகாதென்று ஆறறலினமை கூறி மறுததறகு இடமிலலை. போகாமலும வாராமலும இஙகேயே தஙகுகின்றனவிலலை, தமகாரியததிறகாக இனத் தோடு உலலாசமாகப போயவருகின்றன அஙஙனஞ செலலுமபொழுது, எமகாரியததையுஞ செயயலாமே, அது இலலை யென்பது தோன்ற, 'அனன ன்ன சொலலாப பெடையொடும போயவரும' என்றுள. 'பெடையொடும' என்றதனால, தனகாதலியோடு போனதனால நமகாதலை மறநதிட்டன என் றவாறு. இன்னன்ன தூது - நவவியாதாணபணடிதனபோலவாடை விடுதற கேறற தூது. இரநதாள - இவள், தனபெணமையும பாராது நாமபறவை யென்பதும நோக்காது நமமை மிகப பிராாததிததாள். ஆள்அறறபபட்டு - வேறு ஆளைச சுட்டிககாட்டிவிட்டு விலகச சநதாபபமிலலை. எமபெருமான்தி ருமேனியிலுளள கருமைநிறததையுந திவ்வியவொளியையும பற்றி, 'நீலமு ணடமினனன்னமேனி' என்றது, இனி, மின்உணடநீலமஅன்ன மேனி யென மாறிஇயைதது, மின்னறகொடியை நடுவிலேகொணட நீலமேகததை யொ தத திருமேனி யெனக கூறினுல, மின்னல - திருமார்பிலுள்ள திருமகளுக கும, மேகம- திருமேனிக்கும உவமையாம. பெணதூதுசெலலா அன்னனன நீர்மைகொலோ - அநுமான்தூது, கணணன்தூது முதலிய வரலாறுகளில

* திருக்கோவையார - ௧௯௧.

ஆடவர்பொருட்டாகவே தூதுசெல்லுதல் மரபா மென்றும், அதனால் பெண் பிறந்தார்க்குத் தூதுசெல்லக்கடவேமல்லே மென்றுங் கருதினவோ? என்றபடி, (நைடதத்திலுள்ள அன்னத்தூதும் முதலில் நளனிடத்தினின்றுசென்றதாதல் காண்க.) தன்கருத்தின்படி நடவாததால், 'குடிச்சீர்மையி லன்னங்கள்' எனக் குலத்தையுமுட்படப் பழித்தாள். *"நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக், குலத்தின்க ணையப் படும்" என்றபடி உயர்குடிப்பிறந்தார்க்கு இயல்பாகிய இன்சொல் இகழாமை உபகரித்தல் முதலிய நற்குணங்கள் இல்லாமையால், குடிச்சீர்மையில்லாத அன்னங்க ளென்றது. †"அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம், பண்புடைமை தூதுரைப்பான் பண்பு" என்றதனால், தூதர்க்கு உயர்குடிப்பிறப்பும் இலக்கணமாதல் அறிக. ‡"இயம்புகின்றகாலத்து எகினம் மயில் கிள்ளை, பயம்பெறுமேகம் பூவை பாங்கி—நயந்தகுயில், பேதைநெஞ்சம் தென்றல் பிரமரம் ஈரைந்துமே, தூதுரைத்து வாங்குந் தொடை" எனத் தூதுவிடப்படுமவற்றுள் அன்னம் முதலாதல் அறிக.

ஸ்வாபதேசத்தில் 'தூது' என்பது ஆசாரியவிஷயத்தை என்பர். எம்பெருமானைச் சேரப்பெற்ற ஆழ்வார் தம்முடைய ஆற்றாமையை ஒருவர்முகமாக அவனுக்கு அறிவிக்கவென்று நினைத்துத் தாம் வேண்டியவிடத்திலும் ஒருவரும் தக்கவர் நேரிடாமல் அவரவர் தத்தங்காரியத்திலே அபிமுகராயிருக்க, ஆழ்வார் வெறுத்துக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள் 'இன்னன்னதூது' என்றதனால், ஒப்புயர்வற்ற மேலான இடத்திற்குச் செல்லுந் தூ தென்பதும், 'எம்மை' என்றதனால் ஆழ்வார்நிலையை எம்பெருமான் பக்கல் விண்ணப்பஞ்செய்தற் கேற்ற ஞானம் முதலிய சாதனங்களில் தமக்குக் குறைவில்லாமையும், 'ஆளற்றப்பட்டு' என்றதனால் ஆழ்வாரது வேறு கதியின்மையும், 'இரந்தாளிவளென்று' என்றதனால் அவனையே தஞ்சமாகப்பற்றிய பரதந்திரமாயிருக்கை தவிர்ந்து நம்மையும் இவர் பிரார்த்தித்தாரென்று கருதி இவர்திறத்து அபிமானிக்கவேண்டியிருக்க அங்ஙனஞ் செய்யாமையும், 'அன்னன்னசொல்லாப் பெடையொடும் போய்வரும்' என்றதனால் இவர்பொருட்டு ஒருவார்த்தையுஞ் சொல்லாமல் தமக்குவேண்டினவர்களோடு சென்றுவருதலும், 'நீலமுண்டமின்னன்னமேனிப் பெருமா னுலகிற் பெண்தூதுசெல்லா அன்னன்ன நீர்மைகொலோ' என்றதனால் இனியதும் சுவயம்பிரகாசமுமான வடிவமுடைய சர்வேசுவரனது ஜகத்தில் பரதந்திரராயிருப்பாரைச் சேரவிடாமலிருக்கிற அது இயற்கையோ? என்பதும், 'குடிச்சீர்மையிலன்னங்களே' என்றதனால் இங்ஙனம் உதவாதார்க்கு உயர்குடிப்பிறப்பின்சிறப்பு இருந்தும் பயனில்லை யென்பதும் தோன்றும். 'அன்னன்னசொல்லாப் பெடையொடும் போய்வரும்' என்றதனால், சுவகாரியபரராய்ச் சென்றுவருகையில் நமகாரியத்தையுங் கூடச்செய்யலாகாதோ? என்றவாறு. வெண்ணிறமுடையதும், பறவைகளிற்சிறந்ததும், அழகியதும், பாலையும் நீரையும் பகுத்து நீரையொழித்துப் பாலையுட்கொள்ளுந்தன்மையது மான அன்னம், சத்துவகுணபூர்த்தியும் மற்றையோரினும் மேம்பாடும் விலக்ஷணமானதன்மையும் சாராசாரங்களைப் பகுத்துணர்ந்து அசாரத்தைத் தள்ளிச் சாரத்தைக்கிரகிக்குமியல்புமுடைய நல்லாசிரியர்க்கு உவமையாகத்தகும்.

இனி, இப்பாட்டுக்கு - எம்மிடத்து அன்போடு பெடையொடு தூதுபோய் வந்த அன்னங்கள் யாதொன்றுஞ் சொல்லக்காணாமையால், அவ்வெம்பெருமானது நாட்டில் மகளிர்விட்டதூது உட்செல்லலாகா தென்ற நியதி

---

* திருக்குறள் - குடிமை - அ

† ,, தூது - க.

‡ இரத்தினச்சுருக்கம் - எ.

உண்டோ? என்றும உரைக்கலாம்; இவ்வுரைக்கு, 'குடிச்சீர்மையிலன்னங்கள்' என்பதற்கு - குடிப்பிறப்பாலவந்த சீர்மையுடைய[நலலகுடியிறபிறந்த]அன்னங்க ளென்று பொருள்: இல - சாரியை. சொலலா - சொலலாமல்: ஈறு கெட்ட எதிர்மறைவினையெச்சம. பெடை - பெணமைப்பெயர். (உக)

## பிரிந்ததலைவி அன்னங்களையும் வண்டானங்களையுந் தூதுவேண்டுதல்.

நூ0. அன்னஞ்செலவீரும்வண்டானஞ்செலவீருந்தொழு திரந்தேன், முன்னஞ்செலவீர்கண்மறவேன்மினோகண்ணனவை குந்தனோடு, டென்னெஞ்சினாரைக்கண்டாலென்னைச்சொலலியவரி டைநீ, ரின்னஞ்செலவீரோவிதுவோதகவென்றிசைமினகளே.

(இ - ள்.) அன்னம செலவீரும - (வானத்திற பறந்து) செல்லுகிற அன்னபபறவைகளாகிய உங்களையும, வண்டானம செலவீரும - (அங்ஙனம) செலபவர்களாகிய வண்டானக்குருகுகளாகிய உங்களையும், தொழுது இரந தேன் - (யான்) வணங்கிப் பிரார்த்தித்தேன்; (என்னவென்றெனில),—முன் னம செலவீர்கள் மறவேன்மினோ - உங்களுள் முன்னே செலபவர்கள் (என்வேணடுகோளை) மறவாதொழிவீராக; கண்ணன் வைகுந்தனோடு - கிருஷ்ணாவதாரஞ் செய்தருளினவனும பரமபதத்துக்குத் தலைவனு மாகிய பெருமானுடன், என் நெஞ்சினாரை கணடால - (முன்புசென்றிட்ட) எனது மனத்தை (அங்கு நீங்கள்) பார்த்தால, என்னை சொலலி - (அதற்கு நீங்கள) என்னைக் குறிப்பிட்டுச்சொலலி, 'அவரிடை நீர் இன்னம செலவீரோ - அவரி டத்து நீர இன்னமுஞ் செலலாதிருக்கிறீரோ? இதுவோ தகவு - இது தகு தியோ?' என்று இசைமின்கள - என்று சொலலுங்கள; (எ - று.)

'அன்னம தொடக்கமானவற்றை நாயகன்பின்சென்று தன்னையகன்ற நெஞ்சை நோக்கித் தூதுவிடுகிற நாயகிவார்த்தை' என்பர் அழகியமணவாள சீயரும 'அவன்வருமென்று ஒருபொருளில்லையென்று அதில் நசையற்று, அவன்பக்கறபோனநெஞ்சை மீட்கத் தூதுவிடுகிறாள்' என்ற அப்பிள்ளையு ரையையும அறிக. அப்பொழுதை நிலைமையால, சேய்மையிற சென்ற நெஞ்சினும அணமையிலுள்ள வேறுசிலவற்றை அந்தரங்கமாகக் கருதினாள். வண்டானம - நாரையில ஒருசாதி. 'தொழுது' என்றதனால காயிகமான வேணடுகோளும'இரந்தேன்' என்றதனால வாசிகமான வேணடுகோளுங் கூறி யதனால, இவற்றிற்கு இன்றியமையாத காரணமான மானஸமானவேணடு கோள் தானேபெறப்படும, ஆகவே, மனமொழிமெய யென்னுந் திரிகரணங் களாலும இவற்றைச் சரணமடைந்தமை தோன்றும: இங்ஙனஞ் சரணம புகக்காரது வேணடுகோள மறுக்கத்தக்கதன் றென்றவாறு. முன்பு சிலர் மறக்கக் காணகையால, இவற்றை 'மறவேன்மின்' என்றாள. 'இவளப்ரகிரு தியையறியும நாயகன் மறந்தான், அவன்கைப்பின்னேபோன நெஞ்சும மறந் தது: இனி, யாரதான் மறவாதார!' என்பது, நமபிள்ளையீடு. மறத்தல உங்க ளுக்கு இயற்கையலலாவிடினும அவ்விடத்துச் சோக்கையா லாகு மெனக் கருதியவாறு. 'கண்ணன்' என்றது, சௌலப்பியவாசகம. 'வைகுந்தன்' என்றது, பரத்துவவாசகம. 'கண்ணன் வைகுந்தனோடு என்நெஞ்சினாரைக் கணடால' என்றதனால, தனது சௌலப்பியத்தைக் காட்டி என்மனத்தைக் கவர்ந்துகொணடு தனதுபரத்துவத்தால என்னை இன்றளவும வந்து கலவாது இறப்பவனிடத்து என்மனம வீணே சென்று சோந்து அலைகிறது என்றபடி. தலைமகனிடத்துத் தனக்குஉள்ள கௌரவத்தால அவனைப்பற்றிச் சென்ற மனத்தை 'நெஞ்சினார்' என்று உயர்த்திக்கூறினாள். 'பணடுபோலன்றியிலே அவனாலே கொணடாடப்பட்டவ ளாகையாலே, சொலலுகிறாள்' என்பர் பெரியவாச்சானபிள்ளை. வைகுந்தனோடு நெஞ்சினாரைக் கணடால - பரம

பதவாசியான பகவானைக் காணினுங் காணலாம்; அவனைத்தான்சேர்ந்தபலத்தாற் செருக்கிற்பதும் அவனது அந்தரங்கபரிவாரங்களுள் தானுமொன்றாய்விட்டதுமான நெஞ்சைக் காணுதலரிது என்றபடி. 'என்னைச்சொல்லி'- அந்நெஞ்சுக்கு உடையவள் நானென்பதையும், எனது உடைமை அதுவென்பதையும், எனக்கு அது இன்றியமையாததென்பதையும், யான் தனித்துள்ள தன்மையையுந் தோன்றச் சொல்லி; எனவே, இவற்றையெல்லாம் நெஞ்சம் மறந்துள்ளமை தோன்றும். புருஷோத்தமனாகிய சிறந்தநாயகனைத் தான்கூடியதனாலாகிய மேன்மைபற்றித் தன்னைப்பிறாஉயர்த்துச்சொல்லுங் கூற்றால், 'அவர்' என்றாள்; அந்தரங்கமதிப்பே, தன்மனத்தைப் பிறர் முன்னிலைப்படுத்தும்பொழுது 'நீர்' என்று உயர்வுப்பன்மையாற் கூறுவரென்றதற்குங் காரணம். 'அவரிடை நீர் இன்னஞ்செல்லீரோ' - நீர்வருகிறபொழுதே ஆற்றாமைமிக்க அவரிடத்து அவருக்கு அந்தக்கரணமான நீர் அவர்துயரை யறிந்து தீர்த்திடாமல் தலைமகன்பொருட்டேயன்றித் தம்பொருளான உம்பொருட்டும் அவர் ஒருதூதுவிடும்படி இன்னமும் போகாதொழிவதே! என்றபடி. இதுவோ தகவு - உடைமை உடையதுக்குஉரியதாந்தன்மை இங்ஙனமோ? இன்னுமிதனால், உமது பரதந்திரமாயிருக்குந்தன்மைபற்றி நீர்செல்லாவிடினும், உமதுதகுதிக்கு ஏற்ற அன்புபற்றியாவது செல்லவேண்டாவோ? என்றதாம். இன்னது முன்புசெல்லுமென்று அறியாமையால், 'செல்வீர்கள்', 'மறவேன்மினோ', 'இசைமின்கள்' என்று பன்மையாற் கூறினாள், *"தனிக்கயத் தழுக்கி வென்றீர் தையலைச் சார்மின்" என்றவிடத்து நச்சினார்க்கினியர் 'துணியலாகாமையின், பன்மையாற்கூறினான்' என்றதனால், இன்னதென்று துணிவு தோன்றாதவிடத்துப் பன்மையாற் கூறுதல் இலக்கணமாதலறிக. அன்றி, முன்னேமுன்னே செல்பவரெல்லாங் கண்டுசொல்லுங்கள் என்றுங் கொள்ளலாம், பலரும் பழித்துக்கூறினால் ஒருகால் மீளக்கூடுமென்று கருத்து. இங்ஙனம் பலவற்றையும் ஒருங்குதூதுவிடுதலால், ஒன்றை முன்புதூதுவிட்டு அது போய்த் தொழில்செய்து வருமளவும் பொழுதுபோக்கி ஆறியிருக்கமாட்டாமை தோன்றும்.

ஆழ்வார் சிலரைத் தம்மைஎம்பெருமான்பக்கற்சேர்த்தற்குஉரிய ஆசாரியராக வரித்து அவர்களைநோக்கிச் சொல்லும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். அவர்களிற் சிறந்தாரை அன்னமென்றும், சிறிது தாழ்ந்தாரை வண்டானமென்றுங் குறித்தது. 'செல்வீர்' என்றதனால், அவர்கள் எம்பெருமானது திவ்வியதேசத்தை நோக்கிப் பிரயாணப்பட்டமை தோன்றும். தொழுது இரந்தேன் - திரிகரணத்தாலும் அவர்களிடத்துப் பூர்ணமான பிரபத்தியை மிகவிரைந்து செய்தபடி. 'முன்னஞ்செல்வீர்கள் மறவேன்மினோ' என்றதனால், ஆழ்வாரது ஆற்றாமை தோன்றும். அவர்களது நடையிலும் பேச்சிலும் ஈடுபட்டு, 'செல்வீர்கள்', 'இசைமின்கள்' என்றார். எம்பெருமானை இடைவிடாது நினைத்திருக்கையினும் அவனைச் சேர்ந்து அனுபவித்து ஆனந்திக்கப்பெறாமையா லுண்டான ஆற்றாமைத்துயரினும் அவனை மறத்தலே அமையுமென்று அன்புமிகுதியால் ஒருவெறுப்புக்கொண்டு, என் நெஞ்சை மீட்டிடுங்கள் என வேண்டினரென்க.

மறவேன்மின்-மறவேல் என்ற எதிர்மறை யேவலொருமையின்மேல், மின்-ஏவற்பன்மைவிகுதி. ஓ-வாக்கியாலங்காரம். வைகுந்தம்-வைகுண்டம் என்னும் வடமொழிச் சிதைவு. செல்லீர்-எதிர்மறை. தகவு - தகு என்னும் பகுதியினடியாப் பிறந்த தொழிலாகுபெயர். (௯௦)

---

* சீவகசிந்தாமணி - காந்தருவதத்தையாரிலம்பகம் - ௨௬௯.

## தூதுசெல்லாதமேகங்களைக்குறித்துத் தலைவி இரங்கல்.

கூக. இசைமின்கடூதென் றிசைத்தாலிசையிலமென் றலைமே
லசைமின்களென்றாலசையுங்கொலாமம்பொன் மாமணிக
டிசைமின்மிளிருந் திருவேங்கடத்து வன்றாட்சிமய
மிசைமின்மிளிரியபோவான் வழிக்கொண்டமேகங்களே.

(இ - ள்.) அம் பொன்-அழகிய பொன்னும், மா மணிகள்-சிறந்த இரத்தினங்களும், திசை-திக்குகள்தோறும், மின் மிளிரும்-மின்னல்போல ஒளி வீசுமிடமான, திருவேங்கடத்து-திருவேங்கடமலையினது, வல் தாள் சிமய மிசை-வலிய அடிவாரத்தையுடைய சிகரத்தின்மேல், [சிகரத்தை நோக்கி], மின் மிளிரிய போவான்- மின்னல்கள் விளங்கச் செல்லும்பொருட்டு, வழிக் கொண்ட-பிரயாணப்பட்ட, மேகங்கள்—, தூது இசைமின்கள் என்று இசைத்தால் - '(நீங்கள் எமக்காகத்) தூதுக்கு இசைந்து சென்று சொல்லுங்கள்' என்று சொல்லி வேண்டினால், இசையிலம் - (அதற்குஉடனே) உடன்பட்டுச் செல்லக் காண்கிறோமில்லை; (அவை), என் தலைமேல் அசைமின்கள் என்றால்- 'எனது தலையின்மேல் பொருந்துங்கள்' என்று வேண்டினால், அசையுங்கொல் ஆம் - (அங்குச்) செல்லக்கூடுமோ? (எ - று)—வாய்வார்த்தைமாத்திரத்தால்வேண்டியதற்குஉடன்படாதவை அவற்றின் கால் எம்தலைசிறப்பப்படி சரணாகதி செய்தால் அதற்கு இசைந்து ஒருகால் உடன்பட்டுச்செல்லுமோ? என்று கருத்து.

'மேகங்களைத் தூதாகவிடத்தேடுகிற நாயகிவார்த்தை' என்பர் அழகிய மணவாளசீயர். திருவேங்கடமலையின்மேற் சென்று சேரும்பொருட்டுப் பிரயாணப்பட்ட மேகங்களைநோக்கித் தலைமகள் 'என்னைப்பிரிந்துஅங்குச்சென்று வசிக்கிற எனதுதலைமகனுக்கு என்நிலைமையைச் சொல்லுமாறு நீங்கள் எனக்குத் தூதாமினீர்' என்றுவேண்ட, அதற்கு அவை உடன்படக்காணாமையால், மீண்டும் அவற்றைநோக்கி 'அவனுள்ளவிடத்து ஏறச் செல்லும் பாக்கியமுடைய நீங்கள், அங்ஙனஞ் செல்லமாட்டாத எனது தலையின்மேல் உங்கள் பாதத்தை வைத்தாவது செல்லுங்கள்' என்று பிரார்த்திக்க, திருமலைத்தலைமேற்சென்று தங்குதற்கு விரைகிற அவை இவள்தலைமேல் தங்கிநிற்றற்கும் இசைதல் அரிதாயிருந்த தன்மையைக் குறித்துத் தலைவி இரங்குகின்றாளாம். கீழ் அன்னங்களையும் வண்டானங்களையுந் தூதுவேண்டியவள் அவை அங்ஙனந் தூதுசெல்லக் காணாமையால் 'இப்பறவைகள்தாம் தத்தங் காரியத்திலேயே கருத்துடையனவாதலால் நமகாரியத்தைச் செய்தனவில்லை' என்று கருதி மேகங்களை நோக்கி 'எப்பொழுதுங் கைம்மாறு கருதாது பிறர்க்கு உதவுதலையே இயல்பாகவுடைய இவை நமகாரியஞ் செய்யத்தக்கன' என்று துணிந்து அவற்றை வேண்ட, அவையும் இவள்காரியஞ் செய்யாமையால் மிகஇரங்குகின்றாளென்க. இங்ஙனம் பலவாறுகூறி அலற்றுதற்குப் பயன், மூடியிருந்தவெவ்வேதோர் கொள்கலம் மூடிதிறந்தவிடத்து ஆவியெழுந்து முன்னின்ற வெப்பம் நீங்குகின்றதுபோல, ஆற்றாமையால் உள்ளேமிக்குநின்ற தாபத்தை வாய்விட்டுவெளியிட அது சிறிதளவு குறைதலே தூதுவிடுதற்கு உரியவைத் தன்தலைமேல் அடிவைத்துச் செல்லுமாறு வேண்டுதலை *"எங்கானலகங்கழிவாயிரைதேர்ந்திங் கினிதமருஞ், செங்கால மடநாரா யிதிருமூழிக்களத்துறையுஞ், கொங்கார்பூந் துழாய்முடியெங் குடக்கூத்தாக் கென்தூதாய், நுங்காலகளென்தலைமேற் கெழுமீரோ நுமரோடே" என்னுமிடத்துங் காண்க.

---

* திருவாய்மொழி - ஒன்பதாம்பத்தேழாந்திருப்பதிகம் - க

இசையிலம்-இசையப்பெறறிலோம. ஆம-அசை தாள்-பாதமென்னும வடசொலலின் பொருளது. மினிரிய-செயயியவென்னும வாய்பாட்டு வினை யெசசம; இடை-எதிர்காலங்காட்டும் விகுதி. மினிரிய என்பதைத் தெரிநிலை யிறாந்தகாலப்பெயரெச்சமாகக் கொண்டு, மினிரந்த என்று உரைத்து,மேகங் களுக்கு அடைமொழியாக்கலும ஒன்று. போவான் - வான்விகுதிபெறற எதிர்காலவினையெச்சம்.

கீழ் எமபெருமான்பக்கலஆழ்ந்தநெஞசை மீட்குமபடி வேண்டப்பட் டவாகள 'இவர்நெஞசைமீளசசெயதல எலலாமவலல'இறைவனுன அவ்வெம பெருமானுக்கேஆகாதொன்றுல நமமாறசெயயலாவதோ?'என்று கைவிட, பின்பு ஆழவாா, திவ்வியதேசயாததிராபராாயத திருமலையைநோககிசசெல் கிற சிலரைக் கண்டு,'இவா நமகுறையை எமபெருமான்பக்கல விணணபடஞ செயது நமமை அவனுேடு சோததறகு ஏறற புருஷகாரமாவா' என்று கருதி, அவாகளை ஆசாரியராக வரிகக, அவாகள இவாககு ஆசாரியராவதறகு உடன்படாமையால், *"எமபெருமான்தாள்தொழுவாா காணமின் என்தலை மேலாரே" என்னுமபடி இவா நமது சிரசின்மேல தமது அடியை வைத் தலும பேறுமென்று அதனை வேண்டுதல, இதறகு உளளுறைபொருள். ஸவாபதேசத்தில, அமிழ்வான் என்றது-சிறந்தத்தன்மையும, மாமணி என்றது- சிறந்த குணங்களும், சிமயம என்றது-எமபெருமானும,அதன்தாள் என்றது- எமபெருமானது திருவடியும, அதன்வன்மை என்றது- அத்திருவடியின் அடி யார்களைக்காக்கிறசகதியும், மேகங்கள் என்றது - கைம்மாறுகருதாதஅரு ளுந்தன்மையுள்ளபாகவதரும,மினஎன்றது- அவாகளதுஞானவிளக்கமுமாம

'கீழ் †"நீலமுண்டமின்னன்னமேனிபபெருமானுலகு" என்று பரமபதத் தே தூதுவிட்டாள், அது பரபக்தி பரஜஞாந பரமபகதி யுக்தராஞாக கல லது புகவொண்ணுத தேசமாகையாலே, அவதாரஙகளிலே தூதுவிடப பாாத தாள், அதுவும சமகாலததிலுளளாாக்கு ஆயப பினனை இலலையாகையாலே பிறபாடருக்கும அனுபவிககலாமபடி சுலபமான திருமலையிலே திருவேஙகட முடையான்திருவடிகளிலே மேகததைத தூதாக விடுகிறுள். திருமலைநோக் கிப போகிற மேகஙகளே! எனனுடைய தூதவாககியஙகளைக கொணடு போயச சொலலுஙகோ ளென்றல சொலலுகிறிலேகோள், திருமலைக்குப போகிறபராக்கிலேபேசாதேபோகிறவறறைககணடு,சொலலமாட்டிகோளா கில உஙகள திருவடிகளை என்தலைமேலே வையுஙகோ ளென்றல வைபபுதி கோளோ? திருமலைககுப போவாருடைய திருவடிகள உததேசயமாயிரே யிருபபது. திருமலைககுப போகிறவாகளைத தலையிலே வைககக் கிடைக்கு மோ? திருவடியைப பிராட்டி இஙகே ஓரிராத தஙகிபபோகவேணு மென்று அருளிசசெயய, ஒணணுது எனறு அவனும மறுததுபபோனுபபோலே போ காநின்றன'—என்பது, பெரியவாசசான்பிள்ளை வியாக்கியாநம.

'இசைவிலம' என்றும, 'இசையல' என்றும, 'இசையில' என்றும பாடங கள் உணடு, 'இசையில' என்ற பாடம பொருளுக்கு இனியது (௩௧)

## தலைவி போலிகண்டு உரைத்தல்.

௩௨. மேகஙகளோவுரையீாதிருமாறிருமேனியொக்கும்
யோகஙகளுஙகளுக்கெவ்வாறுபெற்றீருயிரளிப்பான
மாகங்களெலலாநதிரிநதுநனனீர்கள்சுமநதுநுநத
மாகங்களுேவவருத்துந்தவமாமருள்பெற்றதே.

---

* பெரியதிருமொழி - அறுபத்துநான்காநதிருபபதிகம - க.

† திருவிருததம - உக

(இ - ள்.) மேகங்களோ—! திருமால் திருமேனி ஒக்கும் யோகங்கள்- திருமகள் கணவனான எம்பெருமானது திருமேனியை யொக்கும்படியான உபாயங்களை, உங்களுக்கு எ ஆறு பெற்றீர் - உங்களுக்கு (சித்திக்கும்படி) எவ்விதமாய் அடைந்தீர்கள்? உரையீர் - சொல்லுங்கள்; உயிர் அளிப்பான் - உயிர்களைப் பாதுகாக்கும்பொருட்டு, நல் நீர்கள் சுமந்து - நல்ல நீர்களைத் தரித்து, மாகங்கள் எல்லாம் திரிந்து - பெரிய வானங்களிலெல்லாஞ் சஞ்சரித்து, நுமது இம் ஆக்கங்களும் நோவ வருத்தும் - உங்களுடைய உடம்புகள் நோகும்படி (அவற்றை) வருத்திச் செய்த, தவம் ஆம் - தவம்போலும், அருள் பெற்றது - (அவ்வெம்பெருமானது) அருளை (நீங்கள்) பெற்ற காரணம், (எ - று.)

தலைவனைப்பிரிந்தநிலையிற் கண்ணிற் காணப்படும் பொருள்களை யெல்லாம் நோக்கிப் பலவாறு இரங்குந் தலைவி, திருமாலாகிய தலைவனோடு ஒத்த தன்மையையுடைய மேகங்களைக் கண்டு, அவற்றைநோக்கி, 'எம்பெருமானது திருமேனியையொத்த மேனியையுடைமையாகிய சாரூப்யநிலையை நீங்கள் என்னமுயற்சிகள்செய்து பெற்றீர்கள்? கைம்மாறுகருதாமல் பரோபகாரத்துக்காகவே நல்லநீரைச் சுமந்துகொண்டு உடம்புவருந்தச்சென்று ஆங்காங்குப்பெய்து எல்லாவுயிர்களையும் பாதுகாத்தலாகிய பெருந்தவமுடைமையால், உங்களுக்கு எம்பெருமான்கருணை நேர்ந்தது அதனாலேதான் இந்தநிலை வாய்த்ததுபோலும்' என்று கூறினாள். மேகம் வடிவத்தால் திருமாலையொக்குமென்று தலைவி கூறுதலை *"கரும்பெரு மேகங்கள் காணிற் கண்ணனென்று ஏறப்பறக்கும்", †"நின்றுபெய்யும் மழை காணில் நாரணன் வந்தா னென்று ஆலும்" என்னுமிடங்களிலுங் காண்க. திருமால்-திருமகளிடத்து மால்கொண்டவன்; மால் - ஆசைமிகுதி. முன்இரண்டடியால், அவைபெற்ற உபாயத்தை அறிந்து தானுஞ்செய்து அந்நிலைமைபெறக் கருதினமை தோன்றும்.

பரமபதத்திலுள்ளவரும் எம்பெருமானோடு ஒத்த வடிவத்தை அவனருளாற் பெற்றவருமான முக்தர்களை ஆழ்வார் பாவனையாலே எதிர்க்கண்டு அவர்களைநோக்கி 'நீங்கள் இச்சாரூப்யநிலையை எங்ஙனம் அடைந்தீர்கள்? சொல்லுங்கள், ‡"ஆதியந்த மநந்த மற்புத மான வானவர் தம்பிரான், பாத மாமலர் சூடும் பத்தி யிலாத பாவிக ளுய்ந்திடத், தீதில் நன்னெறி காட்டி யெங்குந் திரிந் தரங்க னெம்மானுக்கே, காதல்செய்தொண்டர்" என்றபடி இவ்வுலகத்தில் எல்லாவுயிர்களையும் உய்வித்தற்பொருட்டு மெய்வருத்தம்பாராமல் எங்குந்திரிந்து குணரசபூர்த்திகொண்டு நல்லொழுக்கங்காட்டிக் கைம்மாறுகருதாது உதவுதலாகிய சாதனத்தால் பகவானருளைப்பெற்று அதனால் உமக்கு இந்நிலை நேர்ந்ததுபோலும்' என்றுகூறுதல், இதற்கு உள்ளுறைபொருள்.

மேகங்களோ - ஓகாரம் மிக்கது, விளியுருபு, ஓமேகங்கள் என மாறினுமாம். உரையீர் - கூறுகின்றீரில்லை யென இரக்கமுமாம். அளிப்பான் - எச்சம். மாகம் - மஹாகம் என்ற வடசொல்லின் திரிபு. மாகங்களெல்லாம் என்ற பன்மை - பொருளின் பன்மை குறியாது ஒருபொருளின் பலவிடங் குறித்தது. மேகம் பலவாதலால், நீரும் பலவாயிற்று. அன்றி, நீர்கள் என்ற பன்மை - மிகுதிகாட்டுவ தெனினுமாம்; இதனை மருஉவழக் கென்றலும் உண்டு. நச்சினார்க்கினியர் கலித்தொகையில் §"மன்னுயி ரேமுற மலர்ஞாலம் புரவீன்று, பன்னீர்ஆற காலபுனல் பரந்தூட்டி யிறந்தபின், சின்

* திருவாய்மொழி - முப்பத்துநான்காந்திருப்பதிகம் - ௧.
† " " ௬.
‡ பெருமாள்திருமொழி - இரண்டாந்திருப்பதிகம் - ௫.
§ கலித்தொகை - பாலைக்கலி - ௩௩.

னீரா னறல்வார்" என்றவிடத்து, 'பன்னீர், சின்னீர் - ஆகுபெயர் இது - "தகுதியும் வழக்கும்" என்னுஞ் சூத்திரத்துக் கூறிய மரூஉ' என்றும், *"சேடியல் வள்ளத்துப் பெய்தபால் சில காட்டி" என்றவிடத்து 'பாலைச் சிறிதென்னாது சில வென்றல் மரூஉ' என்றும், தொல்காப்பியத்தில் †"தகுதியும் வழக்குந் தழீஇன வொழுகும், பகுதிக் கிளவி வரைநிலை யிலவே" என்ற சூத்திரத்து 'குடத்துள்ளும் பிறகலத்துள்ளும் இருந்த நீரைச் சிறிதென்னாது சில வென்றலும் ..... போல்வன வழக்காம்' என்றும் உரைத்தவை, இங்கு 'நீர்கள்' என்றவிடத்தில் அறியத்தக்கன.

'இப்படி தன் அபேக்ஷிதம் செய்யாதே அவை போகப்புக, நீங்கள் எம்பெருமானுடைய திருமேனியோடு ஒக்கும் வடிவு உண்டாகைக்குப் பண்ணின பாக்கியத்தைச் சொல்லுங்கோ ளென்று கேட்க, பேசாதே அவை போகப்புக்கவாறே, இதுக்கு அடி தானே நிச்சயிக்கிறாள். மேகங்களோ உரையீர் - மேகங்கள் கழியப்போனவாறே, அவற்றுக்குக் கேட்கும்படி யழைத்து, ஒருவார்த்தை சொல்லிப் போகவேணு மென்கிறாள்' என்ற அப்பிள்ளையுரையும், 'திருமால் திருமேனி யொக்கும் - பிராட்டியோடே கூடினவன் வடிவுபோலே யாயத்து, மின்கொடி தழுவ இருக்கிற இவற்றின் வடிவும், நித்யவிச்லேஷத்தாலே உடம்பு வெளுத்திருக்கிற என்னைப்போ லன்றிக்கே, நித்யஸம்ச்லேஷத்தாலே நிறம்பெற்றிருக்கிற அவனுடைய வடிவுபோலே யிரா நின்றதீ! உங்களுடைய வடிவும்', 'இதில், பகவத் விச்லேஷத்தில் போலிகண்டல்லது தரிக்கவொண்ணாதபடியா யிருக்கிறபடியைச் சொல்லுகிறது' என்ற நம்பிள்ளையீடும் அறியத்தக்கன. எவ்வளவு தூரத்தி லிருந்தாலும் தன் குரல் கேட்கும்படி 'மேகங்களோ!' என்று கூப்பிடுகிறாள், ‡"நாராயணாவோ! மணிவண்ணா நாகணையாய்" என்று கஜேந்திராழ்வான் கூப்பிட்டாற்போல. (௩௨)

## தலைவியாற்றாமைகண்டதோழி தலைவனைவெறுத்துரைத்தல்.

௩௩. அருளார் திருச்சக்கரத்தால் அகல்விசும்பும் நிலனும்
இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர் ஈங்கோர் பெண்பால்
பொருளோ வெனுமிகழ் வோ விவற்றின் புறத்தாளென் றெண்
தெருளோம் அரவணையீர் இவள் மாமை சிதைக்கின்றதே. [ணோ

(இ - ள்) அரவு அணையீர் - ஆதிசேஷ சயன முடையவரே! அருள் ஆர் திருச்சக்கரத்தால் - கருணை நிறைந்த திருவாழியைக்கொண்டு, அகல் விசும்பும் நிலனும் இருள் ஆர் வினை கெட - பரந்த விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலும் இருளையொத்த கொடிய தொழில்கள் நிகழாதபடி (துஷ்டநிக்கிரகஞ்செய்து), செங்கோல் நடாவுதிர் - (உமது) கட்டளையைத் தடையறச் செலுத்துகிறீர், (அப்படி லோகபரிபாலனஞ்செய்கிற நீர்), இவள் மாமை சிதைக்கின்றது - (இவளுக்கு அருளாமல்) இவளது மேனிநிறத்தை அழிக்கிறது, ஈங்கு ஓர் பெண்பால் பொருளோ எனும் இகழ்வோ - இவ்வுலகத்தில் ஒருபெண்ணைக் காத்தல் புருஷார்த்தமோ என்கிற அநாதரமோ? (அன்றி), இவற்றின் புறத்தாள் என்று எண்ணோ - (உம்மால் பாதுகாக்கப்படுவனவாகிய) விசும்புக்கும் நிலத்துக்கும் உள்ளாகாமல் வெளியாயிருப்பவ ளொருத்தி யிவள் என்ற எண்ணமோ? தெருளோம் - அறிகிறோமில்லை, (எ - று.)

'நாயகியாற்றாமைக்கு உதவாத நாயகனை ஈச்வரனை நோக்கிப் பாங்கி உரைத்த பாசுரம்' என்பர் அழகிய மணவாள சீயரும். சகலலோக சம்ரக்ஷ

* கலித்தொகை - மருதக்கலி - ௭.
† தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - கிளவியாக்கம் - ௧௭.
‡ சிறிய திருமடல் - கூகூ

ணபரரான நீர் இவ்வொருத்தியைப் பாதுகாவாது கைவிட்டது, குறிக்கொண்டு காத்தற்குஉரிய தகுதியொன்று மில்லாதா ளொருத்தி யிவளென்று இகழ்ந்தோ? நம்மாற் காக்கப்படும் உலகங்களுக்கு உட்பட்டவளே இவளு மென்று கருதாமையோ? என்று வருந்திக்கூறியவாறு.

திருவாழியாழ்வானும் சேதனகோடியி லொருவ ராதலால், 'அருளார திருச்சக்கரம்' என அருளுடைமை கூறினது. ஆயுதகோடி ஆபரணகோடி என்னு மிரண்டிலும் அந்வயித்த திருவாழிக்கு, பிரதிகூலநிக்கிரகத்திற் கோபம்போலவே அநுகூலரக்ஷணத்தில் அருளும் மிகஉரியதாம். இருளார் வினை-அஜ்ஞாநவிருளோடுகூடிய தொழி லென்றுமாம். 'அரவணையீர்-இவள் தரைக்கிடைகிடக்க உமக்குப் படுக்கை பொருந்துவதே? படுக்கைக்கு மேல்விரி வேண்டாவோ? படுக்கையிற் கிடப்பாக்குத் தனிக்கிடை யமையுமோ?', 'இவளமாமை சிதைக்கின்றது-அவன்றானே கைதொட்டு அழிக்கிறு னென்றபடி; பிரஜை கிணற்றிலே விழுந்தால் வாங்காத தாயைத் தள்ளினு ளென்னுமோபாதி ரக்ஷகனவன் ரக்ஷியாதொழிந்தால் அவ்வளவுஞ் சொல்லலாமிறே' என்பன, பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம்.

ஆழ்வாருடைய ஆற்றாமையைக் கண்ட அன்பர்கள் எம்பெருமானை நோக்கி விண்ணப்பஞ்செய்த வார்த்தை, இதற்கு உள்ளுறை பொருள். முதல் வாக்கியத்தால், பகவான் தனது சங்கல்பரூபஞான திருவாழியைக்கொண்டு நித்தியவிபூதியில் பகவதநுபவவிடையூறுகிய இருள் நடையாடாதபடியும், லீலாவிபூதியில் அஜ்ஞாநகாரியமான பொல்லாவொழுக்காகிய இருள் நடையாடாதபடியுஞ் செய்து இரண்டுவிபூதியையும் இருள் அகலப் பாதுகாத்தல் தோன்றும்; 'கையுந் திருவாழியு மாள அழகைக் காட்டி, பிரியாமையாலே ரக்ஷிக்கும், அங்குள்ளாரை, அதனைக்கொண்டு விரோதிகளை இருதுண்டமாக இட்டு,ரக்ஷிக்கும், இங்குள்ளாரை' என்பது நம்பிள்ளையீடு. ஆழ்வார்க்கு உடனே பேறு உதவாது அவர்க்கு ஆற்றாமையால் நிறவேறுபாட்டை உண்டாக்கினது, இவ்வுலகத்தில் ஒருபுறத்தில் தம்மைத் தாம் பாதுகாத்துக் கொள்ளவும் ஆற்றலில்லாமற் பரதந்திரராயிருப்பவ ரிவரென்ற உபேக்ஷையோ? இவ்வுலகத்தார்போலச் சமுசாரத்திற் காலாழ்தலும் அவ்வுலகத்தார் போல எம்பெருமானையடைந்து அடிமைசெய்து ஆநந்தித்தலு மில்லாதவ ராதலால், இவர் நமது பாதுகாப்புக்கு உட்பட்ட இரண்டு உலகிலுஞ் சேராது புறம்பானவ ரென்று நினைத்தோ? இன்னதென்றுதெரியவில்லை யென்று அன்பர்கள் கூறியவாறு. 'அசக்தியும் பாரதந்திரியமும் அநாதரத்துக்கு உறுப்பல்லாமையாலும் விபூதித்வயவ்யாவ்ருத்தி வைலக்ஷண்யத்துக்கு உறுப்பாகையாலும் அங்கீகாரஹேது உண்டென்றபடி. 'அரவணையீர்' என்கையாலே, அந்தவிபூதியிலுள்ளாரோடு நித்யஸம்ச்லேஷம் நடக்கிறபடி சொல்லுகிறது' என்ற அழகியமணவாளசீயருரை அறியத்தக்கது.

நடாவுதிர் என்பதில்,'த்'இடைநிலை நிகழ்காலங் காட்டிற்று. என்றெண்-பெயரெச்சவீறு தொகுத்தல். எண்-முதனிலைத் தொழிற்பெயர். அரவணையீர்-அரவணையார் என்பதன் விளி

இப்பாட்டைத் தாயவார்த்தை யென்றல் அதனிலும் சிறவாமையைக் குறிப்பால் அறிக. (கூகூ)

**கூடலிழைத்துவருந்துந்தலைவிநிலையைப் பாங்கி தலைவற்குஉணர்த்தல்.**

கூஎ. சிதைக்கின்றதாழியென்றாழியைச்சீறித்தன்சீறடியா
லுதைக்கின்றநாயகந்தன்னொடுமாலேயுனதுதண்டார்
ததைக்கின்றதண்ணந்துழாயணிவானதுவேமனமாய்ப்
பதைக்கின்றமாதினிறத்தறியேன்செயற்பாலதுவே.

(இ - ள்) மாலே-பெருமையிற் சிறந்தவனே! ஆழி-கடல்வட்டம், சிதைக்கின்றது-(காரியத்தைக்) கெடுக்கிறது, என்று - என்ற காரணத்தால், ஆழியை-அக் கடல்வட்டத்தை, சீறி - கோபித்து, தன் சிறு அடியால்-தனது சிறிய கால்களால், உதைக்கின்ற—, நாயகன்றன்னொடு மேம்பாட்டுடனே, உனது தண் தார் ததைக்கின்ற தண் அம் துழாய் அணிவான் அதுவே மனம் ஆய் பதைக்கின்ற-உனது வாடாத மலர்கள்நிறைந்த குளிர்ந்த அழகிய திருத்துழாயைச் சூடும்பொருட்டு அதிலேயே கருத்தாய் வருந்துகிற, மாதின் திறத்து-இம் மங்கைவிஷயத்தில், செயல் பாலது-செய்யத்தக்கபரிகாரத்தை, அறியேன்-(யான்) அறிகிறேனில்லை, (எ - று)

'நாயகனை ஈசுவரனைக் கூடுகைக்குக் கூடலிழைத்து அது கலங்குகை யாலே ஏற்படுகிற நாயகியைக் கண்டு தோழி கலங்கியுரைத்த பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும். கூடலிழைத்தலாவது - தலைமகனைப்பிரிந்த தலைமகள் கூடல்தெய்வத்தை வாழ்த்தி மணலில் வட்டமாக ஒருகோடுகீறி அதனுட் சுழிசுழியாகச் சிறுசுழித்து அச்சுழிகளை இவ்விரண்டாகக் கணக்கிட்டு அக்கணக்கு இரட்டைப்பட்டால் பிரிந்ததலைவர் வந்து கூடுவரென்றும் ஒற்றைப்பட்டால் அவர்வந்துகூடாரென்றும் குறிப்பாப்பதொரு மரபு. இதனை நாச்சியார் திருமொழியின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்து அரும்பதத்தில் 'கூடலாவது-வட்டமாகக் கோட்டைக்கீறி அதுக்குள்ளே சுழிசுழியாகச் சிறுசுழித்து இவ்விரண்டு சுழியாகக் கூட்டினால் இரட்டைப்பட்டால் கூடுகை, ஒற்றைப்பட்டால் கூடாமை என்று சங்கேதம்' என்றதனாலும், *"ஆழிதிருத்தும் புலியூருடையான் அருளின் அளித்து, ஆழிதிருத்தும்மணற்குன்றின் நீத்தகன்றார் வருகென்று, ஆழி திருத்திச் சுழிக்கணக் கோதி நையாமலைய, வாழிதிருத்தித் தரக்கிற்றியோ உள்ளம் வள்ளலையே" என்னும் திருக்கோவையாரில் 'ஆழிதிருத்திச் சுழிக்கணக் கோதி' என்றதனாலும் அறிக. அது காரியத்தைக் கெடுத்தலாவது - சுழிக்கணக்கில் ஒற்றையாய்க் கூடாமையைக்குறித்தல், இதுவே, கலங்குதலென்றும் பிழைத்தலென்றும், தவறுதலென்றும், கூடாமையென்றும், சிதறுதலென்றுங் கூறப்படும். இரட்டையாய்க் கூடுதலைக்குறித்தல், காரியத்தை அநுகூலிக்கச்செய்தலாம், அது, கூடுதலெனப்படும். நாச்சியார் திருமொழியில் "தெள்ளியார் பலர்" என்ற கூடல்திருப்பதிகத்தில் "கொள்ளுமாகில் நீ கூடிடு கூடலே," "கூட்டுமாகில் நீ கூடிடு கூடலே," "கோமகன்வரிற் கூடிடு கூடலே," "கூடுமாகில் நீ கூடிடு கூடலே" என்பன பல வாய்பாடுகளால், கூடற்றெய்வத்தைப் பிரார்த்தித்தவாறும் காண்க. இனி, கூடலிழைத்தலாவது-கண்களை மூடிக்கொண்டு தரையில் வட்டமாக ஒருகோடுகீறிப் பின்பு கண்திறந்துபார்த்து அது தொடங்கியவிடத்தில் தவறாதுவந்து கூடியிருக்குமாயின் பிரிந்ததலைவன் தன்னைவந்துகூடுவானென்றும், அங்ஙனம்வந்து கூடாமல் விலகியிருக்குமாயின் தலைவன்வந்துகூடானென்றும் குறிப்பாத்தல் என்று கூறுவாரும் உளர்; அங்ஙனம் இலக்கணங்கொள்ளுதற்கு மேற்கோள் கிடைப்பரிது. பிரிந்தார் இரங்குவது நெய்தல்நிலத்திலே யாகையாலே, இது கடற்கரையிலே நிகழும்.

'ஆழியை' என்றது, அதனையெனச் சுட்டுப்பெயர் மாத்திரமாய் நின்றது. கூடல்வட்டம் காரியத்தைக் கெடுக்கிறதென்றது, தன்காரியங் கைகூடாமையைப் புலப்படுத்தலையே. †"நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" என்றபடி மகளிர்க்குப் பாதம் சிறுத்திருத்தல் நல்லிலக்கணமாதலால், 'சீறடி' எனப்பட்டது; சிறுமை யென்னும் பண்புப்பெயர் ஈறுபோய

* திருக்கோவையார் - ௧௮௬

† கலித்தொகை-முல்லைக்கலி - ௮

ஆகின்றது. 'உதைக்கின்ற' என்றதற்கு ஏற்ப, சீறடியென்பது-சீற்றங்கொண்ட அடியெனவும் ஒருபொருள்படுகிற நயங் காண்க. 'சீரடி' என்ற பாடத்துக்கு, அழகியபாதமென்க. விருப்பத்தோடு கையால் அரிதில் இழைத்த கூடல்வட்டத்தை வெறுப்புக்கொண்டு காலால் விரைவில் அழித்தலையே, உதைத்த லென்றது நாயகத்தலைமை. மாலே - இங்ஙனம் இவளை வருத்துதல் உன்பெருமைக்குத் தகுமோ? என்றபடி, இனி, வேட்கைப்பெருக்கமுடையவனே யென்றும் பொருள் கொள்ளலாம்: நீ முன்பு காட்டிய வேட்கைப் பெருக்குக்கு இங்ஙனம் பராமுகஞ்செய்தல் ஏற்குமோ? என்றவாறு. தார்-பூமாலை; *"மாலையு மலருங் கொடிப்படைப் பெயரும், இணைமாலையுந் தாரெனக் கிளத்தும்" என்ற பிங்கலந்தையாலும் அறிக. தார்ததைக்கின்ற என்பதற்கு-மாலையாகத் தொடுக்கப்பட்ட என்று பொருள் கொள்ளுதலும் ஒன்று. அணிவான்-எச்சம். மனம்-ஆகுபெயர். பதைக்கின்ற-துடிக்கிற. மாது என்றது-மாதா என்பதன் விகாரமாய், விரும்பப்படும் அழகுடைய மகளைக் குறிக்கும். இங்கு 'மாதின் திறத்து' என்றது, இவ்வருத்தத்தைப் பொறுத்தற்குத் தகாதவள் என்பதைக் காட்டும். 'செய்தபாலது யானறியேன்' என்றதனால், இவளைப் பதைப்பிக்கிற நீயே அதற்குப் பரிகாரமும் அறிவாய் என்றதாம்.

ஆற்றாமைவிஞ்சின ஆழ்வார் எம்பெருமானைச் சேர்தற்கு நம்மால் செய்யத்தக்கதொரு முயற்சி யுண்டோ வென்று பார்த்து அது கூடாமையாலே பின்னும் வருந்துகிற தன்மையைக் கண்ட அன்பர்கள் அதனை எம்பெருமானுக்கு விண்ணப்பஞ்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். ஆழி சிதைக்கின்ற தென்று-தமதுகையாற் செய்யுந் தொழில்முயற்சி பேற்றுக்குக் காரணமாகா தென்று அறிந்து, ஆழியைச் சீறி - அவ்வுபாயத்தைக் கைக்கொள்ளாது வெறுத்து, தன் சீறடியால் உதைக்கின்ற-(அவ்வுபாயத்தைக்)காற்கடைக்கொண்டு தள்ளிவிடுகிற, நாயகந்தன்னொடு - இறைமையுடனே, உனது தண் தார் ததைக்கின்ற தண்ணந்துழாய் அணிவான் அதுவே மனமாய்ப் பதைக்கின்ற - உன்னுடைய இனிமையை அனுபவித்தற்கு அதிலே முற்றுங் கருத்தைச் செலுத்திக் காலவிளம்பத்தைப் பொறாமல் விரைந்து ஆற்றாமையால் வருந்துகிற, மாதின்திறத்து - பரதந்திரரான இவ்வாழ்வார்பொருட்டாக, செய்தபாலது அறியேன் - செய்யத்தக்கது இன்னதென்று யாம் அறியோம்; நீயே அறிவை யென்று கருத்து. மாலே - ஞானம் சக்தி முதலிய எல்லாப்பெருமைக்குணங்களும் நிறைந்தவனே! என்று விளித்ததனால், இப்படிப்பட்ட மகாபுருஷனான நீ இவரை இன்னும் உன்பக்கற் சேர்த்துக்கொள்ளாமலிருப்பது தகுதியன்று என்றபடி.

இப்பாசுரத்தைத் தாய்வார்த்தையென்றல் அத்துணைச்சிறப்பன்மையை உய்த்துணர்க.

'சீரடியாலுதைக்கின்ற - தலைமகன் தலையிலேபட்டு அவன்விரும்பக்கடவ திருவடிகள் அசேதநமான மண்ணிலே பட்டு வ்யர்த்தமாகாநின்றதென்று கருத்து', 'மாலே - சீறினபோது காணப்பெறுதொழிந்தானென்னுங் கருத்தாலே அங்குப்போய் என்னென்ன காரியஞ் செய்கிறாயென்று அறிவுகேடரைச் சொல்லுமாபோலே சொல்லுகிறாளாகவுமாம்' என்ற அப்பிள்ளையுரை அறியத்தக்கது. 'சிதைக்கின்ற ஆழியென்று ஆழியைச் சீறித் தன்சீறடியாலுதைக்கின்ற' என்பதற்கு - தான்இழைக்கிற கூடல்வட்டத்தைக் கலைத்துவிடுகிறதென்கிற காரணத்தால் கடலைச் சினந்து காலாலுதைக்கிற என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று, 'அவள்வருமளவும் ஆறியிருக்கவொண்ணாமையாலே கூடலிழைக்கத்தொடங்கினாள். அதுதப்பினபடியைக் கண்டு, நாயகன்

* பிங்கலந்தை - ஒருசொற்பலபொருள்வகை - ௫௧௧.

றன்னைக்கண்டாற்கோபிக்குமோபாதி கூடலோடேகோபிக்கிறாள். முன்புள்ளார், கூடலிழைக்கப்புக்கவாறே அதுசிதறிவருகிறபடியைக் கண்டு அதனோடே சீறி அழியாநின்றாளென்பர்கள். பட்டர், இது கூடுகைக்கு ஏகாந்தமன்றியே பிரிகைக்கும் ஒருபுடையுண்டாயிருக்கையாலே சீறியுதையாநின்றாளென்று; கூடலிழைக்கப்புக்கவாறே கடலானது தன்திரையாலிழைக்கையாலே அழிக்கப்புக்கவாறே அதனோடே சீறாநின்றாளென்பர் என்பது பெரியவாச்சான்பிள்ளைவியாக்கியானம். (௩௪

## மாலைக்குஆற்றாமையின்மேல் வாடைக்குத் தலைமகள் இரங்கல்.

௩௫. பால்வாயப்பிறைப்பிள்ளையொக்கலைக்கொண்டுபகலிழந்த
மேல்பாற்றிசைப்பெண்புலம்புறுமாலையுலகளந்த
மால்பாறுழாய்க்குமனமுடையார்க்குநல்கிறையெல்லாஞ்
சோல்வானபுகுந்திதுவோரபனிவாடைதுழாகின்றதே.

(இ - ள்.) பால் வாய் பிறை பிள்ளை - அமிருதகிரணத்தை வெளியுமிழ்கிற தன்மையையுடைய இளம்பிறைச்சந்திரனாகிற பாலமாறாதவாயையுடைய (தனது) இளங்குழந்தையை, ஒக்கலை கொண்டு - (தனது) இடையபுறத்திலே [ஒருபக்கத்திலே] வைத்துக்கொண்டு, பகல் இழந்த மேல் பால் திசை பெண் - சூரியனாகிய கணவனையிழந்த மேற்குப்பக்கத்துத்திக்காகிய பெண், புலம்பு உறும் - வருந்தியழப்பெறுகிற, மாலை - மாலைப்பொழுதானது, உலகு அளந்த மால் பால் துழாய்க்கு மனம் உடையார்க்கு நல்கு இறை எல்லாம் - உலகங்களையளவிட்ட திருமாலினிடத்து உள்ள திருத்துழாய்க்கு ஆசைப்பட்ட நெஞ்சையுடைய தலைவியர்க்கு அருளிச்செய்த உதவியை முழுவதும், சொல்வான் - கவர்ந்துகொள்ளும்பொருட்டு, புகுந்து - வந்து, இது ஓர் பனி வாடை - இந்தக் குளிர்ந்த தொரு காற்று, துழாகின்றது - (என்மேல்) தடவுகின்றது, (எ - று.) — ஈற்றேகாரம் - இரக்கம், இதனால், அருசினமை தோன்றும்.

வாடையாலுண்டாகிற வருத்தமிகுதியை நோக்குமிடத்து, மாலைப்பொழுதாலுண்டாகிய வருத்தம் இனிதென்று தோன்றுதலால், தலைவனைப்பிரிந்து அவனது பிரசாதமான திருத்துழாயையேனும் பெற்றுத் தரிக்க ஆசைப்பட்ட மகளிர்க்கு மாலைக்காலம் செய்த உதவியையெல்லாம் கொள்ள வந்து இவ்வாடை வீசுகிறது என்றாள், மற்றவற்றையெல்லாம் கொள்ளைகொண்டாலும் மாலைப்பொழுது உயிரைமாத்திரமாவது கொள்ளாதுவிட்டது; இவ்வாடை அதனையும் மிச்சமில்லாதபடி கொண்டுபோகவந்ததென்று சொன்க. இதுஎனச்சுட்டினது, அதன்கொடுமையைக் கூறமுடியாமற் குறித்துக்காட்ட. ஓர்வாடை என்றது, முன்புவந்தவாடைகளைப்போலன்றியே இது பெண்பிறந்தாரை மிகவருத்திப் புதியதாய் ஒப்பற்று ஒருதுணைவேண்டாது தனியேவருகிறதொன்று என்றபடி. பனிவாடை யென்றது, முன்புஇருந்த நிலைமையைப்பற்றி, அன்றி, பனி - (மகளிரை) நடுங்குவிக்கிற, வாடை என்று உரைத்தலும் அமையும். துழாகின்றது - உயிருள்ளவிடத்தை நாடி மர்மஸ்தானத்திலே கைவைத்துத் தேடித்தடவுகிறதென்க. ஓர்வாடை புகுந்து துழாகின்றது - நிலாத்தோற்றம் மாலைப்பொழுது கடலொலி யென்னும் இவையெல்லாம் ஒருங்குசேர்ந்து செய்யாத நலிவை இவ்வாடையொன்றே வந்து செய்கிறதென்க.

தலைவனைப்பிரிந்து வருந்துகிற தனக்கு, கண்ணிறபடும்பொருளெல்லாம் தன்போலவே வருந்துகிறதாகத் தோன்றுதலால், 'பகலிழந்த மேல்பாலதிசைப்பெண் புலம்புறு மாலை' என்றாள். இதனால், மாலைக்காலம் தலைவனைப்பிரிந்த மகளிரை வருத்து மென்று தோற்றுவித்ததாயிற்று. 'பால்வாய்' என்ற

அடைமொழியை உபமேயமாகிய பிறைக்கும், உபமானமாகிய பிள்ளைக்கும் இரண்டுக்குங் கூட்டுக. பிள்ளை - இளமைப்பெயர். ஒக்கலை - இடைப்பக்கம்; ஒக்கலை - இடைப்பக்கமாதலை *"ஒக்கலை மருங்கின் பக்க மாகும்" என்ற பிங்கலந்தையாலும் அறிக; இது - ஐகாரவீற்றுப்பெயர். ஒக்கலைக் கொண்டு - ஒக்கலையிற்கொண்டு என ஏழாம்வேற்றுமைத்தொகை. இனி, 'பால்வாய்ப்பிறைப்பிள்ளை யொக்கலைக் கொண்டு' என்பதற்கு - தன்னிடத்து வாய்த்தலையுடைய பிறைப்பிள்ளையாகிய சுற்றத்தைக் கொண்டு என்றும் உரைப்பர்; இவ்வுரைக்கு, 'ஒக்கலை' என்பது - இரண்டாம்வேற்றுமைவிரி; ஒக்கல் என்பது சுற்றமாதலை †"தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்றாங்கு" என்னுமிடத்துங் காண்க. மனமொழுக்கொழுதலைப்பறை, சுற்றத்திற்கு ஒக்கல் என்று பெயர், தொழிலாகு பெயராகிய காரணக்குறி கு - சாரியை. வடமொழியில் 'திசா' என்பது பெண்பாற்சொல்லாதலால், 'மேல்பால்திசைப்பெண்' என்றார்; ‡"நாணென்னு நல்லாள்" என்றாற்போல. சந்திரனென்பது வடமொழியில் ஆண்பாற்சொல்லாதலால், 'பிறைப்பிள்ளை' எனப்பட்டது; §"திங்களஞ்செல்வன்" என்பதுங் காண்க. பிறையினிடத்துப் பிள்ளைத்தன்மையும் மேற்குத்திக்கினிடத்துப் பெண்தன்மையும் ஏற்றினதற்கு ஏற்பச் சூரியனிடத்துத் தலைமகனது தன்மையை வெளிப்படையாக ஏறிட்டுக்கூறாமையால், ஏகதேசவுருவகவணி. பகலென்னும் பொழுதின் பெயர் - அதற்குக்காரணமான சூரியனுக்கு ஆகுபெயராம், இனி, இங்கு, பகற்பொழுதென்றே பொருள்கொண்டாலுந் தவறாகாது. சூரியன் அஸ்தமிக்குமிடமும் அப்பொழுது இளம்பிறைகாணப்படுமிடமும் மேற்காதலால், இங்ஙனம் வருணித்தார். அதற்கு 'புலம்புதல்' என்றது, அக்காலத்து மிகுந்தோன்றுகிற பறவையொலியையாம்; சந்திர தரிசனத்தாற் பொங்குகிற கடலிரைச்சலையென்றுங் கூறுவர். மாலைநல்கிற்றையெல்லாம் என இயையும்.

எம்பெருமானைச் சேர்ந்து ஆநந்தமனுபவிக்கக் கருதி விரைந்து அச்சேர்க்கை அப்பொழுதே கிடைக்காது விளம்பித்தலால் வருந்துகிற ஆழ்வார்க்கு அவ்வனுபவத்துக்கு ஏற்ற காலம் ஆற்றாமையை மிகுவித்துக்கொண்டு வந்தவளவிலே சமுசாரத்தில் சுகவேதுக்களான பொருள்களெல்லாம் பாதகங்களாய்த்தோன்றி மேன்மேல்வருத்துகிற தன்மையைக் கண்டு அவ்வாழ்வார் இரங்கிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். எம்பெருமானைப் பிரிந்தநிலையில் அவனைச்சேர்தற்குஉரிய காலம் வந்துநெருங்கினால் ஒருசிறிது ஞானமே மிச்சமாம்படி மிக்கவிளக்கமுடைய விவேகம் குலைந்து பரதந்திரராயிருப்பார்க்கு ஆற்றாமைமிகு மென்பது, 'பால்வாய்ப்பிறைப்பிள்ளையொக்கலைக்கொண்டு பகலிழந்த மேல்பாற்றிசைப்பெண் புலம்புறு மாலை' என்பதனால் தோன்றும். பால்வாய்ப்பிறைப்பிள்ளை - ஞானத்தின் சிறுபகுதி. பகலிழத்தல் - விவேகங்குலைதல். மேல்திசைப்பெண் - [illegible]யோர்க்கு மேன்[illegible]வழியைக் காட்டுகிற பரதந்திரர். புலம்பு உறுதல் - ஆற்றாமை மிகுதல். மாலை - உரியகாலம். பின்இரண்டு அடி - சகலப்பிரபஞ்சத்தையுந் தனக்கேயுரிய பொருளாகவுடைய தலைவனான எம்பெருமானது இனிமையிலே ஈடுபட்டார்க்கு அக்காலவமைதியால் வந்த ஆற்றாமைக்கு மேலே சமசாரபதார்த்தங்கள் பாதகமாய் வருத்தஞ்செய்யு மென்றவாறு. 'உலகளந்தமால்' என்றதனால், அவ்வவை வேண்டாதிருக்கையிலும் எல்லாப்பிராணிகளின் தலையிலும் திருவடிகளைக் கொண்டுவந்துவைத்து அவற்றைத் தன்

---

* பிங்கலந்தை - ஆடவர்வகை - உஅசு.

† திருக்குறள் - இல்வாழ்க்கை - ந.

‡ ,, கள்ளுண்ணாமை - ச.

§ சிலப்பதிகாரம் - அந்திமாலைச்சிறப்புச்செய்காதை - ௯.

உடைமையாக ஆட்கொண்டவன், வேண்டுகிறளென்னை ஆட்கொள்ளாதொழி வதே! என்று ஈடுபட்டபடி.

மனமுடையார்க்கு-தம்மையே படர்க்கையாகக் கூறினது, தம்போல்வாரைக் குறிப்பதுமாம். நலகிறறையெல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். நலகிறறு - ஒன்றன்பால் இறநதகாலவினையாலணையும்பெயா. சோல்வான் - எச்சம்; 'சோரவான்' என்றும் பாடம். துழாகின்றது - துழாவுகின்றது என்பதன் விகாரம்.

'மனமுடையார்க்கு' என்று படர்க்கையாகக் கூறினதைக்கொண்டு, இதனை தோழிவார்த்தை யென்றும் தாயவார்த்தை யென்றும் கொள்வாரும் உளர். அப்பொழுது, ஆழவார்நிலையைக்கண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அனுசுதல், ஸ்வாபதேசம். (நடு)

## தோழி தலைவன்கொடுமை கூறல்.

கசு. துழாநெடுஞ்சூழிருளென்றுதந்தண்டாரதுபெயரா
வெழாநெடுவூழியெழுந்தவிக்காலத்துமீங்கிவளோ
வழாநெடுந்துன்பத்தளென்றிரங்காரம்மனோவிலங்கைக்
குழாநெடுமாடமிடித்தபிரானார்கொடுமைகளே.

(இ - ள்.) 'துழா நெடு சூழ இருள் என்று - (கண்ணுக்குப் பொருள்கள் புலப்படாமையால் கைகளால்) தடவித்தேடும்படியான முடிவில்லாத நிறைந்த இருட்பொழுதென்று ஒருபேரிட்டுக்கொண்டு, எழா நெடு ஊழி எழுந்த - (முன்பு ஒருகாலும்) தோன்றியறியாத நீண்ட கல்பம் தோன்றின, இக்காலத்தும் - இச்சமயத்திலும், ஈங்கு இவளோ - இவ்விடத்துத் தனிமை பொறுக்கமாட்டாதிருக்கிற இவளோ, தம தண் தாா அது பெயா ஆ - தமது குளிர்ந்த திருத்துழாயமாலைவிஷயமாக [துழாயமாலையென்னும் பெயரையே உருவிட்டுச்சொல்லிக்கொண்டு], வழா நெடு துன்பத்தள் - தவறுதலில்லாத மிக்க [முடிவில்லாத] துன்பமுடையவள்,' என்று - என்று (இவள்நிலையைத்) திருவுள்ளத்திற்கொண்டு, இரங்கார் - (தலைவர்) இரக்கங்கொண்டு வந்து அருளுகின்றிலர், அம்மனோ - அந்தோ! இலங்கை குழாம நெடு மாடம் இடித்த பிரானா கொடுமைகளே-இலங்காபுரியிலுள்ள கூட்டமான பெரியமாளிகைகளை (தம்சேனையைக்கொண்டு) இடித்துத்தள்ளின தலைவரது கொடுந்தன்மைகள் இருந்தபடி என்னே! (எ - று)

'இருளுக்கு ஈடுபட்ட தலைமகளாற்றாமை கண்ட தோழி தலைமகனை ஈசுவரனுடைய கொடுமை கூறின பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும். கீழ், சந்தியாகாலமும் வாடையும் நலிந்தபடி சொல்லிற்று; அதுக்குமேல் இருள் வந்து தோற்றிற்று, வாடையும் இராத்திரியும் 'நான் முன்னே அழிக்கிறேன், நான்முன்னே அழிக்கிறேன்' என்றுசொல்வனபோல வந்து நலிகிறபடி. ஓரிருட்பொழுது பலயுகங்களாகத் தோன்றி வருத்தத்தை மிகுவிக்கிற இக்காலத்திலும் இவள்தன்மையை அறிந்துவைத்தும் இரக்கங்கொண்டு வந்து உதவாதவர் மிக்க கொடுமை யுடையவர் என்றுளென்க. இவளோ, ஓ - தெரிநிலை; இரக்கமுமாம் அம்மனோ - கொடுமைக்கு அனுசிக் கூறிய வார்த்தை; ஐயோ என்பதுபோல. பிரிந்து தனிநிற்கிற இவளுக்கு இருள் நெடிதாமென்றும், இவள் பிரிவுபொறுக்கமாட்டாததன்மையளென்றும், திருத்துழாய்மாலையையேனும் பெற்றால் ஒருவாறு தரிக்கலாமென்று அதனையே விடாது வாய்பிதற்றும்படி ஆற்றாமை விஞ்சியதென்றும், அவ்வாற்றாமை வேறொருவாற்றாலுந் தணியாதென்றும் இங்ஙனம் இரங்குகைக்குப் பலகாரணங்கள் இருக்க, இவைகண்டு இரங்காமை தனித்தனியே கொடுமை யென்பது தோன்ற, 'கொடுமைகள்' என்ப பன்மையாற்கூறினது

முன்பு ஒருபிராட்டியின் ஆற்றாமைக்கு இரங்கி அதுதீர்த்தற்பொருட்டு இலங்கையையழித்து உதவினவர் இப்பொழுது அவ்வியல்புமாறி இவள்திறத்துக் கொடியரானபடி என்னேயென்பாள், 'இலங்கைக்குழாநெடுமாடமிடித்த பிரானார்கொடுமைகளே' என்றாள் *"கடலவழிவிட நிசிசரர்பொடிபட விருகணைசிறி, வடகயிலையெழுவிடை தழுவியது மறந்தாரோ, வடவர வமளியி லறிதுயி லமரு மரங்கேச, ரிடாகெட வருகிலா முருகலர் துளவு மிரங்காரே" என்பது இங்கு அறியத்தக்கது. அன்றி, அப்பொழுதும் பிராட்டிபக்கல் இரக்கத்தா லன்று, இலங்கையை அழித்தது: துஷ்டநிக்கிரகஞ் செய்து தமதுபிரபுத்வத்தை நிலைநிறுத்திக்கொள்ளும்பொருட்டாகவேயென்பது தோன்ற, இங்ஙனங் கூறினளுமாம் 'ஒருத்திக்காகக் கடலையடைத்து ராமனென்றும் லக்ஷ்மணனென்றும் எழுதத்துவெட்டின அம்புகளைப் புகவிட்டுக் குட்டிச்சுவரும் மட்டைத்தெங்கு மாக்கி மூலையடியே போகப்பண்ணின இந்தஉபகாரகனுடைய இந்தநீர்மையெல்லாம் எங்கே குடிபோய்த்தோ? என்று எம்பார் அருளிச்செய்வர். இதுவும் அழகிதொன்று உண்டாயிருக்கலர்கா தென்று அருமையாலே அழித்தாணித்தனைகாண் ஒருத்திக்காக உதவினவனல்லன்காண் என்று திருமலைநம்பி'—இது, பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம். இத்தால், முன்பு இவனுடன்கூடினதும் இவளிடத்து வேட்கையா லன்று, இவளது நிறையழிந்த தனதுசூழ்ச்சியால் அழிக்கக்கருதியேயென்பது போதரும். இலங்கைக்குழாநெடுமாடமிடித்த பிரான் - †"இராக்கதர்வாழிலங்கை பாழாளாகப் படைபொருதான்" என்றாற்போல. துழா என்பதற்கு- (பிரிந்ததலைவியினுயிரைக்) கைவிட்டுத்தேடுகிற என்றும் பொருருள்கொள்ளலாம். சூழ்இருள் - தப்பவேணுமென்று முயன்றாலும் தப்பவொண்ணாத இருள். தண்டாரதுபெயரா வழாநெடுந்துன்பத்த ளென இயையும் தண்டாரதுபெயரா வூழியெழுந்த என இயைத்து, இவள் தலைவனது தாரை விரும்பினது வியாஜமாக (இவளைவருத்துதற்கு) இருளென்று கற்பந் தோற்றின இவ்வளவிலும் என்றும் உரைக்கலாம். இருளென்றுஊழியெழுந்த இக்காலம் - வருகிறபொழுது ஒரு சந்யாசியாய்க் கிட்டினபொழுது இராவணனாற்போல வருகிறபொழுது ஓரிருளாய்க் கிட்டினபொழுது பலகல்பமாகுங் காலம். இரங்கார் - இராமபிரான் மோதிரத்தைக்கொடுத்து அநுமானைச் சாநகிபிராட்டியினிடம் தூதனுப்பியதுபோல, தமதுதுழாயைக் கொடுத்து ஒராளைத் தூதுவிடுதலுஞ் செய்திலர், அன்றி, இரங்கார் - காதல் செய்யாவிடினும் இரக்கமாவது செய்யலாகாதோ? இரக்கம் - பிறர்துன்பம் பொறுக்கமாட்டாமை 'நெடுவூழி - கல்பத்துக்கும் ஓரெல்லை உண்டிறே, அதுவுமில்லை இதுக்கு'. இக்காலத்தும் - பிரளயகாலத்திலே வந்து முகங்காட்டி ரக்ஷிக்குமவன் அக்காலத்தினும் நீண்டதான இக்காலத்திலே வந்து முகங்காட்டாதொழியலாமோ?

காலமவாய்த்தவிடத்தும் பேறுவாய்க்கப்பெறாத ஆழ்வார்க்கு உண்டான ஆற்றாமைமிகுதியைக் கண்ட அன்பர்கள் எம்பெருமானுக்கு அருளில்லையோவென்று சங்கித்துக் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். 'துழா நெடுஞ்சூழிருளென்று எழாநெடுவூழியெழுந்த இக்காலத்தும்' என்றதனால் விளம்பம்பொறுக்கமாட்டாமையால் மோகாந்தகாரத்தை உண்டுபண்ணுகிற காலம் இவர்க்கு நீட்டித்துத் தோன்றுதலும், 'ஈங்கிவளோ தமதண்டாரது பெயரா வழாநெடுந்துன்பத்தளென் றிரங்கார்' என்றதனால், இந்த இருள்தரு மாஞாலத்திலே தமது துன்பத்தைத் தாம் தீர்த்துக்கொள்ளும் ஆற்றலில்லாத இவ்வாழ்வார் நமது இனிமையையே கூறிக்கொண்டு அதுபெறாத கார

* திருவரங்கக்கலம்பகம் - உஉ.

† திருப்பல்லாண்டு - ௩.

ணமாக மிகவருந்துவ ரென்று திருவுள்ளமபற்றி எமபெருமான் கருணை செயதில னென்பதும, 'இலஙகைக்குழாநெடுமாட மிடித்த பிரானார் கொடுமைகளே' என்றதனால உலகமுழுவதும உயதறபொருட்டுத் திருவவதரித்துத் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செயதருளியவர் இவ்வொருவர்பக்கல இரஙகாதிருக்கிற கொடுமை என்னே யென்பதூஉந் தோன்றும்

இப்பாட்டைத் தலைமகள்வார்த்தையாகவுங் கொள்ளலாம்; அப்பொழுது, ஸ்வாபதேசத்தில ஆழ்வாரவார்த்தையாம். தாயவார்த்தையென்றல, அத்துணைச சிறப்பின்று

துழா - துழாவு என்பதன் விகாரம்; துழாம எனப பிரித்து, துழாவும என்னுஞ் செயயுமெனெச்சத்து ஈற்றுயிர்மெய் சென்றதெனினுமாம். தார் து எனபதில, அது என்பது - பகுதிப்பொருள்விகுதி எழா - எழாத, வழா - வழாத, ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சஙகள். அமமனே - இடைசசொல. இலஙகை, பிரான் - லஙகா, ப்ரபு என்னுமவடசொறகளின் திரிபுகள்.

நற்றாய் தன்மகள்சென்றசுரத்தருமைகூறி யிரங்கல்.

கூஎ. கொடுங்காற்சிலையர்நிரைகோளுழவர்கொலையில்வெய்ய
கடுங்காலிளைஞர்துடிபடுங்கவ்வைத்தருவினையே
னெடுங்காலமுங்கண்ணன்னீண்மலர்ப்பாதம்பரவிப்பெற்ற
தொடுங்காலொசியுமிடையிளமான்சென்றசூழ்கடமே.

(இ-ள்) அருவினையேன்-(அனுபவித்தற்கு)அரிய தீவினைப்பயனையுடைய யான், நெடு காலமும்-வெகுகாலம், கண்ணன் நீள் மலர் பாதம் பரவி-கண்ணபிரானது நீண்ட தாமரைமலர்போன்ற திருவடிகளை வழிபட்டு, பெற்ற-(அவ்வழிபாட்டின்பயனாக) ஈன்ற, தொடுங்கால ஒசியும இடை இள மான் - தொட்டால ஒடியுமபடியான [மிகமெல்லிய] இடையையுடைய இளமையான மான்போன்ற பார்வையுள்ள மகள், சென்ற - நடந்துபோன, சூழ் கடம்-பரந்த பாலைநிலம், —கொடு கால சிலையர்- வளைந்தவிற்கழுந்தையுடையவர்களும, நிரை கோள் உழவர் - பசுக்கூட்டஙகளைக் கவர்ந்துகொள்ளுதலையே தொழிலாகவுடையவர்களும, கொலையில வெய்ய - கொலைத்தொழிலிற்கொடியவர்களும, கடு கால - நடைவிரைந்த காலகளையுடையவர்களுமாகிய, இளைஞர் - இளவீரர்களது, துடி - பறைகள், படும - ஒலித்தலாலாகிற, கவ்வைத்து - ஆரவாரமுடையது, (எ - று.)

'புணர்ந்துடன்போன தலைமகளுடைய சுரத்து அருமை நினைந்து நற்றாய இரஙகின பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும இயற்கைப்புணர்ச்சி, பாஙகறகூட்டம, பாஙகியிறகூட்டம எனபவற்றால களவுநெறியில தலைமகளைக்கூடின தலைமகன் பழிபரவுதலின் தோழியால விலக்கப்பட்டு அதன்பின உடனே அவளை வெளிப்படையாக மணஞ்செயதுகொள்ளுதல இயல்பு அஙஙனஞ்செயயானாயின், அப்பழியடஙகுமாறு சிலநாள் தலைமகளைஒருவழிப்பிரிந்துஉறைதலும், தலைமகளைஉடன்கொண்டு தன்னூர்க்குச் செலலுதலும், தோழியாலவரைவுமுடுக்கப்பட்டு அரியஅணிகலஞ்செலுத்தி வரைந்துகொள்ளுதலும என்னுமஇமமூன்றினுள்ஒன்றுமுறைமையாயநிகழும, அவற்றுள், தலைவன் தலைவியை இடைச்சுரநெறியாக உடன்கொண்டுபோனமையைத் தோழியாலறிந்த செவிலித்தாய் அதனை நற்றாயக்கு உணர்த்த, அவள் அப்பாலைநிலத்தின் பலவகைக்கொடுமைகளையும தன்மகளதுமிக்கமென்மையையும கருதிக் கவன்று இஙஙனஙகூறினாள். கலந்துபிரிந்ததலைமகள் தலைமகன்வருமளவும்பொறுத்திருக்கமாட்டாமலஆற்றாமைமிகுகையாலே தாயாருமஅறியாதபடி இரவில தனிவழியே புறப்பட்டு அவனிருந்தவிடத்தை நோககிச செலல, இவளைப

படுக்கையிற்காணாத தாயார் வழியிலபாயங்களை நினைத்துச் சோகிக்கிறாளென்று கொள்வாரும் உளர். பாலைநிலத்துக்குஉரிய பறையாகிய நிரைகோட்பறையும், அந்நிலத்துக்குஉரிய செய்தியாகிய நிரைகொள்ளுதலும், அந்நிலத்துக்கு உரிய மக்களாகிய எயினரும் ஆகிய கருப்பொருள்களும், பிரிதலும் பிரிதல் நிமித்தமும் என்பவற்றில் அடக்கப்படும் உடன்போக்காகிய உரிப்பொருளும் இப்பாட்டில் தோன்றுதல் காண்க.

வளைந்த விற்கழுந்தை யுடையவ ரென்றதனால், ஒருபொருளைக்கண்ட பின் அதனையெய்தற்கு வில்வளைத்த லென்பதின்றி, வில்வளைத்து நாணேற்றி அம்புதொடுத்துக் கையிற்சித்தமாகவைத்துக்கொண்டு எய்யஇலக்குத்தேடு பவ ரென்றதாம். கொடுமை - வளைவாதலை 'கொடுமரம்' என்னும் வில்லின் பெயரிலுங் காண்க. இனி, கொடுமை - அச்சந்தருந்தன்மையுமாம். கார்சிலை - சிலைக்கால்; தறுகணுடைமை. 'நிரைகோளுழவர்' என்றது - உழுது பயிர்செய்தல்போல நிரைகொள்ளுதலையே இடைவிடாது வருந்திமுயன்று ஊக்கத்தோடுசெய்யும் ஜீவநோபாயவிருத்தியாகவுடையவ ரென்றபடி; பசுக்கொலைக்குப் பின்வாங்காதவர். இவர்க்கு, கொலையில் வெம்மை - பொருளுக்காகவும் பகைமைக்காகவும் வேறொருபயனுக்காகவுமே யன்றித் துடிப்புக் காணும்பொருட்டாகவுங் கொல்லுதல், அன்றி, 'சாவக்கொல்லாதே கிடந்துழக்கும்படி கொல்லுகை' என்றும் உரைப்பர். கடுங்கால் - 'பதின்காதம் இருபதின்காதத்துக்குஅவ்வருகே ஒருஹிம்ஸை ஸித்திக்குமென்றால், அதில் தட்டுப்பாராதே அவ்வளவும்போய் மீளும்படியான காற்கடுமையையுடையராயிருப்பர்கள்' என்ற நம்பிள்ளையீடு அறியத்தக்கது. துடி படுங் கவ்வைத்து - இங்கு ஊரவர் வாய்ப்பறையாகவும் நாக்கடிப்பாகவும் முழங்கி அலர்தூற்றும் ஆரவாரத்தினும் அங்கு எயினர்பறையொலியைத் தலைமகள் இனிதென்று நினைத்தபடி என்னே! 'கொலையில்வெய்ய' என்றதனால், மற்றும்அந்நிலத்தார்க்குஉரிய போர் ஊறெறிதல் சூறையாடல் என்னுந் தொழில்களுந் தோன்றும். துடி - பாலைநிலப்பறை. பலநாள் தெய்வவழிபாடுசெய்து அருமையாகப்பெற்ற மகள் சொல்லாதுபிரிந்து கொடுஞ்சுரத்தில் நடந்துசென்று நீங்குதற்கு ஏற்ற தீவினையுடையே னென்பாள், 'அருவினையேன்' என்றாள். நெடுங்காலமும் என்ற முற்றும்மை - மிகுதிவிளக்குவது. திரிவிக்கிரமாவதாரகாலத்தில் நீண்டமைபற்றி, 'நீண்மலர்ப்பாதம்' என்றது, இனி, திருவடிக்குநீட்சி- அன்பர்கள்மனத்தில்உடனேசென்றுசேர்தலுமாம். *"மலர்மிசையேகினான்" என்றாற்போல. மான் - உவமையாகுபெயர்; மடநோக்கிற்கு உவமை. அவள் தன்னையும் செவிலித்தோழியரையும் விட்டுப்பிரிந்த தனிமையால் மருண்ட மான்போல எப்புறத்தும் விழித்துப்பார்ப்ப ளென்பது கருதி, 'இளமான்' என்றாள். தொடுங்கால் ஒசியும் இடை - மருங்கணைகிற தலைமகன்தான் தொடுமளவிலும் முறியு மென்னும்படி நுண்ணிதாகவுள்ள இடை; உல்லாசமாகத் தானே தன்இடையிலே கையைவைத்தாலும் மலையை வைத்தாற்போலப் பொறாத இடை இடை உண்டோ இல்லையோ என்னும் ஐயந்தீரக் கையால் தொட்டுப்பார்க்கவும் பொறாத இடை. சூழ்கடம் என்பதற்கு - சூழ்ச்சியையுடைய வழி யென்றும், சூழ்ச்சியாவது-வெம்மையால் துயரைவிளைத்த லென்றும் உரைப்பர் அழகியமணவாளசீயர்.

செல்லுதற்கரிய சம்சாரமார்க்கத்தில் ஆழ்வார் அளவுக்குவிஞ்சிய பக்தியோடு நடத்தலை அறிந்த ஞானிகள் அரிதென்று பாராட்டிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள் 'இளமான்' என்று பருவத்தையும் பெண்மையையுங் குறித்ததனால், புதுமையான அடிமையைப்பூண்ட விசேஷ பக்தியோடு கூடிய அறிவையுடைய ஆழ்வா ரென்றபடி. 'தொடுங்காலொசியு

* திருக்குறள்-கடவுள்வாழ்த்து - ௩.

யிடை' என்றது, பக்திகாரியமான வைராக்கியத்தின் முதிர்நிலையைத் தோற்றுவிக்கிறது;'இடையழகென்பது, ஒன்றும்பொருந்த வைராக்கியத்தை' என்பர் அழகியமணவாளசீயர்: அன்றி, வேறொன்றன் தொடர்ச்சியுண்டானால் இடையே கெடும்படியான இடையறாத அன்பின் மேன்மை சொல்லியதுமாம். 'அருவினையேன் நெடுங்காலமும் கண்ணன்நீணமலர்ப்பாதம் பரவிப் பெற்ற' என்றதனால், பலபிறப்புக்களிற்செய்த தவம் ஞானம் யோகம் என்பவற்றால் தீவினையொழிந்தாலன்றி இவ்வாப்பக்கல் நம்முடையவரென்ற அபிமானந் தோன்றாதென்று, தமக்கு அதுசித்தித்த அருமையைக் காட்டும். சென்ற சூழ்கடம் - இவர் இப்படிப் பக்தியோடு கூடியொழுகுகிற சம்சாரமாகிய பெருங்காடானது,—கொடுங் கால் சிலையர் - செல்லத்தகாத தீவழியிற் செல்லுங் கொடுமையை அழித்தற்கருவியாகவுடையவையும், நிரை கோள் உழவர் - தொகுதியாகவுள்ள சுவைமுதலிய புலன்களைப் பற்றுதலையே விடாத தொழிலாகவுடையவையும், கொலையில் வெய்ய - (உயிர்களைக்) கெடுப்பதில் கொடியவையும், கடுங் கால-விரைந்துசெல்பவையும் ஆகிய, இளைஞர் - வலிய பஞ்சஇந்திரியங்கள், துடி படும் - ('ஐம்புலனுந் தாங்கற்கு அரிது' என்று பலருங் கூறும்படி) பறையறைந்தாற்போலப் பிரசித்திபெற்ற, கவ்வைத்து - ஆடம்பரமுடையது என்க.

கோள் - கொள்ளுதல், முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (௩௭)

## தலைவனைப்பிரிந்த தலைவி போலிகண்டு மகிழ்தல்.

௩௮. கடமாயினகளகழித்துத்தங்காலவன்மையாற்பலநாட்
டடமாயினபுக்குநீர்நிலைநின்றதவமிதுகொல்
குடமாடியிம்மண்ணும்விண்ணுங்குலுங்கவுலகளந்து
நடமாடியபெருமானுருவொத்தனநீலங்களே.

(இ - ள்.) கடம் ஆயினகள் கழித்து - காடுகளாகவுள்ளவற்றைக் கடந்தொழிந்து, தடம் ஆயின புக்கு - தடாகங்களாகவுள்ளவற்றிற் பிரவேசித்து, (அங்கு), தம் கால் வன்மையால் - தமதுகால்களின்வலிமையால், பல நாள் - அநேககாலம், நீர் நிலை நின்ற - நீரிலே நீங்காதுநின்று செய்த, தவம் இது கொல் - இத்தவத்தினாலேயோ, நீலங்கள் - நீலோற்பலமலர்கள், குடம் ஆடி இம் மண்ணும் விண்ணும் குலுங்க உலகு அளந்து நடம் ஆடிய பெருமான் உரு ஒத்தன - (கிருஷ்ணாவதாரத்தில்) குடக்கூத்தாடி (த்திரிவிக்கிரமாவதாரத்தில்)இந்தமண்ணுலகமும் விண்ணுலகமும் நெகிழும்படி உலகங்களை அளவிட்டு (இங்ஙனம்) திருவிளையாடல்செய்தருளிய தலைவனான எம்பெருமானது திருமேனிநிறம்போன்ற நிறம் பெற்றன? (எ - று.)

'தலைமகனான சர்வேசுவரனுடைய திருநிறத்திற் போலியான நெய்தலைக் கண்ட தலைமகள் பாசுரம்'என்பர் அழகியமணவாளசீயரும். தலைமகன் பிரியப்பெற்று அப்பிரிவையாற்றாது இரங்குகிற தலைமகள், தான்இரங்குமிடமாகிய நெய்தல்நிலத்திலேயுள்ள கருநெய்தல்மலர்களைநோக்கி, அவை தலைமகனான திருமாலினது திருமேனிநிறத்தை ஒத்திருக்கக் கண்டு, இவற்றைக் கண்டேனும் ஒருவாறு தரித்திருக்கலா மென்று கருதி, அவை அவன்திருமேனியை ஒத்தலாகிய சாரூப்யநிலையைப் பெற்றமைகுறித்து வியந்து, 'இவை நெடுநாள் நீர்நிலையில் நின்று இடைவிடாது செய்த தவத்தின் பலமாகவன்றோ இதுபெற்றது' என்று கூறுகிறாள். இனி, இப்பாட்டுக்கு, போலிகண்டுஅழிதலென்னுந் துறையாகவும் பொருள்கூறுவர்.

அக்கருங்குவளைகள் காடுகளைத் தமக்குஇடமாகக்கொள்ளாமற் கழித்து நீர்நிலையை இடமாகக்கொண்ட தன்மையை, அருநெறியான வனங்களை யாத்திரைசெய்து கடந்து தவத்துக்குஏற்ற இடத்தை நாடி அடைந்த

தாகக் குறித்தார்; இனி, 'கடமாயினகள் கழித்து' என்பதற்கு - தாம் அனுபவிக்கக் கடமைப்பட்டனவான தீவினைகளையெல்லாம் கழிக்கத் தொடங்கியென்று உரைத்தலும் உண்டு. இவற்றிற்குக் காலவன்மை - நீண்டநாளங்களின் நிலைநிற்குந்தன்மை. 'பலநாள்' என்றதில், தாம் பலம் [பயன்] பெறு நாளளவும் என்பதுந் தோன்றும். மழை பனி வெயில் என்ற வேறுபாடின்றி எக்காலத்திலும் நீர்நிலையில் பாசியேறநிற்றல் தவத்துக்கு ஓரிலக்கணமாம்; இவை அங்ஙனம் நிற்றலையே, தவஞ்செய்தலாகக் குறித்தது. இவை தனித்தனி மேன்முகமாக ஒருதாளால் நின்று மலர்ந்து தேன்சொரிதல், சூரியனுக்கு அபிமுகமாக ஒற்றைக்காலால் நின்று மனங்குழைந்து ஆநந்தக்கண்ணீர்சொரிந்து யோகஞ்செய்தல்போலு மென்க. தவம் வேண்டியவேண்டியாங்கு எய்தற்பயத்த தாதலால், 'தவமிதுகொல், பெருமானுருவொத்தன நீலங்கள்' என்றது. அன்றியும், தவஞ்செய்து வினையொழித்து முத்திபெறுவார் எம்பெருமான்வடிவம்போன்ற வடிவத்தைப் பெறுவர். [சரியை கிரியை யோகம் ஞானம் என்பவற்றிற்கு முறையே சாலோக்யம் சாமீப்யம் சாரூப்யம் சாயுஜ்யம் என்பவை பயனென்று சைவசமயத்துக் கூறுதலும் இங்கு அறியத்தக்கது] *"முருகவிழ்செய்யகமல முனைநெகிழ்ந்து முகமலர்ந் துறுகணீர்சிந்தி, யொருபசுந்தாளின் வனத்திலின்னறிதினுஞற்றிய தவத்தினாலன்றே, விரிமலரசோகின் றளிர்நலங் கவற்றி மென்சிறையனமென மிழற்றும், பரிபுரமணிந்து பஞ்சியூட்டிய பொற்பதத்தினைச் சிறிதுபோன்றனவே" என்பதிலும் இக்கருத்து விளங்குதல் காண்க. ஏதுத் தற்குறிப்பேற்றவணி. இந்நூலின் முப்பத்திரண்டாங்கவியோடு ஒப்பிடுக.

குடக்கூத்தாவது - தலையிலே அடுக்குக்குடமிருக்க, இரண்டுதோள்களிலுங் குடமிருக்க, இரண்டுகையிலுங் குடங்களையேந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுவதொரு கூத்து, †"குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்ல வெங்கோவே" என்றார் பெரியாழ்வாரும். இடையர்கள் தமதுசெல்வச்செருக்குக்கு அறிகுறியாகவும், யாவருங்கண்டுகொண்டாடவும், தமதுவாசஸ்தானமான முல்லைநிலமும் அதிலுள்ள பசுக்கள் முதலிய செல்வங்களும் எக்குறையுமின்றிச் செழித்துவளரவும் ஆடுவது,இது. இது, பதினோராடலுள் ஒன்றும் [அவையாவன - அல்லியம்,கொட்டி,குடை,குடம்,பாண்டரங்கம்,மல்,துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை என்பன] அன்றியும், இது, விநோதக்கூத்து ஆறனுள் ஒன்றும், [அவையாவன - குரவை, கலிநடம், குடக்கூத்து, கரணம், நோக்கு, தோற்பாவை என்பன.] ‡"வாணன் பேரூர் மறுகிடை நடந்து, நீணிலமளந்தோ னாடிய குடமும்" என்றதனால், தனது பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமான அநிருத்தனை உஷைநிமித்தமாகப் பாணாசுரன் சிறையில் வைத்திட அவனைச்சிறைமீட்கச்சென்ற கண்ணபிரான் பாணாசுரனதுநகரத்து வீதியிற் சென்று வெற்றிச்செருக்குத்தோன்றக் குடக்கூத்தாடின னென்று தெரிகிறது. சிலப்பதிகாரவுரையில் 'பஞ்சலோகங்களாலும் மண்ணாலுங் குடங்கொண்டு வாசுதேவ னாடினது' என்றதும் இங்கு அறியற்பாலது, "குடத்தாடல் குன்றெடுத்தோனாடல்" என்ப.

'இம்மண்ணும் விண்ணுங் குலுங்க' என்றதை மத்தியம தீபமாகக் 'குடமாடி' என்றதனோடுங் கூட்டலாம். குடக்கூத்தாடுதலை நோக்கி மண்ணுலகத்தவர்போல விண்ணுலகத்தவரும் வியந்தன ரென்க, சௌலப்யத்தைப் பாராட்டி. குடமாடுதலும் உலகளத்தலுஞ் செய்யுமிடத்துச் சிறிதும் இளைப்புத்தோன்றாது விளையாட்டாகச்செய்தமை தோன்ற, 'நடமாடிய' என்

---

* நைடதம் - அன்னத்தைத்தூதுவிட்டபடலம் - ௨௫.
† பெரியாழ்வார்திருமொழி - பதினேழாந்திருப்பதிகம் - ௭.
‡ சிலப்பதிகாரம், கடலாடுகாதை, ௫௪ - ௫௫.

ளூர். *"கேட்டுமுணர்ந்தவர் கேசவற காளன்றி யாவரோ, வாட்டமிலா வண்கை மாவலி வாதிக்க வாதிப்புண்டு, ஈட்டங்கொள்தேவர்கள்சென்றிரந் தார்க்கு இடர்நீக்கிய, கோட்டங்கை வாமனனாய்ச் செய்த கூத்துக்கள் கண் டுமே" என்பதிலும் திரிவிக்கிரமனுக்குக் கூத்துக்கூறியவாறு காண்க.

எம்பெருமானைச் சேரப்பெறாது வருந்துகிற ஆழ்வார், பரமபதத்து முக் தர்கள் எம்பெருமானது வடிவோடொத்த வடிவைப் பெற்றிருந்தல் மையைத் தமதுஞானத்தாற் கண்ணுற்று, 'இவர்கள் இங்ஙனமானது உபா யாந்தரங்களைத்தவிர்ந்து நெடுங்காலம் இவ்வுலகில் நின்று செய்த யோகத்தி னாலோ?' என்று ஒருகாரணத்தைக் கற்பித்து, அக்காரணம் இன்னதென்று சங்கையறத் தெளிவாகத் தெரிந்தால் யானும் அதுசெய்து இந்நிலைபெறு வேனென்று கருதுதல், இதற்கு உள்ளுறைபொருள் கடமாயினகள் கழி த்தல் - பிரபத்திமார்க்கத்தில் நிற்பார் மற்றைச் சாதநாநுஷ்டானங்களை யொழித்தல்; அன்றி, எம்பெருமான்பக்கல் செய்யத்தக்க கடமைகளைத் தவ றாதுசெய்து நிறைவேற்றுதலுமாம் திவ்யதேசயாத்திரைசெய்து முடித்த லுமாம். 'தமகாலவன்மை' என்றது, அவர்களது இடைவிடாதமுயற்சியின் ஆற்றலை; (தாள் என்று முயற்சிக்கு ஒருபேருண்மை காண்க.) பலநாள் தடமாயினபுகுதல் - தடாகம்போலக் குளிர்ந்த எம்பெருமானது சொரூபத் திலே யீடுபடுதல். நீர்நிலைநிற்றல் - அவ்வெம்பெருமானது அடியவர்க்கெளி மையாகிய நீர்மையிலே ஆழ்தல் தவமென்றது, இங்கே,சிறந்தசாதந மெ ன்னும் பொருளது. பெருமானுருவொத்தல் - சாரூப்யமடைதல் முக் தரை நீலமலரென்றது, நிறத்திறகேயன்றி, யாவரும் மகிழ்ந்து தலைமேற் கொள்ளும்படியான சிறப்புக்கும், மென்மைக்கும், முகமலர்ச்சிக்கு மாம் யாவரும் எளிதிற் சரணமடையும்படியான நீர்மையின் ஒற்றுமை கண்ண னுக்குந் திரிவிக்கிரமனுக்கும் இருத்தல்பற்றி, அவ்விரண்டு அவதாரங்களை யுஞ் சேர்த்துக்கூறினது.

'இம்மண்ணும் விண்ணும் குலுங்க' என்பதற்கு- இம்மண்ணுலகத்தாரும் அவ்விண்ணுலகத்தாரும் மனமிளக என்று உரைத்தலே சம்பிரதாயம் உலகங்களைநடுங்கவென் றுஉரைத்தல் சம்பிரதாயமன்று, 'ஸம்ஹாரகாரணன் நருத்தமாகில்றே, லோகம் நடுங்குகிறதென்ன லாவது: அங்ஙனன்றிக்கே, லோகமடைய அச்செயலுக்கு நெஞ்சுஉளுக்கினபடி' என்ற பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தை நோக்குக வெயில் நிலா விளக்கொளி முதலி யவை உலகத்திற் பரவுதல்போலத் தேஜோமயமான சுவாமியினது திருவடி எங்கும்பரவியதனால் அதன்கீழ்ப்பட்டபிராணிகளுக்கு அபாயம் சிறிதுமி லலை யெனக. அன்றியும், பகவானது திருவடி மலரினும் மெல்லிய தாத லால், அது மேலேபட்டபோது இன்பமுண்டாமேயன்றித் துன்பமுண்டா காதென்றும் உணர்க

* முதலிரண்டடிகளில், 'ஆயின' என்றது - பகுதிப்பொருள்விகுதிமாத் திரமாய் நிற்கும் கொல் - ஊகித்தற்பொருளது. தடம், நீலம் - வடசொ ற்கள். நீலம் என்னும் நிறத்தின் பெயர், அந்நிறத்தையுடைய மலருக்குப் பண்புபற்றியபெயராம். (௬௮)

## தலைவனதுஉருவெளிப்பாடுகண்டதலைவி தோழிக்குக் கூறுதல்.

௬௯. நீலத்தடவரைமேற்புண்டரீகநெடுந்தடங்கள்
போலப்பொலிந்தெமக்கெல்லாவிடத்தவுமபொங்குமுந்நீர்

* திருவாய்மொழி - அறுபத்தைந்தாந்திருப்பதிகம் - ௩.

ஞாலப்பிரான்விசும்புக்கும்பிரான்மற்றுநல்லோர்பிரான்
கோலங்கரியபிரானெம்பிரானகண்ணின்கோலங்களே.

(இ - ள்.) நீலம தட வரைமேல் புண்டரீகம் நெடு தடங்கள் போல பொலிந்து - நீலரத்தின்மயமான பெரியதொரு மலையின்மே லுள்ள பெரியசெந்தாமரைமலர்த்தடாகங்கள்போல விளங்கி, எமக்கு எல்லா இடத்தவும் - எமக்குக் காணுமிடந்தோறுந் தோன்றுகின்றவையுமா யுள்ளவை, (எவை யெனில்),—பொங்கு முந்நீர் ஞாலம பிரான் - கிளர்கிற கடல் சூழ்ந்த மண்ணுலகத்துக்குத தலைவனும், விசும்புக்கும பிரான் - விண்ணுலகத்துக்குந் தலைவனும, மற்றும நல்லோர பிரான் - மற்றுமுள்ள நல்லவர் யாவர்க்குந் தலைவனும, கோலம் கரிய பிரான் - திருமேனிநிறம கருமைவாய்ந்த பிரபுவும், எம்பிரான் - எமக்குததலைவனுமானவனது, கண்ணின் கோலங்களே - திருக்கண்களின் அழகுகளே; (எ - று.)—எல்லாவிடத்தவும், கண்ணின்கோலங்களே.

ஈற்றுஏகாரம - பிரிநிலை, சாவாறுகககூடாது கண்ணழகி லீடுபட்டார்க்கு மற்றொன்றும பொருளாகத தோன்றாமை காட்டும்: * "தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற்கமலமன்ன, தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கைகண்டாரு மஃதே, வாள்கொண்டகண்ணார் யாரே வடிவினை முடியக்கண்டார், ஊழ்கொண்டசமயத தன்னை யுருவு கண்டாரை யொத்தார்" என்றதுபோல. இனி, ஏகாரததை இரக்கமாகக்கொள்ளின், கண்ணுக்குப் புலப்படுமவடிவு கைகளாலதழுவுதறகுஎட்டாது நலிகிறபடியை விளக்கும்.

'இப்பாட்டு, களவிமரியாதையில நாயகனுன ஈசுவரனுடைய உருவெளிப்பாட்டைத தோழிமாரதொடக்கமானூர்க்கு நாயகி உரைத்தது' என்பர் அழகியமணவாளசீயரும. ஒருபொருளினிடதது இடைவிடாது கருத்தைச செலுத்த, அந்தப் பாவனையின் ஊற்றத்தால அப்பொருள் கண்ணுக்கு எதிரில தோன்றியதுபோலக் காணப்படுதல, இயல்பு. அதில, கண்ணழகில ஆழாது கூறியது இது.

நீலததடவரை - எமபெருமானது கரியபெரியதிருமேனிக்கும், புண்டரீக நெடுந்தடங்கள் - அவனதுதிருக்கணமலர்களுக்கும உவமை ஞாலம என்றதனால் லீலாவிபூதியையும,விசும்பு என்றதனால வெளிநாடான நித்யவிபூதியையுங் குறித்தவா, 'மற்றுமநல்லோர' என்றது, இவ்வுலகத்தில ஆழங்காற்படாமலும முத்தியிற்சென்று சேரப்பெறாமலும எமபெருமான்குணங்களில ஈடுபட்டு இடைநிற்கிற முமுக்ஷுக்களை அன்றி, விசும்பு - தேவலோகமும, நல்லோர் - நித்ய முக்தருமே என்றலும உண்டு.

பகவத்கடாக்ஷததிலேயீடுபட்ட ஆழ்வார் அவ்வீடுபாட்டின் முதிர்ச்சியால எம்பெருமானது திருக்கண்ணழகு உருவெளிப்பாடாய எங்குந்தோன்றி விளங்கக் கண்டு அதனை அன்பர்க்குக் கூறுதல, இதறகு உள்ளுறைபொருள. திருவாய்மொழியிலும † "ஏழையராவியுண்ணு மிணைக்கூற்றங்கொலோ அறியேன், ஆழியங்கண்ணபிரான திருக்கண்கள்கொலோ வறியேன், சூழவுந் தாமரைநாண்மலர்போல வந்துதோன்றுங் கண்டீர், தோழியர்கா ளன்னைமீரென்செய்கேன் துயராட்டியேனே" என்று அருளிச்செய்யுமாறு அறிக. கண்ணின்கோலங்கள் - மிளிர்ச்சி குளிர்ச்சி மலர்ச்சி பெருமை செம்மை முதலியன; ‡"கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப், பெரியவாய கண்கள் என்னைப் பேதைமைசெய்தனவே" என்று திருப்பாணாழ்வார் ஈடுபட்டமையுங் காண்க. §"நின்றுதோன்றிக் கண்ணுள்நீங்கா என்னெஞ்சுள்ளும்

* கம்பராமாயணம - பாலகாண்டம - உலாவியற்படலம - கக.
† திருவாய்மொழி - அறுபத்தேழாந்திருப்பதிகம - க.
‡ அமலனாதிபிரான் - அ.
§ திருவாய்மொழி - நாற்பத்தைந்தாந்திருப்பதிகம - ரு.

நீங்காவே'' என்றாற்போல, 'எமக்கெல்லாவிடத்தவும்' என்றார். 'தம்திருவுள்ளம் எம்பெருமான்சௌந்தரியத்திலே அகப்பட்டு மறமொன்றுக்கு உரித்தன்றிக்கே அழிந்தபடியைச் சொல்லுகிறது' என்ற அப்பிள்ளையுரையை நோக்குக. பொங்குமுந்நீர்ஞாலம் - ஒன்றோடொன்று தம்மோறுகிற சாத்துவிகம் ராஜசம் தாமசம் என்னும் மூன்றுகுணங்களும் பொருந்திய பிரபஞ்சமென்னவுமாம்; மூன்று நீர்மை - அறம்பொருளின்பமுமாம்.

முந்நீர்-ஆற்றுநீர் ஊற்றுநீர் வேற்றுநீர் [மழைநீர்]என்னும் மூன்றுவகை நீரை யுடையதெனப் பண்புத்தொகையன்மொழியாகியகாரணப்பெயரென்பது, பழையகொள்கை; இதனை மறுத்து,'முந்நீர்-கடல்;ஆகுபெயர்.ஆற்றுநீர் ஊற்றுநீர் மேல்நீர் என இவையென்பார்க்கு, அற்றன்று. ஆற்றுநீர் மேல்நீராகலானும், இவ்விரண்டுமில்வழி ஊற்றுநீருமின்றாமாதலானும், இவற்றை முந்நீரென்றல் பொருந்தியதன்று. முதியநீரெனின், *நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றும் தடிந்தெழிலி,தானல்கா தாகி விடின்'' என்றதனால், அதுவும் மேல்நீரின்றி அமையாமையின், ஆகாது. ஆனால், முந்நீர்க்குப் பொருள் யாதோவெனின்,—முச்செய்கையையுடைய நீர் முந்நீரென்பது; முச்செய்கையாவது- மண்ணைப்படைத்தலும்,மண்ணையழித்தலும்,மண்ணைக் காத்தலுமாம்'என்பர் அடியார்க்குநல்லார் நச்சினார்க்கினியர்கருத்தும் இதுவே;நீரினின்று நிலம்பிறந்ததென வேதமோதுதலாற் படைத்தலும், நீரின்றி உலகம்பிழையாதாதலாற் காத்தலும்,இறுதியில் நீரினால் மூடப்பட்டு உலகம் அழிதலால் அழித்தலும் ஆக முத்தொழில்களும் கடலுக்கு உரியனவாம். இனி,'முன்னீர்'என்றலும் ஒன்று, பழையநீரெனக. ஆதியிற் கடவுள் நீரையே படைத்தாரென்று புராணங் கூறும். (௩௯)

## இருள்கண்டிரங்கிய தலைமகள் தோழியர்க்கு வரைவுவிருப்புரைத்தல்.

௪௰. கோலப்பகற்களிறொன்றுகற்புய்யக்குழாம்விரிந்த
நீலக்கங்குற்களிறெல்லாநிரைந்தனநேரிழையீர்
ஞாலப்பொன்மாதின்மணாளன்றுழாய்நங்கள்சூழ்குழற்கே
யே

(இ - ள்.) கோலம் பகல் களிறு ஒன்று - அலங்காரத்தையுடைய சூரியனாகிய ஒப்பில்லாததொரு யானை, கல் புய்ய - அஸ்தமன பருவத்திலே மறைய, குழாம் விரிந்த நீலம் கங்குல் களிறு எல்லாம் - திரளாகப்பரந்த நீலநிறத்தையுடைய இரவாகிய யானைகளெல்லாம், நிரைந்தன - அடைவேதிரில் வந்துசேர்ந்தன, நேர் இழையீர்-தகுதியானஆபரணங்களையுடையவர்களே! ஞாலம் பொன் மாதின் மணாளன் - பூதேவிக்கும் ஸ்ரீதேவிக்குங் கணவனான எம்பெருமான், துழாய் - (தனது) திருத்துழாய் மாலையை, நங்கள் சூழ் குழற்கே - எமது அடர்ந்ததலைமயிரிலே, ஏல புனைந்து - தகுதியாகச் சூட்ட, என்னைமார் - எமது தாய்மார், எம்மை நோக்குவது - எம்மைப் பார்ப்பது, என்றுகொலோ - எந்நாளோ? (எ - று.)

'பகற்பொழுதுகழிந்து இருள்கண்டு இரங்கின தலைமகள் 'உற்றார் வரைந்துகொடுப்பது என்றோ?' என்று பாங்கிமார்க்கு உரைத்த பாசுரம்' என்றும், 'என்று வரைவைவிரைவித்தல்வேண்டி உரைத்தாளாயத்து' என்றும் உரைப்பர் அழகியமணவாளசீயரும். இனி, 'சூழ்குழற்கு' என்பதற்கு-அன்மொழித்தொகையாக, இம்மகளுக்கு எனப் பொருள்கொண்டு, இப்பாட்டைத் தோழி வார்த்தையாகவுரைத்தல் சிறவாமை கண்டுகொள்க

இயற்கையிற் செந்நிறத்தையும் மாலைப்பொழுதிற் செவ்வானக்கோலத்தையும் உடைய கம்பீரமான சூரியன், இயற்கையில் உத்தமவிலக்

* திருக்குறள் - வான்சிறப்பு - ௭.

கணமாகிய செம்புள்ளிகளையும் செய்யகையில் செந்நிற முகபடாமாகிய அலங்காரத்தையும் உடைய பெரிய யானை போலுதலால், 'கோலப்பகற் களிறொன்று' என்றார் இரவுபோலன்றிப் பகல் சிறந்து ஆகியிருத்தற்கு உரியதாயிருந்த தன்மைபற்றி, 'கோலப்பகல்'என்று விசேடித்துக் கூறினருமாம். பகல் என்றது-சூரியனுக்கும், ~~கல் என்றது-மலைக்கும் இலக்கணை.~~ கல்என்றது மலையாதலை*"கல்லெடுத்துக் கன்மாரி காத்தா யென்னும்,"†"கல் லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்"என்னுமிடங்களிலுங் காண்க. புய்த்தல் - வாங்குதல்; இங்கே,போதல். ‡"கோடு புயக்கல்லா துழக்கும்"என்பதற்கு - 'கொம்பைவாங்கமாட்டாதே வருந்தும்'என்று நச்சி னார்க்கினியா உரைத்தல் காண்க. இரவை 'களிறெல்லாம்' என்றது-இருட்சி யாலும்,திரட்சியாலும். ஒருயானைநீங்கப் பலயானைகள் வந்துபுகுந்தன வென்ன ஒருசமத்காரந்தோன்றக் கூறினார் குழாம்விரிந்த என்பதற்கு- சூரியனொளி யால் முன்பு திரள்திரளாகச் சிதறிப்போன என்றுஉரைத்தல் பொருத்தம். நிரைந்தன - அணிவகுத்தேறுமாபோலே மீண்டும்வந்து சேராநின்றன. இரவைப் பன்மையாகக்கூறினது,நெடுமைபற்றி ஒன்றேபலவாகத் தோற்று தலால்;அங்ஙனந்தோன்றுமையால், பகலைப் பன்மையாற்கூறிற்றிலர். 'நிர ந்தன'என்றும் பாடம்; நிரத்தல் - கூடுதல். நேரிழை - உடம்பின் அழகு க்கு ஏற்ற ஆபரணங்களின் அழகமைதி, மெல்லிய ஆபரண மென்றுமாம். ஞாலமாது பொன்மாது எனத் தனித்தனி கூட்டுக இன் மணாளன் என, இனிய மணாளனுமாம். சூழ்குழல் - சுடைகுழன்ற கூந்தலுமாம் என்னை மார் என்றது,மூத்தவரென்றமாத்திரமாயத் தந்தையையும் உணர்த்தலாம். மணாளன் துழாய்புனைந்து-மணவாளனது துழாயைச் சூட்டி என்றலும் அமை யும். 'ஞாலப்பொன்மாதின்மணாளன்'என்றதனால்,நிலமகள் திருமகள் என் பவரது அனுபவம்போன்ற அனுபவம் எமக்குஇல்லையே யென்று அழுக்காறு கொண்டபடி.

எம்பெருமானைச்சேர்ந்து அனுபவிக்கப்பெறாத நிலையில் ஆழ்வார் தமது விவேகப்பிரகாசமும்நிலைகுலையும்படி மோகாந்தகாரம்மேலிடுமளவானபடியால் 'இந்நிலையில் எமதுபெரியோர் எம்மை எம்பெருமானதுபிரசாதத்துக்குப் பாத் திரமாம்படி சமர்ப்பியாமல் விளம்பிப்பதே''என்று அன்பரைநோக்கி அருளிச் செய்தல், இதற்கு உள்ளுறைபொருள் கோலப்பகற்களிறொன்று கற்புய்ய- பக்திமேலிட்டுச் செவ்வியதான விவேகப்பிரகாசம் மறையும்படியாக, குழாம் விரிந்த நீலம் கங்குல் களிறு எல்லாம் நிரைந்தன - மோகாந்தகாரம் மிகமே லிட்டது,இவற்றைக்களிறென்றது,அடக்குதற்குஅருமையால். ஞாலப்பொன் மாதின் மணாளன் என்றதனால்,நாயச்சிமார்கள்போலத் தாமும் எம்பெருமா னோடு சேர்தலில் விருப்பங்கொண்டமை தோன்றும். மணாளன் துழாய் நங்கள் சூழ்குழற்கே ஏற்பப்புனைந்து - எம்பெருமானதுபிரசாதத்தை எமது முடிமேற் கொள்ளும்படி கிடைக்கச்செய்து. என்னைமார் என்றது, எம் பெருமானடியாரில் தம்மினும்மூத்தவரை. என்றுகொலோ என்றதனால், அதுவிஷயமான அபேக்ஷயே இவர்க்குத் தலையெடுத்தமை தோன்றும். நேரிழையீர் என்றது, அன்பர்க்கு நற்குணங்களாகிய அணிகலங்கள் அமைந் திருத்தலைக் குறிக்கும். 'எம்பெருமானோடு ஸமஸ்லேஷமுள்ளதொன்று ல் லத்து போதுபோக்க இவருக்குத் தரிப்பரிதானபடியைச் சொல்லுகிறது'என்ற அப்பிள்ளைஉரை அறியத்தக்கது.

---

* திருநெடுந்தாண்டகம் - ௧௬.

† கம்பராமாயணம் - பாலகாண்டம் - ஆற்றுப்படலம் - ௧௧.

‡ கலித்தொகை - குறிஞ்சிக்கலி - ௨.

முதல்வாக்கியம் - உருவகவணி. புய்ய - புய் என்னும் வினைப்பகுதியடியாய்ப் பிறந்த செயவெனெச்சம். நேரிழையீர் - நேரிழையார் என்பதன் விளி மாது - மாதரென்பதன் விகாரம். மணாளன் - மணவாளனென்பதன் மரூஉ குழற்கு - உருபுமயக்கம் புனைந்து - புனைய என்னும் எச்சத்தின் திரிபு.

ஏகாரவீற்றதாய் முடிதல்வேண்டு மென்ற கட்டளைக்கலித்துறையிலக்கணத்துக்கு மாறாக இங்கு 'என்றுகொலோ' என ஓகாரவீறாய் முடிந்தது காண்க. மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார் இங்ஙனம் அருளிச்செய்திருத்தல்கொண்டு, கட்டளைக்கலித்துறைக்கு ஓகாரவீற்றதாதலும் சிறுபான்மை இலக்கணமா மென்பது அறிக, *"இலக்கியங்கண்டதற்கு இலக்கணமியம்பலின்." இனி, 'என்றுகொலே' என ஏகாரவீறாகத் திருத்துதல் அசம்பிரதாயமும் சொல்நிலைக்குச்சிறவாமையும் உணர்க. அன்றியும், வடமொழியில் வால்மீகி வியாசர் முதலிய ருஷிகளுடைய கவநங்களில் ஏதேனுமிலக்கணமாறுபாடுகாணுமிடத்து "ஆர்ஷத்வாந்நதோஷ:" [ருஷிவாக்கியமாதலாற் குற்றமில்லை] என்று அதனை வழுவமைதியாக ஏற்றுக்கொள்ளல் ஆன்றோர் மரபாதலால், அவர்களினும் ஞானங்கனிந்து நலங்கொண்ட ஆழ்வார்களின் அருளிச்செயலை அங்ஙனமமைத்துக்கொள்ளத் தட்டில்லை யென்க. மேலும், வடமொழிவேதத்தின்பிரயோகம் மற்றைவழக்குக்குச் சிற்சிலவிடத்து வேறுபடுதல்போலத் தமிழ்வேதமாகிய இத்திவ்வியப்பிரபந்தத்துக்குங் கொள்க. சிறுபான்மையாகிய இதற்கு இலக்கணமும் இலக்கியமும் வந்தவிடத்துக் கண்டுகொள்க (சo)

## வாடைக்கு வருந்தின தலைமகள் வார்த்தை

சக. என்றும்புன்வாடையிதுகண்டறிதுமிவ்வாறுவெம்மை
யொன்றுமுருவுஞ்சுவடுந்தெரியிலம்மோங்கசுரர்
பொன்றும்வகைபுள்ளையூர்வானருளருளாதவிந்நாண்
மன்றினிறைபழிதூற்றிநின்றென்னைவன்காற்றடுமே.

(இ - ள்.) என்றும் புன் வாடை இது கண்டு அறிதும் - எப்பொழுதும் கொடுமைசெய்கிற இந்தவாடையைக் கண்டறிவோம்; இ ஆறு வெம்மை உருவும் சுவடும் ஒன்றும் தெரியிலம் - இப்படிப்பட்ட (வாடையினுடைய) வெப்பத்தினது தன்மையையும் குறிப்பையும் ஒருவிதத்தாலும் அறிகிறோமில்லை; ஓங்கு அசுரர் பொன்றும் வகை புள்ளை ஊர்வான் - உயர்ந்தஅசுரர்கள் அழியும்படி கருடாழ்வானை ஏறிநடத்துகிற எம்பெருமான், அருள் அருளாத - (தனது) கருணையால் (என்னைவந்து) பாலித்தருளாத, இ நாள் - இந்தக் காலத்திலே, வன் காற்று - வலிய வாடையானது, என்னை—, மன்றில் நிறை பழி தூற்றி - வெளியிலேபரவி நிறைகிற பழிப்பை அயலாரையிட்டுத் தூற்றுவித்து, நின்று அடும் - அப்பாற்போகாமல் நிலைநின்று அழிக்கிறது, (எ-று.) —ஈற்றுஏகாரம் - இரக்கம்.

பிரிந்தநிலையில் பலபொழுதும் வாடை வருத்துதலால், அதனைப்பற்றி அடிக்கடி கூறி அலற்றும்படியாயிற்று, இதனால், கூறியதுகூற லென்னுங் குற்றத்துக்கு இடமின்மை காண்க. இங்ஙனம்வருவன வேறுசிலவற்றிற்கும் இவ்வாறே கண்டுகொள்க.

புன்வாடை - மந்தமாருத மென்றுமாம். வாடை வருத்துகிற தென்று பொதுப்படக்கூற முடிவதேயன்றி இன்னவடிவமாய் இன்னகுணத்ததாய் இன்னதுசெய்து வருத்துகிற தென்று ஒருவகையாலும் விவரங்குறித்துக் கூறக்கூடாதபடியுள்ளது இதன்கொடுமை யென்பாள், 'என்றும் புன்வாடையிதுகண்டறிதும் இவ்வாறு வெம்மை யொன்று முருவுஞ் சுவடுந் தெரியிலம்'

* நன்னூல் - பதவியல் - கசு.

என்றாள். 'என்றும்' என்றதனால், தான் பலநாளாகத் தலைவனைப்பிரிந்து வாடைக்குநோதல் தோன்றும். கொடியாரையொழித்து அடியாரைக்காத்தருளும் இயல்புடையவன் எனக்குக்கொடியதான வாடை வருத்துதலைத் தவிராதது அடிமையாகிய என்னைக் காத்திடாதொழிவதே' என்ற இரக்கந்தோன்ற, 'ஓங்கசுராபொன்றுமவகை புள்ளூர்வா னருளருளாத விந்நாள்' என்றாள். ஓங்கு அசுரர் - வரபல புஜபலங்களாலே கொழுத்துள்ள அசுரர், அன்றி, வணங்காமுடியரராய நிமிர்ந்ததலையராயுள்ள அசுரர். மன்றில் நிறைபழி தூற்றுதல் என்றது, தான் வாடைக்கு வருந்துதலைக் கண்டு ஊரார் அலர்தூற்றுதலை; 'லோகமடங்க 'ஒருத்தி பிரிந்தவளவிலே ஒருகாற்றுக்கு ஈடுபட்டுத்துடிப்பதே!' என்று பழிசொல்லும்படியாயத்து நிறைபழி - தன்னளவிலேயன்றியே 'இவள் காற்றிலேயீடுபட, வாராதொழிவதே!' என்று நாயகனுக்கும் பழியானபடி' என்பர் பெரியவாச்சான்பிள்ளை. அடும் - கொலலும், மரணாந்தமான வேதனையைச் செய்யும் என்றபடி. என்னை வன்காற்று அடும் -கண்ணோட்டமில்லாத காற்று, பரிகாரஞ்செய்யமாட்டாது பொறுத்திருக்கவும் மாட்டாத மெல்லியலான என்னைப் பெண்கொலை யென்பதும் பாராது நாசப்படுத்தும்.

தாம் எம்பெருமானைச் சேர்தற்கு விரைகிற வளவில் உடனே பேறு கிடையாது விளம்பித்தலால் அப்பொழுது இவ்வுலகத்துப் பொருள் தம்மை வருத்துமவித்தத்தை ஆழ்வார் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். முன்பு சம்சாரத்தில் அனுபவித்த துக்கபரம்பரைகள் இனியன என்னும்படி இப்பொழுது எம்பெருமானைச்சேரப்பெறுத்துயரம் மிக்க தன்மை இதில் தோன்றும். என்றும் புன்வாடையிது கண்டறிதும் - எப்பொழுதும் வருத்துந்தன்மையதான இவ்வுலகப்பொருளை யாம் கண்டறிவோம், இவ்வாறு வெம்மை உருவும் சுவடும் ஒன்றும் தெரியிலம் - இப்படிப்பட்ட பொருளின் தன்மை புந குறியும் ஒருவகையாலும் எம்மால் கூறமுடியாதபடி மிக்குள்ளன; ஓங்கசுரர் பொன்றுமவகை புள்ளூர்வா னருளருளாத இந்நாள் - துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலநசீலரும் அதற்கு ஏற்றபடி விரைவுள்ள வாகனத்தையுடையவருமான எம்பெருமான் தனது இயல்பாகிய கருணையால் அடியேனை ஆட்கொள்ளாத இக்காலத்தில், மன்றில் நிறை பழி தூற்றி வன்காற்று என்னை நின்றுஅடும் - எம்பெருமானைச் சரணமடைந்தும் இங்ஙனமானானே னென்ற பழியைப் பலருமெங்குந்தூற்றச்செய்து இவ்வுலகத்துப்பொருள் என்னை நிலையாகவருத்துகிறது என்க. ஸ்வாபதேசத்தில், பழி - எம்பெருமான் தானேவந்து ஆட்கொள்ளுமளவும் ஆறியிராமல் விரைதலா லாகுவது, 'தன் பேற்றுக்குத் தான்பரவாததிக்கையும் பழியிறே' என்ற ஈடு அறியத்தக்கது.

', முதலிரண்டடிக்கு - எப்பொழுதும் இம்மந்தமாருதத்தை அனுபவித்தறிவோம்; இப்படி வெப்பம்பொருந்திய வடிவத்தையுந் தன்மையையும், (இதற்குஉள்ளனவாக) முன்புகண்டறியோம் என்றுஉரைத்தலும் பொருந்தும், இவ்வுரைக்கு, 'ஒன்றும்' என்பது - எதிர்காலப்பெயரெச்சம். இப்பொருளுக்கு ஸ்வாபதேசம்.—'இத்தால், நெடுநாள் பொருந்திப்போந்த ஸம்ஸாரத்தே பகவத்பராவண்யம் உறைக்க உறைக்க இதில்பொருந்தாதபடியான நிலை பிறந்தபடி சொல்லுகிறது' என்பது, பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம்

'தெரிகிலம்' என்ற பாடம் கொள்ளத்தக்கதன்று, 'தெரியிலம்' என்றே எல்லா ஏட்டுப்பிரதிகளிலும் உள்ளது. முப்பத்தோராம்பாசுரத்தில் 'இசையிலம்' என்றதுங் காண்க. (சுக)

## தலைவனது நோக்கில் ஈடுபட்ட தலைவி வியந்துஉரைத்தல்.

௪௨. வன்காற் றறையவொருங்கே மறிந்துகிடந்தலர்ந்த [ணும்
மென்காற் கமலத்தடம்போற் பொலிந்தன மண்ணும் விண்
மென்காற் களவின்மை காண்மினென்பானொத்து வானிமிர்
தன்காற் பணிந்தவென்பாலெம்பிரான தடங்கண்களே. [ந்த

(இ - ள்.) எம்பிரான தடங்கண்கள் - எமது தலைவனான பெருமானது பெரிய திருக்கண்கள்,—'மண்ணும் விண்ணும் - மண்ணுலகமும் விண்ணுலகமுமாகிய பரந்தவிடமிரண்டும், என் காற்கு அளவு இன்மை - எனது இரண்டு பாதங்களின் அளவுக்கு இடம்போதாத வியப்பை, காண்மின் - பாருங்கள்', என்பான் ஒத்து - என்று (அவ்வவ்வுலகங்களி லுள்ளார்க்குக்) கூறி ஒருவித்தை காட்டுபவன்போன்று, வான் நிமிர்ந்த-மேலுலகைநோக்கி வளர்ந்த, தன் - தன்னுடைய, கால் - திருவடிகளில், பணிந்த - வணங்கின, என்பால்- என்னிடத்து,—வன் காற்று அறைய ஒருங்கே மறிந்து கிடந்து அலர்ந்த மென் கால் கமலம் தடம் போல் பொலிந்தன - வலியகாற்றுவீசுதலால் ஒரு பக்கத்திலே சாய்ந்துகிடந்து மலர்ந்த மெல்லியதாளத்தையுடைய தாமரைத்தடாகம்போல அழகுமிக்குவிளங்கின, (எ - று.)

சர்வேசுவரனாகிய நாயகன் தன் கடைக்கண்பார்வையால் தன்னை ஒருக்கணித்துக் குறிப்பாகநோக்கிப்போன தன்மையில் ஈடுபட்டுக் கூறியது. இது. ஒருக்கணித்துக் கடைக்கண்ணால் நோக்கிய கண்கள், வலியகாற்றினால் நேர்நிற்கமாட்டாது ஒருபுறஞ்சாய்ந்து அந்நிலைமையில்மலர்ந்த தாமரைமலர் போன்றன என்க. மண்ணும் விண்ணும் காற்கு அளவின்மையை, *"நின்ற கால் மண்ணெலாம் நிரப்பி யப்புறம், சென்று பாவிற்றிலை சிறிது பாரெனா, ஒன்ற வானகமெலா மொடுக்கி யும்பரை, வென்றகால் மீண்டது வெளிபெறாமையே," "உலகெலா முளளடியடக்கி" என்பவற்றாலும் காண்க. தன் - எம்பெருமானது. 'தன்கால்பணிந்த' என்பதற்கு - தன்னிடத்தில் ஈடுபட்ட என்றும் பொருள்கொள்ளலாம், அப்பொழுது, கால் - ஏழனுருபு. மண்ணும் விண்ணும் என்காற்களவின்மை காண்மி னென்பானொத்து வானிமிர்ந்த தன்கால் - எல்லாவுலகத்து உயிர்களையும் தனக்கடிமைகொள்ளத் திருவுள்ளமுகந்த எம்பெருமான், அவ்வுலகை நோக்கி 'உங்கள்தலையில் என் காலை வைக்கிறேன்' என்றுசொன்னால், அவ்வுயிர்களில் யானெனதென்னுஞ் செருக்குடையவை 'நாங்கள் வைக்கவொட்டோம்'என்று ஆணையிட்டுத் தடுக்கக்கூடுமென்று கருதி, 'என்காற்கு இவை இடம்போதாமையைப் பாருங்கோள்' என்று ஒருவியாஜமிட்டுச் சொல்லி அவற்றின்முடிமேல் அடிவைத்து அவற்றை ஆட்கொண்டருளின னென்க, இதனால், உயிர்களுக்கு முயற்சியில்லாமலே எம்பெருமான் அருள்செய்தல் தோன்றும்

ஆழ்வார் தம்பக்கல் எம்பெருமான் பரிபூர்ணகடாக்ஷம் பண்ணினபடியைப் பாவனையாலே அனுபவித்து அருளிச்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள் அப்பொழுது, எம்பெருமானது திருக்கண்மலர்களுக்குக் காற்றறைதலாவது - தடையில்லாத நடையையுடைய கருணையால் தூண்டப்படுதல். ஒருங்கே மறிந்து கிடந்து அலர்தலாவது - இவ்வாழ்வாரொருவர்பக்கலிலே அபிமுகமாய் இவரையே நோக்கி மலர்தல். மென்காலாவது - இந்த அருள்நோக்குக்கு மூலமான திருவுள்ளநெகிழ்ச்சி. கமலத்தடமென்றது, நிறத்தாலும் குளிர்ச்சியாலும் பரப்பாலும் இனியனவாயிருத்தல்பற்றி.

'விண்ணும்மண்ணும்' என்ற பாடம் மோனைக்கு இனிது பொருந்தும். நான்காமடியின்முதலில் 'தன்பால்' என்றபாடம் எதுகைக்கு மிகச்சிறப்ப

* கம்பராமாயணம் - பாலகாண்டம் - வேள்விப்படலம் - ௯௬, ௯௭.

தன்று 'மண்ணும் விண்ணும் என்காறுகளவின்மை காணயினென்பாரொ்த்து'என்றது, நூற்றுறிப்பேற்றதின்பாற்படும். எம்பிரான், அ - ஆறனுருபு

## தலைமகனுருவேழிலுரைத்த தலைமகள் வார்த்தை

௪௫. கண்ணுஞ்செந்தாமரைகையுமவையடியோவவையே
வண்ணங்கரியதோர்மால்வரைபோன்றுமதிவிகற்பால
விண்ணுங்கடந்தும்பரப்பால்மிக்குமற்றெப்பாலயவர்க்கு
மெண்ணுமிடத்ததுவோவெம்பிரானதெழில்நிறமே

(இ - ள்) கண்ணும் செம் தாமரை - திருக்கண்களும் செந்தாமரை மலர்களையொப்ப, கையும் அவை - திருக்கைகளும் அத்தாமரைமலர்களையொப்ப, அடியோ அவையே - திருவடிகளும் அம்மலர்களையேயொப்ப,—எம்பிரானது எழில் நிறம் - எம்முதலைவனது அழகிய திருமேனிவிளக்கம்,—வண்ணம் கரியது ஓர் மால் வரை போன்று - நிறத்தால் கருமையுடையதொரு பெரிய மலையை யொத்து, மதி விகற்பால் விண்ணும் கடந்து உம்பர் அப்பால் மிக்கு மற்று எப்பால் யவர்க்கும் எண்ணும் இடத்ததுவோ - ஞானத்தின்மிகுதியால் சுவர்க்கலோகத்தாரை மேலிட்டு அதன் மேலிடத்து உள்ள சத்தியலோகத்தார்க்கும் அப்பாற்சென்று அதன்மேற்பரமபதத்தில் எவ்விடத்துமுள்ள நித்தியசூரிகளெல்லோர்க்கும் (இத்தன்மையதென்று) அளவிடும்படியான தன்மையுடையதோ? [அன்றென்றபடி], (எ - று)

லீலாவிபூதியில் பலவுலகங்களிலுமுள்ளாரனைவரினும் ஞானத்தில் மேம்பட்ட பரமபதத்து நித்தியசூரிகளுக்கும், தான்கண்ட தலைவனது திருமேனியழகு இத்தன்மைத்தென்று வரையறுக்கவொண்ணாது எனவே, இங்குள்ளாரால் வரையறுக்கலாகாமை தானே விளங்கும். மநுஷ்யர்களிற்காட்டில் தேவர்களுக்கும், இந்திராதிதேவர்களிற்காட்டில் சிருஷ்டிகர்த்தாவான பிரமனுக்கும், அவனிலும் முத்தருக்கும், அவர்களிற்காட்டிலும் நித்யருக்கும் ஞானம் படிப்படியே சிறக்குமென்பது கொள்கை. இப்பாசுரத்தின் முதலடியை, * "கைவண்ணந் தாமரை வாய் கமலம்போலும் கண்ணிணையு மரவிந்த மடியு மஃதே" என்பதோடு ஒப்பிடுக. வேறுவமைகிடைத்தலரிது என்பது தோன்ற, பல அவயவங்களுக்கு ஒருபொருளையே உவமைகூறியது 'ஓ என்கிற அசை - தாமரை முற்றுவமையல்லாமையைக் காட்டுகிறது' என்ற அழகியமணவாளசீயருரையும் அறியத்தக்கது. விகற்பு - விகல்பம் என்ற வடசொல்லின் திரிபு, வேறுபாடு என்று பொருள். இங்கு, மற்றையோரறிவினும் சிறந்து வேறுபட்டுத்தோன்றுதலைக் குறித்தது. நாற்றடியில், ஓ - எதிர்மறை. 'எழிலாவது - வளர்ந்தமைந்தபருவத்தும் இதுவளர்ந்துமாறியதன்றி இன்னும்வளருமென்பதுபோன்று காட்டுதல்' என்பர் நச்சினார்க்கினியர். மதிவிகற்பாற் கடந்து என இயையும், மதிவிகற்பால் எண்ணுமிடத்ததுவோ என்றும் இயைக்கலாம்.

யவர்க்கும் - யாவர்க்கும் என்பதன் குறுக்கல்; † "உயர்வறவுயர்நலமுடையவன்யவனவன்" என்றபாசுரத்தில் 'யவன்' என்பதும், ‡ "பயிலுந்திருவுடையார்யவரேலுமவர்கண்டீர்" என்பதில் 'யவர்' என்பதுங் காண்க. இங்கே, யா வினா எஞ்சாமைப்பொருளது. §"ஆவோ டல்லது யகர முதலாது" என்றவிதியைக்காட்டி, 'யவர்க்கும்' என்றும், 'யவன்' என்றும், 'யவர்' என்றும்

* திருநெடுந்தாண்டகம் - ௨௧.
† திருவாய்மொழி - முதல்திருப்பதிகம் - ௧.
‡ ,, இருபத்தேழாந்திருப்பதிகம் - ௧.
§ தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் - மொழிமரபு - ௩௨.

உள்ள பாடங்களை மறுத்து, 'எவர்க்கும்' என்றும், 'எவன்' என்றும், 'எவர்' என்றும் பாடங்கொள்ளவேண்டுமென வற்புறுத்துவாரும் உளர்; அது அசம்பிரதாயம்: ஏட்டுப்பிரதிகளிலெல்லாம் 'யவர்க்கும்' என்றும், 'யவன்' என்றும், 'யவர்' என்றுமே யுள்ளது. "ஆவோ டல்லது யகர முதலாது" என்ற சூத்திர விதி இயற்கைமொழிக்கேயன்றிச் செய்யுளில் வேண்டுழிக் குறுக்கல்பெற்ற மொழிக்கு விலக்காகாது. [இதனை * "ஆஎ, ஒஎனு மூவுயிர் ஞகாரத்துரிய", † "அஆஎஒவ் வோடாகு ஞம்முதல்" என்ற விதிகள் 'மிஞிறு' என்பதன் இலக்கணப்போலியாகிய 'ஞிமிறு' என்பதை விலக்காமை போலக் கொள்க.]

ஆழ்வார் தமது அகக்கண்ணுக்குப் புலப்பட்ட எம்பெருமானது வடிவழகில் ஈடுபட்டு இது 'எமக்கேயன்றி நித்யஸூரிகளுக்கும் அளவிடவொண்ணாது' என்று அருளிச்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். மற்றவை வெளிப்படை.

மிக்குமமற்று, மகரவொற்று - தளைநோக்கிய விரித்தல். இனி, உம்பரப்பாலும் மிக்கு என உம்மைமாறுதலுமாம். (௪௩)

## தலைவி தலைவன்பெருமை யுரைத்தல்

௪௪. நிறமுயர்கோலமும்பேருமுருவுமிவையிவையென
றறமுயலஞானசசமயிகள்பேசிலுமங்கங்கெல்லா
முறவுயர்ஞானசசுடர்விளக்காயநின்றதன்றியொன்றும
பெறமுயன்றாரில்லையாலெம்பிரான்பெருமையையே.

(இ - ள்.) நிறம் - நிறமும், உயர் கோலமும் - சிறந்த அலங்காரமும், பேரும் - திருநாமமும், உருவும் - வடிவமும், இவை இவை - இன்னின்னவை, என்று —, அறம் முயல் ஞானம் சமயிகள் - தருமமார்க்கத்தால் முயன்றுபெற்ற ஞானத்தையுடைய வைதிகசம்பிரதாயத்தவர், பேசிலும் -(ஒருவாறு பிறர்க்குக் குறிப்பிட்டுச்) சொன்னாலும், (அவர்கள்), அங்கு அங்கு எல்லாம் - அந்தந்த நிறம் அலங்காரம் திருநாமம் வடிவம் இவையெல்லாவற்றிலும், உற உயர் ஞானம் சுடர் விளக்கு ஆய நின்றது அன்றி - மிகவுயர்ந்த (தமது) ஞானமாகிற தீபத்தாற் சிறிதுவிளக்கத்தைப் பெற்றுநின்ற தொழிய, எம்பிரான் பெருமையை - எமது தலைவனது (ஒப்புயர்வற்ற) மகிமையை, ஒன்றும் பெற முயன்றார் இல்லை - ஒருவகையாலும் முற்றும் அளவிட்டுக்கூறப்பெறும்படி பிரயத்தனம்பண்ணினார்களில்லை, (எ - று) — ஆல் - ஈற்றசை, தேற்றமுமாம்.

‡ "வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார், ஊழ் கொண்ட சமயத் தன்னா னுருவு கண்டாரை யொத்தார்" என்றாற்போல, எம்பெருமானது நாமரூபகுணாதிகளில் அவ்வம்மதத்தவர் தாம்தாம் ஒவ்வொரு பகுதியை அறிந்ததேயன்றி முற்றும் எவரும் அறிந்திலர் என்க. கீழ் 'யவர்க்கு மெண்ணுமிடத்ததுவோ' என்றதன்மேல் 'நிறமுயர் கோலமும் பேரும் உருவும் இவையிவையென்று ஞானசமயிகள் பேசுகின்றனரன்றோ?' என்று எழுந்த ஆக்ஷேபத்துக்கு 'அவர்களும் அவன்பெருமையைச் சிறிதுசிறிது கண்டதேயன்றி முடியக் காணப்பெற்றாரில்லை' என்று விடைகூறியவாறு. அறமுயல் - மிகமுயன்றுபெற்ற என்றுமாம்.

ஆழ்வார், தமக்குத் தரிசனந்தந்த சர்வேசுவரனுடைய மகிமை எவ்வளவு ஞானமுடையவர்க்கும் முற்றுமுணரப்பெறாத தென்று உண்மையுரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். மற்றவை வெளிப்படை. சுவயத்தனத்தாலே அறிவோமென்பார்க்கு அறியமுடியாத தன் அளவிடலரிய பெருமை

---

* தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் - மொழிமரபு - ௩௧.
† நன்னூல் - எழுத்ததிகாரம் - எழுத்தியல் - ௫௦.
‡ கம்பராமாயணம் - பாலகாண்டம் - உலாவியற்படலம் - ௧௧.

யை அருளாலே தமக்குவிளங்கச்செய்த உபகாரத்தைக் கருதி,‘எம்பிரான்’ என்றார்.

நிறம் - கருமை வெண்மை முதலியன. கோலம் - கௌஸ்துபம் முதலியன. பேர் - ஸஹஸ்ரநாமங்கள். உரு - ரூபபேதங்கள். உற என்பதற்கு - கிட்ட என்று உரைத்து, நின்ற என்பதனோடு கூட்டுவாரும் உளர். ‘நிறமுயர்கோலம்’ என்பதற்கு - (எம்பெருமானது திருமேனியிற்சோதலால்) தாம் நிறம்பெறுகிற திருவாபரணங்களென்றலும் உண்டு. (௪௪)

தலைவி தலைவனது நீரிடையுதவியை நினைந்துரைத்தல்.

௪௫. பெருங்கேழலார்தம்பெருங்கண்மலர்ப்புண்டரீகம்நம்மே
லொருங்கேபிறழவைத்தாரிவ்வகாலமொருவர்நம்போல்
வருங்கேழ்பவருளரேதொல்லைவாழியஞ்சூழ்பிறப்பு
மருங்கேவரப்பெறுமேசொல்லுவாழிமடநெஞ்சமே.

(இ - ள்.) மடநெஞ்சமே - பேதைமைக்குணமுடைய மனமே! பெருங்கேழலார் - (முன்பு பிரளயவெள்ளத்திற் புக்கு அழுந்தின பூமியை எடுத்தற்பொருட்டு) பெரிய வராகவடிவமானவர், இ அகாலம் - (காத்தற்கு) எளியதல்லாத இக்காலத்தில், தம் பெருங்கண் மலர் புண்டரீகம் நம்மேல் ஒருங்கே பிறழ வைத்தார் - தமது பெரிய செந்தாமரைமலர்போலுந் திருக்கண்களை நம்மேல் ஒருபடிப்பட மிளிரும்படி வைத்தார் [கடாக்ஷித்துக்காத்தருளினார்], நம்போல் வரும் கேழ்பவர் ஒருவர் உளரே - (அவரோடு) நம்மைப்போலப் பொருந்திய சம்பந்தம்பெற்றவர் வேறொருத்தர் உளரோ? [இல்லையென்றபடி], தொல்லை வாழியம் - (அன்று அவரோடு) பழமையான வாழ்க்கையையும் உடையோம், (அப்படிப்பட்ட நமக்கு), சூழ் பிறப்பு மருங்கே வர பெறுமே - விடாதுசூழ்கிற பிறப்புத்துன்பங்கள் அருகிலும் வரக்கூடுமோ? சொல்லு - சொல்வாய், வாழி - (கலக்கந்தெளிந்து) வாழ்வாயாக, (எ - று.)

தலைவனைப் பிரிந்த தலைவி அவனையே சிந்தித்து நெடும்பொழுது வருந்துகையில், அவளது மனம், *“எண்பதுகோடி நினைந்தெண்ணுவன” என்றபடி, அவன் முன்பு செய்த உதவியையும் அவனோடு தனக்குள்ள தொடர்ச்சியையும் மறந்து அவனது கருணையின்மையையே பாராட்டி வெறுக்கப்புக, அந்நெஞ்சத்தை முன்னிலைப்படுத்தித் தலைவி ‘நாம் முன்பு நீர்நிலையில் விளையாடச்சென்றபொழுது பெருக்கில் அகப்பட்டு ஆழ்ந்து அழியவிருக்கையில் தமது அபாயத்தைக் கருதாது துணிந்து வந்து இறங்கி நம்மை யெடுத்துக் கரைமேல்விட்டு உயிர்காத்தவரல்லரோ அவர்?’ என்றும், ‘இப்படிப்பட்ட உரிமை அவரோடு வேறு யார்க்கு நேர்ந்தது?’ என்றும், ‘இவ்வுதவிசெய்ததற்கு முன்னமே அவரோடு நாம் இயற்கைப்புணர்ச்சி பெற்றோமன்றோ?’ என்றும் பழைய தொடர்ச்சிகளைக் கூறி மனத்தைத் திருப்புதல், இத்துறையின் போக்கு.

பிரளயக்கடலினுட்பட்டு ஆழ்கிற நிலமகளை அதனினின்றெடுத்துப்பாதுகாத்த மகாவராகமூர்த்தியை உணர்த்துகிற ‘பெருங்கேழலார்’ என்ற சொல்லினாலும், ‘இவ்வகாலம்’ என்றதனாலும், நாயகனான ஈசுவரன் புனலிடைவந்து உதவின உதவியைக் குறிப்பித்தாள். இது, புனல்தருபுணர்ச்சி யெனப்படும். †“சின்னாள் மறந்திலம் யாமுந் தென்சேலூர்ச் செருமலைந்த, மன்னன் செலச்செற்ற வானவன் மாறன் வையைத்துறைவாய்ப், பொன்னார்புனலெம்மை வாங்கும்பொழு தங்கொர் பூங்கணவே,ளன்னானொருவனன்னை

* நலவழி - ௨௮.

† இறையனாரகப்பொருளுரை ௧௩ - ஆம் சூத்திரத்தின்கீழ்க் கண்டது.

தெமக்குச்செய்த வாருளே",*"கொண்டலுற்றேறுங் கடல்வர வெம்முயிர் கொண்டுதந்து, கண்டலுற்றோர்நின்ற சேரிச் சென்றன்றோ கழல்வளே," †"பரங்குன்றினிற்பாய்புனல்யாமொழுகக், கரியுடையான்" எனப் பிறவிடங்களில் இது பாராட்டிக் கூறப்படுதல் காண்க. 'தம்பெருங்கண்மலர்ப்புண்டரீகம் நம்மேல் ஒருங்கே பிறழவைத்தார்' என்றது, அங்ஙனம் தன்னையெடுத்தபொழுது குளிர்நோக்கியதைக் கூறியவாறு 'அகாலம்' என்றதனால், தன்னுயிர் சாயினுஞ் சாயக் வென்று உன்னித் தறுகண்மை கொண்டாலன்றி இனிதுகாத்தற்கு இடமல்லாத சமயமென்றபடி. முன்பு நடந்தது, அன்பின் மிகுதியால் இப்பொழுது நடக்கிறதுபோலத் தோன்றுதலால், 'இவ்வகாலம்' என அண்மைச்சுட்டாற் குறித்தாள். விழுபவரென்றது வீழ்பவரென நிற்றல்போல, கெழுபவரென்பது கேழ்பவரென நின்றது. கேழ்பவர் என்பதற்கு நிறமுடையாரென்றும், பெருமையுடையாரென்றும், நன்மையுடையாரென்றும் உரைப்பாருமுளர். இப் புனல்தருபுணர்ச்சியையும் இதுபோன்ற பூத்தருபுணர்ச்சி களிறுதருபுணர்ச்சி என்பவற்றையும் இயற்கைப்புணர்ச்சியது நீக்கத்தின்கண் நிகழ்ந்தனவாக உரைத்தல் அகத்தமிழிலக்கண மாதலால், அதற்குமுன்பு இயற்கைப்புணர்ச்சி நிகழ்ந்ததை 'தொல்லைவாழியம்' என்றதனாற் கூறினாள். இனி, தொல்லை வாழி அம் சூழ்பிறப்பு எனப்பிரித்து எடுத்து, பழமையானதும் செழிப்புடையதும் அழகியதாய்த் தப்பவொண்ணாதபடி சூழ்வது மான பிறப்பு என்று உரைத்தலும் ஒன்று, அம் என்பதற்கு - எதிர்மறை யிலக்கணையாக, பொல்லாததாய என்று முரைப்பர். அம் - சாரியையுமாம். பிரிந்தகாலத்தின் நீட்டிப்பினால் முன்பு இயற்கைப்புணர்ச்சிநிகழ்ந்ததையுமுட்பட மறக்கும்படி யானதனால், 'தொல்லைவாழியம்' என்று அதனை ஞாபகப்படுத்தினா ளென்க. சூழ்பிறப்பு மருங்கே வரப்பெறுமே - ‡"பெண்பிறந்தாரெய்தும் பெருந்துயர் காண்கிலே னென்று, ஒண்சுடரோன் வாராதொளித்தான்" என்னும்படியான மகளிர்க்குஉரிய துன்பங்கள், இங்ஙனம் அருளையுந் தொடர்ச்சியையு முடைய தலைவரைக் கொண்ட நமக்கு வாரா என்றபடி. உளரே, பெறுமே என்ற ஏகாரங்கள் - எதிர்மறை. சொல்லு என்றது, தேற்றப்பொருள் விளக்கும், 'காண்' என்றதுபோல. காலத்தினாற் செய்த நன்றியை மறந்த அறிவின்மைபற்றி, 'மடநெஞ்சமே' என்றாள்.

'நாம் சம்சார சாகரத்தில் அகப்பட்டு வருந்துவதும் எளிதிற் காத்தற்கு உரியதல்லாததுமான இந்த அகாலத்தில், பிரளயவெள்ளத்துப் பூமியைக் காத்த பெருமான், நம்மேல் பூர்ணகடாக்ஷம் வைத்தருளினான், ஆதலால், நம்மைப்போல அவனோடு சம்பந்தம் பெற்றார் எவருமில்லை அன்றியும், பரமாத்மாவாகிய அவனோடு ஜீவாத்மாவாகிய நாம் இயற்கையில் அடிமைப்பட்டு வாழ்தலுமுடையோம்; நமக்கு இனிப் பிறவித்துன்பங்கள் அருகிலும் ரக்கடவனவல்ல. (பகவத்கடாக்ஷமுண்டாய அனுபவம் பெற்றார்க்கு ஜநம ம்பந்தமுண்டென்று எங்கேனும் கேட்டறிவதுண்டோ?) சொல்லிக்காண், னிக் கலக்கந்தெளிந்து வாழ்வாயாக' என்று ஆழ்வார் பிறவித்துயருக்கு ஞ்சியொடுங்கிய தமது நெஞ்சத்தைநோக்கிக் கூறித் தெளிவித்தல், இத ற்கு உள்ளுறைபொருள். 'இப்படி தமக்கு ஈச்வரன் தன்யாதாத்மயத்தை ப்ரகாசிப்பித்தபடியை அநுசந்தித்து ஸந்துஷ்டரானவளவிலே இவர் திருவுள்ளமானது 'ஸம்ஸாரார்ணவமத்யஸ்தரான நமக்கு அவன் உபகரித்தானென்று ஹ்ருஷ்டராகாநின்றீர், ஸம்ஸாரத்தினின்றும் உத்தீர்ணரானவர்கள் பெறக்கடவ பேறானது நமக்கு நிலைநிற்கக்கூடுமோ?' என்று திருவுள்

* திருக்கோவையார் - ௨௪௦.
† ,, ௨௪௨
‡ திருவாய்மொழி - நாற்பத்துநான்காந்திருப்பதிகம் - ௪.

ளததுக்குக் கருததாக, 'அவன் பூர்ணகடாக்ஷம பெறற நமக்குக் குறை யிலலேகாண' என்கிறா' என்பா அழகியமணவாளசீயரும. முதலவாக்கியத தால, பிரளயக்கடலினின்று பூமியை எடுத்துக் காததநதோடு பிறவிககடலி னின்று எமமைக் கரையேறறிக காததல ஒபபுமையுடைய தெனத தோன் றும. ஒருவா நமபோலவருநது கேழபவருளரே - *"எனககெவ்வுலகம நிக ரே," †"எனக் கினி யார் நிகா நீணிலததே," ‡"எளககாரும நிகரிலலேயே" என்றறபோலப பெருமை பாராட்டியபடி; 'இவ்வளபபோலே தாழநின்று இபபேறு பெறறா இலலே யென்றபடி' என்பா பெரியவாசசான்பிளளே. ஒருநகே - 'நமமேலவைதத கடாக்ஷததை மாறிப பிராட்டி தன பக்கலிலே வைக்கவென்றால அதுவும அரிதாம்படியாயதது' என்ற நமபிளளேயீடு அறிய ததக்கது. பிறழ - மிக எமபிரானருளால ஊழவினையொழியப பிறபபறறு மூத்திபபேறு சித்தித்தலால, 'பிறபபு வரபபெறுமே' என்றது. நீ சஙகிபபது உனதுஅறிவின் குறைவாலே யென்பாா, 'மடநெஞசமே' என விளிததாா சூழபிறபபு - காரணகாரியத தொடாசசியாயக் கரையின்றி வரும பிறபபு. 'மருஙகே வரபபெறுமே' என்றதனுல, நமககேயன்றி நமது சமபநதமுடை யாாக்கும பிறபபு வாராது எனறபடி.

தொலலே - தொன்மை, ஐ விகுதி பெறற பணபுபெயா (சரு)

## நெஞ்சைத்தூதுவிட்ட தலைவி இரங்கல்.

சகூ. மடநெஞசமெனறுநதமதெனறுமோாகருமஙகருதி [ன
விடநெஞசையுற்றாவிடவோவமையுமபொனபெயரோ
றடநெஞசஙகீணடபிரானுாதமதடிககிழவிடபபோயத
திடநெஞசமாயெமமைநீததினறுதாமுநதிரிகினறதே.

(இ - ள) மடம நெஞசம என்றும - பேதைமையையுடைய மன மென்றும, தமது என்றும - தமமுடைய அகததுறுபபான தெனறும, (எணணி), ஓா கருமம கருதி-ஒருகாரியததைககுறிததது, நெஞசை விட உற றா - மனததைத தூதுசெலுததத துணிநதவா, விடவோ அமையும - (அத் துணிவை) ஒழிதல தகுதி, (ஏனெனில),—அ பொன் பெயரோன தட நெஞ சம கீணட பிரானுா தமது அடிககீழ விட - அநதப பொனனின்பெயரை யுடைய இரணியனது பெரியமாாபை எளிதிறபிளநதருளிய பராககிரமசாலி யான எமபெருமானது திருவடிகளிலே (யாம எமது நெஞசைத) தூதுவிட, (அது), போய-விரைவாகசசென்று, திடம நெஞசம ஆய - உறுதியான கருத துளளதாய, எமமை நீதது - (தூதுவிடடவரும தனககு உடையவருமான) எமமை நினையாமற கைவிட்டு, இன்றுதாறும திரிகின்றது - இன்றளவும (அபபெருமானையேதொடாநதுஇனிதாகத)திரிநதுகொணடிருக்கிறது,(எ-று)

கபடமும வஞசனையும இலலாத தென்றும, நமமுடைய அநதக்கரண மென்றும, 'நெஞசையொளித தொரு வஞசக மிலலே' என்றும இவை முத லிய காரணஙகளே ஆலோசிதது மறறையோரைத தூதுவிடுதலினும நெஞ சைத தூதுவிடுதல மேலென்று நிசசயிதது அதனை ஒரு காரியததின்பொரு ட்டு ஓரிடததுத தூதுவிடடத துணிநதவரெலலோரும அததுணிவை நீஙகு தலே தகுதி, ஏனென்றால எமது தலைவரிடதது யாம முனபு தூதுவிட்ட நெஞசம இதுவரையிலும மீணடுவாராமையே யன்றி, எமக்குந தனக்கு முள்ள சமபநதததையும எமது நிலைமையையுஞ சிநதிததலுஞ செயயாமல வன்மைபடட்டு அவாபின்னேயே சஞசரித்துக்கொணடிருககிறது என்று,

---

* திருவாயமொழி - ஐமபததுநான்காநதிருபபதிகம - உ.
† ,, ,, எ.
‡ இராமாநுசநூறறநதாதி - சஎ.

நெஞ்சைத் தூதுவிட்ட தலைவி, தனது அனுபவத்தால, உலகத்தார்க்கு ஓருறுதிமொழி கூறினு ளென்க.

ஓர்கருமங்கருதி - புறம்புள்ளாரைக்கொண்டு செய்துகொள்ளத்தக்க காரிய மன்றி அந்தரங்கராளுரைக்கொணடு செயதுகொள்ளத தகக தொரு காரிய மென்று நினைதது விடவோ அமையும, ஓ-தெரிகிலே, அன்றி, இரககமு மாம. இனி, விடம்நெஞசை -கொடியமனததை, உறறா-அதற்கு உரியவா, விட - தூதுவிடுதல, அமையுமோ - தகுமோ? [தகாது] என்று பொருள கொள்ளவும இடமுணடு. அகரசசுட்டு - பிரசித்தியைப பறறியது. பொன்னுக்கு வடமொழியில'ஹிரணயம'என்பது ஒருபரியாயசசொலலாதலால,இரணியனை 'பொன் பெயரோன' என்றது. அவனுககு, இரணிய னென்பது- பொன்னிறமான உடமபுடைமைபறறி வநத பெயா. தடநெஞசம - செருக காலும பகவதபாகவதவிரோதததாலும அகஙகாரமமகாரஙகள் குடிகொணட மனம. நெஞசமெனனும மனததின பெயா -அதறகு இடமான மாாபுக்குத தானியாகுபெயா. தமமைச சரணமடைநதாாககு வலியபகை யுணடாகிலும அதனை எளிதில ஒழிதது அவாகளைப பாதுகாதது அருளும பேருதவிக்குணமுடையவ ரென்பது, 'அபபொனபெயரோன தடநெஞசங கீணட பிரானு' என்றதனால விளங்கும. அடிகீழ என்றது, உபசாரம காறு எனபது போலத தாறு என்பதும எலலைப்பொருளதாதலை * "தலையும காலும தாளும துணையும, வரையும பிரமாணமும மாததிரையும மட்டும, அளவின பெயரென றறைநதனா புலவா" என்றதனாலும அறிக.

தமது திருவுள்ளம மீட்கவரிதாமபடி எமபெருமான்பககல சென்று ஆழ்நதமையை ஆழ்வாா அருளிசசெயதல, இதறகு உள்ளுறை பொருள கீழ்பபாட்டில வராகாவதாரத்தில ஈடுபட்டவா, இபபாட்டில அடுதத நரசிங்காவதாரததில ஈடுபட்டாா.

†"சீரிருக்கமடமங்கைமீர்கிளிகள்தாமிருககமதுகரமெலாநிறைநதிருகக மடவன்ன முன்னநிரையாயிருகக வுரையாமல யான், ஆரிருக்கினு மெண நெஞசமலல தொரு வஞசமறறதுணை யிலலை யென்று ஆதரததினொடு தூது விடட பிழை யாரிடததுரைசெயதாறுவேன், சீரிருககுமறை முடிவுதேடரிய திருவரஙகரை வணஙகியே திருததுழாயதரில விருமபியேகொடு திருமபியே வருத லின்றியே,வாரிருககுமுலைமலாமடநதையுறைமாாபிலே பெரியதோளிலே மயஙகி யின்புறமுயஙகி யென்னையுமறநது தனனையு மறநததே" எனப பின்புள்ளாரும கூறியமை காணக.

'தனவயிறறிலே பிறநத பரஜை வாயாலே திருநாமததைச சொலல அவனைச சதருககள்செயவதைச செயது நலியககோலின கலிளாயததை நினைதது 'அபபொனபெயரோன' என்கிறாா,' 'தடநெஞசம - தேவாகளுடைய வரததை ஊட்டியாக இட்டுத திருவுகிருக்கு இரைபோதுமபடி வளாநத பெரிய மாாபு' என்ற ஈடு அறியததககது. 'ஓ கருமங கருதி விட நெஞசை உறறா விடவோ அமையும' என்பதறகு- ஒருதொழிலைக்குறிதது மனததைத தூதுவிடத துணிநதவாகள அதனினும அததொழிலைக் கைவிடுதலே தகுதி யென்றும உரைபபா. 'போயத திடநெஞசமாய' என்றதனால, போகுமபொழுது எமது பிரிவாறறுமையை நோககி நெகிழசசிகொணடிருநதது,அஙகேபோனபின்பு அவன்போலவே வன்மைகொணடுவிட்ட தெனபது தோன்றும. திரிகின்றது - நமமையலலது தஞசமிலலாதவரைத தனியேவிட்டு வநதோ மென்னும அநுதாபததாலே ஒரிடததிலவிழுநதுகிடநத தெனப தனறி, தான நினைததபடி திரிநதுகொணடிருககின்றது என்றவாறு (சசு)

* பிஙகலநதை-பணபிறசெயலிறபகுதிவகை - சசுரு

† திருவரஙகக்கலமபகம - உச.

## பிரிவாற்றாது வருந்துந் தலைவி நிலை கண்டு செவிலி இரங்கல்.

சஎ திரிகின்றது வடமாருதந் திங்கள்வெந்தீ முகந்து
சொரிகின்றது அதுவும் அது கண்ணன் விண்ணூர் தொழவே
சரிகின்றது சங்கந் தண்ணந்துழாய்க்கு வண்ணம் பயலை
விரிகின்றது முழுமெய்யும் என்னாங்கொல் என் மெல்லியற்கே.

(இ - ள்.) வட மாருதம் - வாடைக்காற்று, திரிகின்றது - உலாவுகிறது; திங்கள் - (குளிர்ந்த இயல்பையுடைய) சந்திரமண்டலம், வெம் தீ முகந்து சொரிகின்றது - கொடிய நெருப்பை மொண்டு சொரிகிறது, அதுவும் அது - அவ்வாடைக்காற்றும் அப்படியே கொடிய நெருப்பை மொண்டு வீசுகிறது; கண்ணன் விண் ஊர் தொழவே - கண்ணபிரானது பரமபதமாகிற வாசஸ்தானத்தை இடைவிடாது தொழுது அநுபவிக்கவேணுமென்று ஆசைப்பட்டு அது கிடையாமையால் வந்த மெலிவாலே, சங்கம் - (கையிலணிந்துள்ள) சங்குவளை, சரிகின்றது - கழன்று விழுகிறது; தண் அம் துழாய்க்கு - (அவனது) குளிர்ந்த அழகிய திருத்துழாயினிடத்தில் வைத்த ஆசையினால், [ஆசைப்பட்டு அது கிடையாமையாலே], முழு மெய்யும் - உடம்பு முழுவதிலும், வண்ணம் பயலை விரிகின்றது - (இயற்கையான மாமைநிறம் போய்ப்) பசப்புநிறம் பரவுகின்றது; (இனி), என் மெல்லியற்கு - மென்மையான தன்மையையுடைய என்மகளுக்கு, என் ஆம் கொல் - யாதாய் முடியுமோ?

வாடைக்கும் மதிக்கும் ஆற்றாது வளையிழந்து பசப்பு ஊர்ந்து வருந்துகிற தலைமகளைக் கண்டு செவிலித்தாய் இரங்கிக்கூறியது, இது. இதனைப் பாங்கியிரங்கலாகக் கொள்ளுதல் சிறவாமை, முன்கூறியவாற்றால் விளங்கும்.

திரிகின்றது - இவளுக்கு வருத்தஞ் செய்தலில் கருத்து வைத்துச் சஞ்சரிக்கிறது. 'வாடையானது மத்தகஜம் ஆளைக் கணிசித்து உலாவுமாபோலே உலாவாநின்றது, நாயகனுடைய தண்ணளியற்ற சமயம் பார்த்து நலிவதாகத் திரியாநின்றது' என்பர் பெரியவாச்சான்பிள்ளையும். அன்றி, திரிகின்றது - தனது இயல்பான தண்மை திரிந்து சுடுகின்றது என்றும் உரைப்பர். 'வடமாருதம்' என்றதனால், சரத்காலமென்பது தோன்றும். இனி, வடக்கிற்செல்லுங் காற்றென்று உரைத்து, தென்றலென்றுங் கொள்ளலாம். * "தென்றற்கும் வீணைக்குஞ் சேமணிக்குங் கோகிலத்துக்கு, அன்றிற்கு அமைக்கு ஆழிக்கு அம்புலிக்கு-நின்றாற்றும், அன்னைக்கு மாறற்கு அயர்ந்தாளென்று அன்னமே, என்னைக் குமாரற்கியம்பு" என்றதை இங்கே அறிக. 'வெந்தீ' என அடைமொழிகொடுத்துக் கூறினது, உலகத்து நெருப்பினும் மிகக்கொடியதொரு புதுநெருப்பு என்பது தோன்ற. முகந்து சொரிகின்றது-குடத்தையிட்டு மொண்டெடுத்துச் சொரிதல்போலச் சொரிகிறது. 'வெந்தீ முகந்து சொரிகின்றது' என்பதை மீண்டெடுத்துவாயாற்கூறுதற்கும் அஞ்சி, 'அதுவுமது' என்று ஒழிக்க, இதனால், அதன்கொடுமை † "படியின் மேல் வெம்மையைப் பகரினும் பகருநா முடியுமே" என்னலாம்படியுள்ளதென்பது போதரும். செயற்கையழகு குலைதலை 'சரிகின்றதுசங்கம்' என்றதனாலும், இயற்கையழகு குலைதலை 'வண்ணம்பயலைவிரிகின்றது' என்றதனாலுங் குறித்தாள். சங்கம் - சங்கினாலாகிய வளைக்குக் காரணவாகுபெயர். துழாய்க்கு-உருபுமயக்கம். வாடையாலும் மதியாலுமுண்டான வெம்மை தணிதற்பொருட்டு அவனது துழாயை விரும்பினமை தோன்ற, இங்கே 'தண்ணந்துழாய்' என்றது. மெல்லியல்- இத்தனை துயரங்களைப் பொறுக்கமாட்டாத மென்மைத்தன்மையுடையவள் என்றபடி.

* இரத்தினச்சுருக்கம் - சு.
† கம்பராமாயணம்-பாலகாண்டம்-தாடகைவதைப்படலம் - சு.

எம்பெருமானைச் சேரப்பெறாது வருந்தும் நிலையில் ஆழ்வாரை இவ்வுலகத்துப் பொருள்கள் பலவும் தன் பழுதுற்ற தன்மையைக் கண்டு ஞானிகள் வருந்திக் கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். திரிகின்றது வடமாருதம் திங்கள் வெந்தீ முகந்து சொரிகின்றது அதுவும் அது - இவ்வுலகத்து இனியபொருள் யாவும் எம்பெருமானது இனிமையை ஞாபகப்படுத்தலால் அவனைப் பிரிந்த நிலையில் வருத்தத்தை விளைக்கின்றன என்றபடி. கண்ணன் விண்ணூர் தொழவே சரிகின்றது சங்கம் - சாவசுலபனான எம்பெருமானது பரமபதத்தினிடத்து விருப்பமுண்டானதால் இவரது பாரதந்திரியமும் குலைகிறது என்றபடி. தண்ணந்துழாய்க்கு வண்ணம் பயலை விரிகின்றது முழுமெய்யும் - அப்பெருமானது இனிமையில் உண்டான ஈடுபாட்டால் இவரது சொரூபமும் மாறுபடும்படி ஆற்றாமை விஞ்சியதென்றபடி. என்மெல்லியற்கு என் ஆங்கொல் - எங்களுக்கு உரியவரான இவ்வாழ்வார்க்கு இவ்வாற்றாமை யாதாய்முடியுமோ? என்க.

மாருதம், ஸங்கம் - வடசொற்கள். வண்ணம் - வர்ண மென்ற வடசொல்லின் திரிபு. மெல்லியல் - பண்புத்தொகையன்மொழி.

'சரிகின்றன' என்றும் பாடம் உண்டு (௪௭)

## நன்னிமித்தங்கண்டு தான்ஆறியிருத்தலைத் தலைவி தோழிக்குக் கூறல்.

௪௮. மெல்லியலாக்கைக்கிருமிக்குருவில்மிளிர்ந்தாங்கே [ச்
செல்லியசெல்கைத்துலகையென்காணுமென்னாலுந்தன்னை
சொல்லியசூழற்றிருமாலவன்கவியாதுகற்றேன் [ண்டே.
பல்லியின்சொல்லுஞ்சொல்லாகக்கொள்வதோவுண்டுபண்டுப

(இ - ள்.) மெல் இயல் - மென்மையான தன்மையையுடைய, ஆக்கை - உடம்பையுடைய, கிருமி - புழுவானது, குருவில் - புண்ணிலே, மிளிர்ந்து - வெளிப்பட்டு, ஆங்கே - அவ்விடத்திலேயே, செல்லிய - செல்லுகிற, செல்கைத்து - தொழிலையுடையது, (அது), உலகை என் காணும் - உலகநடத்தையை எங்ஙனம் அறியும்? (அதுபோல), என்னாலும் தன்னை சொல்லிய சூழல் திருமாலவன் கவி யாது கற்றேன் - என்னைக்கொண்டும் தன்னைச்சொல்வித்த சூழ்ச்சியையுடைய திருமகள் கணவனான அத்தலைவனது புனைந்துரையை (யான்) யாதென்று அறிவேன்? பல்லியின் சொல்லும் சொல் ஆக் கொள்வதோ - பல்லியின் வார்த்தையையும் (பின் நிகழ்ச்சியை முன்னறிவிக்குஞ்) சொல்லாகக் கொள்ளுதலோ, பண்டு பண்டே உண்டு - மிக வெகுகாலமாக உள்ளது.

தலைவன் பொருள்வயிற்பிரிந்துசென்ற காலத்து அவன்பிரிவையாற்றாது வருந்துகிற தலைவி, தன் அருகிலே பல்லி நன்றாகிய இடத்தில் அவன்வரவுக்குப் பொருந்தக் குரல்செய்ததை அறிந்து அந்நன்னிமித்தத்தால் தலைவன் விரைவில் வருவானென்று துணிந்து சிறிது ஆறியிருக்க, அத்தலைவியாற்றாமையைக் கண்டு தானும் ஆற்றாத தோழி அத்தன்மையைக் கண்டு 'நீ இங்ஙனே ஆறியிருத்தல், அவன் முன்பு 'பிரியேன், பிரியில் தரியேன், விரைவில் வருவேன்' என்பவை முதலாகச் சொன்ன சொற்களைப் பாராட்டியோ? அன்றி, வேறு காரணத்தாலோ?' என்று வினவ, அதற்குத் தலைவி தான் ஆறியிருத்தற்காரணங் கூறியது இது. புண்ணிலே தோன்றிய புழு, தான் தோன்றிய இடமான அப்புண்ணையே யொழியப் புறம்பொன்றையறியாதவாறுபோல, அகமாகிய அவன் காதலிலே அகப்பட்ட யான், அதனையன்றிப் புறமாகிய சொற்செயல்களைக் கருதுவேனல்லேன், ஆனாலும், பல்லியின் சொல்லை நிமித்தமாகக் கொள்ளுதல் தொன்று தொட்டுவரும் மிகப்பழமையான மரபாதலால், நமதுமனையிடத்துப் பல்லி நல்லஇடத்தில் அவன்வரவுக்குறைடஒலித்தலைக் கண்டு அந்நற்குறியாலே

யேஆறியிருக்கிறேன் என்றுகூறினாள். பலலிசொல நிமித்தமாகக்கொள்ளப்படுதல, பிரசித்தம. பிறவிடத்தும * "இனநல முடைய கானஞ சென்றோா, புனநலம வாட்டுந ரலலா மனைவயிற,பலலியும பாஙகொத் திசைததன, நலலெழி லுணகணு மாடுமா விடனே" என்று நிமித்தஙகூறித தலைவி தோழியை ஆறறுவித்தல காணக. பிறசான்றோரும † "கொட்டாய பலலிக்குட்டி குடமாடியுலகளநத,மட்டாா பூஙகுழலமாதவனை வரக் கொட்டாய பலலிககுட்டி" எனத தலைவி தலைமகன்வரவுகூறுமபடி பலலியை வேணடியதாகப பாடினமை காணக.

புழு, தொட்டாலுமவருநதுமபடியான எளபிலுடமபின தாதலால,'மெலலியலாக்கைக் கிருமி' எனபபட்டது. குரு என்பது புணணுதலை 'வோக்குரு' என வழககிலுங காணக எமபெருமானாகியதலைமகனிடததுஈடுபட்ட தனககு, புணணிலவெளிபபட்டபுழுவை உவமைகூறியது,அதனையன்றி வேறொன்றையறியாமையாகிய ஒபபுமைததன்மையொன்றுபறறியே யென்க. இஙஙனஙகூறுதலை ‡"வேமபினபுழு வேமபன்றியுணணாது அடியேன்,நான்பின்னுமுன்சேவடியன்றிநயவேன" எனத திருமஙகையாழவாாபாசுரததிலுஙகாணக. இதனால, இது இழிவுவமைக்குறறததின்பாறபடாமை உணாக. என்னாலும - § "காமுறற பெணணுக்கு அணிகலம நாணுடைமை" என்றபடி நாணததை இன்றியமையாககுணமாககொளளுமியலபுடைய என்னாலும,உமமை-உயர்வுசிறபபு. 'என்னாலுந தன்னைசசொலலியசூழல திருமாலவன்' என்றது, நாணமிழநது தனவசமின்றிபபரவசபபட்டு அவன்விஷயமாகவே யான் கணடபடி வாயபிதறறுமாறு எனககு மோகததையுணடாககினவ னென்றபடி. வேறொருததியினிடததுவேட்கையுடைமைதோன்ற,'திருமால' என்றது. எட்டாமபாட்டில 'பாண' என்றதுபோல, இஙகே 'கவி' என்றது, உணமையாக வறித தாமவேணடியவாறு புததிசாதுரியததால கறபிததுககூறுஞ சொறகளைக குறிததது என்னாலும தன்னைசசொலலிய சூழல திருமாலவன் கவியாதுகறறேன - மெலலியலாளான என்னை இஙஙனம மொழிபலபிதறறுமபடி காமவேதனைபபடுததினவனும பிறளபாறகாதலமிககவனு மான தலைவன் முன்புஎனககுககூறின காதலமொழிகளை மெயயென்றுகருதி ஆதரிததறகும பொயயென்றுகருதி வெறுததறகுந தாமுடையேனலலேன யான் எனபதாம. பலலியின்சொலலும என்ற உமமை - பகுததுணாவிலலாத ஜநதுவாகிய பலலியினது சொலலையும எனபபொருள்படுதலால,இழிவுசிறபபு கொளவதோ, ஓ - தெரிநிலை

இனி,இதறகு ஸவாபதேசம - எமபெருமானைசசேர விளமபித்தலால ஆறறாமைவிஞசின ஆழவாரை நோக்கி அன்பாகள் 'நீா இஙஙனம பரமபதாநுபவததுக்கு விரையலாமோ? உமமைக்கொணடு லோகததைத திருததுமபொருட்டுக கவிபாடுவிததுக்கொள்ளுமபொருட்டாக வன்றோ, எமபெருமான உமமை இஙகுஇட்டுவைததது?' என்றுகூறித தேறறுவிககததொடஙக, அவாகளைநோககி ஆழவாா தமது தாழவு முதலியவறறைக கூறுதல. 'மெலலியலாககைககிருமி குருவிலமிளிாதநது ஆஙகே செலலிய செலகைதது உலகை என்காணும' என்றதனால,அறபமானஞானசகதிகளையுடைய யான் உலகததையறிநது திருததுகையாவது என்? என்றபடி. தமதுஇழிவைபபுலப்படுத்தறகு, புழுவைஉவமைகூறினாா. ஆனால,எமபெருமான்உமமைக்கொணடுகவிபாடுவிததுககொணடருளுகின்றனனே யென்ன, 'என்னாலுநதன்னைசசொல

* கலிததொகை - பாலைக்கலி - கo.
† பெரியதிருமொழி - நாலாநதிருபபதிகம - ச.
‡ ,, நூறறெட்டாநதிருபபதிகம - எ.
§ திரிகடுகம - ருஉ.

வியசூழல் திருமாலவன் கவி யாதுகற்றேன்' என்றார், மிகக்கிழ்ப்பட்ட சாதியையும் அறிவையும் நடத்தையையுமுடைய என்னைக்கொண்டு தன்னைச்சொல்வித்துக்கொண்ட சூழ்ச்சியுடைய திருமாமகள்கொழுநனை அவனது கவிகளேயொழிய யான்யாது அறிவேன்? என்றபடி யான்யாதுகற்றேன்? அது திருமாலவன்கவி யெனினுமாம்; இதனால், இவ்வாயைக்கொண்டு எம்பெருமான் தானே கவிபாடுவித்துக்கொண்டா னென்பது விளங்கும். தன்னை-யாவரினும் மிகமேம்பட்டவனும் அளவிட்டுஅறியவுங்கூறவு மொண்ணாத தன்மை வடிவு குணம் செயல் முதலியவற்றை யுடையவனும் வேதங்களுக்குமெட்டாதவனுமான தன்னை. 'என்றும் தன்னைச் சொல்லிய சூழல்' என்றது, உயர்ந்தாரிலுயர்ந்த தன்னை இழிந்தாரிலிழிந்த என்னைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட தந்திரம் என்னே! என்று எம்பெருமானது அற்புதசக்தியை வியந்தபடி. தனது உயர்ந்தநிலையைத் தானே கவிபாடிக்கொண்டால் அதிற் பெருமையில்லை யென்றுகருதி அந்நிலையை உண்மையாகஅறிந்து கவிபாடவல்லாரெவரும் உலகிலில்லாமையால் அடியேனை ஒருவியாஜமாகவைத்து என்னைக்கொண்டு தன்னைத் தானே கவிபாடிக்கொண்ட விரகு என்க. திருமால் என்றது, திருமகளுந் தானுமே சொல்லும் பொருளு மாகுந் தன்மையைக் குறிக்குமென்பர். திருமாலவன்கவி - சொற்பொருள்கள் தானேயானதுபோலக் கவிபாடுபவனும் தானேயானான் என்பதாம், அவனும்அவளுமானசோதிக்குத் தகுதியான கவி யென்பதுந் தோன்றும். 'அவன் முன்னுருச் சொல்லிக்கொண்டு போக நான் பின்னுருச்சொல்லிக்கொண்டுவந்த அவ்வளவே, நான் என்னுணர்வால் அறிந்து கவிபாடினேனல்லேன்' என்பது தோன்ற, 'யாதுகற்றேன்' என்றார். நான் என்வசமிழந்து பக்திவசப்பட்டு வாய்க்குவந்தபடி பாடினவ்வளவே என்பதுந் தோன்றும் ஆனால், நீபாடினகவியென்று எம்பெருமானும் உலகத்தாரும் கொள்ளுகின்றனரே யென்ன, 'பல்லியின் சொல்லுஞ் சொல்லாகக்கொள்வதோ வுண்டு பண்டு பண்டே' என்றார், அற்பஜந்துவாகிய பல்லி தன்னடைவிலே செய்யுஞ் சத்தத்தையும் தம்தமது பெரியகாரியங்களைக் குறிக்கின்றனவாக நிமித்திகர்கொள்ளும்இயல்பு அநாதிகாலமாக உண்டன்றோ? அப்படியே யான் பரதந்திரமாய்க்கூறுஞ் சொல்லையும் எனதுஇழிவு பாராது யாவரும் அங்கீகரித்துப் பொருள்பாராட்டுகின்றன ரென்று தமது விநயந்தோற்றக் கூறினரென்க

அழகியமணவாளசீயர் இந்நூலுரையின்பிரவேசத்தில் 'ஈசுவரன்தானே லோகத்தைத் திருத்துகைக்கு இவர் ஆவரென்று அங்கீகரித்து "என்றும் தன்னைச்சொல்லிய சூழற் திருமாலவன் கவி யாதுகற்றேன்" என்னும்படி இவர்திருவுள்ளத்திலும் நாக்கிலும் நின்று இவர்தம்மைக்கொண்டு தானே ப்ரவர்த்திப்பிக்கையாலும் அத்யந்த வ்யாவ்ருத்தராயிருப்பா ரொருவர்' என்றது, இங்கு அறியத்தக்கது

• ஆக்கை - யாக்கை யென்பதன் மரூஉ, தனிமொழியுமாம் உண்டாக்கப்பட்டதென்று பொருள். கிருமி - க்ருமி யென்னும் வடசொல்லின் திரிபு. மிளிர்ந்து, தா - துணைவினை. செல்லிய - இறந்தகாலப் பெயரெச்சம், சொல்லிய என்பதுபோல. 'செல்லிய செல்கைத்து' என்பதற்கு - 'நடத்தக்கடவதான சமஸ்தவ்யாபாரத்தையு முடைத்தானது' என்றுஉரைப்பர் அழகியமணவாளசீயர், அவ்வுரைக்கு, செல்லிய என்பது - பிறவினை 'செலீஇய' என்பதுபோல. திருமாலவன் கவி ஆது கற்றேன் என்றுபிரித்து, அவனுடைய பாடலாகிய அதனை யான் வெளியிட்டுச்சொன்னேன் என்றுகொள்ளுதலும் உண்டு, இப்பொருளுக்கு, 'ஆது' என்பது - அது என்பதன் நீட்டல் ஆங்குஎன்பதுபோல. பண்டு பண்டே - அடுக்கு, மிகுதி குறிக்கும். (௪௮)

## இருளுக்கு ஆற்றாத தலைமகள் தோழிக்குக் கூறல்.

௪௬. பண்டும் பலபல வீங்கிருள் காண்டுமிப் பாயிருள்போற்
கண்டு மறிவதுங் கேட்பதும் யாமிலங் காளவண்ண
வண்டுண் டுழாய்ப்பெருமான் மதுசூதனன் றாமோதர
னுண்டு முமிழ்ந்துங் கடாய மண்ணேரன்ன வொண்ணுதலே.

(இ - ள்.) காளவண்ணம் - கறுத்த திருநிறத்தையும், வண்டு உண் துழாய் - வண்டுகள் தேனுண்ணப்பெற்ற திருத்துழாய்மாலையையு முடைய, பெருமான் - யாவர்க்குந் தலைவனும், மதுசூதனன் தாமோதரன் - மதுசூதனனென்றுந் தாமோதரனென்றுந் திருநாமங்களையுடையவனு மான திருமால், உண்டும் - (பிரளயகாலத்திலே) திருவயிற்றினுட்கொண்டும், உமிழ்ந்தும் - (பிரளயம்நீங்கினவளவிலே) வெளிப்படுத்தியும், கடாய - பாதுகாக்கப்பெற்ற, மண் - பூமியினுடைய, ஏர் - அழகை, அன்ன - ஒத்த, ஒள் நுதலே - பிரகாசமான நெற்றியையுடையவளே! பண்டும் - முன்பும், பல பல வீங்கு இருள் - மிகப்பலவான பெரிய இருட்பொழுதுகளை, காண்டும் - பார்த்துள்ளோம்; இப் பாய இருள் போல - இந்தப் பரந்த இருட்பொழுதுபோல, கண்டும் அறிவதும் கேட்பதும் யாம் இலம் - யாம் (வேறொருபொருளைக்) கண்டறிவதும் கேட்டறிவதும் இல்லோம்; (எ - று.)

இதுவரையிலும் எம்முடைய வாழ்நாளில் யாம் நாள்தோறும் இருட்பொழுதைக் கண்டுள்ளோம், அவற்றுக்கெல்லாம் ஒருவரையறை உண்டு, வருத்தத்தை வளர்க்குந்தன்மை இல்லை: இங்ஙனம் முடிவில்லாது நீட்டிப்பதும் வருத்தத்தைவளர்ப்பதுமானதோர் காளராத்திரியை எங்கும் எப்பொழுதும் கண்டதும் கேட்டது மில்லை யென்று இரங்கிக்கூறினாள். கண்டுமென்ற உம்மை - அசைநிலை. கண்டறிவதும் கேட்டறிவதும் எனப் பிரித்துக்கூட்டுக. இனி, கண்டுமில்லோம், அறிவதுமில்லோம், கேட்பதுமில்லோம் என்றும் உரைப்பர். இருளின்கொடுமையைக்கூறுகையில் எம்பெருமானுக்கு 'காளவண்ணம்' என்ற அடைமொழி கொடுத்ததனால், அவனது இருளன்னமாமேனியைக் காட்டி இது வருத்து மென்பது தோன்றும். காளவண்ணம் என்பதை வண்டுக்கு அடைமொழியாக்கலுமாம். மதுசூதனன் - மதுவென்னும் அசுரனை அழித்தவன். தாமோதரன் - (கிருஷ்ணாவதாரத்தில் யசோதையாற் கட்டப்பட்ட) கயிற்றை வயிற்றிலுடையவன். தாம + உதர எனப் பிரியும், குணசந்தி. தாமம் - கயிறு. * "கண்ணிநுண் சிறுத்தாம்பினாற் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்" என்பது, இதன்தோந்தபொருள். மதுசூதனனென்றதனால், தன் அடியார்களுக்குப் பகையானவர்களை அழிப்பவனென்பதும், தாமோதரனென்றதனால், உகப்பார்க்குக் கட்டிவைக்கலாம்படி எளியவனென்பதுந் தோன்றும். கடாய - நடத்திய, இங்கே, இது, காத்தவென்றபொருளில் வந்தது. இனி, அளந்தவென்றுபொருள்கொள்ளுதலும் பொருந்தும். 'மண்ணேரன்ன வொண்ணுதல்' என்றது, மிகப்பெரிய நிலவுலகமுழுவதும் விலைமதிக்கும்படியான நெற்றியழகுடையவ ளென்றபடி. 'மண்ணேரன்ன' என்றது, நுதலுக்கு அடைமொழி, நுதலாளுக்கு அடைமொழியாக்கின், நிலமகள்போன்ற சிறப்புடையவளே யென உயர்த்திவிளித்தபடி. இதனால், பூமிபோல அவன்பாதுகாவலுக்குஉட்பட்டபொருள் யா மெனத்தோன்றும்.

எம்பெருமானைச் சேர்ந்துஅனுபவிக்கப்பெறாது வருந்தும் நிலையில் தம்மைவருத்துகிற மோகாந்தகாரத்தின் மிகுதியை ஆழ்வார் தமது அன்பர்க்கு அருளிச்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். இதற்குமுன்பும் பலபல மோகபரம்பரைகளை அனுபவித்துள்ளோமாயினும் இப்பொழுதுமிக்குவருத்

* கண்ணிநுண்சிறுத்தாம்பு - க.

துகிற மோகாநதகாரம போலவ தொன்றை என்றும கண்டும் நினைததும கேட்டும அறியோம; அழகிய திருமேனிநிறததையும இனிமையையும தலைமையையும பகையொழிக்குந தன்மையையும அடியாாக்கெளிமையையுமுடைய எமபெருமான் பலவகையாலும பாதுகாதத லீலாவிபூதியை ஒருபுடையொபபுமை சொலலததக்க ஞானவொளி திருமுகத்தில விளங்கபபெறறவர்களே! என்று ஸவாபதேசாததங் கணடுகொளக. 'மணநோ அனன ஒணணுதலே' என்றது, ஊாததுவபுணடரரூபமான திருமணகாபபைத தகுதியாகததரிதத திருநெறறியையுடையவாகளே! என்றவாறுமாம.

காணடும—டும - தனமைபபன்மைவினைமுற்றுவிகுதி; இதுவே இறநதகாலங்காட்டிறறு: "டவ்வொடு கழிவும" [நன் - பத - கஅ.] (இதனால, 'காணஎன்னும பகுதி இறநதகாலததிலே முதலகுறுகி வரும' எனபது நியதியன் றென மறக்க. காணப என்பது கணடார எனவும, காணடலும என்பது கணடபின் எனவும,காணுபு காணூ காணூ என்பன கணடு எனவும பொருளபடுதலும, எதிாகாலததில முதலகுறுகிக் கணடால கணடக்கால என வருதலுங காணக.

பாயஇருள்- வினைததொகை. ஒணணுதல- பணபுததொகையன்மொழி.

'உணடும உமிழநதுங கடாய மணணோ ரன்ன ஏளறது, இவ்விருளிலே நாம்ஜீவிததுக்கிடககிறபடி பரளயததிலே பூமி தடபிக்கிடநதாறபோலே, இபபாட்டுத தோழிவாாததையானபோது, அவன்விருமபிரக்ஷிக்குமபூமியைபபோலே அவனுக்கு ஸபூருஹணீயையனறோ நீ யென்றபடி' என்றஅபபிளளையுரை அறியததககது (சக)

## தலைவன் மீண்டுவருகையில் தோப்பாகனேடு கூறல்.

ருo ஒண்ணுதனமாமையொளிபயவாமைவிரைநதுநநதேர்
நண்ணுதலவேணடும்வலவகடாகினறுதேனவினற
விணமுதனாயகனீணமுடிவெண்முததவாசிகைததாய்
மணமுதலசோவுறறருவிசெயயாநிற்குமாமலைககே

(இ - ள) வலவ - பாகனே! ஒள் நுதல - அழகிய நெறறியையுடையவளது, மாமை ஒளி - மேனிநலநிறததின் விளககம, பயவாமை - பசபபுஅடையாதபடி,—தேன் நவின்ற - வணடுகளபாடபபெறற, விண முதல நாயகன் நீள் முடி- பரமபததுககுமுதனமைததலைவனான எமபெருமானது நீணடதிருமுடியில தரிதத, வெள முததம வாசிகைதது ஆய - வெணணிறமான முததுமாலையின் தனமையதாய, மண முதல சோவுறற - (முடிதொடஙகி) அடிவாரததுநிலததிலே சேருமபடியான, அருவி - நீாபபெருககை, செயயாநிறகும - செயதுநிறகிற, மா மலைககு - பெரியதிருமலைககு, நம தோ - நமது தோ, விரைநது நணணுதல வேணடும - துரிதமாகசசென்றுசேரவேணடும; இனறு - இபபொழுது, கடாக - செலுததுவாயாக, (எ - று)

'பொருள்வயிறபிரிநது வினைமுறறிமீணட தலைமகன் தலைமகளாறறுமை நினைததுப பாகனைத தேரை விரைநது நடததச்சொனன பாசுரம' என்பர் அழகியமணவாளசீயரும *"வன்மாழுடுகை வலவ திணடோ ரினி வானன்தஞ்சைக்கு, என்மாலுறுநெஞசின் முன்செல," †"இன்றேபுகுமவணண மேககு திணடோ இளவஞ்சியென்ன, நின்றேவயங்கிநுடஙகிடையேழை நெடுநகாக்கே",† "வநதனறு வாழி பொழுதே வலவிரைநது,செலக பாக நின்நலவினை நெடுநதோ," † "சூழிக்களிறறிற றுணைகதிணதோ," † "மொயமமாமதககளி

* தஞ்சைவாணன்கோவை - உளச.
† இறையனாகப்பொருளுரை, நகூ-ஆம்சூததிரததின்கீழக்கணடது.

வேழங்கள் பின்வர முன்னுகதோ” என்பன காணக. பரதாழ்வானதுஆற்றாமையைககருதிய ஸ்ரீராமபிரான பதினான்குவருஷகாலமசென்றவழியைச சிறிதுகாலத்தில கடந்து மீணடுவநதாறபோல, நெடுங்காலம பிரிநத தலைமகன் தான் மீணடுவரககடவதாக முன்புசொல்லிப்போன காலம வந்திட்ட வளவிலே இவளாற்றாமையைக் கருதி நெடுநாட்போனவழியைச சிறிது பொழுதிற கடந்து மீணடுவர நினைத்து, பாகனைநோக்கி ‘விரையத் தேரை நடத்து’ என்றான ‘மாமையொளிபயவாமை’ என்றதனால, இவ்வழகை யிழந்தால தான ஆறியிருக்கவொணணா தெனகையும, பசப்புநோந்திட்டால அது நமமாலும மீட்கவொணணா தெனகையும தோன்றும. விரைந்து நநதோ ணணுதல வேணடும - விரையசசென்றுசேராவிடின் ஆற்றாமை கைவிஞசுதலால அவளஇறநதுபடுவளாதலால, நமக்குபபழிநோந்திடு மாத லின, அதறகுமுனபே செலலவேணடு மெனறபடி.

வலவ! பயவாமை மலைககுதத தோ விரைநது நணணுதல வேணடும, கடாக என இயையும.

எமபெருமானது திருககுழல இயறகையில திவ்வியகநதமுடையதாத லாலும, *செணபகமலலிகையோடு செஙகழுநீ ரிருவாட்சி முதலிய நனமலா களை எபபொழுதும தரிததுளளதனாலும, ‘தேனவின்றமுடி’ எனபபட்டது. முடி - மயிாமுடியின்பெயா, கிரீடத்துககு விடாதவாகுபெயா. தேன்நவின்ற நாயகனென றுமியைதது,† “திருவரஙகததே வளருந தேன்”என்றபடி மிக்க இனிமையால தேனைகசசொலலபபடுகிற எமபெருமா னென்றும,தேனவின்ற மலையெனஇயைதது,‡ “தென்னாதெனாவென றுவணடுமுரல திருவேஙகடம்” என்றும, § “கோறதேன்பாயநதொழுகுங குளிரசோலை சூழ வேஙகடம்”என றும உரைததலும உணடு முதலநாயகன-ஆதிதேவன் ‘வினை முதல நாயகன்’ என்பதறகு-பரமபதமுதலிய உலகஙகளுககெலலாந தலைவ னென்று உரைப பா. வாசிகையென்பது - மாலையாதலை $ “மஞசளூரு செஙகழுநீரின் வாசிகையும நாறுசாநதும” என்னுமிடததுங காணக கரியதிருநிறமுடைய எம பெருமானது திருமுடியினின்று திருவடியளவுந தொஙகுகிற முததுமாலை,கரிய மலையின் உசசிமுதல அடியளவும இடையறாதுபெருகுகிற வெளளருவிககு உவமை ‘மாமலைககு நணணுதல வேணடும’ என்றதனால, குறிஞசிநிலத்துத தலைமக னென்பது போதரும. அன்றியும, கூடுமிடம குறிஞசியாம. வலவன் - வலலவன், சாரதி. வலவ கடாக இன்று - தோநடததவலல வனே! முன்போலன்றி இபபொழுது உனவலலமை முழுவதையுங கொணடு விரைநதுசெலுததுக என்றபடி.

பேறபெருமையால வருநதுகிற ஆழவாரது ஆற்றாமையை யுணர்நது அன்புடையபாகவதா தேசாநதரத்தினின்று விரைநதுவருதல, இதறகு உள்ளுறைபொருள். பகவானையும பாகவதரையும பிரிதலா லாகிய துயரை ஆறறி ஆழவாரைத தேறறுவதாக மனோரதம மேறகொணட பாகவதா அமமனோ ரததைசசெலுததுதலில வலல நெஞசை விரையததூணடிய தன்மையா கும, இது ஒணணுதல மாமை யொளி பயவாமை - திவ்வியமான ஞாதத்துவ புஷடாத்தால விளஙகுகின்ற திருநெறறியையுடைய ஆழவாரது இயறகை வணணங கெடாதபடியென்க. ‘மலை’ என்றது, ஆழவாா எழுநதருளியுள்ள மேலான இடததை, அதன் உயாவு தோன்ற, ‘மாமலை’ என விசேடிததது.

* பெரியாழவாா திருமொழி-பதினேழாநதிருபபதிகம - க0.
† திருவரஙகககலமபகம - சச.
‡ திருவாயமொழி - இருபததொன்பதாநதிருபபதிகம - க.
§ பெரியதிருமொழி - ஒன்பதாநதிருபபதிகம - அ.
$ பெரியாழவாா திருமொழி-பதினான்காநதிருபபதிகம - ச.

பயவாமை - எதிர்மறை வினையெச்சம். வேண்டும் - இன்மைப்பொருளது. வல்லவு - அண்மைவிளி. கடாக - கடாவுக. கடாகஇன்று என்பதன் தொகுத்தல், இனி, 'கடாகின்று' என்பு வுக என்னும் பொருள் தோற் வினைத்திரிசொல் லென்றலும் உ. கின்று ஈணனுதல் வேண்டுமென்று இயைத்து, கடாவிக்கொண்டு கிடட்டு வண்டுமென்று உரைப்பாரும் உளர், இவ்வுரைக்கு, கடாகின்று - நிகழ்கால வினையெச்சம். வாசிகைத்து - ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர். சோவுற்றருவி - பெயரெச்சவீறுதொகுத்தல் (௫௦)

## கடலோசைக்கு ஆற்றுத தலைவி இரங்கல்.

நிக மலைகொண்டுமத்தாவரவாற்சுழற்றியமாயப்பிரா
னலைகண்டுகொண்டவமுதங்கொள்ளாதுகடற்பரதா
விலைகொண்டுதந்தசங்கமிவைவேரித்துழாயதுணையாத [தே.
துலைசொண்டுதாயங்கிளாநதுகொளவாருத்தழைக்கின்ற

(இ - ள்) கடல் - கடலானது,—மலை - (மந்தர) கிரியை, மத்து ஆ கொண்டு - மத்தாகக்கொண்டு, அரவால் - (வாசுகி யென்னும்) பாம்பாகிய கடைகயிற்றால், சுழற்றிய - கடைந்த, மாயம் பிரான் - விசித்திரசக்தியையுடைய எம்பெருமான், அலை கண்டு - (தன்னை) அலையும்படிபண்ணி, கொண்ட - (தன்னிடத்தினின்று) எடுத்துக்கொண்ட, அமுதம் - அமிருதத்தை, கொள்ளாது - (மீண்டும்) வாங்கிக்கொள்ளமாட்டாது, (இப்படிப்பட்ட கடல்), வேரி துழாய் துணை ஆ - பரிமளத்தையுடைய (எம்பெருமானது) திருத்துழாயைத் (தனக்குத்) துணையாகக்கொண்டு, துலை கொண்டு - ஒத்து எதிர்வந்து, தாயம் கிளர்ந்து - பங்காளியுரிமை கொண்டாடுதல்போல மேலெழுந்து, பரதர் விலை கொண்டு தந்த சங்கம் இவை கொள்வான் ஒத்து - (தன்னிடத்துக்கு உரியவரான) நெய்தல்நிலமாக்கள் (என்னிடத்தினின்று) விலைவாங்கிக்கொண்டு கொடுத்த இச்சங்குவளைகளை மீட்டும்வாங்கிக்கொள்ளுதல் போன்று, அழைக்கின்றது - (சண்டைக்குக்) கூப்பிடுகிறது, (எ - று) —ஈற்றுஏகாரம் - இரக்கம்.

பிரிவாற்றாமைத்துயரை மிகுவித்து வருத்துவதான கடலின் ஒலியால் தன் உடம்புமெலிகையில் கைவளைகள் கழன்றுவிழுவதைக் கண்ட தலைவி, 'முழுவல்லமையையுடைய திருமால் மந்தரமலையை நாட்டி வாசுகியைக் கடைகயிறாகப் பூட்டித் தேவாசுரர்களைக்கொண்டும் தனது திருக்கைகளாலும் இடமும்வலமுமாக இழுத்துக்கடைந்து வருத்தி வலியஎடுத்துக்கொண்டு போன அமிருதத்தை மீட்டும் தன்வலியால் வாங்கிக்கொள்ளமாட்டாத இக்கடல், மெலிவியலான யான் அக்கடலிடத்துக்கு உரிய மனிதர்க்கு விலை கொடுத்து அவர்களிடத்தினின்றுபெற்ற சங்குவளைகளை மீட்டும் தான்வலியக்கவர்ந்துகொண்டுபோகக் கருதி, அதற்குத் தன்வலிமைபோதாமையால் தன் திருத்துழாயையுந் துணைக்கொண்டு, ஞாதிகள் தாயப்பொருளை வலியப்பெறும்பொருட்டு மேலெழுந்துவந்து போர்க்குஅழைப்பதுபோல், தானும் என்னைத் தனதுமிக்கவொலியால் அறைகூவுகின்றது' என்று தன் ஆற்றாமையை வெளியிட்டாள், *"ஆர்த்துன் னமிழ்துந் திருவு மதியு மிழந்தவனீ, பேர்த்து மிரைப்பொழியாய் பழிநோக்காய் பெருங்கடலே" என்பதோடு ஒப்பிடுக.

மலைகொண்டு மத்தா அரவால் சுழற்றிய மாயப்பிரான் அலைகண்டு கொண்ட அமுதம் - †"மாயிருங்குன்றமொன்று மத்தாக மாசுணமதனொடு

* திருக்கோவையார் - ௧௭௩.
† பெரியதிருமொழி - ஈற்பத்தேழாந்திருப்பதிகம் - ௬.

மளவிப், பாயிரும்பௌவம் பகடுவிண்டலற..........ஆயிரந்தோளாலலை கடல்கடைந்தான் அரங்கமாநகரமாந்தானே" என்பது காண்க.

மலைகொண்டு மத்தா அரவாற் சுழற்றிய மாயம் - அசலமானதையும் கொடியதையும் துணைக்கருவியாகக்கொண்ட பேராற்றல். வேறு-தேனுமாம். துழாய் துணைக்கொள்ளுதலாவது - தலைவனது திருத்துழாய்மாலையினிடத்து யான் ஆசைப்பட்டுத்தளருஞ்சமயம் நோக்கித் தானும் என்னைவருத்தத்தொடங்குதல். துலைகொண்டு - திருத்துழாயைத்துணைகொள்ளாதபொழுது எனக்கு எதிராகமாட்டாதது,அதனைத்துணைகொண்டபின் எதிராயவந்ததென்றபடி, இயற்கையில் வாலியினும் வலிமைகுறைந்த சுக்கிரீவன் இராமபிரானைத் துணைகொண்டபின் அத்துணைவலிமையால் வாலிக்கு எதிராய் மேற்சென்று குரல்காட்டித் தாயாதித்தன்மைதோன்ற வலியப்போருக்குஅழைத்தாற்போல. இனி, துலைகொண்டு என்பதற்கு - (என்னைத்) துலைத்தலைக்கொண்டு [என்னைஅழித்திடவேண்டுமென்று உட்கொண்டு] என்றுமாம்; துலைத்தலெனினும், தொலைத்தலெனினும் ஒக்கும் (தொலைத்தல், தொடாதல், தொடங்கல்,தொலை,தொடை இச்சொற்கள், ஏட்டுப்பிரதிகளிற்பெரும்பாலும் துலைத்தல், துடாதல், துடங்கல், துலை, துடை என்றுஎழுதப்பட்டுள்ளன.) துழாய் துணையாத் துலைகொண்டு - தன்னைவருத்திய அவனைத் தான் ஒன்றுமசெய்யமாட்டாது, அவனதுசம்பந்தமுள்ள திருத்துழாயினிடத்து அன்புடையேனென்று பகைமைபாராட்டி என்னைவருத்தத்தொடங்கிற்று என்றுங் கொள்க. தாயங்கிளர்ந்துகொள்வானொத்து - கிரயத்தால் நாலைந்துகைசென்றிட்ட பொருளையும் தாயாதிகள் எங்களதென்றுசொல்லி விடாமல் வழக்குத்தொடர்ந்து மீட்கப்பார்த்தல் போன்றுள்ளது இதன்செய்கை. அழைக்கின்றதே - இங்ஙனம்என்னைவருத்துகிறது பிரிந்துசென்ற அவனையும் வருத்தவேண்டாவோ? கடல் அவனதுதிருமேனிநிறத்துக்கும்,அதனொலி அவனதுகம்பீரமானகுரலொலிக்கும் போலியாய் வருத்தும்.

எம்பெருமானைச்சேரப்பெறாதுவருந்துகிற ஆழ்வார் இவ்வுலகத்துச் சமுசாரகோலாகலத்தைக் கண்டு தளர்தல், இதற்கு உள்ளுறைபொருள். சமுசாரமாகிறகடலினிடையிலே சலனமில்லாத மனவுறுதியாகிய மந்தரமலையை நாட்டி அன்பாகிய கயிற்றைக்கொண்டு கடைந்து எம்பெருமான்தானே ஒரு கலக்கத்தையுண்டுபண்ணி இனியதான ஓராத்மாவை ஈடேற்றியெடுத்துக்கொண்டுபோய் அனுபவிக்கத்தொடங்கினால் அதனைமீட்டுக்கொள்ளுமாற்றல் இச்சமுசாரசாகரத்துக்குக் கிடையாது, அத்தன்மையதான இந்தச்சமுசாரத்தின் ஆடம்பரமானது, எம்பெருமானது இனிமையில் எனக்குஉண்டான மிக்கவிருப்பத்தால் யான் *"கண்டாற்றேன் உலகியற்கை கடல்வண்ணா அடியேனைப், பண்டேபோற் கருதாது உன்னடிக்கே கூயப் பணிகொள்ளே" என்று ஆற்றாதுவிரையும்படி பகைமைகாட்டி என்னைமிகவருத்துகின்றது.'பரதா விலைகொண்டு தந்த சங்கமிவை கொள்வானொத்து' என்பதற்கு ஸ்வாபதேசம் - சமுசாரத்தைக்கடக்க நீந்துகிற ஆசாரியரால் எனதுவழிபாட்டிற்கு ஈடாகத் தரப்பட்டதும் என்கைவசமாகவுள்ளதுமான சுத்தஸ்வபாவத்தை மீட்டுக்கொள்ள முயல்கிறது இச்சமுசாரசாகரமென்பதாம்.

மத்து - கடைகருவி, மந்தமென்னும் வடசொல்லின் திரிபு. கடலென்றது-மத்திமதீபமாய் 'கொள்ளாது' என்றதனோடும், 'அழைக்கின்றது' என்றதனோடும் இயையும். அலைகண்டு - அலையக்கண்டு, அலைத்து. கொள்ளாது என்றதை வினையெச்சமாகவுங் கொள்ளலாம். கொள்வான் - வான்விகுதி பெற்ற தொழிற்பெயர்; ஆண்பால் வினையாலணையும்பெயராக்கி, கொள்ளும் ஒருவன்போன்று எனினுமாம். நான்காமஅடியில் 'தலைகொண்டு'என்று பாட

* திருவாய்மொழி - மூப்பத்தொன்றாந்திருப்பதிகம் - ௩

மாயின், வருத்தத்தலைப்பட்டு என்று பொருள் செய்தல் சிலத்துஆட்டவர்க்குப் பரதர், நுளையர், வலையர் என்றும், அந்நிலத்து மகளிர்க்குப் பரத்தியர், நுளைச்சியர், வலைச்சியர் என்றும் பெயர்

'தலைமகன் வாராநிற்கச்செய்தே நடுவில்லவசரத்திலே ஸமுத்ரகோஷம் இருந்தழாயைத் துணையாகக்கொண்டு பாதிக்கிறபடியைச் சொல்லுகிறாள்', 'பெருமிடுக்கனுகையாலே அவன் தன்பக்கல் வலியவாங்கிக்கொண்ட அமிருதத்தை மீட்டுக்கொள்ளமாட்டாதே, நாம் அபலைகளாகையாலே விலையிட்டுக்கொண்டவளையைத் தன்பக்கலிலேபண்டுத்திறந்ததென்று முரிமையாலே சொல்லிவாங்கிக்கொள்வாரைப்போலே கிளர்ந்துகூப்பிடாநின்றது'என்ற அப்பிள்ளையுரையும், 'அமுதம் கொள்ளாது கடல் - கீழ்மண்கொண்டு மேல்மண்ணெறியும்படி மந்தரத்தைக் கொடுவந்து கடலின் நடுநெஞ்சிலே வைத்து மகாபாகுவான தன் தோள்மிடுக்காலே கடல்குழம்பும்படி கலக்கித் தன்பக்கலினின்றும் தன் நல்லுயிரை வாங்கிக்கொண்ட அவன்நெஞ்சைக் கலக்கி அத்தை மீட்டுக்கொள்ளமாட்டுகிறதில்லை, எல்லாரும் எளியார்பாடே செல்லுமித்தனையிறே' என்ற நம்பிள்ளையிடும் அறியத்தக்கன. (௫க)

## காலமயக்கு.

௫௨ அழைக்கும்கருங்கடல்வெண்டிரைக்கைக்கொண்டுபோய்அலர்
மழைக்கண்மடந்தையரவணையேறமண்மாதர்விண்வா[வாய்
யழைத்துப்புலம்பிமுலைமலைமேனின்றுமாறுகளாய
மழைக்கண்ணநீர்திருமால்கொடியானென்றுவார்கின்றதே.

(இ - ள்) அழைக்கும் - (அன்போடு)அழைக்கிற, கரு கடல் - (தன்னிடத்திற் பள்ளிகொண்டிருக்கிற எம்பெருமானது திருமேனியின் நிழலீட்டாலே) கறுத்துள்ள திருப்பாற்கடலானது, வெள் திரை கை கொண்டு போய் - (தன்னுடைய)வெளுத்த அலைகளாகிய கைகளாலே எடுத்துக்கொண்டு போக, அலர் வாய் மழை கண் மடந்தை - தாமரைமலரில்வாழ்பவளும் மழைபோலக்குளிர்ந்தகண்களையுடையவளும்(பெண்களுக்குஉரிய)மடைமைமுதலிய நற்குணங்கள்நிறைந்தவளுமான திருமகள், அரவு அணை ஏற - (அப்பாற்கடலினிடையிற் பள்ளிகொண்டுள்ள எம்பெருமானது)ஆதிசேஷனாகியசயனத்தின் மீது ஏற,(அதுகண்டு), மண் மாதர் - பூமிதேவி, விண்வாய் - ஆகாயத்திலே, புலம்பி அழைத்து - (மேகமுழக்கமுகமாக)அழுது கூப்பிட்டு, முலை மலைமேல் நின்றும் - (தனது)தனங்களாகிய மலைகளின்மேல்நின்றும், ஆறுகள் ஆய் - ஆறுகளாக(ப்பெருகவிட்ட), மழை கண்ண நீர் - மழையாகிய கண்ணீரானது, திருமால் கொடியான் என்று - திருமகள்கணவன் கொடியவனென்று வெளியிட்டு, வார்கின்றது - பெருகுகிறது,(எ - று.)

'பெருகவிட்ட' என வருவிக்க ஆய்-ஆக எச்சத்திரிபு; ஆறுகளாய் வார்கின்றது என இயைத்து, புலம்பி என்பதைப் புலம்ப எனத் திரித்தலுமாம்.

'காலங்கண்டுகலங்கின தலைமகளாற்றாமையைத் தோழி காலமறைத்துரைத்த பாசுரம்'என்பர் அழகியமணவாளசீயரும். கார்காலத்திலேவருகிறேனென்று போன தலைமகன் வாராது தாழ்க்க, அக்காலமானது வந்தவாறே தலைமகள் கலக்கமடைய, 'இது அவன் சொன்ன காலமன்று' என்று தோழி காலத்தை மயக்கியுரைத்து அவள்கலக்கத்தைத் தீர்க்கிறாள். *"காரெனக் கலங்கு மேரெழிற் கண்ணிக்கு,இன்துணைத் தோழி யன்றென்று மறுத்தது" என்பது காண்க. இது, 'பருவமன்றென்று கூறல்' என்றும் வழங்கும். இந்நூலிற் காலமயக்கு அடுத்தடுத்து வருதற்குக் காரணம் - தலைமகளது பிரிந்

* திருக்கோவையார் - ௩௨௪, கொளு.

திருக்குமங்கிலமை நீட்டித்த லென்றும், *"இந்நின்றநீர்மையினியாமுறாமை" என்று தம்மை வேண்டிக்கொண்டு விண்ணப்பஞ்செய்தபொழுதே எம்பெருமானைச் சேரவேண்டியிருக்க அப்பேறு கிடையாமையா லுண்டாகிய ஆழ்வாரது ஆற்றாமையின் மிகுதி யென்றுங் கூறுவர்.

திருமகள் நிலமக ளென்ற தேவிமார் இருவருள் திருமகளது பிறப்பிடமான திருப்பாற்கடலினிடையில் திருமால் பள்ளிகொண்டருளுதலால், அக்கடல் தன்மகளான திருமகளைத் தன் முழக்கமாகிய இனியகுரலால் அன்போடு அழைத்து அலைகளாகியகைகளை முன்நீட்டி அவற்றால் அவளை எடுத்துக் கொண்டுபோய் எம்பெருமானிடம் சேர்க்க, அத்திருமகள் அந்த அலைகளாகிய படிகளின்மூலமாக எம்பெருமானது உயர்ந்த திருவனந்தாழ்வானாகியபடுக்கையின்மீது ஏறி அப்பெருமானோடு கூடிக் குலாவி இன்புற்றிருக்க, இப்படிப்பட்ட பாக்கியம் பெறாத நிலமகள் வானமாகிய பரந்தவிடத்திலே மேகமுழக்கத்தால் வாய்விட்டுக் கூவி யழுது மிக்க கண்ணீரை இடைவிடாதுபெருக்க, அந்நீர் அவளது கொங்கைகளாகிய மலைகளின்மேல் ஆற்றுவெள்ளமாகப் பெருகுகின்றபடி பாராய் என்று வருணித்து, தோழி 'இது நீநினைக்கிறகார்காலமன்று' என்று தலைவியைத் தேற்றினாள். முறைப்படி ஒருங்கிராகக் கொண்டாடத்தக்க மனைவியர் இருவருள் ஒருத்தியைப் பெருமான் பாலித்து மற்றொருத்தியைக் கைவிட்ட கொடுந்தன்மை, அவளது இக்கண்ணீரால் உலகில் வெளியாமென்பது, 'திருமால் கொடியானென்றுவாகின்றது' எனப்பட்டது. மால் என்ற சொல் - வேட்கைமயக்கமென்று பொருள்படுதலால், இங்கே, 'திருமால்' என்றது - திருமகளிடங் காதல்பித்துக்கொண்டவ னென்றவாறு, †"பித்தா பனிமலர்மேற்பாவைக்கு" என்பதும் உணர்க. தலைமகன் தன்னை உபேக்ஷித்தா னென்று வருந்துகிற தலைவிக்குத் தோழி இது கூறியதனால், 'பல மகளிர்க்குக் கணவராயினார்க்கு இது இயல்பு காண், ஸ்ரீதேவியைப் பாராட்டிய நிலையில் பூதேவி படும் பாட்டைப் பாராய்' என்று ஓரியற்கையைத் தெரிவித்து ஆற்றுவித்தவாறுமாம். இங்ஙனம் பரக்கப் புனைந்துரைத்துக் கூறுமதனைத் தலைமகள் நம்பக்கடவளோ? எனின், — நம்பாவிடினும் 'இங்ஙனமும் ஒன்று உலகத்தில் உண்டோ?' என்று ஆராய்ச்சி பிறந்து அதிற் கருத்துச் சென்று ஆலோசித்து முடிவுசெய்யுமளவில் தலைமகன் வந்திடுவா னென்று கருதித் தோழி இதுகூறினளென்க.

உயர்ந்தசாதிநீலரத்தினத்தைப் பாலினுள்ளே யிட்டால் அதனொளியால் அப்பால் முழுவதும் தன்னியற்கையானவெண்ணிறமமாறி அம்மணியின்நிறமாகத் தோன்றுதல்போல, இயற்கையில்வெளுத்தநிறத்ததான திருப்பாற்கடல் தன்னிடையிற்சயனித்துள்ள திருமாலின் திருமேனியொளியாற் கரியதாதல்பற்றி, 'கருங்கடல்' எனப்பட்டது, ‡"நீலக்கடல் கடைந்தாய்" என்பதுங் காண்க. இனி, கருமை - பெருமையாய், பெருங்கட லெனினுமாம். போய - போக என எச்சத்திரிபு 'கொண்டு' என்பதைக் கொள்ள என எச்சத்திரிபாக்கி, கடல் திரைக்கைகளாற் கொள்ளத் தான்போய் என்றும் உரைக்கலாம். இனி, கடலினது அலைகளாகிய கைகளைப் பற்றிக்கொண்டு சென்று என்றும் பொருள்கூறுவர். மழைக்கண்மடந்தை - தன் கண்ணழகாலே திருமகள் திருமாலை யீடுபடுத்தியபடி. அலர்வாய், விண்வாய், — வாய் - ஏழனுருபு, அலர்வாய் - (செவ்வாம்பல்) மலர்போன்ற வாயையுடைய என்றும், விண்வாய் - வானமாகிய வாயினால் என்றும் பொருள்கொள்ளலாம். மாதர் - விரும்பப்

* திருவிருத்தம் - க.
† திருநெடுந்தாண்டகம் - கஅ.
‡ திருவாய்மொழி - நூறாந்திருப்பதிகம் - எ.

படும அழகுடையவள், *"மாதா காதல்" என்றபடி இது உரிச்சொல்லாதலால், பன்மையாகாது. † "சோதிமதி வந்துதவழ சோலைமலையோ டிரண்டாய, மேதினியாள் கொங்கைகிகா வேங்கடமே," ‡ "பொதியமும இமயமும புணாமுலையாக," § "கொங்கையே பரங்குன்றமுங கொடுங்குன்றம்", $"அலைநீ ராடை மலைமுலையாக," ¶"காராரவரைக்கொங்கை" எனப பிறவிடங்களினும மலை பூமிப்பிராட்டியின் தன மெனப்படுதல காண்க

ஜீவகோடிகளில ஸ்ரீதேவி பூதேவி தொடக்கமான அருகிலுள்ளார எம்பெருமானை நித்தியானுபவம்பண்ணப்பெற்று வாழ, யான் இங்ஙனம் அவனைச் சேராது வருந்துவதே! என்று ஆற்றாமைவிஞ்சிய ஆழ்வாரக்கு அன்பா ஒருதிருஷ்டாந்தமூலமாக எம்பெருமானுடைய ஸ்வதந்திரமான தன்மையைத் தெரிவித்து ஆற்றுதல், இதற்கு உள்ளுறைபொருள். எம்பெருமானை என்றும்பிரியாத தேவியரென்று சமமாகச்சொல்லப்படுகிற ஸ்ரீதேவிபூதேவியருள் ஒருத்தியைப் பிரித்து ஒருத்தியைத் தழுவும்படியுமுள்ளது, ஒருகாலத்தில் எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியம். இப்படியிருக்க, நீர் அவனது காலவிளம்பத்துக்கு ஆறியிருத்தலே தகுதி என்று தேற்றினரென்க. இப்பாட்டில் பூமிதேவிவிஷயமாகக் குறித்த வண்ணனை, எம்பெருமானது ஸ்வாதந்திரியத்தை எடுத்துக்காட்டுதற்குக் கூறினது.

கண்ணனீர், அ - சாரியை, கண்ண - குறிப்புப்பெயரெச்சமுமாம் அ - ஆறனுருபெனினுமாம

உருவகத்தை அங்கமாகக் கொண்டு வந்த தற்குறிப்பேற்றவணி. (௫௨)

## கட்டுவிச்சிகூறல்

௫௩. வாராயினமுலையாளிவளவானோர்தலைமகனாஞ்
சீராயினதெய்வநன்னோயிதுதெய்வத்தண்ணந்துழாயத்
தாராயினுந்தழையாயினுந்தண்கொம்பதாயினுங்கீழ்
வேராயினுநின்றமண்ணாயினுங்கொண்டுவீசுமினே.

(இ - ள்.) வார ஆயின முலையாள் - கச்சுப்பொருந்திய தனத்தையுடையவளான, இவள் - இம்மங்கையினது, இது - இந்நோய், வானோர் தலைமகன் ஆம் சீர் ஆயின தெய்வம் நல் நோய் - மேலுலகத்தார்க்குத் தலைவனான திருமாலினது தகுதியான திருக்கலியாணகுணங்களின்விஷயமாக உண்டான சிறந்த நல்லநோயாம், (இதற்குப் பரிகாரம்.—) தெய்வம் தண் அம் துழாய் தார் ஆயினும் - தெய்வத்தன்மையுடைய குளிர்ந்த அழகிய (அவனது) திருத்துழாய்மாலையாயினும், தழை ஆயினும் - (அத்திருத்துழாயின்) ஓரிலையாயினும், தண் கொம்பு அது ஆயினும் - குளிர்ச்சியான (அதன்) கிளையாயினும், கீழ் வேர் ஆயினும் - கீழுள்ள (அதன்) வேராயினும், நின்ற மண் ஆயினும் - (அதற்கு இருப்பிடமாய) நின்ற மண்ணேயாயினும், கொண்டு வீசுமின் - (நீங்கள்) கைக்கொண்டு (அதன்காற்றுஇவள்மேற்படும்படி) வீசுங்கள்.

'தலைவியாற்றாமையால்வந்த நோவுக்குப் பரிகாரம் ஏதோவென்று வினவின செவிலிமுதலானார்க்குக் கட்டுவிச்சி நோய்நாடிப் பரிகாரஞ்சொன்ன பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும். தலைமகனைக் களவொழுக்கத்

* தொல்காப்பியம் - சொல்லதிகாரம்-உரிச்சொல்லியல் - ௩௦.
† திருவேங்கடமாலை - ௨.
‡ உதயணன்கதை.
§ திருவிளையாடற்புராணம் - திருநகரப்படலம் - ௨.
$ சிலப்பதிகாரம் - இந்திரவிழவூரெடுத்தகாதை - ௧.
¶ சிறியதிருமடல் - ௧.

தான் புணர்ந்து பிரிந்து ஆற்றாது மெலிந்து வருந்திய தலைமகளைக் கண்ட செவிலித்தாய், இவள் நோய்க்குக் காரணம் இன்னதென்று அறியாமல், மிகத் தங்களண்டைக்கூறவல்ல கட்டுவிச்சியை அழைத்து வினவ, அவள் குறியிலக்கணப் படி சிறுமுறத்திலே சில நெற்குறிகண்டு அதனால் உண்மையையுணர்ந்து கூறுகின்றாள். இப்பாட்டின் முந்தின வாக்கியத்தால் நோய்க் காரணமும் நோயும், பிந்தின வாக்கியத்தால் அதைத் தணிக்கும் உபாயமும், 'வீசுமின்' என்றதனால் அம்மருந்தைப் பிரயோகிக்கும் விதமும் நாடிக்கூறியவாறு. * "காரார் குழற்கொண்டை கட்டுவிச்சி கட்டேறிச், சீரார் சுளகிற் சில நெற் பிடித்தெறியா, வேரா விதிர்விதிரா மெய்சிலிராக் கைமோவாப், பேராயிரமுடையானென்றாள் பெயர்த்தேயும், காரார் திருமேனி காட்டினாள் கையதுவும், சீரார் வலம்புரியே யென்றாள் திருத்துழாய்த், தாரார் நறுமாலை கட்டுரைத்தாள்" என்பர் திருமங்கையாழ்வாரும். இனி, இப்பாட்டு - கீழ் இருபத்தாம் பாட்டுப்போல, வெறிவிலக்குத் துறையாகவுமாம்; 'இம்மோகத்துக்கு நிதானமறியாதே க்ஷுத்ரதேவதாவேசத்தாலே வந்ததாகக் கருதிப் பந்துக்கள் கலங்கி வழியல்லாவழியே பரிகரிக்க ஒழிய, இவளபரக்கருத்தியை யறிந்திருப்பாளொரு முதறிவாட்டி, 'நீங்கள் செய்கிற இது காரியமன்று. இவள் பிழைக்க வேண்டுமாகில் நான் சொல்லுகிறபடியே இங்ஙனே பரிகரிக்கப் பாருங்கோள்' என்கிறாள்' என்ற நம்பிள்ளையீடு அறியத்தக்கது.

'வாராயின முலையாள்' என்பதற்கு - கச்சினால் தாங்கவேண்டும்படி வளர்ந்த தனத்தையுடையவளென்று பொருளுரைத்து, யௌவனமடைந்தவளென்று கருத்து உரைப்பர். அற்பமான தேவதாந்தரங்களின் ஆவேசத்தாற் சீர்குலைந்து அல்லற்படுந் தீயநோயன்று என்பதற்கு, 'வானோர் தலைமகனாஞ் சீராயின தெய்வநன்னோயிது' என்றது. 'தெய்வநன்னோய்' என்றதனால், இப்படிப்பட்ட நோய் இவ்வுலகிற் பெறுதற்கு அரிய தென்றும், இந்நோய் பேரின்ப முடிவுடைய தென்றும் தெரிவித்தவாறு. எம்பெருமானோடு நேரிலாவது இடையிட்டாவது சம்பந்தம்பெற்ற பொருள் யாதாயினும் இந்நோய்க்குப் பரிகாரமா மென்பாள், 'தாராயினும் தழையாயினும் கொம்பாயினும் வேராயினும் மண்ணாயினும்' என்றாள்.

ஆழ்வாரது ஆற்றாமையைக் கண்ட ஞானியர் இதற்குப் பரிகாரம் ஏதோ வென்று கலங்கினவளவிலே, காரணகாரியவுண்மையுணர்ந்த நிபுணர் 'பகவத்விஷயமூலமான இவ்வாற்றாமைக்கு அதன் சம்பந்தமான பரிகாரஞ் செய்தலே தகுதி' என்று கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். ஸ்வாபதேசத்தில் 'முலை' என்பது - எம்பெருமானுக்கே யுரியதும், அவனையனுபவித்தற்குக் கருவியாவதுமான பக்தி யாதலால், இங்கு 'வாராயின முலையாள்' என்றது, பக்குவமாய் முதிர்ந்த பக்தியையுடைய ஆழ்வாரென்றபடி. வானோர் தலைமகன் - நித்திய முக்தர்களுக்குத் தலைவன். சீராயின தெய்வநன்னோய் இது - அவனது சிறந்த குணங்களைப் பாராட்டி அவனைச் சேரப்பெறாமையாலுண்டான ஆற்றாமை இது. † "எந்தைபிரான் தனக்கு, அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கு, அடியாரடியார் தம்மடியாரடியோங்களே" என்றபடி எம்பெருமானது சம்பந்தத்தை நேரிலேனும் பரம்பரையாகவேனும் பெற்ற பாகவத சம்பந்தம் இவ்வாற்றாமைக்குப் பரிகாரமா மென்பது, பின்வாக்கியத்தால் தோன்றும். 'நின்றமண்ணாயினும்' என்றதனால், பாகவதர் எழுந்தருளியிருக்கிற இடத்தின் சம்பந்தமும் கொண்டாடத்தக்க தென்றதாம். (௫௩)

* சிறியதிருமடல் - ௪௦, ௪௩.

† திருவாய்மொழி - இருபத்தேழாந்திருப்பதிகம் - ௧௦.

## வண்டுவிடு தூது.

௫௪. வீசுஞ்சிறகாற்பறத்திர்விண்ணாடுநுங்கட்கெளிது
பேசும்படியன்னபேசியும்போவதுநெய்தொடுவுண்
டேசும்படியன்னசெய்யுமெம்மீசர்விண்ணோர்பிரானார்
மாசின்மலரடிக்கீழெம்மைச்சேர்விக்கும்வண்டுகளே.

(இ-ள்.) நெய் தொடு உண்டு - (திருவாய்ப்பாடியிலே) நெய்யைக் களவினால் கைதொட்டுக்கவர்ந்து அமுதுசெய்து, ஏசும்படி - (பலரும்) பழிக்கும்படி, அன்ன செய்யும் - (மற்றும்பல) அப்படிப்பட்ட காரியங்களைச் செய்தருளிய, எம் ஈசர் - எமது தலைவரும், விண்ணோர் பிரானார் - மேலுலகிலுள்ளார்க்குத் தலைவருமாகிய எம்பெருமானுடைய, மாசு இல் மலர் அடி கீழ் - குற்றமில்லாத செந்தாமரைமலர்போன்ற திருவடிகளின்கீழ், எம்மை சேர்விக்கும் - எம்மை அடைவிக்கவல்ல, வண்டுகளே - ! (நீங்கள்), வீசும் சிறகால் பறத்திர் - விரையவீசுகிற சிறகுகளாலே பறந்துசெல்லவல்லீர், விண் நாடும் நுங்கட்கு எளிது - (அவர் வீற்றிருக்கிற) மேலுலகமும் உங்களுக்கு (ச்செல்ல) எளியது, (எனக்காக நீங்கள் அவர்பக்கல் தூதுசெல்லுதற்குப் புறப்படும்பொழுது), பேசும்படி அன்ன பேசியும் போவது - (எனக்காக நீங்கள் அவரிடத்து) சொல்லும்படியான அவ்வார்த்தைகளை (எனக்கு)ச் சொல்லியும் போகவேணும், (எ-று.)

'வண்டுகளைத் தூதாக நாயகனான ஈசுவரன்விஷயத்திலே போகவிடுகிற நாயகி பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும். பிரிந்த தலைவன் வந்திடுவனென்று ஆறியிருக்கவொண்ணாதே, அவன்வரவுக்கு விரைந்து ஆளவிடும்படியாயிற்று, ஆற்றாமைமிகுதி. 'வீசுஞ் சிறகாற் பறத்திர்' என்று வண்டுகள் விரைந்துசெல்லத்தக்க கருவியையுடைமை கூறியதனால், தான் அப்படிப்பட்ட வலிமையில்லாத மெல்லியலாய் இட்டகாலிட்ட கையளாயிருக்குந் தன்மையையும், 'விண்ணாடு நுங்கட் கெளிது' என்று அவனிருக்குமிடம் வண்டுகளுக்கு எளிதிற்சென்று சேரலாவதென்றதனால், அது தனக்குச் சென்று சேர்தற்கு அரியதாயிருக்குந் தன்மையையும், 'பேசும்படி யன்ன பேசியும் போவது' என்றதனால், நீங்கள் அங்குப்பேசும் பேச்சுக்களை இங்கு என்முன் சொன்னால் அப்பேச்சுக்களில் ஏதேனுங் குறைவு உள்ளதாயின் அதனை யான் தீர்த்திடுதலுமன்றி உங்கள் பேச்சின் சதுரப்பாட்டால் அவர் விரைவில் வந்திடுவ ரென்னுந் துணிவை யடைந்து அதுவரை ஆறியிருப்பே னென்பதையும் வெளியிட்டாள்.

நெய் - பால் தயிர் வெண்ணெய்களுக்கும் உபலக்ஷணம். ஏசும்படி அன்ன செய்தல் - *"வெண்ணெய்விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டதனோசை கேட்கும்," †"இல்லம்புகுந் தென்மகளைக் கூவிக் கையில் வளையைக் கழற்றிக்கொண்டு, கொல்லையினின்றுங் கொணர்ந்துவிற்ற அங் கொருத்திக்கு அவ்வளைகொடுத்து, நல்லனநாவற்பழங்கள் கொண்டு நானல்லேனென்று சிரிக்கின்றானே" என்றாற்போல்வன. 'தேவாதிதேவனான எம்பெருமான் எங்களுக்குக் கிட்டுதற்கு அரியனன்றோ' என்று வண்டுகள் கைநெகிழவிடாமைப்பொருட்டு, 'நெய்தொடுவுண் டேசும்படி யன்ன செய்யும்' என்று அவனது சௌலப்யத்தை முற்பட எடுத்துக்காட்டினாள். 'எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே' என்றதனால், எம்மைச்சேர்விக்கும் ஆற்றலுடையீர் நீரே யெனப் புகழ்ந்துரைத்தபடி.

* பெரியாழ்வார்திருமொழி - பத்தொன்பதாந்திருப்பதிகம் - ௧.
† " " ௧௦.

ஆழ்வார் தமது ஆற்றாமையை ஆசாரியமூலமாக எம்பெருமானுக்குத் தெரிவித்துத் தமது துயரந் தணியக் கருதி அவர்களைத் தமக்குப் புருஷகார மாகும்படி வேண்டுதல், இதற்கு உள்ளுறைபொருள் நீர்மையையும் மேன் மையையுமுடைய எம்பெருமானது திருவடித்தாமரைமலர்களின்கீழ் எமமை அடிமையாகச்சேர்விக்கவல்ல சொல்திறமுடையவர்களே'என்று விளித்தபடி. பலவகைமலர்களிலுஞ் சென்று அவற்றின்சாரமான தேனை அம்மலர்கள்கெ டாதபடி கவர்ந்து உண்ணுந்தன்மையனவான வண்டுகளை, பலவகைநூல்க ளிலும் பிரவேசித்து அவற்றின்சாரமான தத்துவப்பொருளை அந்நூல்கள் நலிவுபடாதபடி கிரகித்து அனுபவிக்குந் தன்மையரான ஆசாரியராகச் சொல்லத் தட்டில்லை. வீசும் சிறகால் பறத்திர்-நீங்கள் ஞானம் அநுட்டான மென்னும் இரண்டு பக்ஷங்களின் வலிமையால் யாவரினும் உயர்ந்துசெல்ல வல்லீர். விண் நாடும் நுங்கட்கு எளிது -அப்பரமபதமும் உங்களுக்குக் கைவசமாகவுள்ளது பேசும்படி அன்ன பேசியும் போவது-அப்படிப்பட்ட நீங்கள் எனக்காக அப்பெருமானிடஞ்சென்று விண்ணப்பஞ்செய்யும் வார்த் தைகளை இப்பொழுது எனக்குச் சொல்லிப்போகவேணும், என்றது, அவற் றைக் கேட்டு யான் ஆறியிருப்பேன் என்றவாறு இவ்வாழ்வார் * "மத் துறுகடைவெண்ணெய் களவினி லுரவிடையாப்புண்டு, எத்திறமுரலினோ டிணைந்திருந்தேங்கியஎளிவே!" என்று கண்ணனது களவில் ஈடுபட்டு ஆறு மாசகாலம் மோகித்துக்கிடக்குந்தன்மைய ராதலால், இங்கும் 'நெய்தொடு வுண் டேசும்படி யன்ன செய்யு மெம்மீசா'என்று அவ்வெளிமையையே பாரா ட்டிக்கூறினார். எம்பெருமானடிக்கு மாசின்மை-அடியார்குற்றம்பாராமை.

பறத்திர் - எதிர்காலமுன்னிலைப்பன்மை, தன்மையுணர்த்திற்று. போவது - ஒருவகை வியங்கோள். (௫௪)

நலம்பாராட்டு.

௫௫. வண்டுகளோவம்மினீர்ப்பூநிலப்பூமரத்திலொண்பூ
வுண்டுகளித்துழல்வீர்க்கொன்றுரைக்கியமேனமொன்றாய்
மண்டுகளாடிவைகுந்தமன்னாளகுழல்வாயவிரைபோல
விண்டுகள்வாருமலருளவோநும்வியலிடத்தே.

(இ - ள்.) வண்டுகளோ - வண்டுகளே! வம்மின் - வாருங்கள், நீர் பூ - நீரிலுண்டாகிற பூவும், நிலம் பூ - நிலத்திலுண்டாகிற பூவும், மரத்தில் ஒண் பூ - மரத்தி லுண்டாகிற சிறந்த பூவும் என்னும் இவையெல்லாவற்றி லும், உண்டு-(தேனை) குடித்து, களித்து - களிப்படைந்து, உழல்வீர்க்கு - (எங்கும்)திரிகிற உங்களுக்கு, ஒன்று உரைக்கியம் - (யாம் இப்பொழுது) ஒரு புதுமையைச் சொல்லுவோம், ஏனம் ஒன்று ஆய - ஒப்பற்றதொரு வராக வடிவமாய், மண் துகள் ஆடி - பூமியின்துகளியை அளைந்த எம்பெருமானது, வைகுந்தம்-பரமபதத்தை, அன்னாள் - ஒத்த இவளது, குழல் வாய - கூந்த லிலே இயற்கையாயமைந்துள்ள, விரை போல - பரிமளம்போல, விண்டு- மலர்ந்து மணம்வீசி, கள் வாரும் - தேன்பெருகப்பெற்ற, மலர் - பூக்கள், நும் வியல் இடத்து-உங்களாட்சிக்குஉட்பட்ட [நீங்கள் தடையின்றிச் சஞ்ச ரிக்கிற] பரந்தஇடத்திலே, உளவோ - உள்ளனவோ? (எ - று.)

இத்துறை,திருக்கோவையாரில்'நலம்புனைந்துரைத்தல்'என்ற பெயரா லும், தஞ்சைவாணன்கோவையில் 'புகழ்தல்,' 'பெருநயப்புரைத்தல்' என்ற பெயர்களாலும்,தணிகைப்புராணத்தில்'நயப்புரைத்தயிரப்பொழிதல்'என்ற பெயராலும், இறையனாரகப்பொருளுரையில் 'நயப்புணர்த்தல்'என்ற பெய

* திருவாய்மொழி - மூன்றாந்திருப்பதிகம் - க.

ராலும் கூறப்பட்டுள்ளது 'இயற்கையன்பினாலும் அவள்குணங்களால் தோன்றிய செயற்கையன்பினாலும் கட்டுப்பட்டுநின்ற தலைமகன் தனது அன்புமிகுதியை உணர்த்துதல்,நயப்புணர்த்துத லென்பது'என்ற திருக்கோவையாருரை அறியத்தக்கது. இயற்கைப்புணர்ச்சிபுணர்ந்த தலைமகன் தலைமகள்கேட்ப வண்டுகளை நோக்கி 'நீங்கள் எவ்விடத்தும் சென்று நீர்ப்பூ நிலப்பூ கோட்டுப்பூ என்று இப்படி வெவ்வேறுவகைப்பட்ட பூக்களைக் கண்டறிவீர்களன்றோ? அவற்றில் எவையேனும் இவளதுகூந்தலின் இயற்கைநறுமணத்தை யொத்த மணமுடையவை உண்டோ? சொல்லுங்கள்' என்று தனது அன்பை வெளிப்படுத்தித் தலைமகளைப்புகழ்ந்து தனதுமிக்ககாதலை அறிவித்தானென்க. *"வார்குழல்போற் கமழும்,பூவுண்டோ தாமுளவோ நுங்கள் கானற்பொழிலிடத்தே",*"மருங்குழலுங் களிவண்டினங்காள் உரையீர் மடந்தை, கருங்குழல் நாறு மெனபோ துடைத்தோ நுங் கடிபொழிலே",*"உளவேலுரையாய,வண்டே மடந்தைகுழல்போற் கமழு மதுமலரே",*"மருங்குழல்வாய் நீயறிதி வண்டே சொல்லெனக்கு மங்கை, கருங்குழல்போலுளவோ விரைநாறு கடிமலரே",*"மாற்றமுரை நீ யெனக்கு வண்டே மங்கைவார்குழல்போல,நாற்றமுடைய வுளவோ அறியு நறுமலரே",†"கொங்குதோவாழ்க்கை யஞ்சிறைத்தும்பி, அரிவைகூந்தலின், நறியவுமுளவோ நீயறியும் பூவே"என இத்திறத்தன பல காண்க

'வண்டுகளோ வம்மின்'என்றதற்கு-'பூவின் வாசியும் மணத்தின்வாசியும் தேனின்வாசியும் அறியும் நீங்கள், புறம்புண்டான உங்களுடைய ரசத்தில் பராக்கைவிட்டு, நான்சொல்லுகிற வார்த்தை கேட்கும்படி வாருங்கோள்'என்றும்,'நீர்ப்பூநிலப்பூமரத்திலொண்பூவுண்டு'என்பதற்கு - 'எளிதாக ஒருவர்க்குங் கிட்டவொண்ணாத நீர்ப்பூக்களிலும் எல்லார்க்குங்கிட்டலாம்படியான நிலத்திற்பூக்களிலும் உயர்ந்தசாகைகளிலே பிறக்கிற மரத்திற்பூக்களிலும் உண்டான வாசி யறிந்து'என்றும்,'குழல்வாய்விரை'என்பதற்கு - 'புஷ்பாதியாலே வந்தேறியான பரிமளமன்றியே ஸ்வாபாவிகமான குழலின் பரிமளம்' என்றும் பரக்கவுரைகூறுவர் அழகியமணவாளசீயர் கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ நிலப்பூ என்ற நால்வகையில், கொடிப்பூ நிலப்பூவில் அடக்கப்பட்டது, புதற்பூ என்பதும் இதில் அடங்கும் 'ஏனமொன்றாய் மண்டுகளாடி' என்றது, மகாவராகவடிவங்கொண்டு பூமியைக் கோட்டாற்குத்தியெடுத்துவந்ததை இதில், அந்தப் பெரிய பன்றிவடிவத்துக்குப் பெரியபூமி முழுவதும் ஒருதுகளாயினமை தோன்றும்,‡"பன்றியாய்ப் படியெடுத்த பாழியாமெனபரது,வென்றியார் குன்றெயிற்றின் மென்றுகள்போன் றிருந்ததால்' எனக் காண்க. 'வைகுந்த மன்னாள்' என்றது, இங்கே, அழியாத நலமுடையவளென்றபடி உத்தமசாதிமகளிரின்கூந்தலுக்கு மலர்முதலியவற்றின் சேர்க்கையா லாகுஞ் செயற்கைநறுமண மன்றி இயற்கைநறுமணமுண் டென்பது சித்தாந்தம்

• எல்லையில்லாதபடி ஆழ்வார்க்கு எம்பெருமான்திறத்தில் உண்டான பக்தியின் தலைமையைக் கண்ட பாகவதர் கொண்டாடிக்கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள்.வண்டுகளோவம்மின்என விளித்து முன்னிலைப்படுத்தினது,பரமபொருளை நாடித்திரிபவரான சாரத்தைக்கிரகிக்குந்தன்மையரை. நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ உண்டு களித்து உழல்வீர்க்கு ஒன்றுஉரைக்கியம் - கடலிற்பள்ளிகொண்டுள்ள வியூகமூர்த்தியின் விளக்கத்தையும்,பூமியில் திருவவதரித்த ராமகிருஷ்ணாதி விபவாவதாரங்களின் விளக்கத்தையும்,

* இறையனாரகப்பொருளுரை,இரண்டாஞ்சூத்திரத்தின்கீழ்க்கண்டது.
† இறையனார் திருமுகப்பாசுரம்.
‡ திருவரங்கக்கலம்பகம் - க.

வேதசாகைகளின்முடியிலே காணகிற தேஜோரூபியான பரமபதநாதனது விளக்கத்தையும் இடையறாது அநுபவித்து ஆநந்தித்து எவ்வுலகிலுந் தடையின்றித்திரிகிற உங்களுக்கு ஒன்றுசொல்லுகிறோம். பிரளயகாலத்தில் பூமியின்ஆபத்தைத் தீர்த்த எம்பெருமானது அழிவற்றவைகுந்தநாடுபோலப் பேராநந்தந்தருபவரான இவ்வாழ்வாரது சிரோபூஷணமாகவுள்ள பக்திமிகுதியின் புகழ்போல நீங்கள் எங்கேனுங் கண்டதுண்டோ வென்று கொண்டாடியுரைத்தன ரென்க.

வண்டுகளோ, ஓகாரம்மிக்கது - விளியுருபு, ஓவண்டுகள் எனமாறினுமாம். வம்மின் - வா என்பதன் ஏவற்பன்மை ஆடி - பெயர். வாய் - ஏழனுருபு; அல்லது, வினைத்தொகை. விண்டு - தன்வினை பிறவினை யிரண்டுக்கும் பொது; 'பிளந்து' என்பதுபோல. வியல் - பரப்பு உணர்த்தும் உரிச்சொல்; * "வியலென்கிளவி யகலப்பொருட்டே" உரைக்கியம்—உரை - பகுதி, க் - சந்தி, க் - எதிர்கால இடைநிலை, இ - சாரியை, ய் - சந்தி, அம் - விகுதி; ககரவொற்று எதிர்காலங்காட்டுதலை †"உரைக்கேன்" என்பதிலுங் காண்க. (௫௫)

## தலைவன்இரவிடைக்கலந்தமை தலைவி தோழிக்குக் கூறல்.

௫௬. வியலிடமுண்டபிரானாவிடுத்ததிருவருளா
லுயலிடம்பெற்றுய்ந்தமஞ்சலந்தோழியோர்தண்டென்றல்
தயலிடையாருமறிந்திலரம்பூந்துழாயினின்றேன் [வந்
புயலுடைநீர்மையினாற்றடவிற்றென்புலன்கலனே.

(இ - ள்.) வியல் - விசாலமான, இடம் - உலகங்களை, உண்ட - திருவயிற்றிற்கொண்டருளிய, பிரான் - பிரபுவாகிய எம்பெருமான், விடுத்த - (எம்மிடத்துச்) செலுத்திய, திரு அருளால் - சிறந்த கருணையினால், உயல் இடம் பெற்று - உய்தற்குஇடம்பெற்று, உய்ந்தம் - வாழ்ந்திட்டோம்; அஞ்சலம் - (இனி வாடைமுதலியவற்றுக்கு) அஞ்சுவோமல்லோம், தோழீ—! ஓர் தண் தென்றல் வந்து - ஒருகுளிர்ந்ததென்றற்காற்றுவந்து, அயலிடை யாரும் அறிந்திலர் - அருகிலெவருமறியாதபடி, அம் பூ துழாயின் இன் தேன் - அழகிய பூக்களையுடைய திருத்துழாயின் இனியதேன்றுளிகளை, புயலுடை நீர்மையினால் - மழையினதுதன்மையினால் [மழைதுளித்தல்போலத் துளிக்குந் தன்மையுடையதாய்], என் புலன் கலன் - எனது உறுப்புகளிலும் ஆபரணங்களிலும், தடவிற்று - பரிசித்தது, (எ - று.)

'தன் ஆற்றாமைக்குக் கலங்கியுரைத்த தோழியைக்குறித்துத் தலைவி இரவிடத்துத் தலைமகன் கலந்தமையைத் தென்றல்மேல்வைத்துஉரைத்த பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும். எனதுபிரிவாற்றாமைக்குத் தளருந் தோழியே! தலைமகனது அருளால் யாம் உய்தற்கு ஓரவகாசம்பெற்று உய்ந்திட்டோம், இனி, வாடைமுதலியவற்றிற்கு அஞ்சவேண்டுவதில்லை; என்னெனில்,—ஒருகுளிர்ந்ததென்றற்காற்று அயலறியாமல் ஏகாந்தமாகத் தலைமகனது திருத்துழாயின்தேனைத் துளித்துக்கொண்டு எனது அவயவங்களிலும் ஆபரணங்களிலும் பட்டு ஆற்றாமைதீர்த்தது என்க. தலைமகன் அன்போடு வந்துகலந்ததை வெளிப்படையாகக்கூறுதற்கு நாணித் தென்றல்மேல்வைத்துக் குறிப்பாகக்கூறினாள், பிரிந்தகாலத்தில் வெவ்விதாய்வருத்திய தென்றல் குளிர்ந்ததாம்படி தலைமகன்வந்து தன் திருத்துழாய்மாலையின் தேன் என் உறுப்புக்களிலும் ஆபரணங்களிலும் படும்படி தழுவியணைத்தனன் என்பது போதரும்.

---

* தொல்காப்பியம்-சொல்லதிகாரம் - உரிச்சொல்லியல் - ௬௬

† பெரியாழ்வார்திருமொழி - இருபத்தேழாந்திருப்பதிகம் - ௪ — "தோழிமார்பலர் கொண்டுபோய்ச் செய்த சூழ்ச்சியை யார்க்குரைக்கேன்."

துயர்க்கடலில் அழுந்துகிற எம்மை இங்ஙனம் அவர் காத்தது பிரளயக்கடலில் அழுந்துகிற உலகங்களைத் தம் வயிற்றில் வைத்துக் குடிகொண்டு காத்தருளியது போலும் என்ற கருத்தால், 'வியலிடமுண்ட பிரானார் விடுத்த திருவருளால்' என்றாள். திருவருள் - அவர்க்குச் செல்வமாகிய கருணையென்றுமாம். உய்ந்தம் = உய்ந்தனம், அன்சாரியை பெற்று வந்த தன்மைப்பன்மையிறந்தகாலமுற்று. அஞ்சலம் - தன்மைப்பன்மையெதிர்மறைமுற்று. அஞ்சல் அம் தோழி எனப்பிரித்து, அழகிய தோழியே! எனது ஆற்றாமைக்காகக் கலங்காதே யென்றும் உரைக்கலாம் இதற்கு, அஞ்சல் - எதிர்மறையொருமையேவல். உலகத்திற் சாதாரணமாகக் காணப்படுகிற தென்றல் போலவதன்றி ஒப்பற்றதாய்த் தன்வருகைமாத்திரத்தால் எமது ஆற்றாமையெல்லாந்தீரும்படி மிக்க குளிர்ச்சியையுடையதாய்ப் புதுமையாக ஒன்று வந்ததென்பாள், 'ஓர் தண் தென்றல் வந்து' என்றாள். தென்றலுக்கு வருந்துகிற தான் தென்றல் வரவை உகந்துரைத்தமையால், தலைமகன் வரவு சொன்னதென்று அறிந்து, தோழி, இக்களவொழுக்கத்தை அயலார் அறிந்தாற் செய்வதென்னென்று ஊரவர் பழிக்கு அஞ்சாமைப்பொருட்டு, 'அயலிடையாருமறிந்திலர்' என்றாள் 'புயலுடை நீர்மையினால்' என்றதனால், தலைமகனது கருணையைப் பாராட்டியமை தோன்றும். கலன் - அணிகலம். 'பொலன் கலன்' என்ற பாடத்துக்கு - பொன்னாலாகிய அணிகலமென்க, பொலன் - பொன் என்பதன் திரிபான பொலம் என்பதன் இறுதிப்போலி. 'தடவிற்று என்புலன் கலனே - இந்திரியங்கள் விடாய் தீரவும், ஆபரணங்கள் கழலாதபடியுந் தடவிற்றுப்போலே காணும்' என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் அறியத்தக்கது.

ஆழ்வார் எம்பெருமானைச் சேர்ந்து அநுபவிக்கப்பெறாமல் வருந்துமளவில், அவ்வருத்தந்தீரப் பெருமான் ஒருகால் அருகில் வந்து தரிசநந்தந்து இவரைத் தான் சேர்த்துக்கொள்ளுந்தன்மையை வெளியிட, அதனால் ஆழ்வார் துன்பந்தணிந்து, முன்புள்ள ஆற்றாமையைக் கண்டு கலங்கின அன்பரை நோக்கிக் கூறும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். ஆபத்துக்குதவுபவனான எம்பெருமானது ஒப்புயர்வற்ற வரம்பில் கருணையால் யாம் ஓர் அவகாசங் கிடைத்து வாழ்வுபெற்றேம், இனி, லௌகிகபதார்த்தத்துக்கு அஞ்ச வேண்டுவதில்லை. உயிர்க்குயிராகிய ஒப்புயர்வற்ற அப்பெருமான் பிறரொருவர்க்கும் புலனாகாமல் வந்து தனது இனிமையை வெளிக்காட்டி எமது துயரமெல்லாந்தீரும்படி எமது உறுப்புக்களையும் ஞானமுதலிய குணங்களாகிய அலங்காரங்களையும் விரும்பியாட்கொண்டான் என்று அருளிச்செய்து அன்பரை ஆற்றியவாறு. விடுத்த - வரவிட்ட, 'விடுத்த திருவருளால்' என்றதனால், பரமாத்மாவின் கருணைக்குச் சீவாத்மாவின் முயற்சியெதுவும் காரணமாகாதென்பது பெறப்படுமென்பர்.

தோழி - அண்மைவிளி. அறிந்திலர் - எதிர்மறைமுற்றெச்சம். தெற்கிலிருந்து வருவது, தென்றல், தெற்கு-பகுதி, ஈறுகெட்டு றகரம் னகரமாயிற்று. து - சாரியை, அல் - பெயர் விகுதி. (௫௬)

## தலைவன் பாங்கனுக்குக் கழற்றெதிர்மறுத்தல்.

புலக்குண்டலப்புண்டரீகத்தபோர்க்கெண்டை வல்லியொன்றா
லிலக்குண்டுலாகின்றுவேல்விழிக்கின்றனகண்ணனகையான்
மலக்குண்டமுதஞ்சுரந்தமறிகடல்போன்றவற்றாற்
கலக்குண்டநான்றுகண்டாரெம்மையாருங்கழறலரே. [ருலருள.

(இ - ள்.) புலம் குண்டலம் - அழகிய குண்டலங்களையுடைய, புண்டரீகத்த - தாமரைமலர்போன்ற தலைவியின் முகத்திலுள்ள, போர் கெண்டை -

(தமமில ஒன்றோடொன்று எதிரததுப) போரசெயகிற இரணடுகெணடை மீன்கள போன்ற கணகள, வலவி ஒன்றால விலக்குணடு - (மூககாகிய) ஒரு கொடியால (குறுககிட்டு இடையில) விலக்கபபட்டு, உலாகினறு - (தனித தனி சிறறததோடு) உலாவிககொணடு, வேல விழிக்கின்றன - வேலாயுதத தைககொணடு குததினாறபோல வருததுவனவாய நோககுகின்றன, கண ணன் கையால மலககுணடு - திருமாலினது திருககைகளாற கடைநது கல ககபபட்டு, அமுதம சுரநத - (தன்னிடததிலுள்ள) அமிருததததை வெளிபபடு ததின, மறி கடல போனறு - அலைகிளரபபெறற கடலபோல, அவறறால கல க்குணட நானறு - அக்கணகளால (யாம) கலககபபட்டபொழுது, கண டார - (அககணகளின் நிலைமையைப பிரதியக்ஷமாகப) பாரததவா, யாரும - எவரும, எமமை—, கழறலா - (ஒருததிகணபாரவையிலே அகபபட்டு இப படிகலஙகினானென்று) குறறஞசொலலமாட்டாரகள, (எ-று)

குணடலபபுணடரிகம - வட்டவடிவான முகமணடல மெனினுமாம

'தலைவிகணணழகிலேஈடுபட்ட தலைமகனைககுறிததுக கழறின பாஙக னுக்குத தலைமகன கழறறெதிரமறையான பாசுரம' என்பா அழகியமண வாளசீயரும அதாவது - தெயவபபுணாசசிபுணாநத தலைமகன், பின்பு தன்னையடுததுத தனமெலிவைககணடு 'நீ இவவாறுஆதறகுக காரணம என் னே?' என்றுவினவிய பாஙகனுக்கு, 'யான்ஒருததிவலையிலேயகபபட்டேன்'எ ன்று உறறதுகூற, அதுகேட்ட பாஙகன'நீ ஒருமகளகாரணமாக இவவாறாயி னெனறல உனதுபெருமைககுத தகாது'என்று இடிததுககூற, அதறகுத தலைமகன'என்னைறகாணபபட்ட வடிவை நீ கணடிலை, கணடவரெவரும இவ் வாறு வன்சொறகூறார' என்று அவனோடு மறுததுரைததல ''ஆஙகுயிரன்ன பாஙகன் கழற, வளநதருவெறப னுளநதளாநதுரைததது''என்ற கொளுவை யும, *''காணிற கழறலை கணடிலை மெனதோட கருமபினையே''என்ற திருக கோவையாரையுங காணக, †''மேலானவருங கணடாலுரையாரிநத வீரங களே'', ‡''கணடாயலை கழறு மிறறியா லெனகருததனவே'', § ''வணடாகு ழலமடமஙகைமதாவைமென்னோககமெனபோற, கணடாருளரேலுரையார பிறவின்னகட்டுரையே'', §''கணகணடபின்னையுரையீருரைததவிககட்டுரை யே'' எனபனவுங காணததககன

புலபபடுதல - காணபபடுதல ஆகவே, புலககுணடலம - விருமபிககா ணபபடுமபடி அழகிதான குணடலம, புலபபடுதல - விளஙகுதலுமாம. 'பொலககுணடலம' என்ற பாடததுககு - பொனனாலாகிய குணடல மெ ன்கக குணடலமெனபதைக கெணடைககு அடைமொழியாககி, காதணியள வும அளாவிசசெலலுகிற நீணடகணக ளெனினுமாம, $''குமிழுமிசைமறி நது குழையெதிரநடநது''என்றாறபோல முகததிறகுத தாமரை யுவமை, செவ்வியும அழகும மணமு முடைமையால மூக்குக்குக கொடி உவமை கூறபபடுதலை, ||''மாடடியா கறபகததின் வலலியோ கொழுநதோ அறியேன, ஈட்டியவெணணெயுணடான திருமூககு'' எனவுங காணக, பிறரும ¶''கொடி

* திருககோவையார - உ௩.
† தஞசைவாணனகோவை - ச௩
‡ தணிகைபபுராணம - களவுபபடலம - க௱௫.
§ இறையனாரகபபொருளுரை - ௩ - ஆம சூததிரததின்கீழ்க் கணடது.
$ நைடதம - அன்னததைததூதுவிட்டபடலம - க௩.
|| திருவாயமொழி - அறுபததேழாந திருபபதிகம - உ.
¶ சிறியதிருமடல - எக; சீவகசிநதாமணி - நாமகளிலமபகம - க௩௬, நைடதம - அன்னததைததூதுவிட்டபடலம - கசு.

மூக்கு'' என்பர். உலாகின்று என்பதற்கு - 'இரண்டு மத்த கஜம் தன்னிலே பொர உத்யோகித்து நடுவிலே கணையமிட்டவாறே தாமதித்தபடி பொரப் பெறுதொழிந்து பெருஞ்சீற்றத்தோடே சஞ்சரிக்குமாபோலே நின்று' என்று பரக்க உரைப்பர் அப்பிள்ளை. வேல்விழித்தல் - தன்னை வருத்துமபடி கூரிய பார்வையையுடைமை அக்கொடுமைமாறுதன் என்பான், 'விழிக்கின்றன' என நிகழ்காலத்தாற் கூறினான். எம்பெருமான் ஆழ்கடலைக் கலக்கிச் சாரமான அமிருதத்தை யெடுத்துக்கொண்டாற்போல, இக்கண்கள் ஆழ்ந்த என்னெஞ்சைக் கலக்கிச் சாரமான அறிவைக் கவர்ந்துகொண்டன என்க. ஈற்றடியால், அனுபவித்தார்க்கல்லது அறியவொண்ணாமை தோன்றும். மிக்க வைராக்கியத்தோடு தேர்ந்தஞானமுடையோரு மென்பான், 'யாரும்' என்றான். போன்றவற்றால் என்பதை ஒருசொல்லாக எடுத்து, திருமாலாற் கடையப்பட்டு அமிருதத்தைச்சுரந்த அலையெறிகடல்போல அளவிடப்படாதனவும் இனியனவும் மகிழ்செய்வனவும் பார்வைவீசுவனவுமான கண்களால் என்றும் உரைக்கலாம். தன் அழகைக் கண்டு கலங்கி மருண்டுநோக்கிய கண்ணுக்கு, கண்ணனைக்கையாற் கலக்குண்டகடல் உவமை யென்றுங் கூறுவர். 'கண்டார் கழறலர்' என்றதனால், அவரும் என்போலாவர் என்றவாறும்.

ஆழ்வாரது ஞானக்கலக்கத்தை யறிந்து ஈடுபட்ட பாகவதர், தங்கள் ஈடுபாட்டைக்கண்டு அதனைக் குறைந்திடவேண்டுமென்று நியமித்துக்கூறுகிற தம்சுற்றத்தாரை நோக்கி மறுத்துச்சொல்லும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள் முத்திக்குக்காரணமான முதற் பொருளை யுணர்தற்கு உபாயம் மூன்று, அவை- கேள்வி, சிந்தனை, காட்சி என்பன. அவற்றுள், கேள்வியாவது - உபதேசமொழிகளை அனுபவமுடைய ஆசிரியர்பாற் கேட்டல். சிந்தனையாவது - அவ்வுபதேசமொழிப்பொருளைப் பிரமாணங்களாலும் யுக்தியாலும் உள்ளத்தில் தெளிய ஆராய்தல். காட்சியாவது - இவ்வாற்றால் முதற் பொருளை ஐயந்திரிபறத் தெளிதல். ஸ்வாபதேசத்தில், ஆழ்வாருக்குண்டாகிய ஞானம் முறையே இம்மூன்றுஉபாயங்களோடும் அமைந்திருத்தல், இப்பாட்டின்முதல்வாக்கியத்தால் விளங்கும். 'புலக்குண்டலம்' என்று முந்திச் செவியணியைக் கூறியதனால், அவ்வுபாயங்களுள் முந்தியதான செவிக்கனியாகிய கேள்வியைக் குறித்தவாறு. அதன்பின் 'புண்டரீகம்' என்றதனால், இதயகமலத்தைச்சுட்டி, கேள்வியின்பின் உள்ளம்நிகழ்த்துதலாகிய சிந்தனையைக் குறித்தபடி. 'போர்க்கெண்டை' என்றது- அங்ஙனஞ்சிந்தனைசெய்யும்பொழுது பூர்வபக்ஷசித்தாந்தயுக்திகளால் ஒன்றுக்கொன்று விரோதத்தை யுண்டாக்கிப் பண்ணும் ஆராய்ச்சியையும், 'வல்லியொன்றால் விலக்குண்டுலாகின்று' என்றது- மத்தியஸ்தமானசித்தாந்தயுக்தியால் அவ்விரோதம் தணிந்ததையுங் காட்டும். 'வேல்விழிக்கின்றன' என்றது, இங்ஙனங் கேள்விசிந்தனைகளாற் சலனமொழிந்து ஒருநிலைநின்ற ஞானம் நுண்மையும் நெடுமையு முடையதாய் எம்பெருமானைத் தரிசித்தமை தோன்றும். கண்ணன்கையாற் கலக்கப்பட்டு அமுதுசுரந்த அலைகடல்போலச் சபலசித்தரானயாம் இப்படிப்பட்ட ஆழ்வாரது ஞானவிசேஷத்தாற் பரவசப்பட்டு இனியபக்தியைச் சுரந்து நிலைமாறியபொழுது அவ்வாழ்வார்ஞானநிலையையறிந்தவரெவரும் எம்மை இங்ஙனங்கூறார் என்பது, பிந்தினவாக்கியத்தின் உட்கருத்து. போன்றவற்றால் என்று ஒருசொல்லாக எடுக்கும்பொழுது, கண்ணன்கையாற் கலக்கப்பட்டு அமுதுசுரந்தஅலைகடல்போல எம்பெருமான்வசப்பட்டுத் தன்வசமிழந்து பக்தியைச்சொரிகிற அதிவிசாலமான அவரதுஞானவிசேஷத்தால் என்று உள்ளுறை காண்க. 'கண்டா ரெம்மை யாருங் கழறலர்' என்கையாலே, புறம்புள்ளாரும் புகுந்தால் தாங்களுமீடுபடும்படியான பிறரைநியமிக்கைக்குச் சக்தரல்லரென்னுமிடமுஞ் சொல்லியதாயிற்று *"மேவினே னவன்பொன்னடி

* கண்ணிநுண்சிறுத்தாம்பு - உ

மெய்ம்மையே, தேவுமற்றறியேன் குருகூர்நம்பி, பாவினின்னிசை பாடித்திரிவனே" என்ற மதுரகவியாழ்வார்போல், நம்மாழ்வார்விஷயத்தில் ஈடுபட்டவர் எம்பெருமானையும் விரும்புதலரிதென்பதாம்.

புண்டரீகம், கெண்டை, வல்லி - உவமையாகுபெயர்கள். வேல்விழிக்கின்றன - உவமத்தொகை. மலக்குண்டு, கலக்குண்டு - பிறவினைச் செயப்பாட்டு வினையெச்சம். (௫௭)

## தோழி தலைவன்பெருமையையுரைத்துத் தலைவியை யாற்றல்.

௫௮. கழற்றலமொன்றேநிலமுழுதாயிற்றொருகழல்போய்
நிழற்றரவெல்லாவிசும்புநிறைந்ததுநீண்டவண்டத்
துழற்றலாஞானச்சுடர்விளக்காயுயர்ந்தோரையில்லா
அழற்றலர்தாமரைக்கண்ணனென்னோவிங்களக்கின்றதே.

(இ-ள்.) கழல் தலம் ஒன்றே - ஒரு திருவடியிடமே, நிலம் முழுது ஆயிற்று - பூமிமுழுவதும் தானாய்ப்பரந்தது. ஒரு கழல் - மற்றொரு திருவடி, போய் - (பூமியிலிடமில்லாமையால் மேலே) சென்று, நிழல் தர - நிழலைச் செய்யும்படி, விசும்பு எல்லாம் நிறைந்தது - மேலுலகமுழுவதும் நிறைந்தது; நீண்ட அண்டத்து - அளவிடவொண்ணாத பரமபதத்தில் எழுந்தருளியிருப்பவனும், உழறு அலர் ஞானம் சுடர் விளக்கு ஆய - எங்குஞ்செல்லவல்ல பரந்த ஞானமாகிய ஒளிக்கு இடமான விளக்குப்போன்றவனும், உயர்ந்தோரை இல்லா - (தன்னினும்) மேம்பட்டவரை உடையவனல்லாதவனும், அழறு அலர் தாமரை கண்ணன் - சேற்றில்மலர்ந்த செவ்விமாறாத செந்தாமரைமலர்போன்ற திருக்கண்களையுடையவனுமான திருமால், இங்கு அளக்கின்றது என்னோ - இந்தலீலாவிபூதியில் அளக்கவேண்டுவது உண்டோ? (எ-று.)

அளத்தலென்பது - ஒருவன் நின்றவிடமொழிய மற்றோரிடத்தில் மாறிக் காலிடுதலாதலால், நிலமும் விசும்பும் இரண்டுதிருவடிகளுக்கும் இடமாகப் பெற்றவன் இவற்றையளந்திட்டானென்பது எவ்வாறோ? என்பதாம். 'அளக்கைக்கு ஒருஅவகாசங் காணகிறிலோம், நின்றநிலையிலே நின்றுரை அளந்தானென வொண்ணாதிறே, அடிமாறியிடிலிறே, அளந்ததாவது? இவன் இங்கு அளந்தானாக ஒன்றுங் காணகிறிலோம்' என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் அறியத்தக்கது.

'தன்னை வரைந்துகொள்ளாமையாலே தளர்ந்த தலைவியைக்குறித்து 'உன்னுடையநாயகனான ஈசுவரனுக்குச் செய்யப்படாததொன்றுஉண்டோ?' என்று தோழி தலைவன்தலைமையை உரைத்த பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும். எல்லாம்வல்லவனான இறைவன் உன்னைவரைந்துகொள்ளுதலுஞ்செய்வனென்று ஆறியிருத்தலேயொழிய அதுவல்லனல்லனென்று கருதிக் கலங்குவது தகுதியன்றென்று ஆற்றினாள்.

'நிழல்தர' என்பதற்கு - 'சேஷித்வமாகிற நிழலைக் கொடுக்கைக்காக' என்று பதவுரையும், 'ஈசுவரரான ப்ரஹ்மருத்ரர்களும் ஒருவன் திருவடியை விளக்க ஒருவன் தீர்த்தத்தைச்சுமக்கும்படியான நிழலையிறே அவர்களுக்குக் கொடுத்தது' என்று விசேடவுரையுங் கூறுவர் அழகியமணவாளசீயர். அண்டத்துக்கண்ணன், உயர்ந்தோரையில்லாக்கண்ணன், தாமரைக்கண்ணன் என இயையும். அண்டத்து உழறு என இயைத்தும் உரைப்பர். 'விளக்காய்' என்றதனால், எம்பெருமானது திருமேனி சுயம்பிரகாசமானதென்பது தோன்றும். 'உயர்ந்தோரையில்லா' என்றதனால், அவனை ஒப்பவரில்லாமையும் யாவரும் அவனினுங்கீழ்ப்பட்டவரென்பதும் தானே விளங்கும், *"உயர்வற

* திருவாய்மொழி - முதல்திருப்பதிகம் - ௧.

வுயர்ந்த முடையவன்", *"ஒத்தார் மிக்காரை யிலையாய மாமாயா" என்பர் திருவாய்மொழியிலும். 'இல்லான்' என்றும் பாடம். 'அழற்றலர் தாமரை' என்றது, பங்கஜமாதலால்.

எம்பெருமான் தம்மைச்சேர்த்துக்கொள்ளாமையால் தளர்ந்த ஆழ்வாரை அன்பர்கள் அவனுடையசர்வசக்தியை எடுத்துக்காட்டி ஆற்றுதல், உள்ளுறைபொருள். நித்யவிபூதியையும் முற்றுணர்வையும் மேம்பாட்டையும் திருமேனியழகையு முடைய சர்வேசுவரன் திரிவிக்கிரமாவதாரவியாஜத்தால் எல்லாவுலகங்களையுந் தனக்கேயாக்கிக்கொண்டவனாதலால், அதுபோலவே உம்மையும் அவன் தன்திருவடிகளிற்சேர்த்துக்கொண்டருளத் தட்டில்லையென்று அவனுடையசம்பந்தத்தையும் சக்தியையும் விளக்கி ஆற்றாமைதணித்தன ரென்க.

கழல் + தலம் = கழற்றலம், நிழல் + தர = நிழற்றர, குறில்செறியாத லகரம், வந்ததகரந்திரிந்தபின் கெட்டது. உழற்றலெனினும் உழலுதலெனினும், அழற்றெனினும் அளற்றெனினும் ஒக்கும். அளற்றென்பதுபோல அழற்றென்பதும் ஒருதனிமொழியென்றும், ளகரத்துக்கு ழகரம் போலியாயவந்த தென்றும் உணர்க. [பழம் = பளம், விளக்கு = விழக்கு என்றாற்போன்ற சிறுபான்மைவழங்குகிற ளகரழகரப்போலி இலக்கணநெறியாற் கொள்ளத்தக்கதன்றென்று, †"ஈரெட்டொடுமூவைந்துமாமுடல் தேற்றவும் ஈற்றுவண்மை, தேரிட்டொன்றுமுடலொடுதேற்றவுஞ் சிந்தைசெய்து, நேரிட்டுரைப்ப ரறிவொன்றிலாதவர் நீயவற்றைப், பாரிட்டமாகப் பெரியோர்தமதுரை பார்த்தறியே" என்றதனால் தெரிகிறது.] (ருஅ)

## இரவுநீடுதற்கு ஆற்றாத தலைவியைப் பற்றிச் செவிலி இரங்கல்.

ருகூ. அளப்பருந்தன்மைய வூழியங்கங்குலந் தண்ணந்துழாய்க்
குளப்பெருங்காதலி னீளியவாயுள வோங்குமுந்நீர்
வளப்பெருநாடன் மதுசூதனென்னும் வல்வினையேன்
றளப்பெருநீண்முறுவற்செய்யவாய தடமுலையே.

(இ - ள்.) வல்வினையேன் - கொடியதீவினையையுடைய எனது, தளம் [தளவு] பெரு நீள் முறுவல் செய்ய வாய தடமுலை - முல்லையரும்பினளவான பெருமையும் நீட்சியுமுள்ள பல்வரிசையையுடைய சிவந்தவாயுடையளான பெரியதனங்களையுடையவளாகிய இம்மகள், — 'அளப்பு அரு தன்மைய - அளவிடுதற்குஅரியதான தன்மையையுடைய, ஊழி - கற்பங்களினும், அம் - அழகிய [நீண்ட], கங்குல் - இராத்திரிகள், அம் தண் அம் துழாய்க்கு உளம் பெரு காதலின் நீளிய ஆய் உள - அழகியகுளிர்ந்ததிருத்துழாய்விஷயமாக (என்) உள்ளத்திலே வளர்கிற மிக்கவேட்கைபோல நீண்டனவாயுள்ளன; ஓங்கு முந்நீர் வளம் பெரு நாடன் - உயர்ந்தகடல்சூழ்ந்த வளப்பமுள்ள பெரியநாட்டையாளுபவன், மதுசூதனன் - மதுவென்னும் அசுரனை அழித்தவன்', என்னும் - என்றுவாய்விட்டுச்சொல்லியலற்றுகிறாள், (எ - று.)

தடமுலையாள் என்னும் எனவியையும்.

இரவுநீடுதலுக்குஆற்றாளாய தலைமகளது ஈடுபாடு கண்டு செவிலி இரங்கின பாசுரம், இது; இதனை, பாங்கிவார்த்தையெனக்கொள்ளுதல், அத்துணைச் சிறப்பினதன்று. இரவுநீட்டித்தலையும், தனது தலைமகனான திருமாலினது பாதுகாப்புத்தன்மையையும், பகையொழிக்குமியல்பையும் எனதுஇளமகள்

* திருவாய்மொழி - பதின்மூன்றாந்திருப்பதிகம் - உ.
† வீரசோழியம் - கிரியாபதப்படலம் - கஉ.

வாய்மாறுதுகூறியலறுகிறாளென்று தாய் இரங்குகிறாள். முதல்வாக்கியத்தால், எனதுகாதலுக்கு முடிவுகாணவொண்ணாதவாறுபோல் இவ்விரவுக்கும் முடிவுகாணவொண்ணாதென்றமை கூறினாள். 'அளப்பருந்தன்மைய வூழியங்கங்குல்' என்றதற்கு - 'அளக்கவரியதை அளந்தவன் திருவடிகளாலும் அளக்கப்போகிறதில்லை, அளக்கலாகில் வந்துதோற்றுநோ?' என்று விசேஷார்த்தமுரைப்பர் பெரியவாச்சான்பிள்ளை. 'ஓங்குமுந்நீர்வளப்பெருநாடன்' என்றது - உலகத்தைக் கடல்விழுங்காமல் நோக்குமவ னென்னுங் கருத்தைத் தந்து, அவனது காத்தல்தொழிலையும், மதுசூதனன் என்றது - அந்தவுலகத்துக்குக் கொடியவரால் நேரும் நலிவைத் தீர்த்துக்கொடுப்பவ னென்று, துஷ்டநிக்கிரகத்தன்மையையும் புலப்படுத்தும். ஊழியங்கங்குல் — 'கங்குலுக்கு அழகாவது - கற்பத்திலும் நெடிதாயிருக்கை' என்ற அழகியமணவாளசீயருரை அறியத்தக்கது. கற்பம்போன்ற அழகிய இரவு என்றுமுரைப்பர். அப்பொழுது, இரவுக்கு அழகு - இயற்கையிற் கலவிக்குரியகாலமாதல். அன்றி, பொலிவில்லாத கங்குலை 'அங்கங்குல்' என்றது, இகழ்ச்சிபற்றிய எதிர்மறையிலக்கணையுமாம். 'கள்ளியங்காடு' என்பதிற்போல, அம்-சாரியையுமாம். கங்குலைக் குறுக்குதல் அல்லது அவனைக்கூட்டுதல் செய்யமாட்டாமையால், மகாபாவத்தையுடையே னென்று தன்னைத் தானே வெறுத்தாள்.

காலவிளம்பத்தைப்பொறுக்கமாட்டாத ஆழ்வார்நிலையைக் கண்டு ஞானிகள் நொந்துரைத்த வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள்: உலகமுழுவதையுந் தன்னுடைமையாகவுடைய எம்பெருமான் இவரது உட்பகைகளை யொழித்து இவரைச்சேர்த்துக்கொள்ளவல்லனாயிருக்க, அங்ஙனஞ்செய்யாது விளம்பித்தலால், இவர்க்கு இந்தஇருள்தருமாஞாலத்தில் இருப்பு நெடுகித்தோற்றுகையாலே, ஆற்றாமைபிறந்து, அதுவிஞ்சுதலால், இவர் அத்தன்மையை வாய்விட்டுக்கூறியமை. இப்பாட்டில் விளங்கும் நான்காமடி - இவரது திருமுகமண்டலவிளக்கத்தையும், சொல்திறத்தையும், பக்திவளர்ச்சியையுங் காட்டும்.

காதலின், ஐந்தனுருபு - ஒப்புப்பொருள்; காதலைக்காட்டிலுமென உறழ்பொருளுமாம். தள் - தளவு என்பதன் விகாரம். தடமுலை - அன்மொழித்தொகை; வாய என்னுங் குறிப்புப்பெயரெச்சம், முலையாளுக்கு அடைமொழி. நீளிய - இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும்பெயர், குறிப்புவினையாலணையும்பெயரன்று; நீள் என்பது - பண்படியன்றி வினைப்பகுதியாதலால்.

## தலைமகளிளமைக்குச் செவிலி இரங்கல்.

௬0 முலையோமுழுமுற்றும்போந்திலமொய்பூங்குழல்குறிய
கலையோவரையில்லைநாவோகுழறுங்கடல்மண்ணெல்லாம்
விலையோவெனமிளிருங்கண்ணிவள்பரமேபெருமான்
மலையோதிருவேங்கடமென்றுகற்கின்றவாசகமே.

(இ - ள்.) முலையோ - தனங்களோ, முழுமுற்றும் போந்தில - மிக முழுவதும்தோன்றினவில்லை; மொய் பூ குழல் - அடர்ந்த மென்மையான தலைமயிர்கள், குறிய - (முடிகூடாமல்) சிறியவாயுள்ளன, கலையோ - ஆடையோ, அரை இல்லை - இடையிற் பொருந்த உடுக்கப்படுவதில்லை; நாவோ - நாக்கோ, குழறும் - (திருத்தமாக வார்த்தைசொல்லமாட்டாமல்) குதலைச் சொற்பேசுகின்றது; கண்-கண்கள், கடல் மண் எல்லாம் விலையோ என - கடல்சூழ்ந்தஉலகமுழுவதும் (இவற்றுக்கு) விலைப்பொருளோ வென்று சொல்லும்படி, மிளிரும் - (ஒருநிலையிலில்லாமல்) பிறழ்ந்துநோக்குகின்றன, பெருமான் மலையோ திருவேங்கடம் என்று கற்கின்ற வாசகம் - 'திருவேங்கடமலை எனதுதலைவனது இருப்பிடமோ?' என்று பலகாலுஞ்சொல்லிப்பயில்கிற வார்

த்தை, இவள் பரமே - (இப்படி இளமைப்பருவமுடைய) இவளிடம் உண்டாகக்கடவதோ? (எ - று.)

'தலைவியீடுபாடுகண்ட தோழி அறத்தொடுநின்று உரைக்க, கேட்ட செவிலி 'பேதைப்பருவத்தளான இவளுக்குத் தலைவனிடம் விழைவும்படியான புணர்ச்சியறிவு வந்தவாறு என்றோயிருந்தது'' என்றுசொன்ன பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும். தலைமகனைக் களவொழுக்கத்திற் புணர்ந்த தலைமகள் அவன்பிரிந்தநிலையில் ஆற்றாது வருந்தி வாய்பிதற்றிக் கண்ணீர் சொரிந்து மேனிமெலிந்து வடிவம்வேறுபட, அவ்வேறுபாடுமாத்திரத்தைக் கண்டசெவிலி 'இதற்குக் காரணம் என்னோ?' என்று கவன்று அவளதுஉயிர்ப் பாங்கியை வினவ, அவள் உண்மையானகாரணத்தைக் கூறியிட, அதுகேட்ட செவிலித்தாய் இவளதுஇளமையைக் கருதி இரங்கிக்கூறிய துறை, இது. இதனை, செவிலி அறத்தொடுநின்று உரைப்பக் கேட்ட நற்றாயவார்த்தை யெனினும் இழுக்காது. *"செய்ய நூலின்சிற்றாடை செப்பனுடுக்கவும் வல்லளல்லள்," †"வாயிற் பல்லு மெழுந்தில மயிரு முடிகூடிற்றில ..... மாயன் மாமணிவண்ணன்மே லிவள் மாலுறுகின்றாளே," ‡ "கொங்கையின்னங் குவிந்தெழுந்தில," §"பேசவுந்தெரியாத பெண்மையிற் பேதையேன்பேதை யிவள்" என்ற பெரியாழ்வார்பாசுரங்களோடு ஒப்பிடுக. இவள் யௌவனப்பருவத்தையடைந்திருந்தும் இவள்தாய்மார்க்கு அன்புமிகுதியால் இவளது மிக்க இளமையே தோற்றுவதென்க.

யௌவனசூசகமாதலின், முலை, முந்துறக்கூறப்பட்டது 'முழுமுற்றும்' என்று மீமிசையாய மிகுதியைக் காட்டுகிறது' என்றும், 'முலைகளானவை ஆண்முலைக்கும் பெண்முலைக்கும் வாசிதோற்ற முகந்திரண்டு கிளர்ந்தனவில்லை' என்றுங் கூறுவர். குழல் குறிய - மயிரும் சேர்த்து முடிக்கலாம்படி கூடினவில்லை. கலையோ அரை இல்லை - சிற்றாடையை உடுக்குமளவு அறிந்து நன்றாக உடுக்கவும்மாட்டாள். நாவோ குழறும் - பேசக் குளறும். 'கடல் மண்ணெல்லாம் விலையோ' என்பதற்கு - '(இரத்தினாகரமான) கடல்களும் பூலோகமும் மற்றவுலகங்களும் விலைபோதா' என்றும் உரைப்பர். மிளிருங் கண் - பொருட்சிறப்பின்றிப் பொதுநோக்குநோக்குதலே யொழியக் காதற் குறிப்பை வெளிப்படுத்துகிற சிறப்புநோக்கு இல்லை. தலைமகனை வசப்படுத்துவது முலையழகாலேயாதல், மயிர்முடியழகாலேயாதல், உடையழகாலேயாதல், சொற்சாதுரியத்தாலேயாதல், கருத்தோடு கடைக்கணித்துப்பார்க்குங் குறிப்புநோக்கினாலேயாதல் கூடுவதாயிருக்க, முலையும் அரும்பாதே குழலும் முடிகூடாதே ஆடையுஞ் செவ்வனுடுக்க அறியாதே சொல்லுங் குதலையாய்க் கண்ணும் ஒதுக்கிப்பாராமற் செவ்வேநோக்கும்படியான இந்தப் பேதைக்கு இப்படி தலைவனிடம் விழைவுதலுண்டானவாறு என்கொல்? என்று அதிசயப்பட்டாளென்க.

ஆழ்வாரது ஆற்றாமையைக் கண்ட ஞானிகள் 'எம்பெருமானைச் சேரப் பெறுதற்கு உபாயமான பக்தி முதலியன பூரணமன்றியிருக்க, இவருக்கு உண்டாகிய விரைவு என்னோ?' என்று சொல்லும்வார்த்தை, இதற்கு உள்ளுறை பொருள். ஸ்வாபதேசத்தில், முலை-பக்தி. முலையோ முழுமுற்றும்போந்தில - எம்பெருமானைச் சேர்ந்து அனுபவித்தற்கு உபகரணமான பக்தி முதிர்ந்து பேற்றுக்குச்சாதனமான பரமபக்தியாகப் பரிணமித்ததில்லை. மொய்பூங் குழல்குறிய - முடியழகில்லை. அதாவது - தலையாலேவசப்படுத்துகிற பிர்ணு

---

* பெரியாழ்வார்திருமொழி - இருபத்தேழாந்திருப்பதிகம் - க.
† ,, ,, உ.
‡ ,, ,, ௩.
§ ,, ,, எ

மம் பூரணமாகத் தோன்றவில்லை. கலையோ அரையிலில்லை- *"மடிதற்றுத் தான்முந்துறும்" என்றபடி அரையில் ஆடையை இறுக உடுத்துக்கொண்டு முந்துறுக்கிளம்பும் முயற்சி இல்லை, முயற்சியை அதன்காரணத்தாற் கூறினார். நாவோ குழறும் - இடைவிடாத பகவந்நாமஸங்கீர்த்தநமில்லை கண் மிளிரும் - பொதுப்பட்ட பொருள்களின் உண்மை யறியுந் தத்துவஞான மொழிய அவ்வறிவை ஓரிடத்திலே ஒடுக்கிநிறுத்துந் தியாநரூபமான ஞான மில்லை 'கடல்மண்ணெல்லாம் விலையோவென' என்றதனால், ஆழ்வாரது ஞானத்தின் சிறப்புத் தோன்றும். இவள் பரமே - கேவலம் பரதந்திரமாயிருக்கவேண்டுவாளுக்கு, சாதநமில்லாமல் விரைவை யேறிட்டுக்கொள்ளுதல் தகுமோ? பெருமான் மலையோ திருவேங்கடமென்று கூறுகின்ற வாசகம் - †"வெருவாதாள் வாய்வெருவி வேங்கடமே வேங்கடமே யென்கின்றாளால்" என்றபடி அவனெழுந்தருளியிருக்கிற திருமலையாகிய போகஸ்தாநத்தையே வாய்புலத்தல் ஆழ்வார் திருவவதரித்தபொழுதே தொடங்கி எம்பெருமானல்லது தரியாமை இப்பாட்டில் வெளியாம்

ஓகாரங்கள் ஐந்தனுள், முந்தினமூன்றும்- தெரிநிலை, பிந்தினஇரண்டும்- வினா பரமே யென்ற ஏகாரம் - எதிர்மறை. முழு முற்றும் - ஒருபொருட்பன்மொழி. குழறும் - குளறும். (சுO)

## தோழி தலைவனது நீர்மையைத் தலைவிக்குக் கூறல்

சுக. வாசகஞ்செய்வது நம்பரமே தொல்லைவானவர்தம்
நாயகனாயகரெல்லாந்தொழுமவன் ஞாலமுற்றும்
வேயகமாயினுஞ்சோராவகையிரண்டேயடியாற்
றாயவனாய்க்குலமாய்வந்து தோன்றிற்று நம்மிறையே.

(இ - ள்) தொல்லை வானவர்தம் நாயகன் - பழமையான பரமபதத்து நித்தியசூரிகளுக்குத் தலைவனும், நாயகர் எல்லாம் தொழுமவன் - தலைமை பாராட்டுகிற (பிரமன் முதலியோர்) எல்லோரும் (தத்தம் தலைமைபெறும் பொருட்டு) வணங்கும்படியானவனும், ஞாலம் முற்றும் - உலகமுழுவதையும், வேய் அகம் ஆயினும் சோரா வகை - ஒருகோற்குத்துநிலமாயினும் தவறாதபடி [மிச்சமாகாதபடி], இரண்டே அடியால் தாயவன் - (தனது) இரண்டு அடிகளாலே அளந்துகொண்டவனு மாகிய, நம் இறை - நமது தலைவன், ஆய குலம் ஆய் வந்து தோன்றிற்று - இடையர்குலத்தையுடையவனாய்க் கொண்டு அக்குலத்தில் வந்து வளர்ந்த எளிமையை, வாசகம் செய்வது - எடுத்துப்புகழ்ந்துகூறுவது, நம்பரமே - நம்மாலாகக்கூடியதோ? [அன்று என்றபடி].

'வரைந்துகோளிலே விரைந்த தலைமகளைக்குறித்து 'அவன் பெரியனேயாகிலும் நமக்கு எளியனாய் வருங்காண்' என்று தோழி நாயகனுடைய சீலம் புகழ்ந்த பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும். தலைமகனைக் களவொழுக்கத்தாற் புணர்ந்து பிரிந்து வருந்துகிற தலைமகள், 'மிக்கமேன்மையையுடைய அத்தலைவன் என்னையொருபொருளாகக்கருதி விரைவில்வந்து வரைந்துகொள்ளுதல் கூடுமோ' என்று கவலைப்பட, அத்தலைவிக்குத் தோழி 'அங்ஙனம் யாவரினும் உயர்ந்த அவனுக்கு, அன்புடையார்பக்கல் எளியனாந்தன்மையும் இயல்பிலுண்டு' என்று அவனது எளிமையை எடுத்துக்காட்டி ஆற்றல்கூறுகின்றாள்; இதனால், நமக்குஎளியனாய் வந்து வரைந்துகொள்வான் என்றவாறு.

நம் பரமே - எம்பெருமானைப்புகழ்தற்கென்றேற்பட்ட வேதங்களும் அவன்தன்மையை முடியச்சொல்லமாட்டாமல் மீளுமென்றால், அதனைக்

* திருக்குறள் - குடிசெயல்வகை - ௩.
† பெரியதிருமொழி - நாற்பத்தைந்தாந்திருப்பதிகம் - க.

கூறுதல நமமாலாகுமோ? என்றபடி. வேயஅகமாயினும-ஒருமூஙகிலகாட்டபபடும் இடமாயினும; சிறிதிடமேனும என்றபடி. இரணடே அடியால தாயவன்-* "ஒருகுறளாய இருநிலம மூவடிமண வேணடி உலகினைததும ஈரடியால ஒடுக்கி ஒன்றுந, தருகவெனு மாவலியைச சிறையிலவைதத தாடாளன்" என்றபடி தான்கேட்ட மூவடிநிலததுக்கும இடமபறாதபடி இரணடடிகளாலேயே அளவிட்டுமுடிததவன் ஆயககுலமாயவநதுதோன்றிற்று - அரசாகுலததிலே ஒருத்திமகனாயபபிறநது இடையாகுலததிலே ஒருத்திமகனாய் ஒளித்துவளாநதது.

எமபெருமானைசசேர்தறகுவிரைகிற ஆழவாரது ஆற்றாமையை நோக்கின அன்பாகள், 'லீலாவிபூதி நிதயவிபூதியென்னும இரணடுக்குந தலைவனான மேன்மையையுடைய சாவேசுவரன் அடியவர்கெளியனாயக கணணனாக வநதுஅவதரிததவிதம சொலலுநதரத்ததன்று' என்று அவனதுஅடியாாகெளிமையைச சொலலி அவரதுகலககததை யாறறுதல, இதறகு உள்ளுறை பொருள். முதலமூன்றடிகள் - பரததுவததையும, நான்காமஅடி-சௌலபபியததையும விளக்கும. 'மேன்மையோடு நீரமையும உடையவனாதலால, உமமைசசோததுககொள்வன், விரைநது வருநதவேணடா' என்று தேறறியபடி. 'வாசகஞசெயவது நமபரமே' என்றதனால, இபபடிபபட்டநீரமையிற கருததூன்றுமபொழுது †"எததிறம!" என்று மோகிததுககிடககுமதொழிய அதுககுமேற சொலலிப புகழதறகுச சாததியபபடுமோ? என்பதாம. காமவசமிலலாதவன பிறபபுஎடுததலும, அதிலுமஎளியகுலததினனாதலும அதியாசசரியகரமனறோ?

நாயகனும தொழுமவனும தாயவனு மாய நம்மிறை ஆயக்குலமாயவநது தோன்றிய தன்மையை வாசகஞசெயவது நமபரமே என இயையும தோன்றிற்று - இறநதகாலத தொழிறபெயா, இரணடாமவேற்றுமைததொகை. இதனை ஒன்றன்பாலவினைமுற்றாககொணடு உரைததல, இணைவழுவாம

பரமே,ஏ - எதிாமறை. ஆயினும,உம - இழிவுசிறபபு. இரணடே, ஏ - பிரிநிலை. தாயவன=தாவியவன. (கூக)

### தலைவியினாற்றாமையைத் தோழி தலைவனைநோக்கிக் கூறல்

கூ௨ இறையோவிரககினுமீஙகொாபெணபாலெனவுமமிரங்கா
தறையோவெனநினறதிருங்கருஙகடலீஙகிவட
னிறையோவினியுனறிருவருளாலனறிககாபபரிதான்
முறையோவரவணைமேறபளளிகொண்டமுகிலவண்ணனே.

(இ - ள்.) இரககினும - எவ்வளவுவேணடிக்கொணடாலும, ஓா பெணபால எனவும ஈஙகு இறை இரஙகாது- இவள்ஒருபெணமகளென்றுகருதியும இவளிடததிற சிறிதும இரக்கஙகொள்ளாமல, கரு கடல - கரியகடலானது, அறையோ என நின்று அதிரும- (இவளெதிரில) அறைகூவுகிறதோ வென்று சொலலுமபடி நிலைநின்று [ஒரேவிதமாக] முழஙகுகிறது; ஓ - இது ஒருகொடுமையே! அரவு அணைமேல பள்ளிகொணட முகிலவணணனே - சேஷசயநததின்மீது படுக்கைகொணட காளமேகமபோலும வடிவுடையவனே! ஈஙகு இவள்தன் நிறையோ - இவ்விடததில இவளது நிறைக்குணமோ, இனி உன் திருஅருளால் அன்றி காபபு அரிது-இனிமேல உனதுசிறநதகருணையினாலன்றி வேறொன்றாற் பாதுகாததுவைக்கமுடியாது; முறையோ - (இவளை நீ இஙஙனம உபேக்ஷிததல) முறைமையோ? (எ - று.)

---

* பெரியதிருமொழி - இருபத்துநான்காநதிருபபதிகம - க.

† திருவாயமொழி - மூன்றாநதிருபபதிகம - க

'கடலோதத்துக்காற்றாத தலைவியுடைய தளர்த்தி கண்ட தோழி புலம்பியுரைத்த பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும். தலைமகளை ஒருவழித்தணந்த தலைவன் மீண்டுவந்து சிறைப்புறமாக நிற்றலை யறிந்த தோழி, தலைமகள் கடலொலிக்காற்றாது வருந்தும் நிலையையும், இதுவரையிலும் தான் அவளை ஒருவாறு ஆற்றிவைத்திருந்தமையையும், இனித் தன்னாலும் ஆற்றவொண்ணாதபடி வருத்தமிருந்தலையும் தலைமகன் கேட்பக்கூறினாள். தலைமகளாற்றாமைகண்டு வருந்துந் தோழி தன் ஆற்றாமையாலே தலைமகளையுட்கொண்டு விளித்து முன்னிலைப்படுத்திக்கூறியதென்றுங் கொள்ளலாம். இதனைச் செவிலியிரங்கலாகக்கொள்ளுதல், அத்துணையாகச் சிறவாது.

இரக்கினும்-இவளது பெண்மையையும் மென்மையையும் இளமையையுங் காட்டிப் பிரார்த்தித்தாலும், நோவுபடுவாரைக்கண்டு தானே இரங்கவேண்டியிருக்க அதுசெய்யாததோடு யாம்வேண்டிக்கொண்டாலும் இரங்குகிறதில்லை யென்பாள், 'இரக்கினும்' என்றாள் 'உரைக்கினும்' என்றும் பாடம். 'பெண்ணென்றால் பேயும் இரங்கும்' என்றபடி எவ்வளவு கொடுமையுடையாரும் இரங்கும்படியான பெண்தன்மைக்கும் இது இரங்குகிறதில்லை யென்பாள், 'ஓர் பெண்பாலெனவுமிரங்காது' என்றாள் கருங்கடலென்றது, புறத்திற்காணுங் கருமைநிறத்தோடு, அகத்திலுள்ள கருமையையும் [கொடுமையையும்] காட்டும். கருங்கடல் - கோபமுடைய கடலுமாம்; கறுப்பு, வெகுளிப்பொருளது. இவள் - இப்படிப்பட்டவள், தன்னைத் தான் காத்துக்கொள்ள வல்லமையில்லாதவள் என்றபடி. நிறை - அடக்கம். 'இனி' -கடலாகிய பெரும்பகையுமுண்டாய்த் தனக்கு நிறைகாக்கும் ஆற்றலுமில்லையான பின்பு. 'முறையோ அரவணைமேல் பள்ளிகொண்ட முகில்வண்ணனே' - நீ படுக்கைவாய்ப்பு அறிந்து கிடக்க, படுக்கைகொள்ளாத இவளுக்கு இடங்கொடாத இது முறைமையன்று என்றபடி, 'இவள் கடிநஸ்தலத்திலே கிடக்க, நீர் மெல்லியபடுக்கைதேடிக் கிடக்கிறீரோ?' என்பர் பெரியவாச்சான்பிள்ளை. மேகம்போல உதாரகுணமுடைய நீ இவளது துயரந்தீர உதவவேண்டாவோ வென்பாள், 'முகில்வண்ணனே' என விளித்தாள்.

எம்பெருமானைச் சேரப்பெறாது வருந்துகிற ஆழ்வார்க்குச் சம்சாரசாகர கோலாகலதரிசநத்தாலுண்டான தளர்ச்சியைக் கண்ட அன்பர், தங்களால் இதுபரிகரிக்கவரிதென்றுகருதி, தங்களாற்றாமைதோன்ற எம்பெருமானைக் குறித்து விண்ணப்பஞ்செய்தது, இதற்கு உள்ளுறைபொருள். யாங்கள் எவ்வளவுமுயன்றாலும் இவரது அடிமைத்தன்மையைக் கருதியும் சிறிதும்பின் வாங்காமல் பயங்கரமாய இவரை வருத்துகிறது, கொடிய சம்சாரசாகரம் இனி, இவரது சொரூபத்தை உனது கருணையினாலன்றிப் பாதுகாக்கவொண்ணாது; ஆதிசேஷனாகிய ஒருசேதநனை எப்பொழுதும் விட்டுநீங்காது அருள்பவனும் இனிமைதோன்றும்வடிவுடையவனுமானவனே' என்று ஸ்வாபதேசங் காண்க.

இறை என்பதனிறுதியில், இழிவுசிறப்பும்மை, விகாரத்தால் தொக்கது. ஓ - இரக்கம். அறையோ, ஓ - ஐயம். நிறையோ, ஓ - தெரிநிலை. முறையோ, ஓ - எதிர்மறை. எனவுமிரங்காது, மகரவொற்று - விரித்தல். (௯௨)

## தலைவனை இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்படமொழிதல்.

௯௩. வண்ணஞ்சிவந்துள வானாடமருங்குளிர்விழிய
தண்மென்கமலத்தடம்போற்பொலிந்தன தாமிவையோ
கண்ணன்றிருமாறிருமுகந்தன்னொடுங்காதல்செய்தேற்
கெண்ணம்புகுந்தடியேனொடிக்காலமிருக்கின்றவே.

(இ - ள்.) வண்ணம் சிவந்துள - நிறம் சிவந்துள்ளவையும், வான் நாடு அமரும் குளிர் விழிய - பரமபதம் ஆநந்தமடையும்படியான குளிர்ந்த பார்வையையுடையவையும், தண் மெல் கமலம் தடம் போல் பொலிந்தன - குளிர்ந்த மென்மையான தாமரைத் தடாகம்போல் விளங்குகின்றவையுமாகிய, இவையோ தாம்-இந்தத் திருக்கண்களோ, கண்ணன் திரு மால் திரு முகந்தன்னொடும் காதல் செய்தேற்கு எண்ணம் புகுந்து - கிருஷ்ணாவதாரஞ் செய்தவனும் திருமகள்கணவனுமான தலைவனது திருமுகமண்டலத்திலே வேட்கைவைத்த எனது மனத்திலே புகுந்து, இ காலம் அடியேனொடு இருக்கின்ற- இப்பொழுதும் விட்டுநீங்காமல் என்னோடு இருக்கின்றன, (எ - று.)

தலைவி தலைவனைப்பிரிந்துவருந்தும் நிலையில், அவளை ஒருவாறு சிறிதுஆற்றுதற்பொருட்டுத் தோழி அவன்கொடுமையைச் சொல்லிப் பழிக்க, அதுபொறாது, தலைவி, 'இப்பொழுதும் அவனது கண்கள் என் நெஞ்சிலுங் கண்ணிலுந் தோன்றி நீங்காதிருக்கின்றன, இங்ஙனம் அன்போடு அணியனாயுள்ளவனை அநாதரஞ்செய்துபிரிந்துசென்றானென்று நீ கொடுமை கூறுகின்றது என்னோ?' என்று கூறினளென்க. *"உவந்துறைவ ருள்ளத்துள் என்றும் இகந்துறைவ, ரேதிலரென்னு மிவ் வூர்" என்ற திருக்குறள் இங்கு அறியத்தக்கது.

என்பக்கல் இவர்க்குஉண்டான அநுராகத்தால் [வேட்கையால்] கண்கள் சிவந்துள்ளன என்பாள் 'வண்ணஞ் சிவந்துள' என்றும், அந்தக் கண்ணின் செம்மையைச் சீற்றத்தாலானதென்று தான் கொள்ளாமல் அன்பினாலானதென்றுகொள்ளுதற்குக் காரணங்கூறுவாள் 'வானாடமருங் குளிர்விழிய' என்றும், இடைவிடாது நினைப்பினால் இவள்மனத்தில்தோன்றுதலேயன்றி அந்நினைவின்முதிர்ச்சியால் இவள்எதிரிலும் எப்பொழுதும் உருவெளிப்பாடாகத் தோன்றுதல்பற்றி 'தாம் இவையோ' என்றும் கூறினாள். ஈற்று ஏகாரம் - தேற்றத்தோடு, இரக்கம், அதனால், பிரியாமையும் அதற்குக்காரணமான அன்புமுடையனாய இடையீடின்றிக் கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நீங்காது நின்று தோன்றுகிறவனை அன்பின்றிப்பிரிந்தானென்று கருதுதலுங் கூறுதலுந் தகுதியல்லவென்பது தோன்றும். தன்னை நெடுநாள் பிரிந்து வருத்துங் காலத்தும் தலைவனைப்பிறர்பழிக்கக்கேட்டுத்தரியாதுமறுத்தல், கற்பின்குணம்.

இப்படி ஆழ்வார்க்கு மிக்கஆற்றாமையைவிளைத்துக்கொடுக்கமுகங்காட்டாமலிருக்கிற எம்பெருமானிடத்துக் கொடுமையுளதென்று சங்கித்த அன்பர்களை நோக்கி, ஆழ்வார், அவனது பூர்ணகடாக்ஷம் தமதுநெஞ்சிலே நிலைபெறும்படி அவன் தமக்குப் பேரருள்செய்த விதத்தை அறிவித்து அவர்களைச் சமாதானப்படுத்தல், இதற்கு உள்ளுறைபொருள். மற்றவை, வெளிப்படை.

முகந்தன்னொடும், செய்தேற்கு என்பன - உருபுமயக்கம். இருக்கின்ற- முற்று. முகந்தன்னொடும் புகுந்து எனஇயைத்து உரைப்பினுமாம். (௩௩)

## தலைவன்பேர்கூறித்தரித்திருத்தலைத் தலைவி தோழிக்குக்கூறி யிரங்கல்.

௩௪. இருக்கார்மொழியானெறியிழுக்காமையுலகளந்த
திருத்தாளிணைநிலத்தேவர்வணங்குவர்யாமுமவா
வொருக்கார்வினையொடுமெம்மொடுநொந்துகனியின்மையிற்
கருக்காய்கடிப்பவர்போற்றிருநாமச்சொல்கற்றனமே.

(இ - ள்.) நிலம் தேவர் - பூசுரராகிய அந்தணர், இருக்கு ஆர் மொழியால் - வேதங்களிற் பொருந்தின மந்திரங்களைக்கொண்டு, நெறி இழுக்காமை - முறைமைதவறாமல், உலகு அளந்த திரு தாள் இணை - உலகங்களை அளவிட்ட (எம்பெருமான்) திருவடிகளை, வணங்குவர் - வணங்கி அநுபவிப்

* திருக்குறள் - காதற்சிறப்புரைத்தல் - ௧௦.

பார்கள், யாமும் - நாமும், அவா ஒருக்கா - (எமது) ஆசையை அடக்கமாட்டாமல், வினையொடும் எம்மொடும் நொந்து - (அங்ஙனம் அனுபவித்தற்கு விரோதியான எமது) பாவத்தையும் (அப்பாவத்திற்கு இடமான) எம்மையும் வெறுத்துக்கொண்டு, கனி இன்மையின் கருக்காய் கடிப்பவர் போல - பழம் கிடைக்காமையாற் பிஞ்சைத் தின்பவர்போல, திரு நாமம் சொல்கற்றனம் - (பூர்ணாநுபவம் கிடைக்காமையால் அதுவரையில் உயிர்தரித்தற்பொருட்டு அவனது) திருப்பெயர்களாகிய சொற்களைச் சொல்லுதல்செய்கிறோம், (எ-று)

'கலந்துபிரிந்த நாயகி கலவிகிட்டாமையாலே நாயகனுனீச்வரனுடைய குணநாமங்களைத் தான் தரித்திருக்கைக்காக உரைத்தேனென்று பாங்கிக்கு உரைத்தல்' என்பர் அழகியமணவாளசீயரும். திருமாலாகிய தலைமகனைச் சேரப்பெற்றுப் பிரிந்துநிற்கிற நிலையில் அவனது திருநாமங்களை இடைவிடாது சொல்லிக்கொண்டு அதனால் ஒருவாறு தரித்திருக்கிற தலைவி தோழியை நோக்கி 'புண்ணியாத்மாக்களான பிராமணோத்தமர் வேதமந்திரங்களால் எப்பொழுதும் எம்பெருமானைத் தவறாமல் அடைந்து அனுபவிப்பர், யானோ, அப்படிப்பட்ட நல்வினையில்லாமையால், எனது ஆசையை அடக்கமாட்டாமல் எனது தீவினையை நொந்துகொண்டு, கனிகிடையாமற் காய்கடித்து உயிர்வாழ்பவர்போல, அவனது பூர்ணாநுபவம்பெறாமையால் நாமோச்சாரணஞ்செய்து உயிர்தரிக்கிறேன்' என்று கூறினள் *"சொல்லெடுத்துத் தன்கிளியைச் சொல்லேயென்று" எனவும், †"திருமாலைப் பாடக் கேட்டு, வளர்த்ததனாற் பயன்பெற்றேன்வருகவென்று" எனவும், ‡"துன்றுகுழற் கருநிறத்தென் துணையேயென்று" எனவும் பிறவிடங்களிலும் தலைவன் திருநாமங்களைச் சொல்லச்சொல்லியுங் கேட்டும் சொல்லியும் தலைவி தரித்திருந்ததாகக் கூறுதல் காண்க.

இருக்கு ஆர்மொழி - புருஷஸூக்தம் முதலியன, வேதங்களெல்லாந் தன்கருளே பொருந்தும்படியான மூலமந்திரமாகிய அஷ்டாக்ஷரமகாமந்திரமென்றுங் கூறுவர். நெறி யிழுக்காமை - பெருமானை வழிபடும் முறைமையில் ஒன்றும் வழுவாமல். 'உலகளந்த திருத்தாளிணை' என்றதனால், சௌலப்யமான திருவடி யென்றபடி. தாளிணை - உபயபாதம். நிலத்தேவர் - சொர்க்கலோகத்துத் தேவர்போலப் பூலோகத்துச் சிறந்து விளங்குபவர். வினையென்றது, எம்பெருமானைக் கலந்து அனுபவிக்கப்பெறாத பிரதிபந்தகத்தை. கருக்காய் - பசுங்காய், இளங்காய். மிகமுதிர்ந்து நுகர்வார்க்கு மிகவும் இனியதாய கனி - பகவதநுபவத்தாலாகும் இனிய ஆநந்தத்துக்கும், கட்டிளமைத்தாய் நுகருஞ்செவ்வியதல்லாத காய் - அவ்வளவு இனியதல்லாத நாமோச்சாரணமாத்திரத்துக்கும் உவமை. இவ்வுவமையால், காயினமுதிர்ச்சி கனியாதல்போல நாமோச்சாரணத்தின்பயன் அநுபவாநந்தமா மென்பதுந் தோன்றும்.

விலக்ஷணராகவுள்ளார்பலர் எம்பெருமானை முறைப்படி ஆசிரயித்து அனுபவிக்க, அவ்வாறு தாம் பூர்ணாநுபவம்பண்ணப்பெறாமையால் தரித்திருக்கைக்காக அவன் திருநாமத்தைச்சொல்லுதல்மாத்திரத்தால் உயிர்வாழ்தலை, ஆழ்வார் அன்பர்க்கு உரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். 'கருக்காய் கடிப்பவர்போல' என்ற உபமானத்தால், இதில் அதிருப்தி விளங்கும்.

இருக்கு - ருக் என்னும் வடசொல்லின் திரிபு, ருக் என்பது - வேதங்களுக்குப் பொதுப்பெயரும், ஒருவேதத்துக்குச் சிறப்புப்பெயருமாக வழங்கும். ஒருக்கா - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம் [ஒருக்காமல்],

* திருநெடுந்தாண்டகம் - ௧௩
† ,, ௧௪.
‡ ,, ௧௫.

இதில், ஒருங்கு என்பதன் பிறவினையான ஒருக்கு - பகுதி. வினையொடும், எம்மொடும் - உருபுமயக்கம் ஏ - ஈரக்கம்

'அவர்வொருக்கவினையொடும் எம்மொடும் நொந்து' - சப்தாதி விஷயங்களிலே யுண்டான அவர்வைப் பகவத்விஷயத்திலே ஒருங்கப்பண்ணவொட்டாத பாபத்தோடும் அதனையனுஷ்டித்த என்னோடுங் கூட நொந்து, இப்படியேயிருப்பதொரு பாபம் உண்டாவதே! இதனையனுஷ்டிக்கைக்கு நான் உண்டாவதே! என்று நொந்து', 'அன்றிக்கே, பகவத்விஷயத்திலபிநிவேசத்தை அங்குநின்று மீட்டு இதரவிஷயங்களிலே மடைமாறவொட்டாத வினையுண்டு - பகதி, அத்தோடும்', 'கனியின்மையின் கருக்காய் கடிப்பவர்போல - அவனைக் கண்ணாலே கண்டு கையாலே யணைக்க ஆசைப்பட்டவர் அவன்பேரைக்கொண்டு என்செய்வார்?' என்பன, பெரியவாச்சான்பிள்ளைவியாக்கியானம்.

## தலைவிநோக்கின்வாசிகண்டு தலைவன் குறிப்பறிந்து உரைத்தல்.

௩௫. கற்றுப்பிணைமலர்க்கண்ணின்குலம்வென்றோரோகரும
முற்றுப்பயின்றுசெவியொடுசாவியுலகமெல்லா
முற்றும்விழுங்கியுமிழ்ந்தபிரானார்திருவடிக்கீ
ழுற்றுமுறாதுமிளிர்ந்தகண்ணாயெம்மையுண்கின்றவே.

(இ - ள்) கன்று பிணை - இளமையான பெண்மான்களுடைய, மலர் கண்ணின் - பரந்த கண்களின், குலம் - சாதியை, வென்று - சயித்து,— ஓரோ கருமம் உற்று - ஒவ்வொரு காரியத்திலே பொருந்தி, பயின்று - (அக்காரியத்திலே) பழகி, செவியொடு உசாவி - (அக்காரியத்தைக்) காதுகளோடு வினாவி யாலோசித்து,— உற்றும் உறாதும் மிளிர்ந்த - (எமக்கு) அனுகூலமாயும் பிரதிகூலமாயும்தடுமாறுகிற, கண் ஆய - கண்களாய,—(இவை),—உலகம் எல்லாம் முற்றும் விழுங்கி உமிழ்ந்த பிரானார் திரு அடி கீழ் - எல்லாவுலகங்களையும் மிச்சமில்லாதபடி (பிரளயகாலத்தில்) வயிற்றினுட்கொண்டு (பின்பு) வெளியிட்ட எம்பெருமானது திருவடிகளின்கீழே [இவ்வுலகத்திலே யென்றபடி], எம்மை உண்கின்ற - எம்மை (த் தமக்குஉள்ளாம்படி) கவர்ந்துகொள்கின்றன, (எ - று)

'என்று தன்னை இவள் கண்களுக்கு ஆக்கிக்கொண்டமை சொன்னானாயிற்று' என்பர் அழகியமணவாளசீயர். 'கற்றுப்பிணைமலர்க்கண்ணின்குலம் வென்று' என்றது, இளமையான்பேடை மருண்டுநோக்கும் நோக்கத்தினும் இவள்நோக்கம் அழகிய தென்பதைக் காட்டும். தான் தலைமகளை நோக்காதபொழுது அவள் தன்னை மனத்திற் பொருந்திய காமக்குறிப்பு வெளியாம்படி அன்போடுநோக்குதலும், தான் அவளை நோக்கும்பொழுது அவள் நாணத்தால் தன்னை எதிர்நோக்காது பார்வையைப் பொதுநோக்காகப் பிறிதொருபொருளைப்பார்ப்பவள்போல வேறிடத்திற் செலுத்தலும், இங்ஙனம் அடிக்கடி பலகால் விரைவில் நிகழும்பொழுது அவள் கண்பார்வை காதளவுஞ்செல்லுதல் தான் கருதத்தொடங்கிய தொரு தொழிலைப்பற்றிக் காதை யடுத்து வினவி அதனோடு ஆராய்தல் போலுதலும் என்னும் இவற்றை 'ஓரோகருமம் உற்றுப் பயின்று செவியொடுசாவி' என்றதனால் வெளியிட்டான். ஒருபொருளிலும் பற்றில்லாமலிருந்தவ னொருவன் அத்தன்மையொழிந்து ஒருபொருளிலே பற்றுவைத்து அதிற்கருத்தூன்றி அவ்விஷயத்தைக்குறித்து அறிவுடையாரோடு ஆலோசித்து முடிவுசெய்யத் தொடங்குந் தன்மையை, இதுவரையிலும் பொதுநோக்கமுடைய கண்கள் தன்னிடத்தில் அன்புநோக்கம்வைத்து ஈடுபட்டு அத்தன்மையைக்குறித்துக் காதுகளோடு வினவலுற்றன என்று கண்களின்மேலேற்றிக் கூறினானென்க. குறிப்புநோக்கத்தைத் தனக்கு அநுகூலமாகவும், பொதுநோக்கத்தைத் தனக்குப்

பிரதிகூலமாகவும் கொண்டு 'உற்றும் உறாதும் மிளிர்ந்த' என்றார். உண்கின்ற - வசப்படுத்துகின்றன. இப்பாட்டு, நெஞ்சைநோக்கித் தன்னுள்ளே சொல்லியது. 'தலைமகள்நோக்கிலே ஈடுபட்ட தலைமகன் அக்கண்கள் தனக்குப் பாதகமாகிறபடியைப் பாங்கனுக்குச் சொல்லுகிறான்' என்றுங் கொள்வர். 'மலர்க்கண்' என்ற பாடத்துக்கு-மலர்போல மென்மையான கண் என்க. திரிவிக்கிரமாவதாரகாலத்தில் பூமிமுழுதும் அப்பெருமான் திருவடியின்கீழிட மானதனால், தனக்கு இவ்வுலகில் நிகழ்ந்த நிகழ்ச்சியை, பிரானார் திருவடிக்கீழ்நிகழ்ந்த தென்றான்.

ஆழ்வாரது ஞானத்திலே பாகவதர் ஈடுபட்டு உரைக்கும் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். 'கற்றுப்பிணை மலர் கண்ணின்குலம் வென்று' என்றதனால், சமுசாரமாகிற காட்டிலே திரிகிற பேதைமையுள்ள மிருகம் போலவாரது ஐம்புலவழியிற்பரவுகிற ஞானசாதியை மேம்பட்டிருக்கும் இவ்வாழ்வாருடைய ஞான மென்றபடி. 'ஓரோகருமமுற்றுப்பயின்று' என்றதனால் அந்த ஞானம் அறியத்தக்க பகவத்ஸ்வரூபம் முதலியவற்றிற் பொருந்தி ஊன்றி ஆராய்ச்சிசெய்து நிற்குந் தன்மையும், 'செவியொடுசாவி' என்றதனால் அந்த ஞானம் சிறந்த பிரமாணமான சுருதியோடு ஒத்திருத்தலும் தோன்றும் கீழ் *"எண்ணம்புகுந்து" என்றபடி மானஸாநுபவம் நடத்தலால் வந்த உறவும், †"கருக்காய்கடிப்பவர்போல" என்றபடி பூர்ணாநுபவம் பெறுமையாலுண்டான உறாமையும் என்னுமிரண்டும் 'பிரானார்திருவடிக் கீழுற்றும் உறாதும்' என்றதனாற் குறிப்பிக்கப்பட்டன. உலகமெல்லாம் முற்றும் விழுங்கி யுமிழ்ந்த பிரான் - ஸர்வரக்ஷகனான ஸர்வேசுவரன் 'மிளிர்ந்த' என்றது, எல்லாநிலையிலும் ஆழ்வாரது ஞானம் குவியாது விசாலித்துள்ளமையைக் காட்டும் 'எம்மை உண்கின்றவே' என்றதனால், இப்படிப்பட்ட ஆழ்வாருடைய ஞானம் தம்மை வசப்படுத்தினமையைச் சொன்னவாறு.

கன்று-இளமைப்பெயர், பிணை - பெண்மைப்பெயர், ‡"யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையு, மானோ டைந்துங் கன்றெனற் குரிய", §"புல்வாய் நவ்வி யுழையே கவரி, சொல்வாய் நாடிற் பிணையெனப் படுமே" என்பவற்றால், இச்சொற்கள் மானுக்கு உரியனவாத லறிக. கற்றுப்பிணை-மென்றொடர் வன்றொடராயிற்று. 'உண்கின்றதே' என்ற பாடத்துக்கு - கண்களென்கிற வியாஜமாய(க் கொடிய தொரு பொருள்) எம்மை நலிகிற தென்க. திருவடிக் கீழ் உண்கின்றன என இயையும். (௫௫)

## தலைவன் பாங்கனுக்குக் கழற்றெதிர்மறுத்தல்

௫௬. உண்ணாது றங்கா துணர்வுறுமெத்தனையோகியர்க்கும்
மெண்ணுயமிளிருமியல்வினவாமெரிநீர்வளிவான
மண்ணாகியவெம்பெருமான்றனதுவைகுந்தமன்னாள்
கண்ணாயருவினையேனுயிராயினகாவிகளே.

(இ - ள்.) எரி - அக்கினியும், நீர் - ஜலமும், வளி-வாயுவும், வான் - ஆகாசமும், மண் - பூமியும், ஆகிய - என்னும் பஞ்சபூதங்களின் வடிவமான, எம்பெருமான்தனது - எமது தலைவனான திருமாலினது, வைகுந்தம் - ஸ்ரீவைகுண்டத்தை, அன்னாள் - ஒத்த எப்பொழுதும் அநுபவிக்கத்தக்கவளான தலைமகளது, கண் ஆய-கண்களென்று பேராய, அருவினையேன் உயிர் ஆயின- தீர்த்தற்கரிய தீவினையுடைய எனக்கு உயிர்நிலையான, காவிகள் - செங்கழு

* திருவிருத்தம் - ௫௩. † திருவிருத்தம் - ௫௪.
‡ தொல்காப்பியம் - பொருளதிகாரம், மரபியல் - ௧௫.
§ " " " ௫௭.

நீர் மலர்கள்,—உண்ணாது - உணவுகொள்ளாமலும், உறங்காது - தூக்கங்கொள்ளாமலும், உணர்வு உறும் - (எப்பொழுதும் தியானரூபமான) ஞானத்திற் பொருந்தின, எத்தனை யோகியர்க்கும் - மிக்க யோகநிலையையுடைய முனிவர்க்கெல்லோர்க்கும், எண் ஆய - (அவ்யோகத்தைவிட்டு எப்பொழுதும்) நினைக்கத்தக்கவையாய், மிளிரும் - பிறழ்ந்துதோன்றுகிற, இயல்வின ஆம் - தன்மையையுடையவையாம்; (எ - று)

துறையிலக்கணம், ருள - ஆம் பாட்டில் விவரிக்கப்பட்டது. இது, 'தலைவன் உளந்தளர்ந்துரைத்தல்' என்றுங் கூறப்படும் தன்றுறைகாணப்பட்டவளது கண்களின் அழகு, இவ்வுலகப்பற்றை நீத்து உணவுஉறக்கங்களைக் கைவிட்டு யோகநிலையிற்பயின்று அதில் தேர்ந்தவரையும் வசப்படுத்தவல்லது என்றதனால், தான் அக்கண்ணழகில் ஈடுபட்டதைக்குறித்து நீ என்னைப்பழிக்க இடமில்லையென்று பாங்கனை நோக்கித் தலைவன் கூறியவாறு. இனி, இதனை, 'தலைமகளை இயற்கையிற்கலந்து பிரிந்த தலைவன் தன் உருவுதல் கண்டு வினவின பாங்கனைக்குறித்து உற்றதுரைத்த பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயர், 'யோகியர்க்கும் எண்ணுய மிளிரும் இயல்வின' என்றதை நோக்குமிடத்து, இப்பாட்டை உற்றதுரைத்தலாகக் கொள்வதினும் கழற்றெதிர்மறுத்தலாகக் கொள்ளுதல் பொருத்தமெனத் தோன்றுகின்றது. *"மாலாயமதம்பொழிமாதங்கவானன் றெனமாறையன்றோ, சேலார் கருங்கண்ணுஞ் செங்கனிவாயுஞ் சிறிய நுண்ணேரா, நூலாம் நுடங்கும் பெருந்தனபாரமும் நுமையன்றி, மேலானவருங் கண்டா லுரைபார் நிகழ்ந்திரங்களே" என்பது கிழவோன் கழற்றெதிர்மறுத்தலாதல் காண்க. சிந்தாமணியிலும், கண்களை †"முனிவரையுமாலுறுப்ப" என்றமை அறிக

உற்பத்திக்கிரமம்பற்றி 'வானவளிஎரிநீர்மண்' என்றேனும், லயக்கிரமம்பற்றி 'மண்நீர்எரிவளிவான்' என்றேனும் கூறுதல் முறையாயினும், செய்யுளாதலின் ஐம்பெரும்பூதங்கள் முறைபிறழவைக்கப்பட்டன அவனை எப்பொழுதுங் கூடியிருக்கப்பெறும்பேறுபெறுமடி நோக்கினுபற்றி, 'அருவினையேன்' என்றான். அருமை - முடிவுகாணவொண்ணாமையுமாம் 'உயிராயின' என்றதனால், மிக்க அன்புக்கிடமாதலும் விட்டுப்பிரிந்திருக்கவொண்ணாமையுந் தோன்றும்

ஆழ்வாரது ஞானத்தின் சிறப்பைப் பாகவதர் அன்பர்க்குக் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். வெப்பமுண்டாக்கல், தண்மைவிளைத்தல், ஆறுதல்செய்வித்தல், இடங்கொடுத்தல், தாங்குவதாதல் என்னும் இவ்வாற்றாற் பிராணிகளுக்கு உதவுகிற பஞ்சமகாபூதங்களுக்கும் அந்தராத்மாவாய எமக்கும் தலைவனான சர்வேசுவரனது பரமபதம்போல அழிவற்றவரும் எப்பொழுதும் அநுபவிக்கத்தக்கவருமான ஆழ்வாரது ஞானமென்று பேராயப்பெறுதற்கரிய நல்வினையுடைய எமக்கு உயிர்போல அன்புக்கிடமாகவுள்ள மெல்லிய மலர்கள், (எமக்கேயன்றி) உண்ணுதல் உறங்குதலில்லாமல் எப்பொழுதும் நிரந்தராநுபவஞ்செய்கிற நித்யயோகத்தையுடைய நித்யசூரிகளுக்கும் எப்பொழுதும் அநுபவிக்கத்தக்கவையாய் விளங்கித்தோன்றும் இயல்புடையனவாம் என்பது பொருள். காணக ஞானவகைகளை 'காவிகள்' என்றது, யாவரும் மகிழ்ந்துசிரமேற்கொண்டுகொண்டாடத்தகுந் தன்மைபற்றி.

தலைவன் பாங்கனுக்குத் தன்வலியழி வுரைத்தல்

௩௭. காவியுநீலமும்வேலுங்கயலும்பலபலவென்
றாவியின்றன்மையள்வல்லபரிப்பசுரைச்செற்ற

---

* தஞ்சைவாணன்கோவை - சங

† சீவகசிந்தாமணி - நாமகளிலம்பகம் க௱அ.

மாவியம்புள்வல்லமாதவன்கோவிந்தனவேங்கடஞ்சேர்
தூவியம்பேடையன்னாள்கண்களாயதுணைமலரே.

(இ - ள்.) அசுரரை செற்ற - அசுரர்களை யழித்த, மா வியம் புள் வல்ல - பெரிய ஆச்சரியகரமான கருடப்பறவையை ஏறிநடத்துகிற, மா தவன் - திருமகள்கணவனும், கோ விந்தன் - பசுக்களைக் காப்பவனு மான திருமாலினது, வேங்கடம் - திருவேங்கடமாமலையிலே, சேர் - பொருந்திவாழ்கிற, தூவி அம் பேடை அன்னாள் - சிறகழகையுடைய அன்னப்பேடை போன்றவளது, கண்கள் ஆய - கண்களாகிய, துணை மலர் - ஒன்றோடொன்றொத்த இரண்டு தாமரைமலர்கள், காவியும் - (உத்தம விலக்கணமாகிய இரேகைகளின் செம்மையால்) செங்கழுநீரையும், நீலமும் - (கருநிறத்தால்) நீலோற்பலமலரையும், வேலும் - (கூர்மையாலும் ஒளியாலும் வருத்துதலாலும்) வேலையும், கயலும் - (குளிர்ச்சியாலும் பிறழ்ச்சியாலும் வடிவத்தாலும்) கயல்மீனையும், பல பல - (மற்றும் மருட்சி முதலியவற்றால் மற்றுங் கண்ணுக்கு ஒப்பாகின்ற மான்விழி முதலிய) மிகப்பல பொருள்களையும், வென்று - (தமக்கு ஒப்பாகாதபடி) சயித்து, பாரிப்பு - என்னை வருத்துதற்கு அடிகோலிய பரப்பு, ஆவியின் தன்மை அளவு அல்ல - (எனது) உயிரின்தன்மைக்கு ஏற்ற அளவல்ல.

யான் திருவேங்கடமலையிற்கண்ட மங்கையின் கண்கள் வருத்தத்தொடங்கிய அளவுக்கு என் உயிர் ஓர் ஈடாகா தென்று தலைமகன் தன்வலியழிந்தமையைப் பாங்கனுக்குக்கூறி வருந்தினான். கீழ்த் தலைமகன் கழற்றெதிர்மறுத்துரைத்து வருந்தக் கண்ட பாங்கன், 'ஒருகாலத்துங் கலங்காத உள்ளம் இவ்வாறு கலங்குதற்குக் காரணம் என்னோ?' என்று தலைவனுக்குக் கூற, அதற்குத் தலைவன் தன் ஆற்றாமை யுணர்த்தியது, இது 'கிழவோன் வேட்கை தாங்கற்கருமை சாற்றல்' என்பதும் இது. இனி, இதனை 'தலைமகள் கண்ணழகு கண்டு தலைமகன் வியந்துரைத்த பாசுரம்' என்று பொதுப்படக் கூறுவர் அழகியமணவாளசீயர் அது பொருந்துமேனும் உணர்க.

ஆழ்வாரது ஞானவிளக்கத்தைப் பாகவதர் அன்பர்க்கு எடுத்து உரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். துஷ்டநிக்கிரகசீலனும், கருடவாகநாரூடனும், உத்தமப்பிரமாண பரதிபாத்யனும், புருஷகாரஞ் செய்பவளான திருமகளுக்கு வசப்பட்டவனும், ஆத்மாக்களைப் பரிபாலிப்பவனு மான திருமாலினது போகஸ்தாநமாகிய பெரியதிருமலையில் ஈடுபாடுடையவர் ஆழ்வா ரென்பது, 'அசுரரைச்செற்ற மாவியம்புள்வல்ல மாதவன் கோவிந்தன் வேங்கடஞ்சேர்' என்றதனால் விளங்கும். சேர்தல் - இடைவிடாது நினைத்தல். 'தூவியம் பேடை யன்னாள்' என்றதனால் ஆழ்வாரது சுத்தஸ்வபாவமும், ஞாந அநுஷ்டாநரூபமான மேற்கதிசெல்லுங் கருவியிரண்டையு முடைமையும், பாரதந்திரியமும் குறிப்பிக்கப்பட்டன. 'வேங்கடஞ்சேர் தூவியம்பேடை' என்று அலர்மேல்மங்கையைச்சொல்லி, அவளோடே இவருடைய ஸ்வரூபத்துக்கு ஒப்புச்சொல்லிற்றாகவுமாம். கண்களாய துணைமலர் - தமக்கும் தம் அடியார்க்கும் துணையாகிற பரந்த ஞானவகைக ளென்க. அந்த ஞானத்துக்கு, காவியை வெல்லுதல் - செந்நிறத்ததாகிய ரஜோகுணத்தைக் கடத்தல். நீலத்தை வெல்லுதல் - கருநிறத்ததான தமோகுணத்தைக் கடத்தல். வேலை வெல்லுதல் - வெண்ணிறத்ததான சத்துவகுணத்தையுங் கடத்தல். கயலை வெல்லுதல் - இப்படி முக்குணங்களையுங் கடத்தலால் ஜடபதார்த்தங்களிற் சேராமை; சஞ்சலத்தன்மையில்லாமையுமாம். பல பல வெல்லுதல் - மற்றும் பலபல பொருள்களினும் மிக்க மேம்பாடுடைமை. ஆவியின் தன்மை யளவல்ல பாரிப்பு - இந்த ஞானத்தின் மகிமைக்கு எம்மை வசப்படுத்துதல் ஒருபெரிதன்று என்க

'அல்ல' என்னும் எதிர்மறைக் குறிப்பு முற்று - ஐம்பால் மூவிடத்துக்கும் பொது. சூரனென்பது சூர் என விகாரப்படுதல் போல, அசுரரென்பது அசுரென விகாரப்பட்டது, தொகுத்தலென்னும் செய்யுள்விகாரம். 'அசுரர்ச்செற்ற' என்ற பாடமுங் கொள்ளலாம். வியம்புள் - வியப்புள் என்பதன் மெலித்தல் 'வேங்கடங்கோ' என்றதனால், குறிஞ்சிநிலத்துத் தலைவியென்பது விளங்கும். அன்னப்பேடை - நடைக்கு உவமை. பேடு - பறவைப்பெண்மைப்பெயர். 'அசுரரைச்செற்ற மாவியம்புள் வல்ல மாதவன்' என்றது - பரத்வமும், 'கோவிந்தன்' என்றது - சௌலப்யமுமாம். (௬எ)

## காலமயக்கு ' காலம் இளையது என்றல்.

௬அ. மலர்ந்தேயொழிந்தில மாலையுமாலைப்பொன்வாசிகையும்
புலந்தோய்தழைப்பந்தர்தண்டுறநாற்றிப்பொருகடல்சூழ்
நிலந்தாவியவெம்பெருமான்றனதுவைகுந்தமன்னாய் [வே.
கலந்தாரவரவெதிர்கொண்டுவன்கொன்றைகள்கார்த்தன

(இ - ள்) பொரு கடல் சூழ் - அலைமோதுகிற கடல் சூழ்ந்த, நிலம் - நிலவுலகத்தை, தாவிய - அளந்தருளின, எம்பெருமான் தனது - எமக்குத் தலைவனான திருமாலினது, வைகுந்தம் - ஸ்ரீவைகுண்டத்தை, அன்னாய்-ஒத்து விளங்குகிறவளே! கலந்தார் வரவு எதிர்கொண்டு - (உன்னோடு)கலந்து பிரிந்து சென்றவரது வருகையை முந்தி எதிர்பார்த்து, வன் கொன்றைகள் - வலிய கொன்றைமரங்கள், கார்த்தன - கருவடைந்து அரும்பின, (அதுவேயொழிய), மாலையும் - மாலைகளையும், மாலை பொன் வாசிகையும் - பொன்னாலாகிய சுருள்மாலைவட்டத்தையும், புலம் தோய் தழை பந்தர் - (காண்பவரது) கண் மீட்டுவாங்கவொண்ணாதபடி பொருந்துமபடியான தழைகளாகிய பந்தலிலே, தண்டு-கொம்புகளிலே, உற - நெருங்க, நாற்றி - தொங்கவிட்டுக்கொண்டு, மலர்ந்தே ஒழிந்தில - முற்றும் மலர்ந்துவிட்டனவில்லை, (எ - று)

காலமயக்குத்துறை மீண்டுமீண்டும் வருதற்குக் காரணம்,முன்கூறப்பட்டது, வந்ததுறையே மீண்டும்வந்த வேறுசிலவற்றிற்கும் அது ஒக்கும். கார்காலத்திலேவருவேனென்று காலங்குறித்துச்சென்ற தலைமகன் அக்காலம்வந்தவளவிலும் தான்வாராதாக, கொன்றைமரங்கள் பூக்கத்தொடங்கியதை நோக்கிக் காலம்வந்தமையறிந்த தலைமகள் கலங்காநிற்க, அதுகண்ட தோழி,'கார்காலம்வந்ததன்று பிரிந்துசென்றதலைவரது வருகையை முற்பட எதிர்நோக்கிக்கொண்டு தம்துமகிழ்ச்சியால் கொன்றைகள் தாமாக அரும்பினறன,அதுவேயொழியக் காலம்வந்து நன்குமலர்ந்தனவில்லை'என்று காலத்தைமயக்கிக்கூறி அவளை ஆற்றுவிக்கிறாள்,*"காரென்று கலங்கும் ஏழிற்கண்ணிக்கு,இன்துணைத் தோழி அன்றென்று மறுத்தது" என்ற துறையிலக்கணங் காண்க. 'காலங்கண்டு இரங்கின தலைவியை 'காலம் இளையது'என்று ஆற்றின தோழிபாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும். 'கலந்துபிரிந்த தலைமகன் கொன்றைபூக்குங்காலத்திலே வருகிறேனென்று காலங்குறித்துப்போனான், அக்காலம்வந்து அவையும் பூக்கச்செய்தே அவன்வாராமையாலே,தலைமகள் தளர,அதனைக்கண்ட தோழியானவள்,அக்காலமல்லவென்னவொண்ணாதபடி அதுமுடுகிக்கொடுநிற்கையாலே,'இவை பூக்க உத்யோகிக்கிற இத்தனை,பூத்துச்சமைந்தனவில்லைகாண்,ஆனபின்பு அவனும் வந்தானத்தனை: நீ அஞ்சாதேகொள்'என்று அவளை ஆசுவசிப்பிக்கிறாள். அக்காலமல்லகாணென்னுமே தோழி, கெடுவாய,இவை இங்ஙனே மலராநிற்க,அல்லகாணென்னும்படி எங்ஙனேயென்ன, மலர உபக்ரமித்த இத்தனைகாண், மலர்ந்து

* திருக்கோவையார் - ௩௨௪, கொளு (பருவமன்றென்று கூறல்.

சமைந்ததில்லைகாண் என்கிறாள் என்றமைப்பினையுமே அறியத்தக்கது. கொன்றைப்பூப்பது கார்காலத்திலாதலை *"மடக்கொன்றை வம்பினைக் காரென வெண்ணி மலர்ந்தனவே" என்பதனாலும் அறிக. மாலைகளாகவும் பொன்மாலையாறச் சமைந்த வட்டம்போலே சுருளவும் கொன்றை பூத்தலால் 'மாலையும் மாலைப்பொன்வாசிகையும்' என்றும், தழைத்த மரங்களிலே கிளைகளில் அம்மலர் அடர்ந்து தொங்குதல் பந்தலிற் கொம்புகளினிடையிலே தொங்கவிட்டவைபோலுதலால் 'தழைப்பந்தர் தண்டுறநாற்றி' என்றுங் கூறினது. இத்தழையைக்கண்டக்கண் பிறிதொன்றிற் செல்லாமையால், 'புலந்தோய் தழை' எனப்பட்டது, †"கண்வாளறுக்குங் கமழ்தார்" என்றாற்போலக் கண் சிறைதவுறப்பாதலைப்பற்றி, 'புலம்' எனப்பட்டது, தாமரை 'மலர்' எனப்படுதல்போல. இனி, ஐம்புலன்களுக்கும் இனிய தழை யென்றுங் கொள்வர். இனி, புலந்தோய்தழை-நிலத்திலவந்துதோயும்படி கவிந்துசெழித்துள்ள தழை யெனினுமாம். வைகுந்தம் எம்பெருமானுக்கே உரியபொருளாதல் போலத் தலைமகனுக்கேயுரிய தன்மையுடையா யென்பாள், 'வைகுந்தமன்னாய்' என்றாள், இதனால், உன்னைப் பிரிந்து அவன் ஆற்றான் என்பதுந்தோன்றும். பிரிந்திருக்கிறநிலையில் 'பிரிந்தார்' என்றுகுறியாது 'கலந்தார்' என்றபெயரால் குறித்தது, உன்னோடேகலந்து உன்தன்மையையறிந்தவர் உன்னைவிட்டிருக்கமாட்டா ரென்று ஆற்றுகைக்காக. 'வரவெதிர்கொண்டு வன்கொன்றைகள் கார்த்தன' என்றதனால், வாசியறியாத தாவரங்களுங்கூட அவ்வரவிருப்பதைக்கண்டு அலராநிற்க நீ தளரலாமோ என்றபடி. நாம் மலர்த்தொடங்கினால் இவள் கலங்குவளே யென்னும் இரக்கமில்லாதன வென்பாள், 'வன்கொன்றைகள்' என்றாள், அன்றியும், 'அவன்வரில் அலர்க்கடவதாய் இல்லையாகில் தவிருமதாய் இப்படி அவன்வரவோடு தப்பாதன கொன்றைகள்' என்றுங் கொள்வர். கார்த்தன-கருங்கொண்டன, என்றதனால், அரும்பினநிலையையேயொழிய மலரின்நிலையை அடைந்தில வென்க. இதனால், காலம் இளைய தென்றவாறும். கார்த்தன என்பதற்கு- கார்காலத்தைக்காட்டாநின்றன என்று பொருள்கூறுதலும் உண்டு.

பகவானையும் பாகவதரையும் எப்பொழுதுஞ்சேர்ந்து அனுபவிக்கலாயிருக்க உரியகாலத்தில் அனுபவிக்கப்பெறாமையால் ஆழ்வார்க்கு உண்டான தளர்ச்சியை அன்பர்கள் ஆற்றுதல், இதற்கு உள்ளுறைபொருள். 'பொருகடல்சூழ்நிலந்தாவிய எம்பெருமானது வைகுந்த மன்னாய்' - சர்வேசுவரனுக்கே உரிய பொருளானவரே! என்று விளித்தபடி, இதனால், உம்மை அவன் ஆட்கொள்ளாதொழியான் என்றவாறும். 'கலந்தார் வரவெதிர்கொண்டு வன்கொன்றைகள் கார்த்தனவே' என்றதனால், எம்பெருமானது வரவுநோதலை முந்திச்சூசிப்பிக்கிற காலம் இது வென்றும், 'மலர்ந்தேயொழிந்தில மாலையும் மாலைப்பொன்வாசிகையும் புலந்தோய்தழைப்பந்தர் தண்டுறநாற்றி' என்றதனால், அவன் வருங்காலம் இன்னும் அணுகிற்றில்லை யென்றுங் கூறி ஆற்றியபடி. இப்பாட்டிற்கு ஸ்வாபதேசம் வேறுவகையாகவுங் கூறுவர்.

பந்தர் - போலி. நாற்றி, நால் என்பதன் பிறவினையான நாற்று - பகுதி, நால்ல - தொங்கல் று - பிறவினைவிகுதி. (௬௮)

மாலைப்பொழுது கண்டு மயங்கிய தலைவியைத் தோழி ஆற்றுதல்.

௬௯. காரேற்றிருள்செகிலேற்றின்சுடருக்குளைந்துவெல்வான்
போரேற்றெதிர்ந்ததுபுன்றலைமாலைபுவனியெல்லா

* இறையனாரகப்பொருளுரை, ௫௩-ஆஞ்சூத்திரத்தின்கீழ்க் கண்டது.
† சீவகசிந்தாமணி - பதிகம் - ௧௧.

*நீரேற்றளந்தநெடியபிரானருளாவிடுமே*
*வாரேற்றிளமுலையாய்வருந்தேலுன்வளைத்திறமே.*

(இ - ள்) கார் - கறுத்த, இருள் - இருளாகிய, ஏறு - எருதானது, செகில் - சிவந்த, சுடர் - சூரியனாகிய, ஏற்றிற்கு - எருதுக்கு எதிரில், உடைந்து - இளைத்து, வெல்வான் - (மீள) வெல்லும்பொருட்டு, போர் ஏறு - போர் செய்தலை யேற்றுக்கொண்டு, எதிர்ந்தது - வந்து எதிரிட்டது, புன் தலை மாலை - அற்பமான தன்மையையுடைய மாலைப்பொழுதிலே, நீர் ஏற்று புவனி எல்லாம் அளந்த நெடிய பிரான் அருளா விடுமே - (மாவலிகையால் தாரைவார்த்துத் தத்தஞ்செய்த) நீரை (கையில்) ஏற்று எல்லாவுலகங்களையும் அளந்துகொண்ட நீண்டவடிவமுடைய தலைவன் (உனக்கு) அருள்செய்யாதொழிவனோ? [ஒழியானென்றபடி], வார் ஏற்று இள முலையாய் - கச்சைமேலேற்றிக்கும்படி வளர்ந்த இளமைமாறாத தனங்களையுடையவளே! உன் வளை திறம் வருந்தேல் - உனது கைவளையின் தன்மைக்காக வருத்தப்படாதே, (எ - று)

பிரிந்தவர் வந்துசேர்தற்கு உரியதும் போகத்துக்குஉரியகாலமான இரவின் தொடக்கமு மாகிய மாலைப்பொழுது வரக் கண்டு, இன்னும்அவன்வந்திலனே யென்று தலைமகள் நோவுபட, அதுகண்ட தோழி 'இது நீ நினைக்கிற சந்தியாகாலம் வந்ததன்று, இருளாகிய கறுத்த எருதுக்கும் சூரியனாகிய சிவந்தஎருதுக்கும் போர் நிகழுகிறபடிகாண் நீநினைக்கின்றபடி உண்மையான மாலைப்பொழுதாயின், உலகமுழுவதையும் பாதுகாக்கும் அருளையுடைய தலைவன் உனக்கு அருள்செய்ய வாராதொழிவனோ? அவன் வாராமையாலும் இதனை மெய்யானமாலைப்பொழுதன்றென்று தெளிவாய், உன் கைவளைகள் கழலுதலைக்குறித்து நீ வருத்தப்படவேண்டா, அவை கழலவொண்ணாதபடி அவன் விரைவில்வந்தருளுவன்' என்று கூறி ஆற்றுவிக்கிறாள்.

கறுப்பெருந்தொன்றும் சிவப்பெருந்தொன்றும் தம்மிலெதிர்த்துப் பொருகையில் முந்திச் செவ்வெருதுக்குத் தோற்ற காரெருது பிந்தி அதனைவெல்ல எதிரிட்டதென்க. உருவகத்தை அங்கமாகக்கொண்டு வந்த **தற்குறிப்பேற்ற** **வணி**. மாலைப்பொழுது,முழுவெளிச்சமுமமுழுவிருளுமல்லாமல் இரண்டுங்கலந்துதோன்றுங் காலமாதலால், இங்ஙனம் வருணிக்கப்பட்டது, அதில் வரவர இருள் மேலிட்டுப் பகலொளிகுறைதலபற்றி, காலையிற் பகலுக்குத் தோற்ற இருள் இப்பொழுதுஅதனைவெல்லும்பொருட்டுவந்துமேலிட்டதெனக்குறித்தார். இருளையும்சுடரையும் 'ஏறு' என்றது, மேலெழுச்சியை யுடைமையால். மாலைப்பொழுது,பிரிந்து வருந்துவாரை மேலும் நலிகையால், 'புன்தலைமாலை' எனப்பட்டது, அன்றி,பகலுக்கும்இரவுக்குமிடையிலேமிகச்சிறுபொழுதாய் விரைந்துகழியுந்தன்மைய தெனினுமாம். 'நீரேற்று'என்பதற்கு - சத்தியலோகத்திற்சென்றதிருவடியை விளக்குதற்குப் பிரமன்சேர்த்த தீர்த்தத்தை அத்திருவடியிலேற்று என்றும் பொருள்கொள்ளலாம், *"தாரேற்ற வெண்குடை மாவலி வார்க்கவுந் தாமரைமேற், சீரேற்ற தொல் நான்முகத்தோன் விளக்கவுஞ் செம்பொன்முடிக்,காரேற்ற மேனி யரங்கேசர் கையுங் கழலு மொக்க, நீரேற்றன வண்திருக்குறளாகி நிமிர்ந்த வன்றே" என்றது, இங்கு அறியத்தக்கது. நெடியபிரான் - யாவரினும் மேம்பட்டவனெனினுமாம். 'தாமஸப்ரக்ருதிகளானார் மேலிட்டபுக்கால் வந்து உதவுமவன், தமஸ்ஸூத்தால் வந்து அபிபவிக்கப்புக்கால் விட்டிருக்குமோ?', 'தன் உடைமையைப் பிறர் என்தென்று அபிமானித்திருந்தால் தன்னை ஆர்த்தியாக்கி அவர்கள் பக்கலிலேயும் வந்து இரந்துகொள்ளுமவன், இரக்கவேண்டாதே தன்உடைமையேயான உன்னை விட்டிருக்குமோ?' என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம்,

* திருவரங்கத்துமாலை - நந.

இதுவுங் காணத்தக்கது. 'வாரேற்றுமுலை' என்பதற்கு-கச்சிலுமே லே தாயகவே ண்டிய தன்மையென்றும் உரைப்பர். 'வாரேற்றிளமுலையாய்' என்றது, இப்படிப் பட்ட அழகையும் இளமையையும் அவன் விட்டிருப்பானோ வென்ற குறிப்பு.

உரியசமயத்தில் எம்பெருமானை அல்லது பாகவதரைச் சேர்ந்து அனுபவிக்கப்பெறுமையால் தளர்ந்த ஆழ்வாரை அன்பர்கள் ஆற்றுவித்தல், இதற்கு உள்ளுறைபொருள். 'காரேற்றிருள்' என்றது - முன்பு இருந்த அஜ்ஞானத்தையும், 'செகிலேற்றின் சுடருக்கு உளைந்து' என்றது - பக்தி ரூபமான செவ்விய ஞானத்தால் அந்த அஜ்ஞானங் கழிந்ததனையையும், 'வெல்லவான் போரேற்று எதிர்ந்தது புன்தலைமாலை' என்றது - உரியகாலத்தில் அனுபவிக்கப்பெறுமையாலே இருந்தவிவேகமும் அழியும்படி மோகாந்தகாரம் மேலிடுந் தன்மையையுங் குறிப்பிக்கும். 'வாரேற்றிள முலையாய்' - அடக்கத்தற்கும் மறைத்தற்கும் அரிய பக்தியின் அபிவிருத்தியுடையவரே! என்று விளித்தபடி. 'வருந்தேல் உன் வளைத்திறம்' - இப்படிப்பட்ட பக்தி மிகுதியையுடைய உமது அடிமைத்திறங் குலையுமென்று வருந்தவேண்டா. 'புவனியெல்லாம் நீரேற்று அளந்த நெடியபிரான் அருளாவிடுமே' - தன்னோடு சம்பந்தமுள்ளாரைத் தானே வலிய இரந்துவந்து அடிமையாக்கிக் கொள்ளும் பெருமையையுடைய எம்பெருமான் உமக்கு அருள்செய்யா தொழியான் என்று ஆற்றியபடி.

புவனி - புவந மென்னும் வடசொல்லின் திரிபு. வாரேற்ற என்பது, கச்சையணிந்த எனினுமாம்; பெயரெச்சவீறு தொகுத்தல் விகாரம். விடுமே, ஏ - எதிர்மறை. (சுக)

## இரவின் நெடுமைக்குத் தலைவி இரங்கல்.

எ0. வளைவாய்த்திருச்சக்கரத்தெங்கள்வானவனார்முடிமேற்
றளைவாய்நறுங்கண்ணித்தண்ணந்துழாய்க்குவண்ணம்பயலை
விளைவானமிகவந்துநாடிங்களாண்டூழிநிற்கவெம்மை
யுளைவானபுகுந்திதுவோர்கங்குலாயிரமூழிகளே.

(இ - ள்.) வளை வாய் திரு சக்கரத்து - வட்டமான நுனியையுடைய அழகிய சக்கராயுதத்தையுடைய, எங்கள் வானவனார் - எங்கள் தலைவரும் பரமபதத்தி லெழுந்தருளியிருப்பவருமான பெருமானுடைய, முடிமேல் - திருமுடியிற் சாத்தியுள்ள, தளை வாய் நறு கண்ணி தண் அம் துழாய்க்கு - கட்டுவாய்ந்த பரிமளமுள்ள மாலைவடிவமான குளிர்ந்த அழகிய திருத்துழாய்க்கு (ஆசைப்பட்டு), வண்ணம் பயலை விளைவான் - (எமது) மாமைநிறம் மாறிப் பசலைநிறம் விளையும்படி, மிக வந்து - அடர வந்து, நாள் திங்கள் ஆண்டு ஊழி நிற்க - நாளாயும் மாதமாயும் வருடமாயும் கற்பமாயும் தோன்றினது தவிர, எம்மை உளைவான் புகுந்து - எம்மை முற்றமழிக்க நெருங்கி, இது ஓர் கங்குல் - இந்த ஒரு இராத்திரி, ஆயிரம் ஊழிகளே - ஆயிரங்கற்பமாகாநின்றது; (எ - று)

தலைமகனைப்பிரிந்து அப்பிரிவுத்துயரை ஆற்றுமல் பகலினும் இரவில் மிக வருந்தி அரிதிற் சிலநாள் கழித்த தலைமகள் அவ்வருத்தம் நாளுக்குநாள் மிகுதலால் இரவும் ஒருநாளைக்கொருநாள் மிகநீட்டித்ததாகத் தோன்றுதல் பற்றி, 'இதுக்குமுன்பு எனது நிறத்தை மாறுபடுத்துமபொருட்டு ஒருநாளாயும் ஒருமாதமாயும் ஒருவருடமாயும் ஒருகற்பமாயும் படிப்படியாகவளர்ந்து தோன்றி வருத்திவந்த இருள், இன்றைக்கு என்னைக் கொல்லும்பொருட்டு மிகப்பலகற்பங்களாகத் தோன்றி வருத்துகின்றது' என்று ஒருநாளிரவிற் கூறியது, இது.

எம்பெருமானைச் சேரப்பெற்றநிலையில் விளம்பம் பொறுக்கமாட்டாமையால் காலம் நீட்டித்ததாகத் தோன்ற வருந்துகிற ஆழ்வார் வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். தலைமைக்கு அறிகுறியான திருவாழியையும், ஜீவாத்மாக்களை அடிமையாகக் கொள்ளுதற்கு உரிய சம்பந்தத்தையும், உபயவிபூதியையும், அலங்காரத்தையுமுடைய எம்பெருமானது இனிமையை அனுபவிக்கப்பெறாமையாலே தன்மைகுலையும்படி எம்மை வருத்துவதாகக் காலம் வரையறையில்லாமல் வளர்கிறதென்று தளர்ந்து அருளிச்செய்தவாறு. 'எங்கள் வானவனார்' என்பதற்கு - பரமபதத்தினிடத்திற் பண்ணும் அபிமானத்தை அடியார்களாகிய எங்கள்பக்கல்லே பண்ணுமவனென்றும் பொருள் கூறுவர்.

'வளை வாய்த்திருச்சக்கரத்து' என்பதற்கு-சங்கத்தையும் கூரிய சக்கரத்தையு முடையவென்றும் உரைக்கலாம். மிக வந்து - ஒன்றுக்கொன்று மிகும்படி வந்து எனினுமாம். (எ0)

## செவிலிவெறுத்தலைத் தலைவி தோழியர்க்கு உரைத்தல்

எக. ஊழிகளாய் உலகேழுமுண்டானென்றிலம் பழங்கண், டாழிகளாம் பழவண்ணமென்றேற் கஃதேகொண்டன்னை, நாழிவளோவெனனுஞாலமுண்டான்வண்ணஞ்சொல்லிற்றென்னு, தோழிகளோவுரையீரெம்மையம்மனை சூழ்கின்றவே.

(இ - ள்) ஊழிகள் ஆய - காலங்களுக்குத் தலைவனாய, உலகு ஏழும் உண்டான் - (மகாப்ரளயகாலத்தின்முடிவிலே) ஏழுவகைப்பட்ட உலகமுழுவதையும் திருவயிற்றில் வைத்துக் காத்தருளியவன், என்றிலம் - என்று (யாம் தலைவனது பெயர் பெருமை தொழில் முதலியவற்றை வெளிப்படையாக) கூறினோமில்லை, கள் பழம் கண்டு - கள்பழத்தைப் பார்த்து, பழம் வண்ணம் ஆழி என்றேற்கு - இப்பழத்தின்நிறம் கடலின்நிறமென்று (குறிப்புப்பொருளொன்றுங் கருதாது இயல்பாகச்) சொன்ன எனக்கு, அஃதே கொண்டு - அந்தச் சொல்லையே பொருளாகக் கொண்டு, அன்னை - (எனது) தாய், இவளோ நாழ் என்னும் - 'இவளோ (என்சொற்கேளாது தன் நினைவின்படி) சுதந்திரமாய் நடக்குஞ் செருக்குடையள்' என்று (கடிந்துசொற்) கூறுவள், ஞாலம் உண்டான் வண்ணம் சொல்லிற்று என்னும் - உலகமுண்ட அத்தலைவனது நிறத்தைச் சொன்னவாறு (இது) என்று குற்றங் கூறுவள்; தோழிகளோ - தோழிகளே! எம்மை அம்மனை சூழ்கின்ற - எம்மை எமது தாய் மாறுபட நினைத்து ஏறிட்டுச் சொல்லுஞ் சொற்களுக்கு, உரையீர் - (நீங்கள் சமாதானஞ்) சொல்லுங்கள், (எ - று.)

'தலைவனடியான தலைவி தன்னுடைய தளர்த்தியை ஊடரலர் முதலான குறியாலே அறிந்து அன்னைமுனிந்த பாசுரத்தைத் தோழிமார்க்கு உரைத்து அவர்களாலே தெளிவித்த பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும். தலைமகனைக் களவொழுக்கத்தாற் புணர்ந்து பிரிந்து தலைமகள் வருந்துமளவில், அக்களவொழுக்கம் மெல்லப்புலனாய் ஊரெங்கும் அலர்பரவ, அதனை அறிந்த செவிலி 'இது குடிக்குக் குறையாம்' என்று கருதி இவளை நிர்ப்பந்தத்திலே வைத்திருக்க, அவளுக்கஞ்சித் தலைமகள் தனதாற்றாமையால் வாய்விட்டுக் கதறுதலொன்றுஞ் செய்யாது ஆற்றாமையை அடக்கிக்கொண்டிருக்க, அவ்வளவிலே சிலர் களாப்பழங் கொண்டு விற்க, அதனை நோக்கித் தலைமகள் 'இதன் நிறம் கடல்போ லுள்ளது' என்று பாராட்டிக்கூற, முன்னமே இவள்மேற் குறிவைத்துள்ள செவிலி 'இது தலைமகனது நிறத்தைப் பாராட்டிக் கூறியபடியாம்' என்று உட்கொண்டு 'இப்படியும் ஒரு அடங்காத தன்மை யுண்டோ?' என்று வெறுக்க, அதற்குக் கலங்கிய

தலைமகள், தோழியைநோக்கி, உள்ளொன்று வைத்துச் சொல்லவறியாத என்னது தன்மையை நீங்கள் அவனுக்குச் சொல்லிக் கோபந்தணிப்பீராக வென்று வேண்டினாளென விவரங் காண்க. இடையீடுகளால் தலைமகனை எய்தப்பெறாத தலைமகள், அவன் தன்னை வெளிப்படையாக விரைவில் மணஞ் செய்துகொள்ளல்வேண்டுமெனக் கருதி, அவன்சிறைப்புறத்தானாகுமளவில் தோழியர்க்குச் சொல்லுவாள்போன்று அலரறிவுறுத்தியும் தாயறிவுகூறியும் வரைவுகடாயது, இது. 'அலர்பரவத் தாய் வெறுக்க இருக்கிற இவ்வொழுக்கம் இனி ஆகாது, வரைந்துகொள்ளல் வேண்டும்' என வரைவு முடுக்கியவாறு.

ஊழிக ளென்ற பன்மை, காலத்தின் பகுப்புக்களைக் குறிக்கும். இனி, 'ஊழிகளாய்' என்பதற்கு - கல்பமும், அக்காலத்தில் அழிவுசெய்கிற கடல் நெருப்பு முதலியனவும் என்னும் இவற்றின் வடிவமாய் என்றும் உரைப்பர். 'என்றிலம்' என்றதனால், என்று சொல்லியிருந்தோமாயின் தாய்குறைகூறல் தகுதியே யென்றபடி. தோழிக ளென்ற பன்மையாலே, பலருஞ் சொல்லித் தெரிவிக்கவேணு மென்றபடி.

ஆழ்வார் எம்பெருமானிடத்தில் தமக்கு உண்டான ஈடுபாட்டின் மிகுதியால், அப்பெருமானது பயனாகிய வடிவத்தின் கடல்போலளவிடப்படாத பெருமையைப் பாராட்டி ஒருவார்த்தைசொல்ல, அதுகேட்ட ஞானிகள், அவ்வார்த்தைக்கு வேறுபொருள் சங்கித்து, சாதநாந்தரநிஷ்டையுடையார் போல உபாசனைக்கு உரிய தொரு காரணவடிவத்தைப் போற்றினதாக நினைத்து, அது தகுதியன்றென்று உபேக்ஷிக்க, அத்தன்மையை ஆழ்வார் தமது அன்பர்களுக்கு வெளியிட்டு, இவர்கள் என் நெஞ்சறியாமல் ஆரோபித்துச் சொல்லும் வார்த்தைக்கு என்னினைவறிந்த பழகிய நீங்கள் மறுமாற்றஞ் சொல்லி இவர்களைத் தெளிவிக்க வென்று அருளிச்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். ஊழிகளாய் உலகேழும் உண்டான் என்றிலம் - சாதநாந்தரநிஷ்டையுடையாரைப்போல உபாசனைக்கு உரிய காரணவடிவத்தைச் சொன்னோமில்லை, பழம் கண்டு ஆழி களாம்பழவண்ணம் என்றேற்கு - பயனாகிய வடிவத்தைக்குறித்து இவ்வடிவம் கடல்போலுமென்று கூறின எமக்கு, அஃதே கொண்டு - அந்தச் சொல்லிற்கே வேறுபொருள் கொண்டு, அன்னை - ஞானிகள், இவளோ நாழ் என்னும் - இவரோ பாரதந்திரமான சொரூபத்துக்கு விரோதமான ஸ்வாதந்திரியத்தையுடையா ரென்று குறையேறிட்டுச் சொல்வார்கள், ஞாலமுண்டான் வண்ணம் சொல்லிற்று என்னும் - உபாசனைக்கு விஷயமாகிற காரணவடிவத்தை யாம்கூறியதாகக் குற்றங்கூறுவார்கள், அம்மனை எம்மைச் சூழ்கின்ற - தாய்போலெம்மிடத்துப் பரிவுடையரான ஞானிகள் எமது சொரூபத்துக்கு எங்கே குறைபாடு வருகிறதோ வென்று ஏறிட்டுச் சங்கித்த சங்கைக்கு, தோழிகளோ உரையீர் - என் நெஞ்சறிந்த அன்பர்களே! நீங்கள் பரிகாரஞ் சொல்லித் தெளிவிக்கவேணும் என்று ஸ்வாபதேசங் காண்க. பிரபத்திமார்க்கத்தை யனுட்டிப்பவர் எம்பெருமானது பயனாகிய வடிவத்தையே கருதிப் பாராட்டக்கடவ ரென்றும், அதுவே முத்திபெறுதற்குச் சிறந்த வழியா மென்றும், உபாசனைக்கு உரிய காரணவடிவத்தையே பாராட்டி உபாசித்தல் முத்திபெறுவார்க்கு அத்துணையாகச் சிறவா தென்றும் அறிக.

நாழ் என்னுஞ் சொல் இப்பொருள்தருதலை *"நாமா மிகவுடையோம் நாழ்", †"நாழா லமர்முயன்ற வல்லரக்கன்" என்னுமிடங்களிலுங் காண்க; 'நாழ் என்கிற சொல் - நானென்று அபிமானிக்கைக்கும், பொல்லாங்குக்கும், நறுவட்டாணித்தனத்துக்கும் பேர்' என அவ்விடத்து உரைப்பர் அப்பிள்ளை:

* பெரியதிருவந்தாதி - ௧௦. † பெரியதிருவந்தாதி - ௧௧.

*"பலபல நாழஞ்சொல்லிப் பழித்த சிசுபாலன்" என்றவிடத்தில், இது, குற்றமென்ற பொருளில் 'அம்' சாரியை பெற்று வந்தமையுங் காண்க. இங்கே, நாழுடையா ளென்ற பொருளில் 'நாழ்' என்றது - உபசாரவழக்கு. 'நாழ் என்று - திறமுடைமை அத்தால் ஏற்றத்தைச் சொல்லுகிறது, இவள் எங்களின் ஏற்றம் பெற்றவளோ என்னுகின்றாள்' என்ற பெரிய பரகாலஸ்வாமி வியாக்கியானமும் அறியத்தக்கது.

இப்பாட்டில், ஆய்தம் உயிர்போ லொலித்தது, அலகிட்டுக்காண்க.

'நாழிவளோவென்னும் ஞாலமுண்டான்வண்ணஞ்சொல்லிற்றென்னும்' எனவும் பாடமுண்டு. (எக)

## இருளுக்கு ஆற்றாத தலைவி இளம்பிறைகண்டு தளர்ந்து உரைத்தல்.

எ௨. சூழ்கின்றகங்குற்சுருங்காவிருளின்கருந்திணிம்பைப்
போழ்கின்றதிங்களம்பிள்ளையும்போழ்கத்துழாய்மலர்க்கே
தாழ்கின்றநெஞ்சத்தொருதமியாட்டியேன்மாமைக்கின்று
வாழ்கின்றவாறிதுவோவந்துதோன்றிற்றுவாலியதே.

(இ - ள்) சூழ்கின்ற-(இடைவிடாது) சூழாநிற்கிற, கங்குல் - இராத்திரியினுடைய, சுருங்கா இருளின் - சுருங்காமற்பெருகுகிற இருளினுடைய, கருந்திணிம்பை - கறுத்த செறிவை, போழ்கின்ற-பிளக்கிற, அம் பிள்ளை திங்களும்- அழகிய இளஞ்சந்திரனும், போழ்க-(என்னையும்)பிளக்க, துழாய் மலர்க்கே தாழ்கின்ற நெஞ்சத்து - (தலைவனது)திருத்துழாய்மலரைப்பெறுதற்காக வேட்கைப்படுகிறமனத்தையுடைய, ஒருதமியாட்டியேன்-ஒருதுணையுமில்லாமல் மிக்கதனிமையையுடையேனான என்னுடைய, மாமைக்கு-(இயல்பான மேனி) நிறத்துக்கு, இன்று வாழ்கின்ற ஆறு - இப்பொழுது வாழ்க்கைநேரும்படி, வாலியது வந்து தோன்றிற்று - சுத்தமான இளம்பிறை வந்து தோன்றியது, இதுவோ - இப்படியோ? (எ - று)

தலைவனைப்பிரிந்தநிலையில் பகலினும் இரவில் இருளில் மிகவேதனைப்படுகிற தலைவி, அப்பொழுது இளம்பிறை தோன்றி அவ்விருளை அழிக்கத்தொடங்கியதை நோக்கி, இனி நமக்கு இருளினாலாகுந் துயரம் குறைவுபடுமென்று கருதி ஒருவாறு தணிந்திருக்கத் தொடங்கியவளவிலே, இளம்பிறையும் பிரிந்தார்க்குத் துயர்க்கேதுவான பொருள்களு ளொன்றாதலால், அது இவளை இருளினும் அதிகமாக வேதனைப்படுத்த, அதுநோக்கி அத்தலைவி இரங்கிக்கூறியது, இது எனக்குப்பகையாய்ச்சூழ்கிற இருளைப் பிளக்கிற பிறை, அவ்விருளின் ஒழிவுக்கு மகிழ்கிற என்னையும் பிளந்திடுவது, பிறைதோன்றியதைக் கண்டு இனி என் துயரங்குறைந்து இழந்தமாமைநிறத்தைப் பெற்று வாழ்வே னென்றுகருதிய எனக்குப் பிறைதோன்றியது இங்ஙனமோ முடிந்தது என்றாள்.

கருதியபடிபேறுகிடைத்திடாமையாலேயுண்டான மோகாந்தகாரமும் அதனையடக்கி மேலிடுவதான தத்துவஞானப்பிரகாசமும் இரண்டும் எம்பெருமானைச்சேராதநிலையில் தம்மை ஒன்றினுமொன்று மிகுதியாக வருத்தித் தமதுசொரூபத்தையும் அழிக்கவிருக்குந்தன்மையை ஆழ்வார் வெளியிடுதல், இதற்கு உள்ளுறைபொருள். சந்திரோதயமென்றது, விவேகத்தை.

வாலியது-வாலிமையென்னும் பண்பினடியாப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்பு வினையாலணையும்பெயர். இதுவோ வந்து தோன்றிற்று - இப்பிறையோ வந்துதோன்றியது; வாலியதே - இதன்தன்மை சீரிதாகவுள்ளது என்றுங் கொள்ளலாம், வாலியது என்றது, எதிர்மறையிலக்கணையால் வெறுத்தபடி. பிள்ளை - இளமைப்பெயர். திணிம்பு - வைரமுமாம். (எ௨)

* பெரியாழ்வார்திருமொழி - முப்பத்துமூன்றாந்திருப்பதிகம்-ரு.

### பிறையுடைமாலைக்காற்றாததலைவிதளர்ச்சிகண்டு பாங்கி யிரங்கல்.

எரு. வால்வெண்ணிலவுலகாரச்சுரக்கும்வெண்டிங்களென்னும்
பால்விண்சுரவிசுரமுதிர்மாலைபரிதிவட்டம்
போலுஞ்சுடரடலாழிப்பிரான்பொழிலேழளிக்குஞ்
சால்பின்றகைமைகொலாந்தமியாட்டிதளர்ந்ததுவே.

(இ - ள்) விண்-ஆகாயத்தில் நின்று, வால் வெள் நிலவு-மிகவும் வெளுத்த நிலாவாகிய, பால்-பாலை, உலகு ஆர சுரக்கும்- உலகமெங்கும் நிறையும்படி சுரந்துசொரிகிற, வெள் திங்கள் என்னும்-வெளுத்த சந்திரனாகிய, சுரவி-பசுவினது, சுர - சுரப்பு, முதிர் - மிகப்பெற்ற, மாலை - மாலைப்பொழுதிலே, தமியாட்டி தளர்ந்தது-(தலைவன்வாராமையாலே)தனிமையையுடைய இவள் தளர்ச்சியையடைந்ததன்மை,பரிதிவட்டம் போலும் சுடர் அடல் ஆழி பிரான் பொழில் ஏழ் அளிக்கும் சால்பின் தகைமை கொல் ஆம்- (இத்திங்களொளியைவிழுங்கவல்ல) சூரியமண்டலம்போலும் ஒளியையுடைய வலிய சக்கராயுதமுடைய அத்தலைவன் ஏழுவகைப்பட்ட உலகங்களையுங் காக்கிற அமைவின் பெருமையோ? (எ - று.)

மாலைக்கும் பிறைக்கும் வருந்தும்படி இவளைத் தனியேவிட்டிருத்தல், உலகமுழுதுங் காக்கும் அவனது சால்பின் தகுதிக்குச் சிறிதும் ஏலாது என்பதாம். நிலாவினிடத்துப் பாலின்தன்மையையும் அதனைவெளியிடுகிற அமிருதகிரணனான சந்திரனிடத்துப் பால்சுரக்கும்பசுவின்தன்மையையும் ஏற்றிக்கூறினது, உருவகவணி *"அருந்தவன் சுரபியே யாதி வானமா, விரிந்த பேருதயமே மடிவெண் டிங்களா, வருந்தலின் முலை கதிர் வழங்கு தாரையாச், சொரிந்த பா லொத்தது நிலவின் றோற்றமே" என இவ்வருணனை பிறவிடத்துஞ் சிறிதுவேறுபடக்கூறப்பட்டிருக்குமாறு உணர்க. உலகு ஆர - உலகமாகிய தாழி நிறையும்படி யென்க. விண்சுரவி - தெய்வப்பசு. பொழில் - உலகம். இனி, பொழில் - சோலையுமாம், எம்பெருமானுக்கு உலகங்களைச் சிங்காரப் பூந்தோட்ட மென்றலும் உண்டு †"பிரானே, பெய்த காவு கண்டீர் பெருந்தேவுடை மூவுலகே" என்பர் திருவாய்மொழியிலும்.

உரியகாலத்திற் பேறுகிடையாமையாலே ஞானவிளக்கமும் பாதகமாக ஆழ்வார் அடைந்த தளர்ச்சியைக் கண்ட அன்பர்கள் நொந்து உரைத்த வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள். பிரான் பொழிலேழளிக்குஞ் சால்பின் தகைமைகொலாம் தமியாட்டி தளர்ந்ததுவே- எம்பெருமானுக்கு இயல்பான ஸர்வரக்ஷகத்வமும் இவர்திறத்தில் நிகழாதொழிவதே' என்று சங்கித்தபடி. 'சால்வின்' என்ற பாடமுங் கொள்ளலாம்.

வால்வெள் - ஒருபொருட்பன்மொழி. சுரவி - ஸுரபி என்னும் வடசொல்லின் றிரிபு. சுர- சுரப்பு முதனிலைத்தொழிற்பெயர். பரிதி - வடசொல்.

இப்பாட்டுத் தாய்வார்த்தையென்றல்,அத்துணையாகச் சிறவாது. (எரு)

### தலைவனதுதுழாயிறபட்டதேன்றல் வரத் தலைவி மகிழ்ந்துரைத்தல்.

எசு. தளர்ந்துமுறிந்துமவருதிரைப்பாயற்றிருநெடுங்கண்
வளர்ந்துமறிவுற்றும்வையம்விழுங்கியுமால்வரையைக்
கிளர்ந்துமறிதரக்கீண்டெடுத்தான்முடிசூடுதுழா
யளைந்துணசிறுபசுந்தென்றல்வந்தோவந்துலாகின்றதே.

(இ - ள்) தளர்ந்தும் முறிந்தும் வரு திரை-(கொந்தளித்து விழுவதெழுவதாய்க்) கனத்தாலேதளர்ந்தும் காற்றாலேமுறிந்தும் வருகிற அலைக்கிள

* கம்பராமாயணம் - சுந்தரகாண்டம் - ஊர்தேடுபடலம் - ருசு.
† திருவாய்மொழி - ஐம்பத்துமூன்றாந்திருப்பதிகம் - ரு.

ரசியையுடைய திருப்பாற்கடலில், பாயல் - (ஆதிசேஷனாகிய) சயநத்தில், திருநெடுங்கண் வளர்ந்தும் - அழகிய நீண்ட திருக்கண்கள் உறங்கியும், அறிவுறும் - (அவ்வுறக்கத்தில் யாவும்) அறிந்தும், வையம் விழுங்கியும் - (பிரளயகாலத்திலே) உலகங்களை வயிற்றினுட்கொண்டு காத்தும், மால் வரையை கிளர்ந்து மறிதர கொண்டு எடுத்தான் - கோவர்த்தநகிரியை மேலெழுந்து குடையாகக் கவியும்படி பெயர்த்தெடுத்தும் உதவுகிற எம்பெருமானது, முடி சூடு துழாய் - திருமுடியிற் சூடியுள்ள திருத்துழாயை, அளைந்து உண் - அளாவியுண்ட, பசு சிறு தென்றல் - புதிய இளமையான தென்றற்காற்றானது, அந்தோ வந்து உலாகின்றது - மகிழ்ச்சியுண்டாம்படி (என்மேல்) வந்து வீசுகிறது; (எ - று.)

இங்ஙனம் தலைவனுடம்போடு சம்பந்தப்பட்ட பொருள் தன் உடம்பின் மீது வந்துபட்டுத் தனது பிரிவாற்றாமைத் துன்பத்தைச் சிறிது தணிப்பித்தலாலாகிய மகிழ்ச்சியைத் தலைவி தோழிக்கு உரைத்தாள். இனி, இதனை, வழக்கம் போலத் தென்றல்வரவுகண்டு அதற்கு வருந்தத்தொடங்கிய தலைமகளை நோக்கித் தோழி 'இதனை நீ வெறுந்தென்றலென்று கருதாதே; அவனுடம்பிற் பட்டு வருகிறது, இது இது, அவன்வரவுக்கு அறிகுறி' என்று கூறிச் சோகந்தணிக்கிறதாகவுங் கொள்ளுவர்.

ஹந்த என்னும் வடசொல் - மகிழ்ச்சி இரக்கம் துன்பம் முதலிய பொருள்களில் வருமென்று வடமொழி நிகண்டினால் தெரிகிறதனால், அதன் திரிபாகிய அந்தோ வென்பது, இங்கு மகிழ்ச்சிப்பொருளில் வந்ததெனக, 'அன்றே' என்று பாடமோதித் தேற்றமென்பாருமுளர்.

எம்பெருமானது தூக்கம் மற்றையோரது தூக்கம்போலத் தமோகுணகாரியமாய் உடம்பு தெரியாதுகொள்ளுந் தூக்கமன்றி, எல்லாப்பொருளையும் அறிந்துகொண்டே லோகரக்ஷணசிந்தனை பண்ணுந் தூக்கமாதலால், 'கண்வளர்ந்தும் அறிவுறும்' என்றார், இதுபற்றியே, அத்தூக்கம் - யோகநித்திரை, அறிதுயில், விழிதுயில், துயிலாத்துயில், பொய்யுறக்கம் எனப்படும். 'மறிதர' என்றதனால், பசுக்கள் எட்டிப் புல் மேயலாம்படி கோவர்த்தநமலையைத் தலைகீழாக எடுத்துப் பிடித்தமையுந் தோன்றும். சிறுதென்றல் - மந்தமாருதம்.

பிரிந்தநிலையில் ஆழ்வார் தாம் எம்பெருமானது கருணை தலைமை இனிமை என்னும் இக்குணங்களின் நடையாட்டத்தைக் கண்டு ஆறியிருக்குந் தன்மையை அருளிச்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். மற்றவை, வெளிப்படை. இனி, தோழிவார்த்தை யென்பார், அவன் அடியார்களைக் காக்கும்பொருட்டுக் கடலிலே அறிதுயில் கொண்டருளுதலும், பிரளயாபத்தில் உலகத்தை வயிற்றில்வைத்து நோக்குதலும், கோவர்த்தநோத்தாரணம்பண்ணினமையுமாகிய மகாகுணங்களைச் சொல்லி அன்பர்கள் ஆழ்வாரைஆற்றினதாக ஸ்வாபதேசங் கூறுவர். (௭௪)

• மதியுடம்படுக்கலுற்ற தலைவன் தலைவிதோழியரைப் பதிவினுதல்.

௭௫. உலாகின்றகெண்டையொளியம்பெம்மாவியையூடுருவக
குலாகின்றவெஞ்சிலைவாண்முகத்தீர்குனிசங்கிடறிப்
புலாகின்றவேலைப்புணரியம்பள்ளியம்மானடியார்
நிலாகின்றவைகுந்தமோவையமோநுந்நிலையிடமே.

(இ - ள்.) உலாகின்ற - (காதளவுஞ் சென்று மீண்டு) உலாவுகிற, கெண்டை - கெண்டைமீன்வடிவமான, ஒளி அம்பு - ஒளியையுடைய (கண்களாகிய) அம்புகள், எம் ஆவியை ஊடு உருவ - எமது உயிரை ஊடுருவித் துளைக்கும்படி, குலாகின்ற - (அவ்வம்புகளை எய்தற்கு) வளைகிற, வெம் சிலை-

(புருவமாகிய)கொடிய வில்லையுடைய, வாள் முகத்தீர்- ஒளியுள்ள முகமுடையவர்களே! குனி சங்கு இடறி - வளைந்தவடிவமுள்ள சங்குகளைக் கொழித்து எழுந்து, புலாகின்ற - மற்றியகந்தம் வீசப்பெற்ற, வேலை - அலைக்கிளர்ச்சியையுடைய, புணரி-கடலை,அம பள்ளி-அழகிய படுக்கையிடமாகவுடைய, அம்மான் - யாவர்க்குந்தலைவனான எம்பெருமானது, அடியார் நிலாகின்ற - பக்தர்களான நித்யமுக்தர் விளங்கிவாழப்பெற்ற, வைகுந்தமோ - ஸ்ரீவைகுண்டலோகமோ, வையமோ - இந்தநிலவுலகமோ, நும நிலை இடம் - உங்களது இருப்பிடம்? (எ - று)

இவ்வுலகத்தவரினும் இவர்களது வடிவழகு மிகவேறுபட்டுச் சிறந்திருத்தலால் 'வைகுந்தமோ' என்றும்,இவர்களைக் கண்டது இவ்வுலகத்திலாதலால் 'வையமோ' என்றும் விகற்பித்து வினவினன். *"ஊரும் பேருங் கெடுதியும் பிறவும், நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித்,தோழியைக் குறையுறும் பகுதியும்" என்றபடி தலைவியுந் தோழியும் ஒருங்கிருந்த சமயம் நோக்கித் தலைவன் அங்குச்சென்று தன் கருத்தைக் குறிப்பிப்பதற்கு ஒரு வியாஜமாக ஊர் வினவியது, இது. 'தலைவன் பாங்கியுடன் தலைவியை எதிர்ப்பட்டு ஈடுபட்டு வியந்துஉரைத்த பாசுரம்' என்பர் அழகியமணவாளசீயரும். †"பதியொடு பிறவினைய மொழிபல மொழிந்து, மதியுடம் படுக்க மன்னன் வலிந்தது" என்பதுங் காண்க.

ஆழ்வாரது சொரூபத்தைக் கண்டு ஈடுபட்ட பாகவதர் அவரையும் அவரோடொத்த அவரது அன்பரையும் நோக்கி 'நுமது இடம் அந்த நித்யவிபூதியோ, இந்த லீலாவிபூதியோ?' என்று வியந்துரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். உலாகின்ற கெண்டை ஒளி அம்பு எம் ஆவியை ஊடுருவக் குலாகின்ற வெஞ்சிலை வாள்முகத்தீர் - பரந்த குளிர்ந்த நுண்ணிய விளக்கமுடைய உமது ஞானத்தை எமது நெஞ்சிலே பதியும்படி செலுத்தும் முகமலர்ச்சியுடையவரே! என விளித்தபடி. குனிசங்கிடறிப் புலாகின்ற வேலை புணரி அம் பள்ளி அம்மான் அடியார் நிலாகின்ற வைகுந்தமோ - அடிமைக்கு உணர்மாகிய சுத்தஸத்வபாவமுடையாரைக் கீழ்ப்படுத்தித் தனது தூக்குணமே மிகுக்குஞ்சும்படியான மேலெழுச்சியையுடைய சம்சாரசாகரத்தைக் கைவிடாமல் அடக்கி அதன்மேலேயிருக்கிற எம்பெருமானது நித்யமுக்தர் வசிக்கும் நித்யவிபூதியோ, வையமோ - இந்த லீலாவிபூதியோ, நும நிலையிடம்- உமது இருப்பிடம்? ஆழ்வார், ஞானமுதலியவற்றின் மகிமையால் முக்தரென்று சொல்லும்படியும், அங்குநின்றுஇங்குவந்தவரொருவரென்று சொல்லும்படியும் உள்ள தன்மை, இப்படி விகற்பித்து வினவுதற்குக் காரணம், அன்றியும், பூர்ணாநுபவங் கிடைக்கப்பெறுமையால் இவர் இவ்வுலகத்தவரோ என்றும், ஸம்ஸார சம்பந்தம் இல்லாமையால் அவ்வுலகத்தவரோ என்றும் சங்கை நிகழ்ந்ததெனக்.

கையிற்கொள்ளும் வில்லம்புகளால் வருத்தும் உலகவியல்புபோலன்றி, முகத்திற்கொண்ட வில்லம்புகளால் வருத்துஞ் சிறப்புத் தோன்ற, 'வாள் முகத்தீர்' என்றான். அம்பு, சிலை - உவமவாகுபெயருமாம். புணரி - (நதிகளோடு) புணர்தலையுடையது,இ-கருத்தாப்பொருள்விகுதி. புலாகின்ற-சத்திக்கிற என்றும், சங்கின் வெள்ளொளியால் எப்பொழுதும் விடிந்தாற்போல விளங்குகிற என்றும் உரைப்பர். வேலை - கரையமைதியுமாம் திருப்பாற்கடலிலும் ஒவ்வொருகடலிலும் பிரளயக்கடலிலும் திருமால் பள்ளிகொண்டருளுகின்றன னென்று நூல்கள் கூறும். அம்மான் - அப்படிப்பட்ட மஹான் வாள் - ஒளியை உணர்த்துகையில், உரிச்சொல். (எரு)

* தொல்காப்பியம் - பொருளதிகாரம் - களவியல் - கக.
† திருக்கோவையார் - ருரு. பதிவினுதல்; (கொளு.)

தலைவனதுமாலைபெறுதுவருந்துந்தலைவி மதிக்குஇரங்கி நெஞ்சோடுகூறல்.

எசு. இடம்போயவிரிந்திவ்வுலகளந்தானெழிலாரதண்டுழாய
வடம்போதினையுமடநெஞ்சமேநங்கள்வெள்வளைக்கே
விடம்போலவிரிதலிதுவியப்பேவியலாறுமரையின
றடம்போதொடுங்கமெல்லாம்பலலாவிசுகுமவெண்டிங்களே.

(இ - ள்) இடம் போய விரிந்து - எல்லாவிடங்களிலும் போய வளா ந்து, இ உலகு அளந்தான் - இந்தஉலகத்தை அளந்துகொண்டவனுடைய, எழில ஆர தண துழாய போது வடம - அழகு நிறைந்த குளிர்ந்த திருத்துழாய் மலர்மாலையைப் பெறும்பொருட்டு, இனையும - வருந்துகிற, மட நெஞ்சமே - பேதைமையுடைய மனமே! வியல தாமரையின தட போது ஒடுங்க மெல ஆமபல அலாவிக்கும வெள் திங்கள - சிறந்த பெரிய தாமரை மலா குவியப புலவிய ஆமபலை அலரச்செய்கிற வெள்ளிய சந்திரன், நங்கள வெள் வளைக்கே விடம போல விரிதல இது-நமது வெளுத்த வளைகளைக் கழல விததறகாகவே விஷம்போல ஒளிபரவுத லாகிய இது, வியப்பே - ஓர ஆசச ரியமோ? (எ - று)

சந்திரன், சிறப்பில்லாத ஆமபலினிடத்து அன்புவைத்து அதறகு மகிழ சசிதந்து சிறந்த தாமரையை அழிக்கும அறபகுணமுடையவ னாதலால், அவன் நமது அழகிய கைவளைகளை அழியசசெய்தல ஒரு வியப்பனறு என்ப தாம. இது, சந்திரோபாலமபனம. தாமரைக்குத தலைவனான சூரியன கண மறைந்தவிடத்து அததாமரையை வருத்துகிற இவனுக்கு, தலைவனைப்பிரிந்த எமமை வருத்துதல இயல்பே என்றவாறு 'வெண்டிங்கள' என்றது, அவ னது சிறந்த அறிவினமையையுங் காட்டும,'வெணமையாவது - அறிவுமுதிரா மை' கிட்டுதறகரியபொருளிற பறறுவைததோடு அபபறறை என்றும விட மாட்டாமல வீணே வருந்துவ தெனபது தோன்ற,'மடநெஞ்சமே' என்றாள. விரிந்த என்னும பெயரெச்சம ஈறுதொக்க தெனக்கொண்டு,'இடம்போயவிரி ந்திவ்வுலகு' என்பதறகு - இடம்பரந்த உலக மென்று உரைப்பாரும உளா போதில னையும எனவும பிரிக்கலாம,பொருள இதுவே.'விடம்போல விரிதல' என்றது,நிறமபறறியன்று, வருத்துந்தன்மைபறறி வியப்பே, ஏ- எதிமறை.

பேறுபெறுத நிலையில தமக்கு உண்டான விவேகமும பிரதிகூலமாய வருத்துந தனமையை ஆழவாா தமது திருவுள்ளததை நோக்கிக் கூறுதல, இதறகு உள்ளுறைபொருள். இடம்போயவிரிந்திவ்வுலகளந்தா னெழிலாா தணடுழாயவடம்போ தினையு மடநெஞ்சமே- ஸாவசுலபனான ஸர்வேசுவரனு டைய இனிமை முதலிய குணங்களில ஈடுபட்டுப பூர்ணாநுபவங்கிடையாமை யைபபறறி வருந்தும இளமனமே! வியல தாமரையின தட போது ஒடுங்க மெல ஆமபல அலாவிக்கும வெள திங்கள் - சிறந்த பொருள்களை வெளிக காட்டாமல இழிந்த பொருளகளை வெளிக்காட்டுகிற விவேகம,நங்கள் வெள வளைக்கே விடம்போல விரிதல இது - நமது சுத்தமான அடிமைத்தன்மை யையும குலைப்பதாகப பரவுகிற இது, வியப்பே - ஆச்சரியமோ? என்று வரு நதியுரைததன ரென்க. (எசு)

மாலைப்பொழுதுக்கு ஆற்றுத தலைவி இரங்கல்.

எஎ. திங்களம்பிள்ளைபுலம்பதன்செங்கோலரசுபட்ட
செங்களம்பற்றிநின்றெள்குபுன்மாலைதென்பாலிலங்கை
வெங்களஞ்செய்தநம்விண்ணோர்பிரானார்துழாய்துணையா
நங்களைமாமைகொளவான்வந்துதோன்றிநலிகின்றதே

(இ - ள்) திங்கள் அம் பிள்ளை புலம்ப - பிறைச்சந்திரனாகிய அழகிய தனது இளம்பிள்ளை (தந்தையை இழந்து) தனிப்பட, செங்கோல் தன் அரசு பட்ட - சிவந்த ஒளியை எங்கும் தடையறச் செலுத்துதலாகிய செங்கோன்மையையுடைய தனது தலைவனான சூரியன் இறந்தொழிதற்கிடமான, செம் களம் - செவ்வானமாகிய (இரத்தத்தால்) சிவந்த போர்க்களத்தை, பற்றி - அடைந்து, நின்று - (நீங்கமாட்டாமல் அங்கு) நின்று, எள்கு - வருந்துகிற, புல் மாலை - சிறுமைப்பட்ட மாலைப்பொழுதாகிய பெண்பால், தென்பால் இலங்கை வெம் களம் செய்த நம் விண்ணோர் பிரானார் துழாய் துணை ஆ - தென்றிசையிலுள்ள இலங்கையைக் கொடியபோர்க்களமாகச் செய்த நமது தேவாதிதேவனான தலைவனது திருத்துழாயைத் தனக்குத் துணையாகக் கொண்டு, நங்களை மாமை கொள்வான் - நமது மாமைநிறத்தைக் கவர்ந்துகொள்ளுதற்கு, வந்து தோன்றி நலிகின்றது - எதிரில் வந்து தோன்றி வருத்துகின்றது, (எ - று.)

மாலைப்பொழுதை ஒரு மகளாகவும், அவளுக்குச் சூரியனைக் கணவனாகவும், அவர்களுக்குச் சந்திரனைப் பிள்ளையாகவும், சூரியனது சிவந்த கிரணங்களை அவனது செங்கோலாகவும், சூரியன் அஸ்தமித்தலை அக்கணவன் இறத்தலாகவும், சூரியன் அஸ்தமிக்கிற மேற்றிக்கிடத்தை அவனிறந்துவிழுந்தொழிந்த போர்க்களமாகவும், சூரியாஸ்தமனகாலத்து மேற்குத்திக்கில் அவன்கிரணசம்பந்தத்தால் தோன்றுகிற செவ்வானத்தை அவன் போரிற்பட்டு இறக்கையில் அவனிரத்தந் தெறித்த இடமாகவும் உருவகப்படுத்திய வாறு, இவ்வண்ணமே, கீழ் முப்பத்தைந்தாம்பாட்டிலும் வந்தமை காண்க. இப்படி கண்டாரிரங்கத்தக்க நிலைமையை யடைந்த மாலை, ஞாபகமூட்டுதலால் வருத்தப்படுத்துகிற திருத்துழாயைத் துணையாகக்கொண்டு தலைவியை வருத்துதலை, தனது மக்கள் தனிமைப்பட்டுத் தம் கணவனை யிழந்து வருந்திய தாடகை அகஸ்தியசாபத்தை உதவியாகக்கொண்டு முனிவர்களை எதிர்த்து வருத்துதல்போலக் கொள்க. புலம்புதலென்பது-தனித்தலென்னும்பொருளதாதலை, *"புலம்பே தனிமை" என்பதனால் அறிக. இனி, புலம்ப-வாட வென்றும், அழ வென்றும் உரைக்கலாம். மாலையிற்காணப்படும் பிறை ஒளிக்குறைவுடைமையை வாடுதலாகவும், அக்காலத்திற் பறவைகள் மிகுதியாக ஒலித்தலையாவது கடலொலியையாவது அழுகைக்குரலாகவுங் கருதுக. கணவனைப்பிரிந்த இவளுக்கு, கண்ணிற்காணும் பொருளெல்லாம் கணவனை யிழந்ததாகத் தோன்றுதலால், இங்கனம் கூறினாள். 'தென்பால்' என்றது, 'ஆரியர்கள் இகழ்ந்த மிலேச்சபூமியான தெற்குத்திக்கு' என்றவாறு; அத்திசையின் இழிவைக் குறிக்கு மென்பர் நம்பிள்ளை. இலங்கை வெங்களஞ்செய்த - லங்கையிலுள்ள அரக்கர்களை வேரறும்படி போர்செய்தழித்த என்றபடி, வெங்களஞ்செய்தல் - மயானமாக்கல் என்றும் உரைப்பர் 'ஒரு பிராட்டியைப் பிரிந்திருக்கமாட்டாமல் தாம் பெருமுயற்சிசெய்து கடல்கடந்து கொடும்பகையொழித்துக் கூடியருளியவர், இப்பொழுது எம்மை இங்ஙனம் உபேக்ஷிப்பதே!' என்ற இரக்கந் தோன்ற, 'தென்பாலிலங்கை வெங்களஞ்செய்த நம் விண்ணோர்பிரானார்' என்றாள். 'விண்ணோர் பிரானார்' என்றது, தேவர்களுக்குக் கொடுமைதீர்த்தவர் எமக்குக் கொடுமைதீர்த்திலரே யென்ற குறிப்பு.

. எம்பெருமானைச்சேர்ந்து அனுபவித்தற்குஉரியகாலம் சமீபித்து அவனது இனிமையைநினைப்பூட்டித் தம்மை வருத்தும் விதத்தை ஆழ்வார் அருளிச்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள் திங்களம் பிள்ளை புலம்பத் தன்செங்கோலரசுபட்ட செங்களம் பற்றிநின்று எள்கு புன்மாலை- தமக்கு உண்டான ஞானப்பிரகாசம் துயரமடையும்படி செவ்விதான மகாவிவேகமுங் குலைந்து பக்தி

* தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - உரிச்சொல்லியல் - ௩௩

யே விஞ்சி ஆற்றாமைவிளைக்கிற கொடிய இக்காலமானது, தென்பால் இலங்கை வெங்களஞ்செய்த நம்மிணைவரோபிரானார் துழாய் தன்னையா - துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலன சீலரான எம்பெருமானது இனிமையை நினைப்பூட்டிக் கொண்டு, நங்களை மாமைகொள்வான் வந்தும் தோன்றி நலிகின்றமை - எமது சொரூபத்தை மாறும்படி வருத்துகிறது என்க.

நங்களை - நங்களது, உருபுமயக்கம். (எஎ)

## பிரிவாற்றாத்தலைவி தலைவனாற்றலைக்கருதி நெஞ்சழிந்திரங்கல்

எஅ. நலியுநரகனைவீட்டிற்றுமவாணன் றிண்டோடுணித்த
வலியும்பெருமையும்யாஞ்சொல்லுநீர்த்தல்லமைவரைபோ
பொலியுமுருவிற்பிரானார்புனைபூந்துழாய்மலர்க்கே [று
மெலியுமடநெஞ்சினார்தந்துபோயினவேதனையே.

(இ - ள்.) (எமது தலைமகளார்), நலியும் நரகனை வீட்டிற்றும் - (உலகத்தை) வருத்துகிற நரகாசுரனைக் கொன்றதும், வாணன் திண் தோள் துணித்த வலியும் - பாணாசுரனது வலிய தோள்களை அறுத்துத் தள்ளிய வலிமையும், பெருமையும் - (அப்போரில் வெளிக்காட்டிய) தலைமையும், யாம் சொல்லும் நீர்த்து அல்ல - (எளியோமான) யாம் புகழ்ந்து சொல்லிமுடிக்குந் தன்மையன வல்ல, மை வரை போல் பொலியும் உருவின் பிரானார் - அஞ்சனகிரிபோல விளங்குகிற வடிவத்தையுடைய அத்தலைவரது, புனை பூந் துழாய் மலர்க்கே - சாத்திய அழகிய திருத்துழாய்ப்பூமாலையைப் பெறுதற்காகவே, மெலியும் - (ஆசைப்பட்டு) வருந்துகிற, மட நெஞ்சினார் - (எமது) அறியாமையுள்ள மனம், தந்து போயின - (தான் எம்மைவிட்டுப்போம்போது எமக்குக்) கொடுத்துவிட்டுப்போனவை, வேதனை - இத்துன்பங்கள், (எ - று.)

யான், எனது தலைவனது செயற்கரியசெயல்களையுந் தலைமையையும் நோக்கி, கிட்டுதற்கரியபொருளென்று கருதி ஒருவாறு காதலையடக்கி ஆறியிருக்குந்தன்மையேன் எனது மனமோ, அங்ஙனம் ஆறியிராமல் அவனது மாலையைப் பெறுதற்கு ஆசைப்பட்டு அது கிடையாமையால் எனக்கு இப்படிப்பட்ட வருத்தத்தை விளைத்துத் தான் அவனிடம் போய்விட்டது என்று இரக்கத்தோடு உரைத்தாள். நரகாசுரனைக்கொன்று பதினாறாயிரத்தொரு நூறு கன்னிகைகளை மணஞ்செய்துகொண்டவரும், பாணாசுரனது தோள்களைத் துணித்து அவன்மகளான உஷை தமது பௌத்திரனான அநிருத்தனை வெளிப்படையாக மணஞ்செய்துகொண்டு கூடி வாழும்படி செய்தவருமான தலைவர் அவர்பக்கற்காதலியாகிய என்னை வந்து அடைந்து இன்பமடைவிக்கவேண்டாவோ வென்பாள், அவ்விரண்டுவரலாறுகளையும் எடுத்துக் கூறினாள். 'பெருமை' என்றது, தாமே தேவாதிதேவரென்று தோன்றும்படி வெளியிட்ட வீரியசக்தியை.

நரகனை வீட்டின கதை — திருமால் வராகாவதாரஞ்செய்து பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்தபொழுது திருமாலினது பரிசத்தாற் பூமிதேவிக்குக் குமாரனாய்ப் பிறந்தவனும், அசமயத்திற் சேர்ந்து பெறப்பட்டதனால் அசுரத்தன்மை பூண்டவனுமான நரகனென்பவன், பிராக்ஜோதிஷமென்னும் பட்டணத்திலிருந்துகொண்டு சகலப்பிராணிகளையும் மிக உபத்திரவித்துத் தேவர் சித்தர் கந்தருவர் முதலானவர்களுடைய கன்னிகைகளையும் ராஜாக்களுடைய கன்னிகைகளையும் பதினாறாயிரம்பேரைப் பலாத்காரமாய் அபகரித்துக் கொண்டுபோய்த் தான்மணம்புணர்வதாகக் கருதித் தன்மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும், மந்தரகிரிசிகரமான இரத்தினபருவதத்தையும், தேவமாதாயான அதிதிதேவியின் குண்டலங்களையும் கவர்ந்துபோனதுமன்றி, இந்திரனுடைய ஐராவதயானையையும் அடித்துக்கொண்டு

போகச் சமயம்பார்த்திருக்க, அஞ்சி வந்து பணிந்து முறையிட்ட இந்திரனது வேண்டுகோளால், கண்ணபிரான், கருடனை வரவழைத்து, பூமிதேவியம்சமான சத்தியபாமையுடனே தான் கருடன்மேலேறி அந்நகரத்தையடைந்து சக்கராயுதத்தைப் பிரயோகித்து, அவன்மந்திரியான முரன் முதலிய பல அசுரர்களையும் இறுதியில் அந்நரகாசுரனையும் அறுத்துத் தள்ளி அழித்து, அவன் பலதிசைகளிலிருந்து கொண்டுவந்து சிறைப்படுத்தியிருந்த பதினாறாயிரத்தொருநூறு கன்னிகைகளையும் துவாரகையிற்கொண்டுசேர்த்து மணஞ்செய்துகொண்டன னென்பதாம்.

வாணன்திண்டோள் துணித்த வலியும் பெருமையு மென்றவிவரம்:—பலிசக்கரவர்த்தியின் சந்ததியிற் பிறந்த பாணாசுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள், ஒருநாள் ஒருபுருஷனோடுதான் கூடியிருந்ததாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிகுந்த ஆசைபெற்றவளாய், தன் உயிர்த்தோழியான சித்திரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள் மூலமாய் அந்தப்புருஷன் கிருஷ்ணனுடைய பௌத்திரனும் பிரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்த னென்று அறிந்துகொண்டு, 'அவனைப் பெறுதற்கு உபாயஞ்செய்யவேண்டும்' என்று அத்தோழியையே வேண்ட, அவள் தன் யோகவித்தைமகிமையினால் துவாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக் கொண்டுவந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அனுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளரால் அறிந்த அந்தப்பாணன் தன்சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து மாயையினாலே பொருது நாகாஸ்திரத்தினால் கட்டிப்போட்டிருக்க, துவாரகையிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்கள் எல்லாரும் கலங்கியிருந்தபோது, நாரதமகாமுனிவனால் நடந்தவரலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீகிருஷ்ணபகவான், பெரியதிருவடியை நினைத்தருளி, உடனேவந்துநின்ற அக்கருடாழ்வானது தோள்மேல் ஏறிக்கொண்டு பலராமன் முதலானாரோடுகூடப் பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே, அப்பட்டணத்தின் சமீபத்திற் காவல்காத்துக்கொண்டிருந்த சிவபிரானது பிரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து, பின்பு சிவபெருமானால் ஏவப்பட்ட தொரு ஜ்வரதேவதை மூன்றுகால்களும்மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக்காப்பாற்றும்பொருட்டுத் தன்னோடுயுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தை யுண்டாக்கி இதன்சக்தியினாலே அதனைத் துரத்திவிட்டபின்பு, சிவபிரானது அநுசரர்களாகையால் பாணாசுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்கினிதேவர்களைவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் நாசஞ்செய்து, பாணாசுரனோடுபோர்செய்யத்தொடங்க, அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் சுப்பிரமணியன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப்போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்திரத்தைப் பிரயோகித்துச் சிவனை ஒன்றுஞ்செய்யாமற் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்துபோம்படிசெய்து, சுப்பிரமணியனையும் கணபதியையும் உங்காரங்களால் ஓறத்து ஓட்டி, பின்னர், அநேகமாயிரஞ் சூரியர்க்குச் சமமான சுதர்சநமென்கிற தனதுசக்கரத்தை யெடுத்துப்பிரயோகித்து, அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையுஞ் சிதைப்பதாகவிருக்கையில், பரமசிவன் அருகில்வந்துவணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால், அவ்வாணனை நான்குகைகளோடுமுயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத் தொழுது அநிருத்தனுக்கு உஷையைச் சிறப்பாக மணம்புரிவிக்க, அதன்பின் மீண்டுவந்தன னென்பதாம்.

இத்தன்மையை *"வண்டுலாவு கோதைமாதர் காரணத்தினால் வெகுண்டு, இண்டை வாண னீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தநாள், முண்டநீறன்

* திருச்சந்தவிருத்தம் - ௭௪.

மக்கள் வெப்பு மோடி யங்கி யோடிடக, கண்டு நாலிவாணனுக் கிரங்கின
னம மாயனே" என்த திருமழிசையாழ்வாரும, *"கார்த்திகையானுங
கரிமுகத்தானுங கனலும முக்கண், மூர்த்தியும மோடியும வெப்பும முதுகி
ட்டு மூவுலகும, பூத்தவனே யென்று போற்றிட வாணன் பிழை பொறுத்த,
தீர்த்தன்" என்த திருவரங்கத்தமுதனாரும பாராட்டிக்கூறுமாறு காணக;
†"நோசரிந்தான் கொடிக்கோழிகொண்டான் பின்னும, நோசரிந்தான எரி
யும அனலோன் பின்னும, நோசரிந்தான் முக்கண மூர்த்தி கண்டா அப்பன,
நோசரிவாணன் திண்டோள கொண்டவன்றே" என்பா திருவாயமொழியிலும.

தன் அடியாரது விரோதிகளை அழிக்குங் குணம எமபெருமானுக்கு இய
லபாயிருக்கவும தாம அவனருளால தமது பிரதிபந்தங்கள ஒழிய அவனது
இனிமையை அனுபவிக்கப பெறுமல மனங்கலங்கி அதனால வருந்துந தன
மையை ஆழ்வார அருளிச்செய்தல, இதற்கு உள்ளுறைபொருள. நலியு நர
கனை வீட்டிற்றும வாணனை திண்டோள துணித்த வலியும பெருமையும யாம
சொலலும நீர்த்தலல - எமபெருமானது விரோதிநிரஸநசக்தியும பரத்வமகி
மையும எமபோலியாக்கு வரையறுத்துச்சொலலு மளவினவலல, வேதங்களு
க்கும எட்டாதவை யென்றபடி. மைவரைபோற பொலியும உருவின பிரானா
புனை பூந்துழாயமலாக்கே மெலியும மடநெஞ்சினா தந்துபோயின வேத
னையே - அவனைக்கிட்டி அனுபவிக்கபபெறாதவளவில, அழகிய வடிவமுடைய
அவனது மிக்க இனிமையில மனஞ் செலுத்துதலும, ஆற்றாமைத்துயரையே
மூட்டுகின்ற தென்றவாறு

வீட்டிற்று - உயிரவிடுவித்தது இறந்தகாலத தொழிறபெயா, விடு என்ப
தன் விகாரமாகிய வீடு எனபதன பிறவினையான வீட்டு-பகுதி, று-விகுதி இனி,
வீழ்த்திற்று எனபது வீட்டிற்று என மரூஉவாயிற றெனபாரு முளா. வீட்டி
ற்றும வலியும பெருமையும நீர்த்தலல - ஒருமைபபனமைமயக்கம, நீர்த்து-
நீாமை யென்னும பணபின அடியாப பிறந்த ஒன்றன்பாற குறிப்புமுற்று
தனித்தனி நீரது எனக்கொண்டு வழுவமைதி யாக்குக மை வரை - மேகம
படிந்த மலையுமாம நெஞ்சினா, இன-சாரியை. வேதநா-வடசொல, ஈறுதிரிந
தது 'வலியின பெருமையும' எனவும பாடம மடநெஞ்சு - விடாபபிடியுள்ள
மனமுமாம, மடமை-கொண்டது விடாமை. போயின - பெயா, முற்றும,
பெயரெச்சமுமாம். (எஅ)

தலைவனைப்பிரியாத மகளிரது சிறப்பைக் கூறித் தலைவி இரங்கல்.

எகூ. வேதனைவெண்புரிநூலனைவிண்ணோாபரவநினற
நாதனைஞாலமவிழுங்குமநாதனைஞாலநதத்தும
பாதனைபபாற்கடறபாமபணைமேறபளளிகொண்டருளுஞ
சீதனையேதொழுவாாவிண்ணுளாரிலுஞசீரியரே.

(இ - ள்) வேதனை- வேதமவலலவனும,வெண புரி நூலனை- சுத்தமான
யஜ்ஞோபவீத முடையவனும, விணணோா பரவ நின்ற நாதனை- மேலுலகத
தாா துதிக்க அவாகளுக்குத தலைவனாய நின்றவனும,ஞாலம விழுங்கும அநா
தனை- (பிரளயகாலத்திலே)உலகத்தை வயிற்றினுள வைத்து நோக்கி (அங்ங
னம தன்னை நோக்குதற்கு) ஒருதலைவனை யுடையனாகாதவனும, ஞாலம தத
தும பாதனை-உலகத்தைஅளந்த திருவடியையுடையவனும,பால கடல பாமபு
அணைமேல பள்ளி கொண்டு அருளும சீதனையே-திருபபாறகடலில திருவநந
தாழ்வானாகிய படுக்கையின்மேல யோகநித்திரை கொண்டருளுகிறகுளிர்நத

* இராமாநுசநூற்றந்தாதி - உஉ.
† திருவாயமொழி - அறுபததுநாலாகாநதிருப்பதிகம • அ

தன்மை யுடையவனு மான எம்பெருமானையே, தொழுவார் - இடைவிடாது வணங்கி யனுபவிக்கப்பெறறவா, வின உளாரிலும சீரியா - பரமபதததிலு ள்ளவர்களினுஞ் சிறப்புடையராவா; (எ-று.)

தலைமகனது பரத்தையிற்பிரிவிலே தனித்து மிக வருந்துகிற தலைமகள், தன்னை யாற்றுவிக்கிற தோழியை நோக்கி 'தலைமகனைப் பிரியாது அவனுடன் என்றுங் கூடி வாழ்பவா, முத்தியுலகத்துப் பேரின்பநுகாவாரினுஞ் சிறப்புடைய ராவா' என்ற இதனால், 'அப்படிப்பட்ட பாக்கியவிசேஷத்தைப் பெற்றா பரத்தையரே, யான் பெற்றிலேன்' என்று தன் ஆற்றாமைமிகுதியை வெளியிட்டனளென்க. இதனை 'பொதுப்படக்கூறி வாடியழுங்கல்' என்றுவது, 'தனிப்படாமிகுதி' என்றுவது கொள்க. இப்பாட்டில், 'பாற்கடற் பாம்பணைமேற் பள்ளிகொண்டருளுஞ் சீதன்' என்றதனால், திருமகளும் நிலமகளும் என்றும் பிரியாது திருவடி வருடிக் கூடிக் குலவி யின்புற அவர்களுடன் அறிதுயிலமருந் தன்மையைக் குறித்தது, அப்படிப்பட்ட இடையீடில்லாபபோகம் தனக்குக் கிடையாமையைப்பற்றி அழுக்காறும் வருத்தமுங் கொண்டபடி.

எம்பெருமான்பக்கல் ஈடுபாடுகொண்ட ஆழவா 'மற்றொன்றிற் சிந்தை செலுத்தாது அப்பெருமானையே திரிகரணங்களாலும் பூர்ணாநுபவஞ் செயயப்பெற்றவர், இவ்வுலகத்திலிருந்துகொண்டே நித்யசூரிகளினும் மேம்பட்டவராவா' என்று அருளிச்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். இதனால், அப்படிப்பட்ட அநுபவம் தமக்குக் கிடையாமையைப் பற்றி வருந்திய வாறு தோன்றும். இடைவிடாது பகவதநுபவமே செய்யு மிடமான அநத நித்ய விபூதியிலன்றி அதற்கு விரோதியான ஸம்ஸாரததி லிருந்துகொண்டே அவ்வனம நித்யாநுபவஞ்செய்பவரை நித்தியசூரிகளினுஞ் சீரிய ரென்னத் தட்டில்லையிறே.

வேதன்-வேதங்களாலே சொல்லப்படுபவனுமாம். வெண்புரிநூல்- வெண்ணிறமான முப்புரிநூல். வெண்புரிநூலன் - வைதிகபுருஷனென்கைக்கு அடையாளமான சுத்தயஜ்ஞோபவீதத்தை யுடையவன்; *"வேத முதல்வனை விளங்கு புரிநூலன்" என்பா திருமங்கையாழ்வாரும். ஞாலம் தத்தும் பாதன் - பூமி தோன்றுதற் கிடமான திருவடியுடையா னெனினுமாம்: ஆதியில் திருமாலின் திருவடியினின்று பூலோகம் உண்டாயிற்றென்று வேதசாஸ்திரம் கூறும்; †"வாழி திருவடியாய மண்ணுலகை" என்றா பிறரும்: ‡"மண் கழலில்" என்பதுங் காண்க. சீதனென்றது, அருளுடையா னென்னும் பொருளது; 'அந்தணா' என்பதில், 'தண்ணன' என்பதுபோல. (எக)

பிரிவாற்றுத தலைவி மாலைப்பொழுது கண்டு இரங்கல்.

அ0. சீரரசாண்டுதன்செங்கோலசிலநாள்செலீஇக்கழிந்த
பாரரசொத்துமறைந்ததுநாயிறுபாரளந்த
பேரரசேயெம்விசும்பரசேயெம்மைநீத்துவஞ்சித்
தோரரசேயருளாயிருளாயவந்துறுகின்றதே.

(இ - ள்.) சீர் அரசு ஆண்டு - சிறப்பாக இராச்சியத்தை ஆட்சிசெய்து, தன் செங்கோல் சில நாள் செலீஇ - தனது நீதிதவறாத ஆஜ்ஞையைச் சில காலம் (உலகத்திற்) செலுத்தி, கழிந்த - பின்பு இறந்தொழிந்த, பார் அரசு - உலகமுழுவதுங்காத்த ஒரு சக்கரவர்த்தியை, ஒத்து - போன்று, நாயிறு - சூரி

* பெரியதிருமொழி-ஏழுபத்துநான்காந்திருப்பதிகம்- உ.
† பெருந்தேவனார்பாரதம்- உத்தியோகபருவம்- கஉ.
‡ திருவரங்கத்துமாலை- அ.

யன், மறைந்தது - அஸ்தமித்தது, பார் அளந்த பேர் அரசே - உலகத்தை யளந்துகொண்ட சிறந்த தலைவனே! எம் விசும்பு அரசே - பரமபதத்துக்கு நாயகனான எம் கோமானே! எம்மை நீத்து வஞ்சித்த - எம்மைத் தனியேபிரித்து வஞ்சனைசெய்த, ஓர் அரசே - ஒப்பற்ற நாதனே! அருளாய் - (இங்ஙனம் நீங்கியிராதபடி எமக்கு வந்து) கருணைசெய்வாய்; (அங்ஙனம் கருணைசெய்யாதொழியில்), இருள் ஆய் வந்து உறுகின்றது - இருளா முன்னையளவினுமமிக்கதாய் வளர்ந்துகொண்டு வந்து சூழ்ந்து (எம்மை) வருத்துகின்றது, (எ-று.)—ஈற்று ஏகாரம் - இரக்கம்.

இது, உருவெளிப்பாட்டிற் கண்ணெதிர்ப்பட்ட தலைவனை நோக்கித் தலைவி கூறியது. சூரியன் உலகமுழுவதும் பகலெல்லாம் தடையறத் தனது செய்யகிரணத்தைச் செலுத்திப் பின்பு அப்பாற்சென்ற தன்மையை, 'சீரரசாண்டு தன் செங்கோல் சிலநாள் செலீஇக் கழிந்த பாரரசொத்து மறைந்தது நாயிறு' என்றாள். இப்பொழுது நீ என்னை வந்து சேர்ந்திடாயாயின், அரசனில்லாத இராச்சியத்திற் கணவனை இழந்த மகள் கொடியராற் படும் பாட்டையான் இருளினாற் படுவே னென்பது தோன்றும். இருளின்கையிலே யகப்பட்ட ஞாயிற்றையுந் தன்னையும் மீட்கைக்கு, மகாபலிகையிலே யகப்பட்ட உலகத்தை மீட்டவன் வேண்டுமென்பாள், பாரளந்த பேரரசை விளித்தாள். எம் விசும்பரசே - பரமபதத்தைப்போலவே எம்மையும் பிறர்க்கு உரியபொருளாகாதபடி ஆட்கொள்ளத் தக்கவனே யென்றபடி. முதலில் 'பிரியேன், பிரியில் தரியேன்' என்று சொன்னதும், பின்பு 'இன்ன காலத்தில் வருவேன்' என்று காலங்குறித்துக் கூறியதும் இரண்டும் பொய்யாம்படி தன்னைப் பிரிந்து சென்று நெடுநாள் வாராது விளம்பித்ததுபற்றி, 'எம்மை நீத்து வஞ்சித்த ஓரரசே' என்றாள். இவ்விடத்து 'ஓரரசே' என்றது, இப்படியும் ஒரு தலைவ னுண்டோ? என்று குறைகூறியபடி. 'எம்மைநீத்து வஞ்சித்த ஓரரசே' என்பதற்கு - 'என்னை உபேக்ஷித்து உன்னைக் காட்டாதிருக்கிற இந்த ஸ்வபாவத்திலே முடிசூடி யிருக்கிறவனே!' என்று விசேஷார்த்தம் உரைப்பர் அப்பிள்ளை. 'இருளாயவந்துறுகின்றதே' என்பதற்கு - 'ஊழியென்கிற பேராயத் தலைக்கட்டுகை தவிர்ந்து இருளாயே பாதகமாகாநின்றது' என்பதும், 'உறுகின்றதே' என்பதற்கு - 'இருள வந்து ஸ்பர்சிக்கப் புகாநின்றது, அதுக்கு முன்னே, இருளன்னமாமேனியைக்கொண்டுவந்து இடையிட்டுக் கலக்கவேணு மென்கிறாள்' என்பதும், பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம்.

எம்பெருமானைச்சேர்ந்து அநுபவிக்கப்பெறுமையாலே தமது விவேகப் பிரகாசங் குலைந்து மோகாந்தகாரம் மேலிடுகிறபடியை எம்பெருமானைக்குறித்து ஆழ்வார் விண்ணப்பஞ் செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். சீரரசாண்டு தன் செங்கோல் சிலநாள் செலீஇக் கழிந்த பாரரசொத்து மறைந்தது நாயிறு - சூரியப்பிரகாசமென்னலாம்படி உலகத்துக்கு வெளிச்சந்தருமாறு தமக்குச்சிலகாலமாயுண்டாகிநடையாடிக்கொண்டிருந்த விவேகம் பேறு கிடையாமையாற் குலைந்தது, பாரளந்தபேரரசே எம்விசும்பரசே - லீலாவிபூதிக்கும் நித்யவிபூதிக்கும் எமக்கும் ஒருநிகரான தலைவனே! எம்மைநீத்து வஞ்சித்த ஓர் அரசே - எம்மை சேர்த்துக்கொள்ளாது பிரித்துவைத்துக் கட்புலப்படாதுமறையு மொருதலைவனே! அருளாய் - எம்பக்கல் கருணைசெய்; செய்யாவாயாயின், இருள் ஆய் வந்து உறுகின்றது - மோகாந்தகாரம் மேலிட்டு வந்து சூழ்ந்து வருத்துகிறது என்க. 'இத்தால், ஸம்ஸாரத்திலிருப்புஅஜ்ஞானமேலிடும்படியிருக்கையாலேகடுகஇவ்விருப்பைக்கழித்துத்தரவேணுமென்று அருளிச்செய்கிறார்' என்பது, நம்பிள்ளையீடு.

செலீஇ - செலுத்தி; சொல்லிசையளபெடை: இங்கு அளபெடை அலகு பெறவில்லை. வஞ்சித்த என்னும் பெயரெச்சத்தி னீறு தொகுத்தல். (௪௦)

## வெறிவிலக்கத்தொடங்கிய தோழி இரங்கல்.

௮௬. உறுகின்றகன்மங்கண்மேலனவோர்ப்பிலராயிவளைப் [ய்த்
பெறுகின்றதாயர்மெய்ந்நொந்துபெறார்கொல்துழாய்க்குழல்வா
துறுகின்றிலர்தொல்லைவேங்கடமாட்டவுஞ்சூழ்கின்றில
ரிறுகின்றதாலிவளாகமெல்லாவியெரிகொள்ளவே.

(இ - ள்.) ஓர்ப்பு இலர் ஆய் - (இவளுக்கு நேர்ந்துள்ள நோயின் தன்மையையும் அதன் காரணத்தையும் அதனைத் தீர்க்கும் உபாயத்தையும்) ஆராய்ந்து தெளிதலில்லாதவர்களாய், உறுகின்ற - (இவள் தாய்மார் விடாமல்) பொருந்த நடத்துகிற, கன்மங்கள் - (வெறியாட்டு முதலிய) தொழில்கள், மேலன - மேன்மேல் உண்டாகாநின்றன; இவளை பெறுகின்ற தாயர் மெய் நொந்து பெறார் கொல் - இவளைப் பெற்றவளாகிற தாய்மார் உடம்பு வருந்திப் பெற்றாரில்லையோ? துழாய் குழல்வாய் துறுகின்றிலர் - (எம்பெருமானது) திருத்துழாயை இவள் கூந்தலிலே சூட்டுகின்றாரில்லை, தொல்லை வேங்கடம் ஆட்டவும் சூழ்கின்றிலர் - பழமையான திருவேங்கடமலையிலே (இவளைக்) கொண்டுபோய்ச் சேர்த்தற்கும் ஆலோசிக்கின்றாரில்லை; இவள் ஆகம் - இவளது உடம்பு, மெல் ஆவி எரி கொள்ள - மென்மையான உயிரை விரகத்தீக் கவர்ந்துகொள்ளும்படி, இறுகின்றது - முடிகிறவளவாகாநின்றது; (எ - று.) — ஏ - இரக்கம். ஆல் - அசை.

தலைமகள், திருமாலாகிய தலைமகனைவிஷயமான வேட்கைநோய் கொண்டு மேனிமெலிந்து வடிவுவேறுபட, அதுநோக்கிய தாய்மார், 'இது முருகக்கடவுள் ஆவேசித்ததனாலானது' என்று மாறாகத் துணிந்து, அதற்குப்பரிகாரமாக வேலனைக்கொண்டு வெறியாடுவித்தல், ஆடுபலிகொடுத்தல், களனிழைத்தல், இறைச்சிதூவல், கருஞ்சோறுசெஞ்சோறுவைத்தல் முதலியகாரியங்களை இடைவிடாது ஒன்றன்மேலொன்றாகச் செய்யத்தொடங்க, நோயொன்றும் மருந்தொன்றுமாதலால், தான்காதலித்ததலைமகனது தகுதிக்கு ஏலாத அச்செயல்களை நோக்கித் தலைமகள் மேன்மேல்மிகவருந்த, அதுநோக்கித் தலைவிநிலையறிந்து வெறிவிலக்கவந்த தோழி, அத்தாய்மார்கேட்க முன்னிலைப்படர்க்கையாகக் கூறியது, இது.

'உறுகின்றகன்மங்கள் மேலன ஓர்ப்பிலராய்' என்பதற்கு - இவளுக்கு இனி ஆகக்கடவனவான நிலைமைகளை ஆராயாதவர்களாய் என்றலும் ஒன்று. இவளைப் பெற்ற தாய் பெறுகின்றபொழுது மெய்ந்நொந்து பெற்றவளும், வளர்க்கிறசெவிலித்தாயார் தாம் தாம் வருந்திப் பிள்ளைபெற்றவருமாயிருந்தால், இவள்பிழைக்கும்வழியிலே முயலாது இங்ஙனம்வழியல்லாவழியிலே தலையிடாரென்பாள், 'இவளைப்பெறுகின்ற தாயர் மெய்ந்நொந்து பெறார்கொல்' என்றாள். எம்பெருமானது திருத்துழாயை முடியிற் சூட்டுதலும், அவனது போகஸ்தானமான திருவேங்கடமலைக்கு அழைத்துக்கொண்டுபோதலுமே இந்நோய்க்கு ஏற்ற பரிகாரமென்றாள். 'வேங்கடம் ஆட்டவும்' என்றது, எம்பெருமானுகந்தருளின திவ்யதேசத்தை இவள் தாபந்தீர்த்தற்கு உரியதொரு பொய்கையாக நினைத்தனளாதலால். அன்றி, 'வேங்கடமாட்டவும்' என்பதற்கு - திருவேங்கடமலைக்கு இவளை அழைத்துக்கொண்டு வருகிறேனென்று பிரார்த்தனைபண்ணிக்கொண்டு அதற்குஉரியஆவேசத்தை ஆடுவிக்க என்றுகொள்ளுதலும் ஒன்று. வேங்கடம் ஆட்டச் சூழ்கின்றிலர் - வேங்கடத்திலே இவளை நடையாடச்செய்தற்குவந்துசூழ்கின்றாரில்லையென்றுமாம்.

ஆழ்வாரை ஆற்றுவிக்கவேணுமென்று ஞானிகள் தங்கள்பரிவால் வேறு சிலவிதமான பரிகாரங்களைச் செய்யப்புக, இவர்தன்மையறிந்த அன்பர்கள், இவராற்றாமையைத் தணிக்கும் வழிகளில் இழியாமல் வேறுவழிகளில் இழிந்தது என்னபயனென்று வெறுத்துஉரைக்கும் வார்த்தை, இதற்கு உள்ளுறை

பொருள். உறுகின்ற கன்மங்கள் மேலன ஓர்பபிலராய - இவர்கள் பரிவின் மிகுதியால வினையாகுஆராயதலதவிாநது வேறுடல உபாயங்களால இவராற் றுமையைததணிக்க முயலகிறாாகள, இவளைப பெறுகின்ற தாயா மெயநநொநது பெறுாகொல - இவாகள இவரறுமையை அறிநது வருநதததககவ ரலலரோ? துழாய குழலவாயத துறுகின்றிலா தொலலைவேஙகடம ஆட்டவும சூழகின்றிலா-பகவதபரஸாதமும திவ்யதேசவாஸமுமே இவராறறுமைக்குப பரிகாரம, அவைசெயயாமையால, இவள ஆகம மெல ஆவி எரிகொளள இறு கின்றது - இவாக்குத தளாசசி மேன்மேல மிகுகின்றது எனக

'இவளைபபெறுகின்ற தாயா மெயநநொநது பெறுாகொல'—*"பெற்றவ ட்கே தெரியுமநதவருததம பிள்ளைபெறுப பேதை யறிவாளோ பேராநநதம, உறறவாக்கே கணணீா கமபலை யுணடாகும உறுதவரோ கலநெஞ்ச முடைய ராவாா" என்பது காணக.

ஓாபபு -' பு' விகுதி பெறற தொழிறபெயா. பெறுகின்ற-இயலபுபறறி வநத காலவழுவமைதி யென்னலுமாம (அக)

உருவெளிப்பாடுகண்ட தலைவி தலைவன்கண்ணழகுக்கு இரங்கல்.

அஉ. எரிகொளசெஞ்ஞாயிறிரணடுடனேயுதயமமலைவாய
விரிகினறவணணததவெமபெருமானசணகண மீணடவற்று
ளெரிகொளசெநதீவீழசுரரைபபோலவெமபோலியாக்கும
விரிவசொலலீரிதுவோவையமுறறுமவிளரியதே

(இ - ள்.) எரி கொள் - வெபபததைக கொணட, செம - சிவநத, ஞாயிறு இரணடு - இரணடுசூரியமணடலம, உடனே-ஒருஙகே, உதயமலைவாய - உதயகிரியிலே, விரிகின்ற - தோன்றிவிளஙகுகிற, வணணதத- தனமைபோன்ற தன்மையுடைய, எம பெருமான கணகள - எமதுதலைவனது திருக்கணகள,—அவறறுள-அநதசசூரியவடிவஙகளிலே, எரி கொள-சொலிததுககொணடுதோனறுகிற, செம தீ - சிவநதநெருபபிலே, மீணடு வீழ - (வேறுபுகலிடமிலலாமையால) மீணடுவாதுவிழுநது இறககிற, அசுரரை போல-(பகைவரான கொடிய மநதேகரென்னும) அசுராகளுககுபபோல, எம போலியர்க்கும - (அநுகூலரான மெலலிய) எமபோன்றவாகளுககும, விரிவ - தாபஞ்செயவனவாயப பரவுகின்றன, வையம முறறும விளரியது - (எமபெருமான்) உலகமுழுவதையும விருபபததோடு செழிககசசெயயுந தன்மை, இதுவோ—? சொலலீா - சொலலுஙகள், (எ - று)

பிரிநதுசென்றதலைமகனிடததில இடைவிடாதுகருததைஊன்றவைதத மனததின் நினைபபு மிகுதியால அவனது வடிவம உருவெளிபபாடாயக கண ணுககெதிரிலே காணபபட, அவவடிவததின கணணழகிலே யீடுபட்ட தலைமகள, அவவடிவம கைக்கெட்டாதுமறைநதபின்பு, அக்கணணழகு தனகாதல நோயை மிகவளாததித தன்னைமிகவருததுநதன்மையைத தோழியானோ க்கிச சொன்னது, இது.

மந்தேகாருணமென்னுந் தீவீபததில வாழும் மநதேகரொன்னும அசுராகள் உக்கிரமான தவத்தைச செயது பிரமனிடதது வரமபெறறு அதனறை செருக்கி எப்பொழுதுஞ சூரியனை வளைந்து எதிாததுத தடுததுப போாசெயகின்றன ரென்றும, அநதணாா முதலியோா சநதியாகாலஙகளில மநதிரபூர்வமாகக் கையிலெடுததுவிடும ஆாகக்யதீாத்தஙகள் வசசிராயுதமபோலாகி அவர்கள்மேல விழுநது அவாகளை அப்பாலதள்ளிச சூரியனதுசஞ்சாரததுக்குத தடையிலலாதபடி செயகின்றன வென்றும, அநதணாமுதலியோா செலுத

* தாயுமானவாபாடல.

தும அர்க்கியத்தின் ஆற்றலால் சூரியமண்டலத்தினிடையே ஒருசெந்தீ எழுந்துசொலிக்க (விளக்கில் விட்டில்போல) அத்தீயில் அவ்வசுராகள் விழுந்து ஒழிகின்றன ரென்றும நூலகள் கூறும். இரண்டுசூரியமண்டலம் ஏககாலத்திலே ஒருதயகிரியில உதித்தெழுந்து விளங்கினாற்போன்ற எம்பெருமான்கண்கள்,வலியலாரான அசுரர்க்குப்போல, மெலவியலாரானஎமக்கும தாபஞ்செய்கின்றனவே; வலியாரை யழித்து மெலியாரைக் காத்தலன்றோ, முறைமை? எம்பெருமான் உலகமுழுவதையும அன்போடு செழிப்படையும படி காத்தருள்கின்றனனென்பது இப்படித்தானோ? என்று தலைவி வருந்திக் கூறினாள் இவள், திருமாலாகிய தலைவனிடத்திலே ஈடுபட்டவள்

ஞாயிறுஇரண்டு- இல்பொருளுவமை. அவ்வசுராகள் அழிதல எப்பொழுதும நிகழ்தலால,அத்தன்மையை 'மீண்டு'என்பதனாற் குறித்ததுமாம;அன்றி, மீண்டு-(சூரியனைவருத்துதலாகிய தமதொழிலினின்றும) நீங்கி யெனினுமாம. விரிவ-முற்று. விளரியது என்பதை - விளரி என்பதன் மேற பிறந்த ஒன்றன் பாறகுறிப்புமுற்றென்றாவது,விளா என்பதன்மேற பிறநத தென்றாவது கொள்க, முறையே அகரமமாததிரமும, இகர அகரம இரணடும - சாரியையாம: விளரியென்ற சொல-மிக்கவிருப்பமென்னும பொருள தாதலை *"விளரியே யிளமை யாழிலோர்நரம்பு யாழ நீள்வேட்கை" என்றதனாலும, விளரென்பது-செழிப்பென்னும பொருள தாதலை †"விளரென்ப திளமை தானே வெளுப்பொடு கொழுப்பு மாகும" என்றதனாலும அறிக.

எம்பெருமான் முதலில அகக்கணணுக்கு இலக்கானபொழுது தமபக்கல வைத்த கடாக்ஷந்தானே பின்பு பூர்ணாநுபவம பெறாமையால வருந்துமளவில தமக்குப பரிதாபஹேதுவாகத் தோன்றும விததததை ஆழ்வார அன்பரோடு கூறுதல, இதறகு உள்ளுறைபொருள். எம்பெருமானது மைமமலை போல விளங்குந திருமேனியிற சோதிவடிவமாயக் காணபபடுகிற கணகளின் நோககம,அநுபவததைக கொடாமையால,பிரதிகூலாககுத துயாவிளைததல்போல அடியவரான எமககும வருததம விளைவிக்கின்றன, இப்படிப பட்ட எமபெருமான் லோகததுக்கு ரக்ஷகனெனுநதனமை எஙஙனே யென்க. தமமை விரைவிறசோததுக்கொளளாமையா லுணடான ஆறறாமை அவனது ரக்ஷகத்வத்திலுஞ சங்கைசெயயுமபடி யாயிறறு

அரக்கராகிய மாநிதேகரை அசுரரென்றது, கொடுமையிலொறறுமையால.
அசுரரை - உருபுமயககம உதயமமலை-மகரவொறறு,விரித்தலவிகாரம.

பிரிவாற்றாத தலைவியின் தளர்ச்சி கண்டு தோழி இரங்கல்.

அரு. விளரிக்குரலன்றினமென்பெடைமேகின்றமுன்றிற்பெண்
முளரிக்குரம்பையிதுவிதுவாகமுகிலவண்ணன்பேர் [ணை
கிளரிக்கிளரிப்பிதற்றுமெலலாவியுநைவுமெல்லாந
தளரிறகொலோவறியேனுயலாவதிந்நடயனுக்கே.

(இ - ள்.) விளரி- விளரியென்னும இசையையுடைய, குரல - குரலையுடைய, அன்றில - அன்றிறபறவை, மென் பெடை - மெல்லிய (தனது) பேடையை, மேகின்ற - விரும்பித தழுவுதற இடமான, முன்றில பெண்ணை முளரி குரமபை - முன்வாயிலிலுள்ள பனைமரததி லுள்ளதும முட்களையரிந்துசெய்யபபட்டது மான கூடு, இது இது ஆக- இப்படி எஙகும எதிரில அருகில இருக்க, (இவ்வன்றிலைக்காணுதலாலும இதன்குரலைக் கேட்டலாலும ஆற்றாமைததுயரம மிக்கு), முகில வண்ணன் பேர் கிளரி கிளரி பிதற்றும- காளமேகமபோன்ற திருமேனியையுடைய தம தலைவனது பெயர்களை

* சூடாமணிநிகண்டு-ளகரவெதுகை-கரு.
† „ „ உ.

(வலியின்மையால) வருநதியெடுதநெடுதத்துக்கூறி வாய்பிதற்றுமபடியான, மெல ஆவியும - (இவளது) மெலிவடைநத உயிரும, நைவும் - (உடமபின்) மெலிவும, எலலாம - என்னும இவை யாவும, தளரின் கொலோ - முழுவதுந தளர்நதொழிநதாலோ, இதையலுககு - இம்மகளுக்கு, உய்யல ஆவது - (அவன் வந்துசேர)உயவு உணடாவது? அறியேன - அறிகிறேனிலலை; (எ - று)

காமவிரகததா லுணடாகும் வேதனைகளுள, சிநதனை பசலை மேனி மெலிவு அழுஙகல மொழிபலபிதறறல முதலிய பலவும இவளுக்கு நிகழந தாயவிட்டன, இனி, மரணமொனறே நிகழாது நிறபது அதுவும நிகழந் தாலோ, இவள்தலைவன் இவளை வநதுகூடி உயயசசெயவது? என்று தோழி இரஙகினாள். இதனால, இனி இவளுக்கு இருக்கை அரிதாம என்றவாறு. இதனைத தாயவாாததையென்றல, அததுணைசசிறபபன்று.

அன்றிலென்பது, ஓாபுள், இது, எபபொழுதும ஆணும பெணணுங் கூடியே நிறகும. கணநேரம ஒன்றை ஒன்று விட்டுப் பிரிநதாலும அத்து யரத்தைப் பொறுமல ஒன்றையொன்று இரணடுமூன்றுதரங கத்திக கூவி அதன்பின்பு தன்றுணையைக கூடாவிட்டால உடனே இறநதுபடும ("எரி தகைகதன்ன செநதலையன்றில, பிரியின்வாழாது" என்ருா பிறரும.) இதனை வடநூலார் க்ரௌஞசமெனறு கூறுவா; தமிழிற குருகெனவும படும. இதனை,க்ரௌஞசபருவததைை அன்றிறபெயாககிரியென்றும,குருகின்பெயர் மலை யென்றும நூலகளிற கூறுமாறறுல அறிக. (பகலமுழுவதும புணாந திருநது இரவிற பிரிநது வருநதுவதாகிய சககரவாகபபறவையும அன்றிலென படுவது உணடு.) அன்றிலும அதன் குரலும காமோததீபகமாயப பிரிந தாாககுப பிரிவுததுயரை வளாககு மெனக. இபபறவையைப பனைமாததில வாழவதாகவே கவிகள் பலவிடததுங கூறுவா.

வடமொழியில ஷட்ஜம ரிஷபம காநதாரம மததியமம பஞசமம தைவ தம நிஷாதம என்னும ஸபதஸவரஙகள, தமிழில முறையே குரல துததம கைக்கிளை உழை இளி விளரி தாரம என்னும ஏழிசை யெனபபடுதலால, விளரியென்றது, தைவதமென்னுஞ் சுர மென்னலாம; அன்றி, வடமொழி நிக ணடில "க்ரௌஞசஃ கவணதி மதயமம" என்றதனால, அன்றில மததியம மென்னுஞ்சுரததை யொலிககிற தென்று தெரிதலால, விளரியென்பதற்கு - மததியமஸவரமென்று பொருளகொளளுதலும ஒனறு. விளரி யென ஓர் பணணும உணடு.

மெனபெடை - பிரிவுபெறுத மென்மையையுடைய பேடை. முளரிக் குரமபை யென்பதறகு - தாமரையிலைகளையும பூககளையுங கொணடுவநது செயத கூடென்று உரைபபாரும உளா.

'இதுவிது' என்றது, கட்புலனுகுமபலவறறைச சுட்டியது.

பகவதநுபவம பெறுமையால ஆழவாா தளாதலைக கணட அன்பர்கள், 'பாதகமான லௌகிகபதாாத்தஙகள அருகிலிருததலால, இவா ஆறியிருத தல அரிதாயிருநதது' என்று கூறுதல, இதறகு உள்ளுறைபொருள். இவா தாமீ இருக்கிறவிடததிலே அருகிலுள்ளாா சிலர் எமபெருமானைசசோநது அனுபவிககபபெறுதலைக் கணடு தமக்கு அத்தன்மை கிடைததிடாமையாலே ஆற்றுமைமிக்கு எமபெருமான்திருநாமஙகளை வாயமாறுமல எடுததுக்கூறிப புலமபி நெஞசந்தளாநது நைகிற தன்மையைக் கணடு 'இஙஙனம் மெலிகிற இவாக்கு இறுதி உணடானபினபோ, எம்பெருமான் வந்து இவரைச சேர்த் துக்கொளவது?' என்று வெறுததுக்கூறின ரெனக.

மேகின்ற - மேவுகின்ற. குரம்பை - குடமபை. முன்றில் - இல்முன் என்பது முன்பின்னுகமாறித் தொக்க மரூஉமுடிபு, *"முன்னென் கிளவிமுன்

* தொலகாபபியம - எழுததகிகாரம - புள்ளிமயஙகியல - கூ0.

ளாத தோன்றும், இலமென் கிளவியிசை றகர மொற்றல, தொலலியல் மருங்கின மரீஇய மரபே" என்பது காணக. இதனை இலக்கணப்போலியில அடக்குவர் இக்காலத்தார். தையல - அழகு, உடையவளுக்கு ஆகுபெயர். பிதற்றும என்பதற்கு - முதனிலைத் தொழிறபெயராக, பிதற்றுதலும என்று உரைப்பாரும உளர். 'ஆவியினைவும்' என்றும பாடம.

* மாறன்பணித்ததமிழ்மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த வீறுடைய திருமங்கையாழ்வார், இங்கு 'அன்றிலமென்பெடை மேகின்ற முன்றிற பெண்ணை முளரிக்குரமபை யிது'என்றதை அடியொற்றி,† "முன்றிற பெண்ணைமேல முளரிக்கூட்டகத்து, அன்றிலின் குரல அடரு மென்னையே" என அருளிச செய்திருத்தல காணக. (அ௩)

## தலைவி தலைவனைக்காண விரைதல்.

அ௪. தையனலலாாகளகுழாங்கள்குழீயகுழுவினுள்ளு
மையநலலாாகள்குழீயவிழவினுமங்கங்கெலலாங
கையபொனனாழிவெண சஙகொடுங்காண்பானவாவுவனா
மையவண்ணாமணியேமுத்தமேயென றன்மாணிக்கமே.

(இ - ள்) மைய வண்ணா - மையுடைய நிறம போன்ற கரியதிருநிறமுடையவனே! மணியே முத்தமே என்தன மாணிக்கமே - நீலமணியும முத்தும மாணிக்கமும போல நிறத்தையும அழகையும ஒளியையும உடைய என் தலைவனே! தையல நலலாாகள குழாங்கள குழீய குழுவினுள்ளும - அழகிய மகளிாகள திரணட திரளினிடையாயினும, ஐய நலலாாகள குழீய விழவினும - சிறந்தவாகளான நலலஆடவாகள திரணட திருவிழாவிலாயினும, அங்கு அங்கு எலலாம - இன்னும அப்படிப்பட்ட திரளகளெலலாவறறினுமாயினும, கைய பொன் ஆழி வெண சங்கொடும காணபான அவாவுவன - நான்-கைகளிலுள்ள பொனனிறமான சக்கரத்துடனும வெணணிறமான சங்கத்துடனும நான் (உன்னைக) காண விருமபுவேன், (எ - று)

'நாயகியானவள் நாயகனுனை சாவேசுவரனைப புறபபேதிரளிடையாகிலுங் காண ஆசைபபடடுப புலமபின பாசுரம்' என்பதும், 'குழாங்கள் குழீய குழு' என்கையாலே அசசமூகநதான் பலவாயசசோநத சமுதாயத்தைச சொலலுகிறது' என்பதும், இந்தக்கிளவி ‡"மள்ளா குழீஇய விழவி னானும, மகளிா தழீஇய துணங்கை யானும, யாணடுங் காணேன் மாணடக கோனை" என்று அகத்தமிழிலுஞ் சொலலப்பட்டது' என்பதும அழகியமணவாளசீயருரை. தலைமகனது ஒருவழித்தணத்தலில, பிரிவாற்றாத தலைமகள், அவனை எனகாதலின்படி தனியே ஏகாநதத்திற கணடு கூடிக்குலவிஇன்புறக் கிடையாதாயினும, ஆடவரும மகளிரும பலா கூடிய கூட்டத்தினிடையில எங்கேனுங் காணக்கிடைக்குமாயினும அதுகொணடு ஆறியிருப்பே னென்று கருதின ளெனக நினைப்புமிகுதியால தலைவனை எதிரில நிறகிறுபபோலப் பாவித்து முன்னிலைப்படுத்திக் கூறியவாறு. இங்ஙனம கறபுசசிறப்ப நாண

---

* உபதேசரத்தினமாலை - ௬.

† பெரியதிருமொழி - நூறறெட்டாந்திருப்பதிகம - ௮.

‡ "மள்ளா குழீஇய விழவி னானு, மகளிா தழீஇய துணங்கை யானும, யாணடுங் காணேன்'மாணடக் கோனை, யானுமோ ராடுகள மகளே யென்கைக், கோட ரிலங்குவளை நெகிழத்த, பீடுகெழு குரிசிலு மாடுகள மகனே' (என்பது, நொதுமலா வரைவுழித் தோழிக்குத் தலைமகள அறத்தொடு நின்றது, ஆதிமந்தி.) குறுந்தொகை - ௩௧. இது - நச்சினார்க்கினியராலும 'உயிரினுஞ் சிறந்தன்று" என்ற தொலகாப்பியசசூத்திரத்தின் உரையில மேறகோளாகக் காட்டப்பட்டுள்ளது.

துறந்து தலைவி மனவலியின்றித் தலைவனிருந்தவிடத்தேறச்செலவே னென்று கூறுதலும் அகப்பொருளா மென *"உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணி னுஞ், செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத், தொல்லோர் கிளவி புல விய நெஞ்சமொடு, காமக் கிழவ னுள்வழிப் படினுந், தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும், ஆவகை பிறவுந் தோன்றுமன பொருளே" என்றதனால் அமைக்கப்பட்டவாறு உணர்க.

திருவாய்ப்பாடியிலுள்ள ஆயர்மங்கையர் கூடியாடிய குரவைக்கூத்துப் போன்ற மகளிர்குழாத்திலும், தருமபுத்திரன் செய்த இராசசூயயாகம் போன்ற நல்லார்குழாத்திலும் இருத்தற்கு ஏற்புடைய தலால், இங்ஙனங்கூறியது †"பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு பௌவமெறிதுவரை. யெல்லாருஞ்சூழச் சிங்காசனத்தே யிருந்தானைக் கண்டா ருளர்," ‡"காந் தள்முகிழ்விரற்சீதைக்காகிக் கடுஞ்சிலைசென்றிறுக்க, வேந்தர்தலைவன் சன கராசன்றன் வேள்வியிற் கண்டா ருளர்" என்றவற்றாலும், திருமால் தைய லல்லார்குழுவிலும் ஐயநல்லார்குழுவிலுங் காணத்தக்கவனாதல் அறிக. தையல் நல்லார்கள் - மகளிருட் சிறந்தவர் என்றும், ஐயநல்லார்கள் - ஆர்யஸ்ரேஷ்டர் என்றுங் கொள்க.

முத்தம் - தெளிவுக்கும், நீர்மைக்கும், குளிர்ச்சிக்கும், மாணிக்கம் - பெறற்கருமைக்கும் உவமையுமாம்.

நெஞ்சென்னும் உட்கண்ணால் எம்பெருமானைத் தரிசித்த ஆழ்வார் அப்பெருமானை மீண்டும் எங்கேனுங் காண ஆசைப்பட்டு அவனை நோக்கித் தன்னிலேயுரைத்த வார்த்தை, இதற்கு உள்ளுறைபொருள், 'மகளிர்குழு' என்பதற்கு ஸ்வாபதேசம் - பரதந்திரராயிருக்குந் தன்மையையே பிரதான மாகவுடைய பிரபந்நர்களது சமூக மென்றும், 'ஐயநல்லார்கள் குழு' என்ப தற்கு ஸ்வாபதேசம்- யாகமுதலியதொழில்களை நடத்துமியல்புடைய கைங்கரியப்பிரவிருத்திசீலர்களது சமூக மென்றுங் கொள்வர்.

தையல் நல்லார்கள்- நல்தையலார்களென மாறுதலுமாம். குழிய=குழுவிய, தழிய=தழுவிய, கெழிய=கெழுவிய என்பனபோல. இப்பாட்டில் 'குழீஇய' என அளபெடைகொண்டால் தளைகெடுதல் காண்க. அன்றியும் §"தமிழ தழிய சாயலவர்", $"தனது மாடே, தழிய காவலனை நோக்கி', ||"கெழிய ராகுவுங் கேதுவும்' என்ற இடங்களில், தழிய கெழிய என்றே பிரயோகங்கள் இருத்தலால், இங்கும், குழிய என்பதைக் குழீஇய என நீட்டவேண்டிய அவசியம் எவ்வாற்றானும் சிறிதுமில்லையென விடுக்க. ஏட்டுப்பிரதிகளிலெல்லாம் அளபெடையில்லாத பாடமே காணப்படுகிறது பெரியோர் வழக்குமும் அப்படியே. ஐயநல்லார்கள்- ஆர்யநல்லார்கள், சிஷ்டரானருஷிப பிராமணசமூகம். கைய, மைய - குறிப்புப்பெயரெச்சங்கள். மை - மேகமுமாம். 'மையலவனை' என்ப பாடங்கொண்டு, ஆசைமயக்கத்தை யுண்டாக்கும் வடிவழகுடையவனே யென்று பொருளுரைப்பாருமுளர். மணியே முத்தமே மாணிக்கமே யென உபமானத்தை உபமேயமாகவே சொன்னது, உபசாரவழக்கு ¶"முத்தினை மணியை மணிமாணிக்க, வித்தினைச் சென்று விண்ணணாகக் காண்டுமே" எனத் திருமங்கையாழ்வார் பாசுரத்திலும் இம்மூன்று உவ

---

* தொல்காப்பியம் - பொருளதிகாரம் - களவியல் - ௨௨.
† பெரியாழ்வார்திருமொழி - முப்பத்தோராந்திருப்பதிகம் - ௬.
‡ " " ௨
§ சீவகசிந்தாமணி - சுரமஞ்சரியாரிலம்பகம் - ௩௨.
$ கந்தபுராணம் - அசுரகாண்டம் - அமரர்சிறைபுகுபடலம் - ௧௨.
|| " " மகாசாத்தாப்படலம் - ௨௬.
¶ பெரியதிருமொழி - தொண்ணூற்றோராந்திருப்பதிகம் - அ.

மைகள் ஒருங்கே கூறப்பட்டமை காண்க. மாணிக்கம் - மாணிக்யமென்னும் வடசொல் திரிபு. (அச)

### மாலைப்பொழுதுகண்டுவருந்திய தலைவி இரங்கல்.

அரு. மாணிக்கங்கொண்டுகுரங்கெறிவொத்திருளோடுமுட்டி
யாணிப்பொன்னன்னசுடர்படுமாலையுலகளந்த
மாணிக்கமேயென்மரதகமேமற்றொப்பாரையில்லா
வாணிப்பொன்னேயடியேனடியாவியடைக்கலமே.

(இ - ள்.) உலகு அளந்த - உலகங்களை அளந்துகொண்ட, மாணிக்கமே - மாணிக்கம்போலப் பெறுதற்கரியனானவனே! என் - எனக்குத்தலைவனான, மரதகமே - மரகதரத்தினம்போலப் பசியவடிவமுடையவனே! மற்று ஒப்பாரை இல்லா - தன்னையொப்பவர் வேறெவரையும் உடையனாகாத, ஆணி பொன்னே- மாற்றுயர்ந்த பொன்போல மதிப்பையும் ஒளியையுமுடையவனே! மாணிக்கம் கொண்டு குரங்கு எறிவு ஒத்து- மாணிக்கத்தாற் கருங்குரங்கு வீசி யெறியப்பட்டால் அம்மாணிக்கம் அக்குரங்கின் கையிலே யகப்பட்டு அழிதல்போன்று, ஆணி பொன் அன்ன சுடர் இருளோடு முட்டி படும் - மாற்றுயர்ந்தபொன்போன்ற ஒளியையுடைய சூரியமண்டலம் இருளோடு சென்றுகிட்டித் தானமறையப்பெற்ற, மாலை - மாலைப்பொழுதிலே, அடியேன் அடி ஆவி அடைக்கலமே - இயல்பில் உனக்குஅடியவளான எனது சொந்தமான உயிர் உனக்கே அடைக்கலப்பொருளாக ஒப்பிக்கப்பட்டது, (எ - று)

*"காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலரு மிந் நோய்" என்றபடி காமநோய் மிகுதற்கு உரிய காலமான மாலையில் ஆற்றாமை மிகுதியால் தன்னுயிரைப் பாதுகாத்துக்கொள்ள வேறுகதியில்லாதவளாய்த் தலைமகள் தலைமகனைக்கருதி 'உனக்கே என்உயிர் தஞ்சம், ஆதலால், நீயே என்னைவந்து காத்தருளவேண்டும்' என்று முறையிட்டாள் இப்பாட்டைத் தாயவார்த்தையெனபார்க்கு, 'அடியே னடி யாவி'என்பதற்கு- எனதுஅடிமையான மகளொன்று பொருள், ஆவி- உயிர்போல அருமையான பெண்ணுக்கு, உவமையாகுபெயர் 'அடியேனுடையாவி' என்றும் பாடம்.

ஒருவரால் எறியப்பட்டுக் குரங்கின்மீது சென்றுவிழுந்த மாணிக்கம் அதன்கையிலகப்பட்டு மீளவொண்ணாது அழிதல்போல, இருளையழித்தற்பொருட்டு அதன்மீதுசென்று வீழ்ந்த சூரியன் அவ்விருளிற்பட்டு மீளாது மறைந்த தென்க கற்பனை கூறப்பட்டது. மாணிக்கம் - சூரியமண்டலத்துக்கும், குரங்கு-இருளுக்கும், சூரியன் அஸ்தமித்தல் - மாணிக்கம் மீளக்காணாமற்போதற்கும் உவமை யென்க. மாணிக்கம் - நவரத்தினங்களுள் ஒன்று; இது, செந்நிறமுடையது. [நூல்களிற் கருமாணிக்கமென வருதல், இல்பொருளுவமையாம்] உபமேயமாகிய இருளின் தன்மையைக் கருதி, குரங்கு, கருங்குரங்கெனக் கொள்ளப்பட்டது இனி, மிகச்சிறந்த மாணிக்கத்தை அதன்சீர்மையையறியாத குரங்கு எடுத்து எங்கேனும் மங்கிப்போம்படி எறிந்து மாய்த்துப் போக்கிவிட்டாற்போல, சூரியனை இருளிலேயெறிந்து போக்கின மாலைப்பொழுது என்றும் உரைக்கலாம், இவ்வுரையில், மாலைக்குக் குரங்கும், சூரியனுக்கு மாணிக்கமும், அவன்வீழ்தற்கு அதுஎறியப்படுதலும், இருளுக்கு எறியப்படுமிடமும் உவமையாம். 'அன்றியே, மாணிக்யத்தைக் கொண்டு குரங்க எறிந்தாற்போலே யென்றுமாம், குரங்குதலாவது - வளைதலாய், உதித்தஆதித்யன் உயரஎழுந்து விழுந்து அஸ்தமித்த கடுமையைச் சொன்னபடி'என்றும் உரைப்பர் அழகியமணவாளசீயர், இவ்வுரைக்கு,குரங்கவென்னும் செயவெனெச்சம் ஈறுதொக்க தென்க

* திருக்குறள் - பொழுதுகண்டிரங்கல் - எ.

ஆணிப்பொன் - மாற்றறிதற்குக் கொள்ளும் உயர்தரப்பொன், இதுக்கு மேலே மாற்றில்லையென்னும்படியான சிறந்த பொன் என்றும் உரைப்பர். மற்று ஒப்பாரை இல்லா - தனக்குத் தானேயன்றி ஒருவரும் வேறொப்பிலாத என்றபடி; *"தனக்குவமையில்லாதான்" என்றார் பிறரும் இதனால், தன்னையொழிந்தாராயாவரினும் தான் மேம்பட்டவ னென்பது விளங்கும்.

எம்பெருமானை அனுபவித்தற்கு உரிய காலம் வந்திருக்க அவ்வனுபவங் கிடையாமையா லாகிய ஆற்றாமைமிகுதியால் வருந்திய ஆழ்வார், அவ்வருத்தந்தீரும்பொருட்டு, உடையவனான எம்பெருமானபக்கலிலே உடைமையாகிய தன் உயிரை அடைக்கலமாகச் சமர்ப்பித்தல், இதற்கு உள்ளுறை பொருள். மிக்கவிளக்கமுடைய விவேகம் மோகாந்தகாரத்திலே விழுந்து அகப்படும்படியாள இருந்திலேயில உன்னைச்சரணமடைந்த இவ்வுயிர்க்கு நீயே யன்றோ ரக்ஷக னென்று உரைத்தன ரெனக.

மரதகம் = மரகதம் எழுத்துநிலைமாறுதல், இலக்கணப்போலி. (அரு)

## தலைவனைப் பிரிந்த தலைவி இரங்கல்.

அசு. அடைக்கலத்தோங்குகமலத்தலரயனசென்னியென்னு
முடைக்கலத்தூண்முன்னரனுக்குநீக்கியையாழிசங்கம்[ளாற
படைக்கலமேந்தியைவெண்ணெய்க்கன்றுஆய்ச்சிவன்றாம்புக
புடைக்கலந்தானையெம்மானையென்சொல்லிப்புலம்புவனே.

(இ - ள்) அடை - இலையாகிய, கலத்து - இடத்திலே, ஓங்கு - உயர்ந்து தோன்றின, கமலத்து - (திருமாலின் நாபித்) தாமரை மலரிலே, அலர் - வெளிப்படுத்தோன்றின, அயன - பிரமனது, சென்னி என்னும் - தலையாகிய, முடை கலத்து - முடைநாற்றமுடைய பிக்ஷாபாத்திரத்திலே, ஊண் - உணவு இரத்தலை, முன் - முன் ஒருகாலத்தில், அரனுக்கு - சிவனுக்கு, நீக்கியை - போக்கியருளினவனும், ஆழி சங்கம் படைக்கலம் ஏந்தியை - (சுதரிசனமென்னும்) சக்கரத்தையும் (பாஞ்சசன்னியமென்னும்) சங்கத்தையும் ஆயுதங்களாகக் கைகளிற் கொண்டுள்ளவனும், வெண்ணெய்க்கு - வெண்ணெய்க்காக, அன்று - (களவுங்கையுமாய்அகப்பட்ட)அந்நாளில், ஆய்ச்சி - வளர்த்தத்தாயாகிய இடையர்மகளான யசோதை, வல் தாம்புகளால் - வலிய கயிறுகளால், புடைக்க -அடிக்க, அலந்தானை - வருந்தினாற்போலத் தோற்றினவனும், எம்மானை - எமதுதலைவனு மான திருமாலைக்குறித்து, என் சொல்லி புலம்புவன் - நான் என்னவென்று சொல்லிப் புலம்புவேன்? (எ - று.)

சிவனுக்குத் துயர்நீக்கினவனை எனக்குத் துயர்நீக்கவேணு மென்று சொல்வேனோ? அடியார் துயரந்தீர்க்க ஆயுதங்கொண்டுள்ளவனை என் துயரந்தீர்க்கக் கையிற்கருவிகொள்ளவேணு மென்று சொல்வேனோ? ஆய்ச்சியர்க்கு எளியனானவனை எனக்கெளியனாகவேணு மென்று சொல்வேனோ? யாதுசொல்லிக்கூப்பிடுவேன்? என்றாள். இதனால், அவனுக்கு இயற்கையாகவுள்ள ஆபத்துக்குதவுந்தன்மை, ஆசிரிதவிரோதிகளைநிக்கிரகித்தற்குஏற்றகருவியுடைமை, அடியார்க்கெளிமை இவற்றைக் கருதி, இத்தன்மைகள் தன் பக்கலில் உதவாமைபற்றி இரங்கினா ளெனக.

தாமரைப்பூப் பசிய இலையின்மீது உயர்ந்து அலர்தல்போலத் திருநாபித் தாமரைமலர் எம்பெருமானது பசிய திருமேனியின்மீது எழுந்து தோன்றினமை, 'அடைக்கலத்தோங்கு கமலம்' என்றதனால் விளங்கும். இனி, அடைக்கலமென்பதை, அரனுக்கு அடைமொழியாக்கி, அடைக்கலமாகப் புக்க சிவனுக்கு என்றும், நீக்கியென்பதற்கு அடைமொழியாக்கி, ரக்ஷகமாக இருந்து நீக்கினவனென்றும் பொருள்கொள்ளலாம் அன்றி, அடைக்கலத்தோங்கு அயன்

* திருக்குறள் - கடவுள்வாழ்த்து - எ.

என இயைத்து,(தன்பக்கலிலே) அடைக்கலமாக வளர்கிற பிரமனென்பாருமுளர். அடைக்கல மென்பது-காத்தற்கு உரிய பொருளையும், காப்பவனையுங் குறிக்கும். கமலத்து அலர் - தாமரைப்பூ எனக் கொண்டால், 'தோன்றின' என்பது வருவிக்கவேண்டும். முடை - துர்க்கந்தம்.

அயன்சென்னிக்கலத்து ஊண் அரனுக்கு நீக்கிய கதை.—ஒருகாலத்திலே, பரமசிவன், தன்னைப்போலவே பிரமனும் ஐந்துசிரமுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்ற தெனக் கருதி, அவனது சிரமொன்றைக் கொய்துவிட, அக்கபாலம் அப்படியே அவன்கையில் ஒட்டிக் கொள்ளுதலும், 'இதற்கு என் செய்வது?' என்று கவலைப்பட்ட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந் தொலையப் பிச்சையெடுக்கவேண்டும், என்றைக்குக் கபாலம் நிறையுமோ, அன்றைக்கே இது கையை விட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பலதலங்களிலுஞ் சென்று பிச்சையேற்றுக் கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நீங்காதாக, ஒருநாள் பதரிகாச்சிரமத்தையடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி ஏற்றபோது, அப்பெருமான் அக்ஷயமென்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டு அகன்றது என்பதாம்.

திருமாலுக்குச் சங்கச்சக்கரங்கள் ஆபரணகோடியிலும் அமைதலால், 'படைக்கலமேந்தி' எனவேண்டிற்று. படைக்கலம் - போர்க்கருவி. இனி, படையுங் கலமு மாக [ஆயுத ஆபரணங்க ளாக]த் தரித்தவன் என்றலும் அமையும். ஸ்ரீபாஞ்சசந்யம், தனது பெருமுழக்கத்தாற் பகைவரை அஞ்சுவித்து அழித்தலால், ஆயுதவர்க்கத்தின்பாற்படும். வெண்ணெய்க்கு அன்று ஆய்ச்சி வன்தாம்புகளால் புடைக்கலந்தான் - வெண்ணெய்க்காகக் கோபித்த இடைச்சியின் வலிய தாம்புகளால் நாற்புடையுஞ் சூழ்ந்து கட்டப் பட்டவ னென்றுங்கொள்ளலாம், இப்பொருளில், 'அன்று' -வினைத்தொகை.

எம்பெருமானைப்பக்கல் ஈடுபட்டு ஆற்றாமைகொண்ட ஆழ்வார் அவனது திருக்கல்யாணகுணங்களையுந் திருநாமங்களையுஞ் சொல்லி முறையிடுதல், இதற்கு உள்ளுறைபொருள் என் சொல்லிப் புலம்புவனோ - அவனது குணஞ் செயல்களிற் குறையொன்றுங் காணாமையால், எனது குறையையே நான் சொல்லக்கடவேன் என்பதாம்

அடை - இலையாதலை 'அடைக்காய்' என்பதிலுங் காண்க. அயன் - அஜன்; அ - திருமாலிடத்தினின்றும், ஜன் - தோன்றினவன்: "அகாராத்தோ விஷ்ணு:." அரன் - ஹரன்; சங்காரக்கடவுள். புடைக்க என்பதன் அகர வீறு தொகுத்தல். 'அலர்ந்தான்' என்று பாடமோதி, ஆய்ச்சியடிக்க முகமலர்ந்திருந்தா னெனக் கொள்ளுதலும் ஒன்று (அசு)

## அன்றிற்கும் ஆழிக்கும் ஆற்றாத தலைவிக்குத் தோழி இரங்கல்.

அஎ. புலம்புங்கனகுரற்போழ்வாயவன்றிலும்பூங்கழிபாய்ந்
தலம்புங்கனகுரற்சூழ்திரையாழியுமாங்கவைநின்
வலம்புள்ளதுநலம்பாடுமிதுகுற்றமாகவையஞ்
சிலம்பும்படிசெய்வதேதிருமாலித்திருவினையே.

(இ - ள்.) திருமால் - திருமகளிடத்து மோகமுடையவனே! புலம்பும் - பிரிந்ததுயரத்தாற் கத்துகிற, கன குரல் - கனத்த குரலையுடைய, போழ் வாய அன்றிலும் - பிளந்த வாயையுடைய அன்றிற்பறவையும், பூ கழி பாய்ந்து அலம்பும் - அழகிய கழியினுள்ளே புகும்படி பாய்ந்து அலைகிற, கன குரல் - கம்பீரமான தொனியையுடைய, சூழ் திரை ஆழியும் - சூழ்ந்த அலைகளையுடைய கடலு மாகிய, ஆங்கு அவை - அவ்வவ்விடத்திலுள்ள அவ்வப் பொருள்கள், —நின் வலம் புள்ளது நலம் பாடும் இது குற்றம் ஆக - உனது

வலிமையையுடைய கருடப்பறவையினது நலமையை (இவள்) எடுத்துப்பாடுகிற இதுவே குற்றமாகக் கொண்டு, வையம் சிலம்பும் படி - உலகத்தார் முறையிடும்படி, இ திருவினை - திருமகள்போன்ற இப்பெண்ணை, செய்வதே - துன்பப்படுத்துவதே! [துன்பப்படுத்துவது தகுதியோ? என்றபடி], (எ-று)

இது - தலைமகளது தளர்ச்சியைக் கண்ட தோழி, தளர்ந்து, பாவனையால் தலைமகனை எதிரிற்கொண்டு முன்னிலைப்படுத்தித் தன்னிலையுரைத்தது. அன்றி, தோழி தலைமகனை எதிர்ப்பட்டுத் தலைமகளது ஆற்றாமையை அவனுக்குக் கூறியுணர்த்துவதெனினுமாம். உன்னிடத்தில் அன்புகொண்ட தலைவி, உன்னைப் பிரிந்தநிலையில் அத்துயரம் ஒருவாறு தணியும்பொருட்டு, உனக்குவாகனமாய் உனது சம்பந்தம்பெற்றுள்ள பெரியதிருவடியினது சிறப்பைப் பாராட்டிக்கூறியிருக்க, அதனைக்கண்டு, அதனால், இவள் பிரிவாற்றாத மெலியவளென்று உணர்ந்து, அன்றிற்குரலும் கடலொலியும் அவ்வாற்றாமையின்மேலும் தாமும் நலிவுசெய்யக்கடவனவோ? என்றாள்.

ஆணும்பெண்ணுமான அன்றில் இணைபிரியாமல் நெருங்கி ஒன்றோடொன்று வாயலகைக்கோத்துக்கொண்டு உறங்கும்பொழுது அவ்வுறக்கத்திலே வாயலகு தன்னில் நெகிழ்ந்தவளவிலே துயிலுணர்ந்து அப்பிரிவைப்பொறாமல் மெலிந்து பெருந்தொனியாகக் கத்துகிற மிக்கஇரங்கத்தக்க அக்குரல் பிரிவாற்றாமைத் துயரை வளர்த்தலால், 'புலம்புங்கனைகுரற்போழ்வாயஅன்றில்' எனப்பட்டது, * "பெண்ணைமேல், பின்னும்அவ் வன்றிற் பேடைவாய்ச் சிறுகுரல்" என்பர் திருமங்கையாழ்வாரும். நதிபதியாகிய கடல் அழகிய கழியினுள்ளே புகப்பாய்ந்து அலைமிகுந்து பெருமுழக்கஞ்செய்தலை நோக்குமிடத்து, அது, தன் மனைவியைக் கைகளால் தழுவிக் களிப்பினால் ஆரவாரஞ்செய்தலைப் போறலால், பிரிவுத்துயரம் மிகுமென்பாள், 'பூங்கழிபாய்ந் தலம்புங் கனைகுரற் சூழ்திரை யாழி' என்றாள். அஃறிணைப்பொருள்களிலும் சேதநமாகிய சிறுபறவையோடு அசேதநமாகிய பெருங்கடலோடு வாசியறப் பிரிவுக்கு நெகிழ்தலுங் கலவிக்குமகிழ்தலும் நிகழ்தலைக் கண்ணெதிரிற் காணுதல், கலக்கத்துக்குக் காரணமாம். கருடனுக்கு, நலம் - அன்பர்களைக் காக்கும்பொருட்டுப் பெருமானை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து உதவுதல். வையஞ் சிலம்புதல் - இவள்தளர்ச்சிக்காகத் தோழியரும் செவிலியரும் நற்றாயும் ஊராரும் முறையிடல். திருமால் என விளித்தது, ஒருத்திக்கு நல்லவனாயிருக்கின்ற நீ இவள் இங்ஙனம் வருந்தப் பார்த்திருத்தல் பக்ஷபாதமன்றோ? என்றபடி. 'இத்திருவினை' என்று இவளையுந் திருமகளாகவே சொன்னது, அவளுக்கு நிழல்போலிருக்கிறவளென்றேயினும் இவளைப் பார்க்கவேண்டாவோ? என்று வெறுத்துரைத்தவாறு. திரு - மகளிருட் சிறந்தவள்

'கனைகுரல்' என்று பாடமோதி, கனைக்கிற குரலென்பாருமுளர். குரல் போழ் வாய - தன்குரலால் (பிரிந்தாரை இருதுண்டமாகப்) பிளந்திடுகிற வாய் என்றும் உரைப்பர். பூங்கழி - பூக்களையுடைய கழியுமாம். வலம் - வெற்றியுமாம்.

உலகநடத்தைகள் எம்பெருமானைச்சேராமையாலாகுந் துன்பத்தையும் சேர்தலாலாகும் இன்பத்தையும் நினைப்பூட்டுதலால் வருந்துகிற ஆழ்வார்தன்மையைக் கண்ட அன்பர்கள், எம்பெருமானை நோக்கி 'இப்படி உலகம் முறையிடும்படி இவரை இவை நலியக்கடவனவோ?' என்று வெறுத்துரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். அன்றிற்குரல் பிரிவுத்துன்பத்துக்கும், ஆழிமுழக்கம் சேர்க்கையின்பத்துக்கும் ஸ்மாரகம். நின் வலம்புள்ளது நலம் பாடும் இது குற்றமாக - நம்மிடத்து எம்பெருமான் வந்துசேர்தற்கு ஈடான வேககதியையுடைய வாகனம் அவனுக்குச் சொந்தமாயிருக்கையில் நாம் இழ

* பெரியதிருமடல் - அரு, அச.

க்கவேண்டுவதில்லையே யென்று மகிழ்ச்சி பாராட்டுதலே கருத்தாக என்க. அடிமைச்செல்வமுடைமையால், ஆழ்வாரை 'திரு' என்றது, எம்பெருமானோடு நித்யாநுபவஞ் செய்யத்தக்கவரென்க.

கனகுரல் - பண்புத்தொகை, நிலைமொழி வடமொழியாதலின், இயல்பு. போழ்வாய என்ற வினைத்தொகை, தன்வினை பிறவினை இரண்டுக்கும் பொது. ஆங்கு - அசையுமாம். வையம், திரு - ஆகுபெயர்கள். புள்ளது, அது - ஆறனுருபு. செய்வதே, ஏகாரம் - வினாவகையால் தகுதியின்மைவிளக்கும். திருமால் - அண்மைவிளி.

இப்பாட்டைத் தாய்வார்த்தையென்றல், மிகச்சிறவாது.

ஆங்கவை - 'பிரிந்திருப்பார்க்கு மற்றும் பாதகமான சேக்கள்கழுத்திலே மணியோசையென்ன, சந்திரோதயமென்ன, தென்றலென்ன இப்படிப்பட்ட பாதகங்களைச் சொல்லுகிறதல், அன்றிக்கே, கீழ்ச்சொன்னவை தன்னையே சொல்லுகிறதல்', நின்வலம்புள்ளதுநலம் பாடுமிது கருத்தாக - 'உனக்கு அடிமைசெய்து அவன் தழும்புசுமந்தாற்போலே ஸமச்லேஷிந்நங்களைத் தரிக்கவேணுமென்று ஆசைப்பட்டு அவனைப்பாடின இது கருத்தாக,' வையஞ் சிலம்பும்படி செய்வதே - 'அளறில கடலோசை தொடக்கமான இவை இவளை நலிய அத்தாலே இவள் நோவுபடாநின்றாளென்று நாட்டார் பழிசொல்ல நீர் விட்டுவைப்பதே! உம்முடைய மகிஷி நோவுபட்டப் பார்த்திருக்கை உமக்குக் குறையன்றோ? என்றபடி' என்று நம்பிள்ளையிட்டு வாக்கியங்கள் அறியத்தக்கன. (௮௭)

## போலிகண்டு அழிகிற தலைவி ஆற்றாமைக்கு இரங்கல்.

௮௮ திருமாலுருவொக்கும்மேருவம்மேருவிற்செஞ்சுடரோன்
றிருமாற்றிருக்கைத்திருச்சக்கரமொக்குமன்னகண்டுந்
திருமாலுருவோடவன்சின்னமேபிதற்றாநிற்பதோர்
திருமாற்றலைக்கொண்டநங்கட்கெங்கேவருந்தீவினையே.

(இ - ள்.) மேரு - மகாமேருமலையானது, திருமால் உரு ஒக்கும் - திருமகள்கேள்வனான தலைவனது திருமேனியை ஒக்கும், அம் மேருவில் செம் சுடரோன் - அந்த மகாமேருவின் அருகிலே விளங்குகிற சிவந்த ஒளியையுடைய சூரியன், திரு மால் திரு கை திரு சக்கரம் ஒக்கும் - அத்தலைவனது அழகிய கையிலுள்ள திருவாழியை ஒக்கும், அன்ன கண்டும் - (அவனுருவத்தையும் சக்கரத்தையும் நேரிற்காணாமல்) அவற்றிற்குப் போலியாயுள்ளவற்றையே கண்டும், திருமால் உருவோடு அவன் சின்னமே பிதற்றாநிற்பது - அவனுருவத்தையும் அவனது அடையாளத்தையுமே (நேரிற்கண்டாற்போல அன்பு மிகுதியால் பரவசமடைந்து) பேசிடுக்கூவும்படியான, ஓர் திரு மால் - ஒப்பற்ற செல்வமான வேட்கையை, தலைக்கொண்ட - ஏற்றுக்கொண்டுள்ள, நங்கட்கு - எமக்கு, தீவினை எங்கே வரும் - (பிரிவுக்குக்காரணமான) பாவம் எப்படி வரக்கடவது? (எ - று)

எம்பெருமானைக் காணுமளவிலமாத்திரமேயன்றி அவனது போலியைக் காணுமளவிலும் அவனாகவே பாவித்து இடைவிடாது நாமோச்சாரணம் பண்ணிவருகிற நலமோமான நமக்கு, பிரிந்திருக்கைக்கு அடியான தீவினை எங்கே வந்ததென்று தலைவி வெறுத்துரைத்தாள்.

திருமகளினது பொன்னிறமான திருமேனியினொளி விரவுகையாலே தானும் பொன்னிறம் பொலியப்பெற்ற எம்பெருமானது பெரிய திருமேனி, பொன்மயமான பெரிய மேருமலை போலு மென்பாள், 'திருமாலுருவொக்கும் மேரு' என்றாள். 'மால் தலைக்கொண்ட' என்பதற்கு - 'ஆசையின் மேலெல்லையிலே நிற்கிற' என்றும் உரைப்பர். பிரிந்த தலைவி தலைவன்போலிகளை

அவனுக்கே பாவித்து வாய்பிதற்றுவதை, * "நின்ற குன்றத்தினை நோக்கி நெடுமாலே வாவென்று கூவும்," † "செய்ய தோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன் மூர்த்தி யீதென்னும்" என்பவற்றிலுங் காண்க.

பகவத்பக்தியுடையாரைப் பாவம் அணுகாதென்றும், பாவங்கழிந்தவர்களுக்கே பக்தி பிறக்கு மென்றுமிருக்க, அந்தப்பக்தியின் மேலெல்லையிலே நிற்கிற நமக்கு, பேறுபெறுமைக்குக் காரணமான பாவம் வர விரகுண்டோ? என்று ஆழ்வார் வருந்தியுரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். பக்தியின் மேலெல்லை - எம்பெருமான்பக்கலிலேயன்றி எம்பெருமான்வடிவத்தை யொக்கும்பொருளிலும் ஈடுபடுதல்.

அன்ன - டேயா சிஹ்நம் என்னும் வடசொல், அன்ன மெனத் திரிந்தது.

## தலைவன்கலவிக்கு விரைகிற தலைவி இரங்கல்.

அகூ தீவினைக்காருநஞ்சை நல்வினைக்கின்னமுதத்தினைப்
பூவினைமேவியதேவிமணாளனைப் புன்மையெள்கா
தாவினைமேய்க்கும்வல்லாயனை யன்றுலகீரடியாற்
றாவினவேற்றையெம்மானை யெஞ்ஞான்று தலைப்பெய்வனே.

(இ - ள்) தீவினைக்கு ஆரு நஞ்சை - (அடியார்களுடைய) பாவத்துக்குப் பொறுத்தற்கரிய விஷம்போலபவனும், நல் வினைக்கு இன் அமுதத்தினை - (அவர்களது அடிமையாகிய) நல்லதொழிலுக்கு இனிய அமிர்தம்போல இனிப்பாகவுள்ளவனும், பூவினை மேவிய தேவி மணாளனை - தாமரைமலரைத் தனக்கு இடமாகக்கொண்டு பொருந்திய திருமகளுக்குக் கணவனும், புன்மை எள்காது ஆவினை மேய்க்கும் வல் ஆயனை - சிறுமைகருதி இகழாமற் பசுக்களை மேய்க்கும் வலிமையையுடைய இடையனானவனும், அன்று உலகு ஈர் அடியால் தாவின ஏற்றை - அக்காலத்தில் உலகங்களை இரண்டு அடிகளாலே அளந்துகொண்ட மேன்மையுடையவனு மான, எம்மானை - எமது தலைவனை, எஞ்ஞான்று தலைப்பெய்வன் - எப்பொழுது சேர்வேன்? (எ - று.)

தீவினைக்கு அரு நஞ்சு - கொடிய துன்பத்தை விளைக்கிற தீக்கருமங்களை எளிதில் ஒழிப்பவன். நல்வினைக்கு இன் அமுதம் - தன்பக்கல் அடிமைசெய்தார்க்கு நிரதிசய இன்பமயமாயிருப்பவன், அவர்கள்பக்தியை அழியாதுவளரச்செய்பவன். இங்கே, 'நல்வினை' என்றது, முத்திக்குக்காரணமான பிரபத்தியை, இதுவே, பிறவித்துன்பந் தீர்த்துப் பெருநலமுதவும் உபாய மாதலால், நல்வினையெனப்பட்டது; அழியுந்தன்மையனவான சுவர்க்கஇன்பம் முதலிய காமியபலன்களைத்தரும் புண்ணியச்செயல்களை யன்று, அவை, பிறப்புத் துன்பத்தை யொழிக்கும் உபாய மல்ல. தீவினை யென்றதில், பாவச்செயல்களோடு உபாயாந்தரங்களும் அடங்கும். திருமகள், தாமரையைத் தனது சிறப்புக்கும் மென்மைக்கும் அழகுக்குந் தக்க இடமாகக் கருதி அதில்வீற்றிருத்தல் தோன்ற, 'பூவினை மேவிய தேவி' எனப்பட்டாள். வேஷங்கொண்டவன்போலவன்றிச் சாதிகுணந்தொழில்களில் உறைந்து நிலைநின்றமை, 'வல்லாயன்' என்றதனால் தோன்றும். 'ஏறு' என்றது, மேம்பாடு விளக்கவந்த உபசாரவழக்கு; ஏறு காளை சிங்கம் இச்சொற்கள், ஆண்பாற்கு வருகையில், சிறப்புப்பொருளுணர்த்துவனவாம்.

அடியார்கட்குப் பகைதீர்ப்பவனும் அடிமைக்கு இனியனும் புருஷகாரமான திருமகளுக்குக் கணவனும் அன்பர்க்கு எளியனும் எல்லாவுலகையுங் கீழ்ப்படுத்தியவனு மான எம்பெருமானை எப்பொழுது சேர்ந்து அனுபவிக்கப் பெறுவேனென்று ஆழ்வார் பேற்றுக்கு விரைதல், இதற்கு உள்ளுறை

* திருவாய்மொழி - முப்பத்துநான்காந்திருப்பதிகம் - ச.
† ,, ,, உ.

பொருள். குலசேகராழ்வாரும் *"கடலவிளங்கு கருமேனி யம்மான் தன்னைக் கண்ணாரக் கண்டுகக்குங் காதல் தன்னால்," † 'மாலோனைக் கண்டின்பக் கலவி யெய்தி வல்வினையேன் என்றுகொலோ வாழு நாளே" என்று அருளிச்செய்தல் காண்க

'தீவினைக்கருநஞ்சை நல்வினைக்கின்னமுதத்தினை' என்ற பாடமே, நாடெங்கும் வழங்குவது, எல்லாமூலப்பிரதிகளிலும் எல்லா வியாக்கியானப்பிரதிகளிலும் அப்படியே யுள்ளது ஆயினும், தளைதவறுமையை நோக்கி, 'தீவினைக் காருநஞ்சை நல்வினைக்கின்னமுதத்தினை' என்றபாடங்கொள்ளப்பட்டது இது, வியாக்கியானப்போக்குக்குமாறுபட்டதன்று, ஒற்றுமையுடையதே. அரு என்பது ஆரு என நீட்டலென்னுஞ் செய்யுள்விகாரத்தை வேண்டுமிடம் பெற்றதென்றாவது, அருமையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய ஆதிநீண்டு ஆருஎன நின்றதென்றாவது கொள்க. அன்றியும், தொல்காப்பியத்தில், பண்புச்சொல்விகாரம் மரூஉவின்பாற்படுத்துக் கூறப்பட்டுள்ளதனால், அதற்கு ஒரு வரையறையில்லை யென்றும் அறிக. தீவினைக்கு ஆரும் நஞ்சு எனப்பிரித்து, தீவினையை யழித்தற்குப் பூரணமான நஞ்சமென்று பொருள் கொள்ளவுங் கூடுமாயினும், அது, பிராசீனவியாக்கியானங்களில் 'ஆற்றவொண்ணாத', 'ஆற்றவரிய' என்று காணப்படுகிற உரையோடு மாறுபடும். 'நஞ்சைந் நல்வினை' என்னுமிடத்து, ஞகரமெய் இரட்டினது, விரித்தல்விகாரம். 'தீவினை கட்கருநஞ்சினை நல்வினைக்கின்னமுதை' என்ற பாடம், எல்லாவியாக்கியானஸ்ரீகோசங்களிலும் எடுத்திருக்கிற பிரதீகத்துக்கு மாறாம் 'துஷ்கர்மங்களுக்கு' என்று இருக்கிற உரையை நோக்கி 'தீவினைகட்கு' எனப் பாடங்கொள்வோமெனின், இங்ஙனம் பால்பகாஅஃறிணைப்பெயர்க்குப் பன்மைச்சொல்லாற் பொருள் விரித்த இடந்தோறும் பன்மைவிகுதிபெய்து பாடங்கொள்ளவேண்டிவருமென மறுக்க. அன்றியும், வாதிகேசரி அழகியமணவாளசீயரது ஸ்வாபதேசவுரையில் 'கொடிதாயத் துக்கத்தை விளைப்பதான துஷ்கர்மத்துக்கு' என ஒருமையாகவே பதவுரைசெய்திருத்தலையும், 'அருநஞ்சினை என்றால், எழுத்துமேறும் பாடமுமல்ல' என்று குறித்திருத்தலையும், அவை 'தீவினைகட்கு என்றும் 'அருநஞ்சினை' என்றும் பாடங்கொள்ளுகிறதற்குத் தடையாதலையும் நோக்குக மேலும், மூன்றுமடியில் 'ஆவினை' என்ற பால்பகாஅஃறிணைப்பெயர்க்கு - 'பசுக்களை' என்று உரைத்ததையும், இப்படியே முன்னும் பின்னும் நூல்முழுவதும் பலவிடத்தும் இருத்தலையுங் காண்க வியாக்கியானங்களில் 'அருநஞ்சை' என்று பிரதீகம் எடுத்திருப்பது 'ஆருநஞ்சை' என்றுபாடங் கூறுதற்குத் தடையாகாதோ வெனில்,—ஆகாது. 'அருநஞ்சை' என எடுத்தது, பொருட்பொருத்தத்தை நோக்கி யென்றும், மூலப்போக்கைநோக்கியன் றென்றுங் கொள்க இனி, 'தீவினைக்கருநஞ்சை' என்றே பாடங்கொண்டு, வேதப்பிரயோகம் மற்றையிலக்கணவிலக்கியப்பிரயோகங்களுக்கு மாறுபடுதலுமுண்டென்றாவது, 'ஆர்ஷத்வாந் நதோஷ:' என்கிற நியாயத்தினாலாவது, மகாகவிப்பிரயோக மென்னுங் காரணத்தினாலாவது, ஆன்றோர்பாடத்துக்கே சமாதானங்கூறி யமைத்திடுதலும், எமக்கு உடன்பாடாம். "அபி மாஷம்மஷங்குர்யாத் சந்தோபங்கம் நகாரயேத்" என்ற வடநூற்கொள்கையையும், 'சீருந் தளையுஞ் சிதையவருமிடத்தே செய்யுள்விகாரங் கொள்ளற்பாற்று' என்ற தமிழ்நூற்கொள்கையையுந் தழுவியே 'ஆருநஞ்சைந்நல்' எனப் பாடங் கொள்ளப்பட்டதென்க. இலக்கணவரம்புக்கு அடங்காமல் வரும் ஆர்ஷப்பிரயோகம் அமைக்கப்படுதலைத் தண்டியலங்காரத்திலுங் காண்க

என்காது, என்கு - பகுதி. (அக.)

* பெருமாள்திருமொழி - முதல்திருப்பதிகம் - கக.

† " " அ.

## தலைவனைப்பிரிந்த தலைவி ஆற்றாது உரைத்தல்.

௬0. தலைப்பெய்தியானுன்றிருவடிசூடுந்தகைமையினா
னிலைப்பெய்தவாக்கைக்குநோற்றவிம்மாயமுமாயஞ்செவ்வே
நிலைப்பெய்திலாதநிலைமையுங்காண்டோறசுரர்குழாந
தொலைப்பெய்தநேமியெந்தாயதொல்லையூழிசுருங்கலதே.

(இ - ள்.) அசுரர் குழாம் - அசுரர்கூட்டத்துக்கு, தொலை பெய்த - அழிவைப் பண்ணின, நேமி - சக்கராயுதத்தையுடைய, எந்தாய - எமது தலைவனே! யான் - நான், உன் திரு அடி - உனது திருவடித்தாமரைமலர்களை, சூடும்- (எனது) தலைமேற் கொள்ளும்படியான, தகைமையினால்-அடிமைக்குணமாகிய தகுதியினால், தலைப்பெய்து - (யான் உன்னைச்) சேர்ந்து, நிலைப்பு எய்த-நிலைபெற்றிருக்கும்படியாக, ஆக்கைக்கு - இந்தவுடம்பைப்பெறுதற்கு, நோற்ற-தவஞ்செய்த, இ- இந்த, மாயமும் - ஆச்சரியத்தையும், மாயம் - இந்த ஆச்சரியம், செவ்வே நிலைப்பு எய்திலாத - ஒருபடியாக நிலைநின்று முடிவு பெறமாட்டாத, நிலைமையும்- நிலைமையையும், காண்தோறு - நோக்குந்தோறும், தொல்லை ஊழி சுருங்கலது - பழமையான [அநாதியான] காலம் சுருங்குகிறதில்லை, (எ - று)

நான் உன்னைச் சமீபித்து உனது திருவடிகளைத் தலைமேற்கொண்டு வழிபடும்படியான இவ்வுடம்பைப் பெறுதற்கு நல்லதவஞ்செய்துவைத்திருந்தும் அப்பேறு முட்டமுடியக் கைகூடாது இடையில் நீங்குதலை ஆலோசிக்குமிடத்து ஆற்றாமையால் காலம் மிகநெடுகித்தோன்றுகிறது என்பதாம். சுருங்கலது என்பதற்கு - உடன்பாடாக, சுருங்குதலையுடையது என்பொருள்கொள்வதாயின், இப்படியே என்காலங் கழிந்துவிடுகிறதே யென்று இரங்கியபடி. முற்பிறப்புக்களில் மிகப்பெருந்தவஞ் செய்திருந்தாலன்றி, இப்படிப்பட்ட அரிய பெரிய தலைவனைப் பெறுதல் இயலாதாதலால், 'நோற்ற இம்மாயம்' என்றது

எம்பெருமானைச் சரணமடைந்து அவன் திருவடிகளையேவணங்கி அதனையே பேற்றுக்குச்சாதனமென்று நிலைபெறுதற்கு உறுப்பான இவ்விலக்ஷண சரீரத்தைப் பெற்றிருந்ததையும் அப்படிபெற்றிருந்தும் பூர்ணாநுபவம் கிடைத்திடாமலிருத்தலையும் நோக்குமிடத்துக் காலவிளம்பம் பொறுக்கமுடியவில்லை யென்று ஆழ்வார் கலங்கியுரைத்தல், இதற்கு உள்ளுறைபொருள். 'உன் திருவடிகளிலடிமையாலல்லது செல்லாதபடியான சரீரத்தைப் பெற்றபடியையும், அப்படியிருக்கச்செய்தே அவ்வடிமையை இழந்திருக்கிற இழவையும் அநுசந்திக்கக் காலம்போருகிறதில்லை யென்கிறார்' என்பர் அப்பிள்ளை. 'மாயம் செவ்வே நிலைப்பெய்திலாத நிலைமை' என்பதற்கு-இவ்வுடம்பு நிலையில்லாததாயிருக்குந்தன்மை யென்றும், பிரகிருதிசம்பந்தத்தோடிருக்கையில் உண்டான அடிமைக்குணம் ரஜோகுண தமோகுண சம்பந்தத்தால் நிலைபடாது சலிக்கக்கூடிய தன்மை யென்றும் உரைப்பர். 'சூடும்' என்றதனால், திருவடி மலரெனக் கொள்ளப்பட்டது. *"கோலமா மென் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே" என்பதுங் காண்க. ஆயிரம்பிறப்புக்களிற் செய்த நோன்பின் பயனாகவே ஒரு ஸ்ரீவைஷ்ணவஜந்மம் கிடைப்பதாதலால், 'ஆக்கைக்கு நோற்ற இம்மாயம்' எனப்பட்டது.

தலைப்பெய்தல் - ஒருசொல். தலைப்பெய்தியான் - குற்றியலிகரம். தலைப்பெய்த லென்பதற்கு - தலையின்மீதுவைத்த லென்ப பொருள்கொள்ளலாகாது; பின்பு 'சூடும்' என வருதலால். 'தொலைப்பெய்த' என்பதை, தொ

* திருவாய்மொழி - மூப்பத்துமூன்றாந்திருப்பதிகம் - ௬.

லைப்பட எய்த என்பதன் தொகுத்தலாக்கி, தொலைக்கும்படி பிரயோகிக்கப்பட்ட என்ப பொருள் கொள்ளுதல் சிறப்பன்று, எய்தல் என்பது அம்பிற்கு உரிய வினையாதலால். (௬௦)

## தோழிக்குத் தலைவி தன் கற்பு உணர்த்தி அறத்தொடுநிற்றல்

௬௧. சுருங்குறிவெண்ணெய்தொடுவுண்டகள்வனை வையமுற்று
மொருங்குறவுண்டபெருவயிற்றாளனை மாவலிமாட்
டிருங்குறளாகியிசையவோர்மூவடிவேண்டிச்சென்ற
பெருங்கிறியானையல்லாலடியேனெஞ்சம்பேணலதே.

(இ - ள்.) சுருங்கு உறி - சுருங்கக்கட்டப்பட்டுள்ள உறியிலே சேமித்து வைக்கப்பட்ட, வெண்ணெய் - வெண்ணெயை, தொடு உண்ட - வஞ்சனையினால் எடுத்து அமுது செய்த, கள்வனை - களவையுடையவனும், வையம் முற்றும் ஒருங்கு உற உண்ட - உலகமுழுவதையும் ஒருசேர விடாமல் உட்கொண்ட, பெரு வயிற்றாளனை - பெரிய திருவயிற்றையுடையவனும், மாவலி மாட்டு - மகாபலிச்சக்கரவர்த்தியினிடத்தில், இரு குறள் ஆகி - மிகச் சிறிய வாமனனாய், இசைய - (அவன் தானே கொடுத்தற்கு) இசையும்படி, ஓர் மூ அடி வேண்டி - ஒரு மூன்றடி நிலத்தை இரந்து கொண்டு, சென்ற - போயருளின, பெரு கிறியானை அல்லால் - மிக்க தந்திரமுடையவனுமான திருமாலையல்லாமல் (வேறொருவனை), அடியேன் நெஞ்சம் பேணலது - (அவனுக்கே) அடிமையான எனது மனம் விரும்பாது, (எ - று.)

தலைமகள் களவொழுக்கத்தால் திருமாலாகிய தலைமகனைக் கூடிநிற்க, அந்நிலையையறியாத பெற்றோர் அவளைப் பிறர்க்கு மணஞ்செய்விக்க ஒருப்பட, அதனையறிந்த தலைமகள், தன் களவைத் தோழிமூலமாகச் செவிலிக்கும் அவள்மூலமாக நற்றாய்க்கும் அவள்மூலமாகத் தந்தைக்கும் மற்றும் பெரியோர்க்கும் தெரிவித்துத் தன்னை அவனுக்கே மணஞ்செய்துவைக்கும்படி செய்துகொள்ள விரும்பி அத்தலைமகள் தன் கருத்தைத் தோழிக்கு வெளிப்படுத்தியது, இது, இங்ஙனம் களவை வெளிப்படுத்தல், 'அறத்தொடுநிற்றல்' எனப்படும். 'தொடுவுண்ட கள்வன்' என்கையாலே, களவின் கடைப்புணர்ச்சி தோற்றிற்று, 'வையம்' இத்யாதியாலே, நீரிடையுதவி தோற்றிற்று, 'மாவலி மாட்டு' இத்யாதியாலே, தானே குறையிரந்து வரைந்துகொள்ளும் பேரறிவுடைமை தோற்றிற்று' என்ற அழகியமணவாளசீயருரை, அறியத்தக்கது

சுருங்குறி - கள்ளக்கயிற்றை உருவி விரல் நுழைக்கவொண்ணாதபடி நெருக்கப்பட்ட உறியெனக. இருங்குறள் - மிகக்குறுகிய வடிவம். பெரிய வடிவத்தையுட்கொண்ட சிறுவடிவமுமாம் மகிமையுடைய வடிவமுமாம், கரிய குறள்வடிவமுமாம்

அடியார்கள்பக்கல் அன்புடையவனும் ஆபத்துக்கு உதவுபவனும் முற்றுமுணர்ந்தவனுமான எம்பெருமானை யொழிய வேறொருபொருளை என்னெஞ்சம் அறியாதென்று ஆழ்வார் அன்பர்க்கு உரைத்தல், இதற்கு உள்ளுறை பொருள். 'சுருங்குறி வெண்ணெய் தொடு வுண்ட கள்வன்' என்றதனால், இவ்வுடம்பாகிய சிக்கத்திலே கட்டுப்பட்டுள்ள வெண்ணெயின் தன்மையதான முமுக்ஷுவாகிய ஆத்மாவை எவரும் அறியாதபடி விரும்பிக் கைக்கொண்டு அநுபவிப்பவனென்பது தோன்றும்.

வேண்டி யென்பதை வேண்ட என எச்சத்திரிபாக்கினுமாம். 'ஒருங்கற' என்ற பாடம், ஏட்டுப்பிரதிகளுக்கும், வியாக்கியானங்களின் போக்குக்கும், இயல்முறைக்கும் மாறும். (௬௧)

வேந்தற்குற்றுழிப்பிரிவில் தலைவனைக்குறித்துத் தலைவி இரங்கல்.

கூஉ. பேணலமில்லாவரக்கர்முந்நீரபெரும்பதிவாய
நீணகர்நீளெரிவைத்தருளாயென்றுநின்னைவிண்ணோர்
தாணிலந்தோயந்துதொழுவர்நின்மூர்த்திபல்கூற்றிலொன்று
காணலுமாங்கொலென்றேவைகன்மாலையுங்காலையுமே. [று

(இ - ள்.) பேண நலம் இல்லா - (உன்னை) விரும்பிப பக்திசெய்தலாகிய நற்குண மில்லாத, அரக்கர் - இராக்கதர்களது, முந்நீர் பெரு பதிவாய் - கடலாகிய பெருநீரரணையுடைய பெரிய மலையிடத்தி லுள்ள, நீள் நகர் - பெரிய லங்காபுரியில், நீள் எரி வைத்தருளாய - பெரிய நெருப்பை வைத்து அழித்தருளுவாய, என்று - என்று சொல்லிப பிரார்த்தித்து, நின்னை - உன்னை, விண்ணோர் - தேவர்கள், வைகல் - நாள்தோறும், மாலையும் காலையும் - இரண்டு சந்திகளிலும், தாள் நிலம் தோயந்து தொழுவர் - தங்கள் கால்கள் தரையிலே படும்படி வந்து வணங்குவர், (அவர்கள் அங்ஙனம் வணங்குதல், தங்கள் பகையை யழிப்பிக்கும்பொருட்டே யன்றி), நின் மூர்த்தி பல் கூற்றில் ஒன்று காணலும் ஆங்கொல் என்றே - உனது வடிவத்தின் பல அம்சங்களுள் ஒன்றையேனும் பார்க்கவேண்டுமென்றோ? [அன்றென்றபடி], (எ-று)

"தோள்கண்டார் தோளேகண்டார்" என்றபடி உனது அழகிய திருவடிவத்தில் ஓரம்சத்தைக் கண்குளிரக் கண்டு அனுபவித்தலும் அதியாநந்தகரமாயிருக்க, தேவர்கள் அதனை ஆசைப்பட்டு வேண்டாமல் உன் காலில் விழுந்து எப்பொழுதும் தம் பகையை அழித்துத்தரவேண்டுமென்று வேண்டுவதே! என்று அவர்களைப் பழித்து இரங்கினாள் வேந்தற்குற்றுழிப் பிரிவாவது - ஒருவேந்தனுக்கு ஒருவேந்தன் தோற்று வந்து சரணமடைந்தால் அவனுக்கு உதவிசெய்யப் பிரிதல். தன்னைத் தலைவன் பிரிதற்குக் காரணம், அரக்கர்க்குத் தோற்றுச் சரணமடைந்து வேண்டிய தேவர்களின் வேண்டுகோளா மென்று, அவர்களைப் பழித்தாள். 'காணலுமாங்கொலென்றே' என்றதனால், தான் தலைமகனைக் காணவுற்றுக் கவலுதல் தோன்றும்.

பேண நலம் - தன்னுயிர்போலவே பிறவுயிரையுங் கருதி எல்லாப் பிராணிகளும் உயர்ந்துவாழவேண்டுமென்ற எண்ணமுமாம். 'அது இல்லாத அரக்கர்' எனவே, பிறரைவருத்துபவ ரென்றவாறு பதி என்றது, இலங்காபுரிக்கு இடமான த்வீபத்தை பெரும்பதி யென்றும் நீணகர் என்றும் கூறியவற்றால், வரபலத்தால் எவராலும் அழித்திடவொண்ணாமை தோன்றும் நீள் எரி வைத்தல் - இராவணனுக்கு அஞ்சி அகலச்செல்லுந் தன்மையனான அக்கினியை அவ்வசநந்தணிந்து அங்கே அழியாது வளரச் செய்தல். இங்ஙனம்வேண்டியது, இலங்கையிலுள்ள இராக்கதர்களை வேரோடு அறுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தபடி 'தாள் நிலந்தோயந்து' என்றதனால், தேவர்கள் பூலோகத்தில்வந்து திருப்பாற்கடலைச் சார்ந்து பரமனைப் பணிந்து வேண்டியமை தோன்றும், அன்றி,'தாள் நிலந்தோயந்து என்றதனால், தெய்வத்தன்மை குலைதல் குறிப்பிக்கப்பட்ட தெனவுமாம். தமது இருப்பிடமாகிய சுவர்க்கம் பகைவர்கைவசப்படவே, அங்கு நிலையழிந்து பூமியிலே வந்து கிட்டினரென்றலும் ஒன்று இனி, நிலந்தோயந்து தாள் தொழுவர் என மாற்றி, தரையிலே சாஷ்டாங்கமாகப் பணிந்து உன் திருவடிகளை வணங்குவரென்றலுமாம் நின்பல்மூர்த்தியில் ஒருகூறும் என மாற்றியும் உரைப்பர்.

உன்னுடைய இனிய வடிவை அனுபவிக்க ஆசைப்படாமல் தந்தமது இஷ்டஸித்திக்காகத் தேவர்கள் உன்னைப் பூமியில் வந்துபிறந்து பகையழித்துத் தம்காரியஞ்செய்து தலைக்கட்டித்தரும்படி வேண்டிப பிரயோஜநாந

தரப்பாராகின்றனரே என்று ஆழ்வார் இகழ்ந்து கூறல், இதற்கு உள்ளுறை பொருள். இதனால், இவர் எம்பெருமானை அனுபவித்தலையே விரும்புதல் தோன்றும்.

முந்நீர் - குறிப்புப்பெயரெச்சம். என்றே என்ற ஏகாரம், வினாவகையால், எதிர்மறை குறிக்கும். (கஉ)

## இருள் கண்டு அஞ்சுகிற தலைவி தோழி செவிலியரை வெறுத்தல்.

கங. காலைவெயிலோற்குமுன்னோட்டுக்கொடுத்தகங்குற்குறும்பர்
மாலைவெயிலோன்படவையகம்பரவுவரன்னகண்டுங்
காலைநன்ஞானத்துறைபடிந்தாடிக்கண்போதுசெய்து
மாலைநன்னாவிற்கொள்ளாரினையாரவன்மைப்படியே.

(இ - ள்.) காலை - உதயகாலத்தில், வெயிலோற்கு முன் - சூரியனாகிய சக்கரவர்த்திக்கு எதிரிலே, ஓட்டு கொடுத்த - (நிற்கமாட்டாமல்) புறங்கொடுத்தோடுதலைச் செய்த, கங்குல் குறும்பர் - இருளாகிய சிற்றரசர்கள், மாலை - சாயங்காலத்திலே, வெயிலோன் - அந்தச்சூரியனாகிய பேரரசன், பட - அழிய, வையகம் பரவுவர் - (தாங்கள்) உலகமுழுவதும் பரவுவார்கள், அன்ன கண்டும் - அப்படிப்பட்ட கொடுமைகளைப் பார்த்திருந்தும், (பலர்), காலை - இச்சமயத்துக்கு ஏற்றபடி, நல் ஞானம் துறை படிந்து ஆடி - நல்ல ஞானமாகிய துறையிலே இறங்கி மூழ்கி [பகவத்ஜ்ஞானமாகிய வெள்ளத்தில் ஆழ்ந்து ஈடுபட்டு], கண் போது செய்து - (பரவசப்படுதலால்) கண்களை மூடிக்கொண்டு, மாலை - (எனது தலைவனை) திருமாலை, நல் நாவில் கொள்ளார் - நல்ல தங்கள் நாவினால் பெயர்கூறித் துதியார், அவன் மை படி - அவனது கரிய திருமேனியை, நினையார் - நினைத்தலுஞ்செய்யார், (எ-று.)

தலைமகள் எம்பெருமானாகிய தலைமகனைப் பிரிந்து அப்பிரிவை ஆற்றாது நிற்கிற நிலையில், சூரியன் அஸ்தமித்துக் காமோத்தீபகமான இராப்பொழுது வந்து எங்கும் இருள் பரவி அவ்விருள் எம்பெருமானது கரிய திருமேனியை ஞாபகப்படுத்தி வருத்த, அதற்குஆற்றாத அத்தலைமகள், *"உலகேழுமுண்டான் சொன்மொழி மாலை யந்தண்ணந்துழாய் கொண்டு சூட்டுமின்" என்று சொல்லும்படி தன் நோய்க்குப் பகவந்நாமோச்சாரணமாகிய மந்திரபரிகாரத்தையே யுடையவளாதலால், தன் நோய்நிலையையும் அதன் பரிகாரத்தையும் ஆராய்ந்து நடத்தாத தோழியர் செவிலியரென்பவரைக் குறித்து வெறுத்துக் கூறியது, இது முந்தின வாக்கியத்தால், இருளின் கொடுமையை வெளியிட்டாள். பிந்தினவாக்கியத்தால், அவ்விருள் அவனது திருமேனிக்கு ஸ்மாரகமாய்த் தன்னை வருத்துதலைத் தோழிமுதலியோர் சிந்தியாமையையும், சிந்தித்து அந்நோய்தணிக்கும் உபாயத்தைச் செய்யாமையையும் பழித்தவாறு.

இப்பாட்டின் முதல்வாக்கியத்தைக் கீழ் கங - ஆம்பாட்டின் முதல் வாக்கியத்தோடு ஒப்பிடுக. வெயிலோன் - உஷ்ணகிரணமுடையவன், பகைவர்க்குக் கொடிய பராக்கிரமசாலி. குறும்பர் - குறுநிலமன்னர். அன்ன கண்டும்-அழியாதுபாதுகாக்கிற நீதிமானான செங்கோலரசன் அழிந்ததையும், சமயம்நோக்கி எளியாரைவருத்தும் அநீதியை யுடைய கொடுங்கோலரசர் பரவினதையும் பிரத்யக்ஷமாகப் பார்த்திருந்தும் என்றபடி.

உலகத்தில் அநேகர் †"வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்" என்றபடி காலையும் மாலையும் மாறிமாறிவருதலால் காலங்கழிகிறபடியைக் கட்புலனாகக்கண்டுவைத்தும் தமது இளமையாக்கைகளின் நிலையாமையிற்கரு

---

* திருவிருத்தம்-உ0.

† நாலடியார் - அறன்வலியுறுத்தல் - க.

த்தூன்றுதலின்றி எம்பெருமான்பக்கல் ஈடுபாடுகொள்ளாமல் வீணேயிழந்து பழுதே பலபகலும் போக்குதலைக்குறித்து ஆழ்வார் வெறுத்து அருளிச்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள் இவ்வாறு உலகத்தாரைச் சீர்திருத்தி உய்வித்தற்பொருட்டே திருவவதரித்தவராதலாலும், மிக்கஜீவகாருணியமுடையவராதலாலும், பிறரிழவுக்குப்பரிவுகொள்ளக் கடவராவர் முதலிரண்டடிகளால், பகலும் இரவு மாக மாறிமாறிவந்து ஆயுள்நாளைக்கழியச்செய்தலை எடுத்துக்காட்டியபடி. இது, செல்வநிலையாமைக்கும் ஒரு திருஷ்டாந்தமாம். காலை-சத்துவகுணப்பிரதானமான விடியற்காலத்தில், நல் ஞானத் துறை படிந்து-சிறந்த ஆத்மஞானத்துக்கு இறங்குதுறையாகிய ஆசாரியனை வணங்கி, ஆடி-அவனுபதேசத்திலே யாழ்ந்து, கண் போது செய்து - (விஷயாந்தரங்களில்) அறிவுசெல்லாதபடி அதனை உள்ளடக்கி, மாலை நல் நாவில் கொள்ளார் - தங்கள்பக்கல் அன்புடைய சர்வேசுவரனை நல்ல நாவினால் துதியார், அவன் மை படி நினையார் - அவனுடைய கரியதிருமேனியைத் தியானித்தலுஞ்செய்யார் என்று நாட்டாரைப் பழித்தார். நல்ஞானம் - பகவத்விஷயமானஞானமே நல்லஞானம், மற்றைவிஷயமான ஞானமெல்லாம், அஜ்ஞானமும் விபரீதஞானமுமாமென்க. ஸ்நாநத்துக்கு உரிய காலம் வைகறையாதலால், 'துறைபடிந்தாடி' என்பதற்கு ஏற்பக் 'காலை' எனப்பட்டது. இரட்டுறமொழிதலென்னும் உத்தியால், 'கண்போதுசெய்து' என்பதற்கு - எம்பெருமான்பக்கலிலே ஞானமென்னுமுட்கண்மலர்ந்து என்றும் பொருள்கொள்க, *"ஒண்டாமரையாள்கேள்வ, னொருவனையே நோக்கு முணர்வு" என்னக்கடவதிறே. 'கண்போதுசெய்து'—'போதுசெய்து என்று - மொட்டிக்கைக்கும் பேர், அலருகைக்கும் பேர், புறம்புற்ற விஷயங்களில் கண் செம்பித்து என்னுதல், பகவத்விஷயத்திலே விழித்து என்னுதல்' என்ற ஈடு அறியத்தக்கது. †"பெயரினையே, புந்தியாற் சிந்தியா தோதி யுருவெண்ணும், அந்தியா லாம்பய னங்கென்" என்றபடி மனப்பூர்வமாகத் தியானித்தலின்றிச் சொல்மாத்திரத்தால் ஓதிஉருவிடுதல் சிறப்பன்றாதலால், 'மாலை நன்னாவிற்கொள்ளார்' என்றமாத்திரத்தோடு நில்லாமல் 'நினையாரவன்மைப்படியே' என்றும் அருளிச்செய்தது. போது - மலரும்பருவத்து அரும்பு. பேரரும்பு. நல் நா-பகவானைத் துதிப்பதற்கென்றே அமைந்த நா, ‡"நாராயணாவென்னா நாவென்ன நாவே" என்றார் பிறரும்.

ஓட்டு-ஓடுதல், முதனிலை திரிந்த தொழிற்பெயர். (௬௩)

தலைவியைக்கண்ட பாங்கன் மீண்டு தலைவனையடுத்து வியந்துகூறல்.

௬௪. மைப்படிமேனியுஞ்செந்தாமரைக்கண்ணுமும் வைதிகரே
மெய்ப்படியானுன்றிருவடிசூடுந்தகைமையினு
ரெப்படியூராமிலைக்கக்குருட்டாமிலைக்குமென்னு
மப்படியானுஞ்சொன்னேனடியேன்மற்றியாதென்பனே.

(இ - ள்) மை படி மேனியும் - நீலநிறம் செறிந்த திருமேனியையும், செம் தாமரை கண்ணும் - செந்தாமரைமலர்போன்ற திருக்கண்களையுமுடைய, உன் - உனது, திரு அடி - திருவடித்தாமரைமலர்களை, வைதிகரே - வேதவிதிமுறையொழுக்கமுடையவர்கள்தாமே, மெய் படியால் - உண்மையானநெறியால், சூடும் - (தம்) தலைமேற்கொண்டு வணங்கும்படியான, தகைமையினார் - தன்மையுடையவர்கள், எ படி ஊர் ஆ மிலைக்க குருடு ஆ மிலைக்கும் என்னும் அ படி - எப்படி (வெளியில் மேய்ந்து மீண்டு) ஊர்ப்சார்ந்த

* முதல்திருவந்தாதி - ௬௭. † முதல்திருவந்தாதி - ௩௩.
‡ சிலப்பதிகாரம் - ஆய்ச்சியர்குரவை.

(கண் தெரிநத) பசுக்கள் (இடமறிநது) கனைக்கக் குருட்டுப்பசுவுங் கூடக் கனைககுமென்று (உலகஞ்) சொலலுமேர அபபடியே, யானுஞ சொன்னேன்- நானும (உன்னைக் குறை) கூறினேன், அடியேன் மற்று யாது என்பன்- (உனது) அடியவனான நான் வேறென்னவென்றுசொலலுவேன்' (எ - று)

இயற்கைபபுணாசசி புணர்நது பிரிநத தலைமகன் தான் அத்தலைமகளை மீணடுஞசோவிருமபி அவளது அழகுமுதலியவற்றைத தன்காதற்பாஙக னுடன் பாராட்டிக்கூற, அதுகேட்டு 'ஒருமஙகைகாரணமாக நீ இஙஙனம மெலிதல தகாது' என்று அவனை இடித்துரைதத பாஙகன், அவனால மீணடும அவவடிவின சிறபபை மிகஎடுத்துககூறிக கழறறெதிாமறுககபபட்டபின், அவ னைசசமாதானபபடுததி, அவன்சொனன குறிபபின்படியே தான் சென்று பூஞ சோலையில அவளைககணடு, அவளது ரூப லாவணணிய செளநதரியாதிகளை நேரில நோககி வியநது, 'இததனமையாளைக் கணடபின் காமவேதனையால மிக வருநதாது சிறிதும ஆறியிருததல எததனைபபெரியோாககும ஆகாதே, இபபடிபபட்டவளைக கணடு பிரிநதும ஒருவாறு ஆறியிருககிறவனை நான முன்பு ஆராயசசியின்றி இடிததுரைததேன' என்று நொநது, இகழநத தறகிரஙகி, விரைநது மீணடுவநது தலைவனைநோககிக் கூறியது. இது 'மைப படிமேனியுஞ செநதாமரைககணணும' என்ற அடைமொழிகளால அவ் வழகியாளைச சோதறகு ஏறற வடிவழகுடையாய நீ யென்றும, 'வைதிகரே மெயபபடியால உன திருவடி சூடுந தகைமையினா' என்றதனால அவ்வழகி யாளைககணடும ஒருவாறு ஆறியிருநத நீ ஞானநுட்டானமுடைய வைதிகா களாலுந தலைமேறகொணடு நனகுமதிததுக கொணடாடததககவ னென் றும, 'எபபடியூராமிலைககக குருட்டாமிலைககுமெனனும அபபடி யானுஞ சொன்னேன' என்றதனால அவவடிவததின சிறபபையும உனது மனததின் மையையும நோககாது உலகததிற சாதாரணமாக ஒருநீயொழுககததி லிழிவாரை அவாகணபா கட்டுரைததுமறுககிற வழககினபடியே நான்உன்னை முன்புஇடிததுரைததது கணதெரிகிறபசுககளகனைததவாறே குருட்டுபபசு வுஙகனைததலபோல அறியாமறபாறசெயத தென்றும,'அடியேன்'என்றதனால அபபிழையை நீ பொறுததறகேறற நிலையுடையேன யானென்றும, 'மற றியாதென்பனே' என்றதனால அவ்வடிவழகைககணடும முழுககலககமடை யாது சிறிதுதணிவுறறிருநத உனது திணமையை இஙஙனமபாராட்டிக்கூறும விதததாலன்றி அவவடிவததின சிறபபை யான எஙஙனம வருணிததுககூற வலலே னென்று கூறினான் 'பாஙகன்தலைவியைவியததல,பாஙகன் தலைவனை வியததல, இகழநததறகிரஙகல எனப படாககையாக நிகழும இம்மூன்று துறைகளின் போககும, முன்னிலையாககிகழகிற தலைவன்றனக்குததலைவிநிலை கூறலெனனும ஒருதுறையின்பாற படுதது இஙஙனங கூறபபட்ட தென்க

கிழ 'மாலை நன்னுவிறகொளளாா நினையாா அவன்மைபபடியே' என்று நாட்டாரைபபழிதத தமமை நோககி எமபெருமான் 'நீாதாம நமமை உள் ளபடி அறிநது சொலலவலலீரோ?' என்று திருவுள்ளமபறறினதாகக் கொ ணடு, 'விலக்ஷணாரான வைதிகாகளே உன்னை உளளபடி அறிநது சொலலவல லாா · நான் அவாகள போனவழியே போவதுமாததிரததுககே யுரியன' என் று ஆழவாா விணணபபஞசெயதல, இதறகு உளளுறைபொருள. மைபபடி மேனியும - உனது அஞசனததின்வடிவுபோலே யிருககிற திருமேனியையும, செநதாமரைககணணும - சிவநததாமரைமலாபோலேயிருககிற திருககண களையும, வைதிகரே-வேதததிறசொலலுகிறபடி அறியுமவாகளே, மெயபபடி யால உன் திருவடி சூடும தகைமையினா - (கேட்டாாவாயககேட்கையன்றி யே) மெயயாகக் கணடபடியாலே உன்னுடைய திருவடிகளைத தலைமேற கொணடு அனுபவிககுநதன்மையுடையவாகள், எபபடி ஊர் ஆ மிலைக்க குருடு

ஆயிலக்கும் என்னும் அப்படி யானும் சொன்னேன் - ஊராபுக்கு அணைந்த பசுக்கள் (நிலைகண்டு மகிழ்ந்து) கனைக்கக் கண்ணில்லாத பசுவும் அதுகேட்டுத் தான் இன்னதென்றறியாமலே ஒக்கக் கனைக்கு மென்று உலகம் யாதொருபடி சொல்லும்? அவ்விதமாகவே (வேதவைதிகபுருஷர்கள் சொன்ன பாசுரத்தைக் கேட்டு) நானும் சொன்னேன், அடியேன் - சொல்லுதற்கு அடியான சம்பந்தமுடையவனும் பக்திபரவசப்பட்டவனுமான நான், மற்று யாது என்பனே - அல்லது என் ஞானத்தாலே கண்டு என் சக்தியாலே சொன்னேனென்னவல்லேனோ? என்று ஸ்வாபதேசங் காண்க. மைப்படிமேனி - கண்டார் கண்கள் குளிரும்படியான வடிவு.

இப்பாட்டுக்கு இருவகைப்பொருளும் வேறுகூறவுங்கூடும்
வைதிகரே, ஏகாரம் - பிரிநிலையோடு, உயர்வுசிறப்பு. (௯௪)

## தலைவி அறத்தொடுநிற்கத் துணிதல்.

௯௫. யாதானுமோராக்கையிற்புக்கங்காப்புண்டுமாப்பவிழ்ந்து
மூதாவியிற்றடுமாறுமுயிர்முன்னமேயதனால்
யாதானும்பற்றிநீங்கும்விரதத்தைநல்வீடுசெய்யு
மாதாவினைப்பிதுவைத்திருமாலைவணங்குவனே.

(இ - ள்.) உயிர் - உயிரானது, — மூது ஆவியில் - பழமையான (பலவகைப்) பிறப்புக்களுள், யாது ஆனும் ஓர் ஆக்கையில் - யாதாயினும் ஒரு சரீரத்தில், புக்கு - பிரவேசித்து, அங்கு - அவ்வுடம்பில், ஆப்புண்டும் - கட்டுப்பட்டு நின்றும், ஆப்பு அவிழ்ந்தும் - (அங்கு நின்று) தொடர்ச்சி நீங்கியும், தடுமாறும் - நிலைமாறி அலையுந்தன்மையது, அதனால் - ஆதலால், — முன்னமே - (எனது உயிர் இவ்வுடலை விட்டு நீங்குதற்கு) முன்பாகவே, — யாது ஆனும் பற்றி - எந்தவிதத்தினாலாவது, நீங்கும் விரதத்தை நல் வீடு செய்யும் - (தலைமகன் என்னைப்) பிரிதலாகிய தவறுவொழுக்கத்தை நன்கு விடுவித்தற்கு ஏற்ற, மாதாவினை - தாயையும், பிதுவை - தந்தையையும், திருமாலை - திருமாலாகிய எனது அத்தலைவனையும், வணங்குவன் - வணங்கிவேண்டிக்கொள்வேன், (எ - று) — ஈற்று ஏகாரம் - தேற்றம்.

திருமாலாகிய தலைமகனைக் களவொழுக்கத்தாற் புணர்ந்து பிரிந்து வருந்துகிற தலைமகள், "இனி என்னுயிர் தரித்துநில்லாதாதலின், யான் விரைவில் இறந்துபடுவேன் அங்ஙனம் பட்டேனாயினும், மறுபிறப்பில் இத்தலைவனையே கூடக் கருதுகிறேன், என்றாலும், ஒவ்வொருயிர்க்குங் கருமத்திற்கு ஏற்பநேரக்கூடிய நால்வகைத்தோற்றத்து எழுவகைப்பிறப்பின் எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிபேதங்கள் உள்ளனவாதலால், அவற்றில் யான் மானிடமகளாகவே மீண்டும் பிறக்கிறேனென்பது என்ன நிச்சயம்? ஆதலின், இப்பிறப்பிலேயே இத்தலைவனைப் பிரியாது கூடுமாறு, என்னுயிர் இவ்வுடம்பைவிட்டு நீங்குமுன்னமே யான் விரைந்து முயலவேனுவேன் அதாவது, நான் நாணத்தை விட்டு உடனே என் கருத்தைத் தோழிக்கு வெளிப்படையாகச் சொல்லி அவள்மூலமாகச் செவிலிக்கும் அவள்மூலமாக நற்றாய்க்கும் அவள்மூலமாகத் தந்தைக்கும் அதனை வெளிப்படுத்தி அவர்கள் எவ்வாறாயினும் இவனையே எனக்கு மணம்புரிவிக்கும்படி செய்துகொள்ளுவேன், அன்றியும், தோழிமூலமாகத் தலைமகனுக்கு எனது வருத்தமிகுதியைக் கூறி அவன் விரைவில் என்னை வரைந்துகொள்ளுமாறு செய்வேன் என்று பலவாறு ஆய்ந்து தோழிக்குத் தான் அறத்தொடுநிற்கத் துணிந்தது, இது.

நீங்கும் விரதத்தை நல்வீடுசெய்தலாவது - பிரிதலின்றி வெளிப்படையாக கூடியிருக்கும்படி மணஞ்செய்வித்தல். களவொழுக்கத்தில் இயற்கைப்புணர்ச்சி, பாங்கற்கூட்டம், இடந்தலைப்பாடு, பாங்கியிற்கூட்டம், பகற

குறி, இரவுக்குறி, ஒருவழித்தணத்தல், வரைபொருட்பிரிதல் என்ற ஒவ்வொருவகையினும் தவறாமற் பிரிவு நேர்தலால், அதனை, விரதமென்றார்; விரதமாவது - தவறாமல் ஏற்றுக்கொண்டு ஒழுகும் ஒழுக்கம். ஒருவனைத் தம் மகளுக்கு மணஞ்செய்வித்தற்கு அவனது கல்வி, செல்வம், குலம், ஒழுக்கம், அன்பு, வேண்டுகோள், அருங்கலங்கொடுத்தல் முதலாகக் காரணம் பலவகையாதலால், அவற்றுள் ஏதேனும் பொருந்துவ தொன்றுபற்றி மணம்புரிவிக்கக் கருதுவார், 'யாதானும் பற்றி' என்றார். யாதானும்பற்றி வீடுசெய்யுமென இயையும். யாதானும்பற்றி நீங்கும் என்று இயைத்து, பிறரறிதல், குடிப்பழி, ஊரவரலர்தூற்றல், வரைவுக்குரிய பொருளீட்டல் முதலிய பிரிதற் காரணம் பலவற்றுள் ஏதேனுமொன்றுபற்றி நீங்குகிற வெனினுமாம்.

ஆக்கை, ஆப்பு - யாக்கை, யாப்பு என்பவற்றின் மரூஉ. யாக்கையென்பதற்கு - (உயிரைக்) கட்டிப்படுத்துவ தென்று காரணப் பொருள். முதுமை + ஆவி = மூதாவி. ஆவியென்பது - தானியாகுபெயராய், உடம்பை யுணர்த்திற்று. மூதாவியிற் றடுமாறும் என்பதற்கு - விட்டுநீங்குதலில்லாத சூக்ஷ்மசரீரமூலமாக நிலைபெயருமென்றும் உரைக்கலாம். உயிர் ஒரு ஸ்தூலசரீரத்தை விட்டு மற்றொரு ஸ்தூலசரீரத்திற் சாரும்பொழுதும் சுவர்க்க நரகங்களுக்குச் செல்லும்பொழுதும் சூக்ஷ்மசரீரத்தைப்பற்றியே செல்லுமென்பது சித்தாந்தம், இந் நுண்ணுடம்பு, முத்திநிலையிலேயே உயிரை விடும்.

அநாதியாய்வருகிற சரீரசம்பந்தங் காரணமாகக் கழித்திடாமல் என்னை அங்கீகரித்தருளவேண்டுமென்று யான் சகலவிதபந்துவும் ஆப்தபந்துவும் ஆபத்பந்துவுமான எம்பெருமானைச் சரணமடைந்திருப்பே னென்று தமது பிரபத்திமார்க்காநுஷ்டானவுறுதிநிலையை ஆழ்வார் வெளியிடுதல், இதற்கு உள்ளுறைபொருள். உயிர் - உயிரானது, முன்னமே - அநாதிகாலமாகவே, யாதானும் ஓர் ஆக்கையிற் புக்கு - (ஊழ்வினைக்கு ஏற்ப) யாதாயினும் ஒருடம்பினுட் புகுந்து, அங்கு ஆப்பு உண்டும் - அதில் (வினைவிலங்கால்) கட்டுப்பட்டிருந்தும், ஆப்பு அவிழ்ந்தும் - அவ்வுடம்பின்றொடர்ச்சி நீங்கியும், மூது ஆவியில் தடுமாறும் - சூக்குமசரீரத்திலே நின்று சுவர்க்க நரகங்களிற் புக்கு மீண்டு தடுமாறிநிற்கும், அதனால் - ஆதலால் [இப்படி ஆத்மாவுக்குச் சரீரசம்பந்தம் அநாதியாயிருத்தலால்], யாதானும் பற்றி - (பழைய பயிற்சிவசத்தால்) ஏதேனுமொருபொருளினிடத்துப் பற்றுச்செய்து, நீங்கும் - (எம்பெருமானை விட்டு) விலகும்படியான, விரதத்தை - கோட்பாட்டை, நல் வீடு செய்யும் - நன்றாக (முற்றும் வேரோடற) விடுவிக்கக்கடவனான, மாதாவினை - (அன்பில்) தாய் போன்றவனும், பிதுவை - (ஆவனசெய்தலில்) தந்தைபோன்றவனுமான, திருமாலை - திருமகள்கணவனான ஸ்ரீமந்நாராயணனை, வணங்குவன் - சரணமடைந்திருப்பேன் எனப் பொருள் காண்க. அநாதியாய் வருகிற சம்சாரத்திலே பற்றில்லையாம்படி சரணமடைந்தாரை வினைவிடுவிக்க வல்ல எம்பிரானை யான் வணங்குவே னென்பதாம். * "தாயொக்கு மன்பின்," † "ஈன்று புறந்தருத லென்றலைக்கடனே, சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே" என்றவற்றாலும், தாய் தந்தையர் முறையே பிரியமும் இதமுஞ் செய்தலிற் சிறத்தல் அறிக. தாய் தந்தை என்ற இருவர் தன்மையும் எம்பெருமானிடத்தில் இருத்தல், 'திருமால்' என்ற சொல்லாற்றலாலும் விளங்கும். 'மாதாவினைப் பிதுவைத் திருமாலை' என்றதனால், வாற்சல்யமும் ஸ்வாமித்வமுங் கூறிய வாறாம். 'புக்கு' என்றதனால், உயிர்க்கு உடம்பின் தொடர்ச்சி கருமபந்தத்தாலாகிய செயற்கையே யன்றி இயற்கையன் றென்பது போதரும். அங்கு ஆப்புண்ணுதல் - ஒவ்வொரு பிறப்பிலும் யான் எனது என்னும் அபிமானங்களை

* கம்பராமாயணம் - பாலகாண்டம் - அரசியற்படலம் - ௬

† புறநானூறு - ௩௱௧௨.

விடாமை. 'பற்றி' என்றதனால், குணதோஷங்களை ஆராய்ந்து நோக்காது அபிமானிக்கு மென்றபடி.

வ்ரதம், பித்ரு என்னும் வடசொற்கள் திரிந்தன. மாதா - தற்சம வடமொழி. வீடு - விடுதல்: முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (கரு)

## தலைவி வெறிவிலக்குவிக்க நினைத்தல்.

கூசு. வணங்குந்துறைகள்பலபலவாக்கிமதிவிகற்பாற்
பிணங்குஞ்சமயம்பலபலவாக்கியவையவைதோ
றணங்கும்பலபலவாக்கிநின்மூர்த்திபரப்பிவைத்தா [னே.
யிணங்குநின்னோரையில்லாய்நின்கண்வேட்கையெழுவிப்ப

(இ - ள்) வணங்கும் - (தெய்வத்தை) வணங்குகிற, துறைகள் பலபல - வகைகள் பற்பலவற்றை, ஆக்கி - உண்டாக்கி, மதி விகற்பால் - அறிவின் வேறுபாட்டால், பிணங்கும் - (ஒன்றோடொன்று) மாறுபடுகிற, சமயம் பல பல - மதங்கள் பற்பலவற்றையும், ஆக்கி - உண்டாக்கி, அவை அவை தோறு - அந்தந்த மதங்கள்தோறும், அணங்கும் பல பல - தெய்வங்கள் பற்பலவற்றையும், ஆக்கி - உண்டாக்கி, நின் மூர்த்தி பரப்பி வைத்தாய் - (இங்ஙனம்) உனது வடிவத்தைப் பரவச்செய்து வைத்துள்ளாய், இணங்கும் நின்னோரை இல்லாய் - உன்னோடு இணைத்துச் சொல்லத்தக்க உன்போல்வார் எவரையுமில்லாதவனே! நின்கண் வேட்கை எழுவிப்பன் - உன்னிடத்தில் (எனக்குள்ள) காதலை வெளியிட்டிடுவேன், (எ - று)

திருமாலாகிய தலைமகனைக் களவொழுக்கத்தாற் கூடி அவனது பிரிவில் வருந்தி மெலிகிற தலைவி, தன்மெலிவைக்கண்டு கவலைப்பட்ட செவிலி கட்டுவிச்சிக்குக் கூறி அவளைக்கொண்டு அவளமரும்படி கட்டுவைப்பித்து நோக்குகையில் முருகணங்கு தோன்றக் கண்டு அதற்குப் பரிகாரமாக வேலனையழைத்து வெறியாடுவிக்கத்தொடங்குதலை அறிந்து, பெருந்தெய்வத்தாற் கொண்ட தன் நோய் சிறுதெய்வம்பாராட்டலாகிய இவ்வெறியாட்டினால் தீருமாயின் தனது கற்புக்குக் குறைவாதலையும் தீராதாயின் உயிரழிந்துபோதலையுங் கருதி, தான் நாணந்துறந்தாயினும் இரகசியத்தை வெளியிட்டு வெறிவிலக்குவிக்கத் துணிந்து, பாவனையால் தலைவனை முன்னிலையாகக்கொண்டு தன்னிலே தான் உரைத்தது, இது, அன்றி, தலைவன் சிறைப்புறமாகத் தலைவி வெறியச்சங்கூறி வரைவுகடாவிய தென்றலும் ஒன்று. * "குலமகட்குத் தெய்வங் கொழுநனே", † "தெய்வம் பணிந்தறியாள்," ‡ "தெய்வந் தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்" என்றபடி கற்புச்சிறந்த இத்தலைவி தன் தலைவனையே சிறந்ததெய்வமாக உடையவளாதலால், மற்றைய தெய்வங்களையெல்லாம் அத்தெய்வத்தின் வடிவங்களாகவே கருதினாள். வணங்குந் துறைகள் பல பல - கட்டுவைத்தல், வெறியாடுதல், ஆடுபலிகொடுத்தல், கள்ளும் இறைச்சியுந் தூவுதல் முதலியன. புறத்தார்க்கு இக்களவொழுக்கம் புலப்படாதபடி கட்டுவிச்சியின் நெற்குறியில் முருகணங்குகாட்டியவனும், வேலன்வழிபாட்டுக்கு வழிமுறையால் உரியனாகுகிறவனும், முதற்பெருந்தெய்வமாகிய நீயே யாயினும், அவ்வணங்கினால் என்னோய் சிதைக்கப்படுதல் முழுமுதற்கடவுளாகிய ஒப்பற்ற உன்னை நேரில் தலைவனாகக்கொண்ட எனது கற்பிற்குக் குறைவாதலின், யான் அதனை உடன்படேன், மறையுடைத்தாயினும் வெறிவிலக்குவேன் என ஒருப்பட்டுக் கூறியவாறு.

ஆழ்வார், எம்பெருமானை நோக்கி, 'ஒப்பற்றவனே! சர்வேச்வரனாகிய நீ, ரஜோகுண தமோகுணங்களாலமிக்கவர் காமத்தியால் உன்பக்கல் வாராதொ

* நீதிநெறிவிளக்கம் - உசு. † திருக்கோவையார் - ௩௦௪.
‡ திருக்குறள் - வாழ்க்கைத்துணைநலம் - ரு.

றியுமபடி, பலபல தெய்வங்களையும, பலபல மதக்கோட்பாடுகளையும, பலபல பாசனைவிதயங்களையும ஏறபடுத்தி அமைத்துவைத்தாய்; உன்னை நேரிலடைந்து உய்வதற்குப பிரதிபந்தமான அவ்வெளிவழிகளிலே யான் இறங்கி விலகாதபடி, அவற்றிற்கெல்லாம மூலமான உனதுசொரூபத்தை யறிந்து உன்னிடத்திலே அன்புமிகுதியாகச்செய்தலோடு, பிறரும அங்ஙனஞ்செய்யத் தூண்டவேண்'என்று விண்ணப்பஞ்செய்தல்,இதற்கு உள்ளுறைபொருள். ஆழவார் எம்பெருமானது திருவுள்ளத்தின்படி உலகத்தைச் சீதிருத்தி நலவழிப்படுத்த அவதரித்தவ ராதலால்,இங்ஙனம தமதுசெய்கையைக் கூறுதல் தகும. மதிவிகற்பாற பிணங்குதல - *"ஒன்றேபொருளெனின் வேறென்ப வேறெனின், அன்றென்ப ஆறுசமயத்தார்"என்றறபோலவன. துறை என்பதற்கு ஆசிரியரென்றும, சமயமெனபதற்கு - சமயநூலகளென்றும உரைப்பாருமுளர்

விகற்பு - விகல்ப மென்னும வடசொலலின் திரிபு. வேட்கை - விருப்பம தொழிற்பெயர், வேள் - பகுதி, கை - விகுதி.

'இணங்கிநின்றோரை' என்ற பாடம கறபிதம, அது, அழகியமணவாளசீயருரையில 'இத்தேவசாதிகளில இணைத்துச்சொல்லலாமபடி உன்போலவாரை யுடையனலலாதவனே'' என்றும, பெரியவாச்சான்பிள்ளை நமபிள்ளை வியாக்கியானங்களில 'உன்னோடு ஒக்க நிறகுமபடி உனக்குப்போலியாரை யுடையையல்லை' என்றும உள்ள வாக்கியங்களோடு மாறுபடுமே (கூசு)

தலைவனைப்பிரிந்து துயில்கொள்ளாத தலைவி இரங்கல்.

கஎ எழுவதுமீண்டேபடுவதுமபட்டெனையூழிகள்போய்க்
கழிவதுங்கண்டுகண்டெள்கலல்லாலிமையோர்களகுழாந்
தொழுவதுஞ்சூழவதுஞ்செயதொல்லைமாலைக்கண்ணாரக்கண்
கழிவதோர்காதலுற்றார்க்குமுண்டோகண்கடுஞ்சுதலே. [டு

(இ - ள்.) எழுவதும - (சூரியன்) உதித்தலையும், மீண்டே படுவதும - மறுபடி அஸ்தமித்தலையும, பட்டு-இங்ஙனமநிகழ்ந்து, எனை ஊழிகள் - எத்தனையோ காலங்கள், போய கழிவதும - சென்றுகழிவதையும, கண்டு கண்டு - பார்த்துப்பார்த்து, எள்கல் அல்லால் - வருந்துதலே யல்லாமல்,—இமையோர்கள் குழாம - தேவர்களகூட்டம, தொழுவதும - வணங்குவதையும, சூழவதும-(பரிவாரமாகச) சூழந்துகொளவதையும, செய - செய்யப்பெறற, தொல்லை மாலை-பழமையான திருமாலை, கண் ஆர கண்டு - கண்கள்திருப்தியடையப் பார்த்து, கழிவது ஓர் காதல உற்றார்க்கும - (அவன்பக்கல) மிக்கதொருவேட்கையைப் பொருந்தினவர்க்கும, கண்கள் துஞ்சுதல - கண்ணுறக்கங்கொள்ளுதல, உண்டோ-உள்ளதோ?[இல்லையென்றபடி], (எ-று.)

திருமாலாகிய தலைமகனைக் கண்டு கூடிப பிரிந்து அப்பிரிந்தநிலையில †"கங்குலும பகலுங் கண்டுயி லறியாள்"என்றபடி அலலும பகலும அகவரதமும சிறிதுந்தூக்கங்கொள்ளாது வருந்துகிற தலைமகள், தன்னைத்தேற்றமுயலகிற தோழிக்குக் கூறியது, இது தலைவனைப்பிரிந்தநிலையிற பிறபலபொருள்களைக்காணுதலாற பொழுதுபோக்கி ஒருவாறுஆறித் துயிலகொள்ளுந் தலைவியரும் உலகத்தில உள ரென்று உலகியலகூறி ஆறறுவிக்கலுறறவளுக்கு, இத்தேவாதிதேவனான புருஷோத்தமன்பக்கல அன்புகொண்டார் துயிலா ரென்றுகூறி மறுத்தவாறு. 'கண்டுகண்டு எள்கல்' என்றது, சுகாநுபவத்துக்குஉரிய காலம வீணேகழிதலைச் சிந்தித்துச்சிந்தித்து மனந்தளர்தலை 'இமையோர்

* திருவள்ளுவமாலை - க.
† திருவாயமொழி - அறுபத்திரண்டாந்திருப்பதிகம - க.

களாகுழாக தொழுவதுஞ சூழவதுஞ செய' என்ற.அடைமொழியால, தன்னுற காதலிககபபட்ட தலைவனது சிறபபை விளககினுள் 'தொலலைமால' என்றத ஞல, தனக்குங தலைவனுககும நோகத பழககததைக் குறிததாள்.

எமபெருமானது சொருபததை முழுவதுநதரிசிக்கவிரும்பித தொடஙகி ஞாககுக காலமமுடிதலேயொழிய அவவனுபவமமுடிநத கணவாயகுங தனமை யிலலை யென்று ஆழவாா அனபாககு அருளிசசெயதல, இதறகு உள் ளுறைபொருள். சூரியன்உதிததலையும மீணடுஅஸதமிததலையும இபபடியே நாள திஙகள ஆணடு ஊழிகளாய மிகபபலகாலங கழிதலையுங கணடு காலம போதாமையைநோக்கி இரஙகுதலே யன்றி, நிதயசூரிவாக்கம (எபபொழு தும) அஞசலிசெயதுகொணடு (கைஙகரியமபணணுமபொருட்டுச) சூழபபெ றற அநாதியான எமபெருமானைக கணகளிபபக்கணடு முடிக்கவேணடுமென பதோா ஒபபறற அன்பைக் கொணடுநின்றவாகளுககு, அவன்பக்கலவை தத கண வாயகி இமைகக இட முணடோ? எனக் காணக. இனி, எழுவ தும - பிறபபதும, மீணடே படிவதும - பிறநதவளவிலே இறபபதும, பட்டு- பிறநது, என்ன ஊழிகள போய கழிவதும - பலகாலஙகழிததுஇறபபதுமான உலகததுபபொருளகளை, கணடு கணடு - பாாததுப பாாதது, எளகல அல லால - (அவறறை)' இகழதலே யலலாமல, பிறபபிறபபிலலாதவனும ஆதி மதயாநதரகிதனு மான எமபெருமானைக கணடு காலஙகழியுமபடியானதோ ராசையில நின்றாககு அவனை உபேக்ஷிககக காரணமிலலை யென்றும பொ ருளகொள்ளலாம. பகவானைப பூாணுநுபவஞசெயயக கருதி ஆழநதாககு ஞானங குவியா தென்பதுங தோன்றும. தொலலைமால என்பதறகு-(ஜீவாத மாககளிடததில) அநாதியாகவுள்ள அன்பு மிகுதி யுடையா னென்றும, (எலலாவறறுககும) பழமையான பெரியோ னென்றும பொருளுரைபபா. கணஆர-கணபடைதத பயன பெற, *"கரியவனைக காணாத கணணென்ன கணணே கணணிமைததுககாணபாாதய கணணென்ன கணணே" என்றா பிறரும.

காதலுறறாக்கு எளகலலலால துஞசுத லுணடோ? என இயைக்க பபடும் எனபதைப பட என்னும எசசததிரிபாககினும அமையும உறறா க்கும, உம - உயாவுசிறபபு. (௬௭)

## தலைவனது அருமையை நோக்கிக் கவல்கிற தலைவிக்குத் தோழி கூறல்

௬அ. துஞசாமுனிவருமலலாதவருநதொடாநினற
வெஞசாபபிறவியிடாகடிவானிமையோாதமககுங
தனசாவிலாததனிபபெருமூாததிதனமாயஞசெவவே [லை.
நெஞசானினைப்பரிதாலவெணணெயூணெனனுமீனசசொ

(இ - ள்) துஞசா-கணதுயிலுதலிலலாத, முனிவரும- இருடிகளும, அல லாதவரும - (தேவாகள் முதலிய) மறறையோரும, தொடா - (தாம தாம விரும்பிய பேறு பெறுமபொருட்டுப) பினபறறிவழிபட, நின்ற - (அவாகளு ககுப பேறுதருபவனுய) நின்ற, எஞசா பிறவி இடா கடிவான -(அடியாாகளு டைய) குறைதலிலலாத பிறபபுததுன்பஙகளைப போககியருளபவனும, தன் சாாவு இலாத - தன்னோடு இணைததுச சொலலலாமபடி ஒருவமை பெறாத, தனி பெரு மூாத்திதன் - ஒபபறற சிறநத சொருபததை யுடையவனு மான எமபெருமானது, வெணணெய ஊண என்னும ஈனம சொல - வெணணெய உணவாயிற றென்று சொலலபபடுகிற இழிசொலலுக்கு இடமான, மாயம- ஆசசரியம, இமையோாதமக்கும - மேலுலகததாாககும, செவ்வே நெஞசால

* சிலபபதிகாரம - ஆயசசியாகுரவை

நினைப்பு அரிது - நன்றாய மனத்தால் நினைத்தற்கும் அருமையானதாம்; (எ - று.)—ஆல் - தேற்றம்

தலைமகனது தலைமையையே பாராட்டி 'அப்படிப்பட்டவன் எளியளான என்னை வரைந்துகொண்டருளுவனோ?" என்று மிகக்கவலைப்பட்ட தலைமகளை நோக்கித் தோழி 'அங்ஙனம் பெரியனாயினனுக்கு, உகப்பார்க்குளியனாந் தன்மையும் ஒன்று இயல்பில் உளதாதலால், அவன் உன்னை உரிமையாகக் கொள்ளாதொழியான்' என்றுகூறி ஆற்றுவித்தது, இது. 'வெண்ணெ யூணென்னு மீனச்சொல்' என்றது, அவ்வெளிமைக்கு ஒரு சிறந்த திருஷ்டாந்தம் எடுத்துக்காட்டியபடி.

* "உணர்ந்துறங்கா துணர்வுறும் யோகியர்" என்றபடி உணவுஉறக்கங்களைவிட்டு எப்பொழுதும் தவவொழுக்கத்தைப்பூண்டு எம்பெருமானை மநநஞ் செய்துகொண்டிருக்கும் இருடிக ளென்பார், 'துஞ்சாமுனிவர்' என்றார். இனி, துஞ்சா என்பதற்கு-ஞானக்கண் குவியாத என்றும், இடைவிடுதலில்லாத என்றும், அழியாத என்றும் பொருள்கொள்ளலாம். எம்பெருமானைச் சரணமடைந்தார்க்கு எக்காலத்தும் பிறவித்துன்பங்கள் உளவாகா வாதலால், 'எஞ்சாப்பிறவியிடர்கடிவான்' என்று ஒருபெயர் கூறினார், தன்னைப்பற்றி வருவனவும் பிறவுயிர்களைப்பற்றி வருவனவும் தெய்வத்தைப்பற்றி வருவனவும் என மூவகையாற் காரணகாரியத்தொடர்ச்சியாயக் கரையின்றிவரும் பிறப்புத் துன்பங்களெல்லாம் 'எஞ்சாப்பிறவியிடர்' என அடக்கப்பட்டன. இமையோர் தமக்கும் தன்சாரவு இலாத என இயைத்து, நித்யசூரிகளுக்கும் தன்னோடு சோதிசொல்லவொண்ணாத என்று உரைத்தலும் உண்டு.

எம்பெருமானது மேன்மையிலும் நீர்மையிலும் உண்டான இனிமை எவர்க்கும் அளவிட்டு நினைத்தற்கும் முடியாதென்று ஆழ்வார் அருளிச்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். 'வெண்ணெயூணென்னு மீனச்சொல்லே' என்றதனால் சௌலப்யமாகிய நீர்மையும், மற்றவற்றால் பரத்துவமாகிய மேன்மையும் குறிக்கப்பட்டன. 'இமையோர்தமக்குஞ் செவ்வே நெஞ்சால் நினைப்பரிதால்' என்றதனால், என்றும் அவனுடன் ஒக்க இருப்பவரும் வரம்பிலாஞானமுடையவரும் நிரந்தர பகவதநுபவ சீலருமான நித்திய சூரிகளுக்கே வரையறுத்து நினைக்கப்படாமை கூறவே, மற்றையோர்க்கு மனமொழிமெய்களுக்கு எட்டாத தன்மை தானே விளங்கும்.

துஞ்சா முனிவரும் - (ஆத்மவிஷயத்திலும் ஈசுவரவிஷயத்திலும் உணர்ச்சி நீங்காத) ஸநகாதி யோகிகளும், அல்லாதவரும் - (அவர்களைப்போலன்றி பரமஹ பாவனையோடு காம பாவனையையு முடைய) பிரமாதி தேவர்களும், எஞ்சாப் பிறவி இடர் கடிவான் - தம்தம் ஒழித்தற்கரிய பிறப்புத்துன்பத்தை ஒழிக்கும்பொருட்டு, தொடர - வழிபட, நின்ற - தலைவனாய் நின்றவனும், தன் சாரவு இலாத - (தன்னையல்லாதார் யாவர்க்கும் தான் சரணமடைதற்கு உரிய இடமாக இருத்தல்போலத்) தான் ஒருசார்பைத் தேடுதலில்லாதவனு மாகிய, தனி பெரு மூர்த்தி - முழுமுதற்கடவுள் என்றும் உரைக்கலாம்.

பிறவி - தொழிற்பெயர், வி - விகுதி. 'தஞ்சார்வு' என்றும், 'தன்சாலவு' என்றும் பாடம். ஊண் - உண்ணப்படுவதெனனும் பொருளில் செயப்படுபொருள் விகுதி புணர்ந்து கெட்ட பெயர். ஈனம் - ஹீந மென்னும் வடசொல்லின் திரிபு

இப்பாட்டின் நான்காமடிக்கு - 'ஸர்வேச்வரனாய் ப்ரஹ்மாதிகளுக்குங் கூட ஆச்ரயணீயனாய் அவாப்தஸமஸ்தகாமனாயிருக்கிறவன், ஆச்ரித ஸ்பர்சமுள்ள த்ரவ்யமே தனக்குத் தாரகமாய் அதுதானே நோக்கொடு நோ

* திருவிருத்தம் - ௬௬

கிட்டப்பெறாதே இப்படி களவுகண்டாகிலும் புஜிக்கவேண்டி, அதுதான் தலைக்கட்டப்பெறாதே வாயது கையதாக அகப்பட்டுக் கட்டுண்டு அடியுண்டு பரிகரிவை யற்று உடம்பு வெளுத்துப் பேகணித்து நின்ற நிலை, சிலர்க்கு நிலமோ?' என்ற எம்பிள்ளையீடு அறியத்தக்கது. (௧௦)

## தலைவன்பால் தனக்குஉள்ள அன்புறுதியைத் தலைவி தோழிக்குக் கூறல்.

௧௧. ஈனச்சொல்லாயினுமாகவெறிதிரைவையமுற்று
மேனத்துருவாயிடந்தபிரானிருங்கற்பகஞ்சேர்
வானத்தவர்க்குமல்லாதவர்க்குமற்றெல்லாயவர்க்கு
ஞானப்பிரானையல்லாலில்லைநான்கண்டநல்லதுவே.

(இ-ள்.) ஈனம் சொல் ஆயினும் ஆக - (செவிலியரும் ஊராரும் வெறுத்தும் பழித்தும் கூறும்) இழிசொல் நிகழினும் நிகழ்க, எறி திரை வையம் முற்றும் - வீசுகிற அலைகளையுடைய பிரளயவெள்ளத்தில் ஆழ்ந்த பூமிமுழுவதையும், ஏனத்து உரு ஆய் இடந்த - வராகமூர்த்தியாய்க் கோட்டாற் குத்தி யெடுத்துவந்த, பிரான் - தலைவனும், இரு கற்பகம் சேர் வானத்தவர்க்கும் - பெரிய கற்பகவிருக்ஷங்கள் பொருந்திய சுவர்க்கலோகத்திலுள்ள தேவர்களுக்கும், அல்லாதவர்க்கும் - அவர்களல்லாத மனிதர்களுக்கும், மற்று எல்லாயவர்க்கும் - மற்றுமுள்ள நரகர் முதலியோரெல்லோர்க்கும், ஞானம் - அறிவைக் கொடுக்கிற, பிரானை அல்லால் - தலைவனுமாகிய எம்பெருமானை யல்லாமல், நான் கண்ட நல்லது இல்லை - நான் அறிந்த நற்பொருள் வேறு இல்லை, (எ-று.)

திருமாலாகிய தலைவனைக் கலந்து பிரிந்த தலைமகள், தான் அவன்பக்கற் கொண்ட காதலின் துணிவை நாணந்துறந்து தோழிக்கு எடுத்துக்கூறியது, இது. இதுவும், தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலின்பாற்படும். தனது களவொழுக்கத்தைப் புலப்படுத்துதலால் உண்டாகும் பழிதூற்றுதற்குப் பின்வாங்காமை தோன்ற, 'ஈனச்சொல்லாயினு மாக' என்றாள்.

பிரளயாபத்திற் பூமியை மேலெடுத்து நிலைநிறுத்திய மஹோபகாரகனையே நான் பிறவிப்பெருங்கடலினின்று என்னை யீடேற்றுதற்குத் தஞ்சமாக நினைத்திருப்பேனென்று தமது சித்தாந்தத்தை ஆழ்வார் அன்பர்க்கு அருளிச்செய்தல், இதற்கு உள்ளுறைபொருள். ஈனச் சொல் ஆயினும் ஆக - (நான் சொல்லுகிற உறுதிப்பொருள் அறம் பொருளின்பங்களையே தஞ்சமாக நினைத்து உடலுயிர்களில் அபிமானங்கொண்டு பகவத்விஷயத்தைப் பராமுகஞ்செய்கிற சம்சாரிகள் ஏற்றுக்கொள்ளாமல் இகழும்படியான) இழிந்த சொல்லாயினும் ஆகுக. எறி திரை வையம் முற்றும் ஏனத்து உரு ஆய் இடந்த பிரான் - (குழந்தை கிணற்றில் விழுந்தவாறே உடன் குதித்து அதனை யெடுக்குந் தாய்போலப்) பூமியைப் பிரளயங்கொண்டவாறே முழுகி யெடுத்த பெருநன்றியாளன். கற்பகத்துக்கு, பெருமை - விரும்பிய பயனை அளித்தல்.

'எல்லாயவர்க்கும்' என்றதில், விலங்கு பறவை முதலிய பலவகைப் பிறப்புக்களையும் அடக்குவர். இனி, 'அல்லாதவர்க்கும்' என்பதற்கு - எம்பெருமானையொழியத் தரியாதபடியாகவுள்ள நித்யசூரிகளுக்கும் என்றும், 'மற்று எல்லாயவர்க்கும்' என்பதற்கு-இழிவான மனிதர்களெல்லோர்க்கும் என்றும் உரைத்தலும் உண்டு.

எறிதிரை - அடையடுத்தவாகுபெயர், அல்லது, வினைத்தொகையன்மொழி. கற்பகம் = கல்பகம் - (வேண்டுவார்க்கு வேண்டின பொருள்களைக்) கற்பிப்பது. கல்பித்தல் - உண்டாக்குதல்.

ஏனத்துருவான கதை — ஒருகாலத்தில் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப்போன இரணியாக்ஷனைத் திருமால் தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளால் மகாவராகரூபமாகத் திருவவதரித்துக் கொன்று பூமியைக் கோட்டாற்குத்தி யெடுத்துக்கொண்டு வந்து பழையபடி விரித்தருளினன் என்பதாம். இப்பொழுது நடக்கிற சுவேத வராக கல்பத்துக்கு முந்தின பாத்மகல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் இறுதியில் திருமால் பிரளயப்பெருங்கடலில் மூழ்கியிருந்த பூமியை மேலே யெடுக்கநினைந்து ஸ்ரீவராகரூபங் கொண்டருளிக் கோட்டுநுனியாலே பூமியை யெடுத்துவந்தன னென்றும், அதுபற்றி இக்கல்பத்துக்கு வராககல்ப மென்று பெயராயிற்று என்றும் புராணவரலாறு உண்டு. (கூகூ)

## நூற்பயன்.

க00. நல்லார்நவில்குருகூர்நகரான்திருமால்திருப்பேர்
வல்லாரடிக்கண்ணிசூடியமாறன்விண்ணப்பஞ்செய்த
சொல்லார்தொடையலிந்நூறும்வல்லாரழுந்தார்பிறப்பாம்
பொல்லாவருவினைமாயவன்சேற்றள்ளல்பொய்ந்நிலத்தே.

(இ-ள்) நல்லார் - நற்குண நற்செய்கைகளை யுடையவர்கள், நவில் - புகழ்ந்துகூறப்பெற்ற, குருகூர் நகரான் - திருக்குருகூரென்னுந் திவ்விய நகரத்தில் திருவவதரித்தவரும், திருமால் திருப்பேர் வல்லார் அடி கண்ணி சூடிய - திருமகள்கொழுநனான எம்பெருமானது திருநாமங்களைப் பயின்ற வரான அடியார்களுடைய திருவடிகளாகிற பூமாலையைத் தமது முடிக்கு அணியாகக் கொண்டவருமான, மாறன் - நம்மாழ்வார், விண்ணப்பம் செய்த - (எம்பெருமான்சந்நிதியிலே) விஜ்ஞாபனம் பண்ணின, சொல் ஆர் தொடையல் - சொற்களைக்கொண்டு தொடுக்கப்பட்ட மாலைவடிவமான, இ நூறும் - இந்த நூறுபாடல்களையும், வல்லார் - கற்றுவல்லவர்கள், — பிறப்பு ஆம் - பிறப்பின் காரணமும் காரியமு மாகிய, பொல்லா அரு வினை - கொடிய கடத்தற்கரிய வினையாகிற, மாயம் - ஆச்சரியத்தையுண்டாக்குகிற, வல் சேறு அள்ளல் - கொடிய சேற்றின் அடர்த்தியையுடைய, பொய் நிலத்து - பொய்யாகிய பிரகிருதிமண்டலத்தில், அழுந்தார் - அழுந்தமாட்டார்கள், (எ-று.) --- அழுந்தாரே என ஈற்று ஏகாரம் - தேற்றம், ஈற்றசையுமாம்.

நல்லார் என்றது, ஞானம் அநுஷ்டானம் இவை நன்றாகவேயுடைய ரான ஆசாரியனைச் சரணமாக அடைந்து அவனது சம்பந்தமூலமாக எம் பெருமானை யனுபவிக்கிற மதுரகவிகள் போல்வாரை. திருமால் திருப்பேர் வல்லார் - பரமபாகவதர். ஆழ்வார், திருமால் திருப்பேர்வல்லா ரடிக்கண்ணி சூடியவராதலை *"பயிலுஞ் சுடரொளி மூர்த்தியைப் பங்கயக்கண்ணனைப், பயில வினிய நம் பாற்கடற் சேர்ந்த பரமனைப், பயிலுந் திருவுடையார் யவ ரேனு மவர்கண்டீர், பயிலும் பிறப்பிடைதோ றெம்மையாளும் பரமரே" என்பது முதலியவற்றால் அறிக. 'வல்லா ரடிக்கண்ணி சூடிய மாறன்' என் றதனால், பகவத்பாகவதவிஷயத்தில் ஆழ்வார்க்கு உள்ள பக்திமிகுதி வெளி யாம். சொல் ஆர் தொடையல் - எம்பெருமானும் பிறரும் தலைமேற்கொண்டு ஆதரிக்கத்தக்க இனிய பாமாலை [பிரபந்தம்]. 'இந்நூறும்' என்பதற்கு - நம் பிள்ளையீடு —'மகாபாரதம் போலே பரந்திருத்தல் பரணவம்போலே சுருங் கியிருத்தல் செய்யாதே நூறுபாட்டாய ஜ்ஞாதவ்யாம்சமடைய உண்டா யிருக்கை' நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாதலால், பொதுப்பட 'வினை' என் றார். இந்நூலை வல்லவர் கருமமொழியப் பிறப்பற்று முத்திபெறுவ ரென்று

* திருவாய்மொழி - இருபத்தேழாந்திருப்பதிகம் - க.

பயன் அருளிச்செய்தார். 'மாய வன்சேற்றள்ளற் பொய்ந்நிலம்' என்றது, அறிவுடையாரும் ஆழ்ந்தால் கால்வாங்கவொண்ணாதபடி புழுகுவிக்குந் தன்மையது சம்சாரமாதலால். 'பொல்லாதாய்ப் போக்கவொண்ணாத கர்மத்தை விளைப்பதாய் இப்படியிருக்கச்செய்தே பற்றவேணுமென்படி பரமிப்பிக்க வற்றான ஆச்சர்யத்தை யுடைத்தாய் க்ஷாமணம்பண்ண வொண்ணாதபடியாய்ப் போக்கவொண்ணாதபடியாய் அகப்பட்டார்க்குத் தப்பவொண்ணாத படியாய்க் கீழ் ஓரவதியின்றிக்கே யிருந்துள்ள பிறப்பாகிற பொய்ந்நிலத்தில் அழுந்தார் வன்சேறு-ருசிவாசனைகளைப் பிறப்பித்து அகப்படுத்தும் படியைச் சொல்லுகிறது' என்ற அப்பிள்ளையுரையைக் காண்க.

தொடையல், அல - சாரியை

'இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை அடியேன் செய்யும் விண்ணப்பம்' என்று தொடங்கி 'விண்ணப்பஞ்செய்த இந்நூறும் வல்லார் அழுந்தார் பொய்ந்நிலத்து' என்று முடித்ததனால், இந்தத் திவ்யப்பிரபந்தம் முழுவதும், விரோதியைப் போக்கித்தரவேணு மென்று ஆழ்வார் தமது வருத்தத்தை [சம்சாரநிவ்ருத்த்யபேக்ஷையை] விண்ணப்பஞ்செய்தவாறும்.

பிரயோகவிவேகநூலார், 'இது, தன்னைப் பிறர்போலும் நாந்தி கூறுகின்றது,' 'வடநூலார் தாமே பதிகமும் உரையுஞ் செய்வர்,' 'இனிச் சம்பந்தர் சடகோபர் முதலாயினோரும் திவாகரரும் பதினெண்கீழ்க்கணக்குச் செய்தாரும் முன்னுக்கும் பின்னுக்கும் பதிகங்கூறுவதுங் காண்க' என்றவை, இங்கு அறியத்தக்கன (௧00)

திருவிருத்தம் மூலமும் உரையும்

முற்றுப்பெற்றன.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

# திருவிருத்தத்ன

## செய்யுண் முதற்குறிப் பகராதி.

---


| செய்யுள். | பக்கம் | செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். |
|---|---|---|---|---|---|
| அடைக்கலத | ௧௬௩ | காவியுநீலமும | ௧௩௭ | பலபலவூழி | ௪௯ |
| அரியனயாமின்று | ௪௦ | குழறகோவலா | ௨௨ | பணிபயியல | ௨௬ |
| அருளாதிரு | ௮௧ | கொடுஙகாறசிலையா | ௮௯ | பாலவாயபபிறை | ௮௫ |
| அழைககுஙகரு | ௧௧௫ | கொமடாதழை | ௬௧ | புலககுணடல | ௧௨௩ |
| அளபபருநதன்மை | ௧௨௭ | கோலபபகற | ௯௫ | புலமபுஙகன | ௧௬௪ |
| அலைஞெசெலவீரும | ௭௬ | சிதைககின்றதாழி | ௮௨ | புனமோபுனத | ௬௪ |
| இசைமின்கடீது | ௭௮ | சிலமொழிநோயோ | ௫௬ | பெருஙகேழலா | ௧௦௨ |
| இடமபோய | ௧௪௯ | சீரரசாணடு | ௧௫௪ | பேணலமிலலா | ௧௭௧ |
| இயலவாயின | ௬௫ | சுருஙகுழி | ௧௭௦ | போகின்றது | ௪௩ |
| இருக்கார்மொழி | ௧௩௩ | சூடநனைமாலை | ௫௯ | பொயநநின்ற | ௧௭ |
| இருளவிரிநதா | ௫௦ | சூழகின்றகஙகுற | ௧௪௫ | மடநெஞச | ௧௦௪ |
| இறையோவிரக்கி | ௧௩௧ | செழுநீரத்தடத | ௨௦ | மலாநதேயொழி | ௧௩௯ |
| இன்னன்னதூது | ௭௩ | சேமஞசெஙகோ | ௭௧ | மலைகொணடு | ௧௧௩ |
| ஈர்வனவேலு | ௪௬ | ஞாலமபணிபப | ௩௧ | மாணிககங | ௧௬[illegible] |
| ஈனசசொலலாயி | ௧௮௧ | தடாவியவபபு | ௨௮ | மாயோனவட | ௩௮ |
| உணணுதுறஙகா | ௧௩௬ | தணணநதுழாய | ௭௨ | முலையோமுழு | ௧௨௮ |
| உலாகின்ற | ௧௪௭ | தலைபெயதியா | ௧௬௯ | மெலலியலாககை | ௧௦௭ |
| உறுகின்றகனமய | ௧௫௬ | தளாநதுமுறிநது | ௧௪௬ | மேகஙகளோ | ௭௯ |
| ஊழிகளா | ௧௪௩ | தனிநெஞசமுன | ௨௪ | மைபபடிமேனி | ௧௭௩ |
| எஙகோலவளை | ௬௭ | தனிவளாசெங | ௪௪ | யாதானுமோ | ௧௭௫ |
| எரிகொள்செஞ | ௧௫௭ | திஙகளமபிளளை | ௧௪௯ | வணடுகளோ | ௧௨௦ |
| எழுவதுமீணடே | ௧௭௮ | திணபூஞசுடா | ௩௭ | வணணஞ | ௧௩௨ |
| என்றுமபுனவாடை | ௯௭ | திரிகின்றது | ௧௦௬ | வணஙகுநதுறை | ௧௭௭ |
| ஒணணுதனமாமை | ௧௧௧ | திருமாலுரு | ௧௬௬ | வளைவாயததிரு | ௧௪௨ |
| கடமாயினகள் | ௯௧ | தீவிணைககாரு | ௧௬௭ | வமகாறறறைய | ௯௯ |
| கடலகொணடெழு | ௫௨ | துஞசாமுனிவ | ௧௭௯ | வாசகஞ | ௧௩௦ |
| கணணுஞசெந | ௧௦௦ | துழாநெடுஞ | ௮௭ | வாராயின | ௧௧௭ |
| கயலோநும | ௪௭ | தையனலலாா | ௧௬௦ | வாலவெணணிலவு | ௧௪௬ |
| கழறலமொன்றே | ௧௨௬ | நலலாநவில | ௧௮௨ | வியலிடமுணட | ௧௨௨ |
| கறுபபிணைமலர் | ௧௩௫ | நலியுநரகனை | ௧௫௧ | விளரிககுர | ௧௫௮ |
| காணகின்றனை | ௩௩ | நாணிலம | ௬௮ | வீசுஞசிற | ௧௧௯ |
| காரிகையா | ௫௪ | நிறமுயர் | ௧௦௧ | வேதனைவெணபுரி | ௧௫௩ |
| காரேறறிருள் | ௧௪௦ | நீலததடவரை | ௯௩ | | |
| காலைவெயயோறகு | ௧௭௨ | பணடுமபலபல | ௧௧௦ | | |


---

# திருவிருத்தத்தின் துறையடைவு.

க [நூலதொடககம] (தாமானதன்மையிலுரைததது)
உ. தலைவிவேறுபாடுகணட தோழி வியநதுரைததல.
ங பிரிவாறறாத தலைவி நெஞசழிநது உரைததல.
ச தலைவனைபபிரிநத தலைவி வாடைக்கு ஆறறாது வருநதிக்கூறல.
ரு. வாடைககுவருநதி மாமையிழநத தலைமகளைக கணடு தோழி இரஙகல.
சு தலைமகளெழிலகணடுவியநத தலைமகன்வாரததை
எ காலமயககு [ல.
அ தலைவன்பொருள்வயிறபிரிதலகுறிபபாலறிநததலைவி தோழிக்குககூற
கூ. தலைவன தலைவியின நீஙகலருமை கூறல
க0. மதியுடமபடுததலுறற தலைவன குறையுறவுரைத்தல
கக. பிரிவாறறாத தலைவியின வேறுபாடு கணடு தலைவன் உரைததல.
கஉ தலைவன்பிரியபபெறற தலைவி தன ஆறறாமைகூறி நெஞசொடுகலாயத்
கங பிரிவாறறாத தலைவி இருளுக்கும வாடைககும இரஙகல [தல.
கச நலமபாராட்டு
கரு தலைமகன்கருததறிநத தோழி அவனைநோககியுரைததல
கசு. தலைவனைபபிரிநத தலைவி பாஙகியைநோககி இருள்வியநதுரைததல.
கஎ தலைவி கடலைநோககித தோவழி தூரலென்றல.
கஅ காரகாலஙகணடழிநததலைவியின ஆறறாமை கணடு பாஙகி இரஙகல.
ககூ. செவிலி பழியககு இரஙகல
உ0 வெறிவிலககு
உக எறுகோளகூறி வரைவுகடாதல
உஉ. தோழி தலைவனை நகுதல
உங. தலைமகன குறையுறவுரைததல
உச. பிரிவாறறாததலைமகளீடுபாடுகணட செவிலி இரஙகல.
உரு தலைமகனது தாரில ஈடுபடட தலைவி ஆறறாதுகூறல்.
உசு நகாகாடடல
உஎ தலைவி தாரபெறறு மகிழதல.
உஅ. தலைவனைபபிரிநத தலைவி வாடைககு வருநதி யிரஙகல.
உகூ. தலைமகள் அன்னபபறவையை வெறுததுரைததல.
ங0. பிரிநததலைவி அன்னஙகளையும வணடானஙகளையும தூதுவேணடுதல.
ஙக. தூதுசெலலாத மேகஙகளைககுறிததுத தலைவி இரஙகல.
ஙஉ தலைவி போலிகணடு உரைததல.
ஙங. தலைவியாறறாமைகணட தோழி தலைவனை வெறுததுரைததல.
ஙச கூடலிழைததுவருந்துநதலைவிநிலையைப பாஙகி தலைவறகுஉணாததல.
ஙரு. மாலைக்குஆறறாமையின்மேல வாடைக்குத தலைமகள இரஙகல
ஙசு. தோழி தலைவன்கொடுமை கூறல.
ஙஎ. நறறாய தன்மகள்சென்றசுரததருமைகூறி யிரஙகல.
ஙஅ தலைவனைபபிரிநததலைவி போலிகணடு மகிழதல.

௩௯. தலைவனது உருவெளிபபாடுகண்ட தலைவி தோழிக்குக் கூறுதல்.
௪௦. இருள்கண்டிரங்கிய தலைமகள் தோழியர்க்கு வரைவுவிருப்புரைத்தல்.
௪௧. வாடைக்குவருந்தின தலைமகள்வார்த்தை
௪௨. தலைவனது நோக்கில ஈடுபட்ட தலைவி வியந்துஉரைத்தல்.
௪௩. தலைமகனுருவெழிலுரைதத தலைமகள்வாரததை.
௪௪. தலைவி தலைவன்பெருமை யுரைத்தல
௪௫. தலைவி தலைவனது சீரிடையுதவியை நினைந்துரைத்தல.
௪௬. நெஞ்சைத்தூதுவிட்ட தலைவி இரஙகல.
௪௭. பிரிவாறறாது வருநதுந தலைவிநிலை கணடு செவிலி இரஙகல்.
௪௮. நன்னிமித்தஙகணடு தான்ஆறியிருததலைத தலைவி தோழிக்குக்கூறல.
௪௯. இருளுக்குஆறறாத தலைமகள தோழிககுக் கூறல.
௫௦. தலைவன் மீணடுவருகையில தோபபாகனோடு கூறல
௫௧. கடலோசைககு ஆறறாத தலைவி இரஙகல
௫௨ காலமயக்கு
௫௩. கட்டுவிசசி கூறல.
௫௪. வணடுவிடுதூது.
௫௫. நலமபாராட்டு.
௫௬. தலைவன் இரவிடைக்கலநதமை தலைவி தோழிககுக் கூறல
௫௭. தலைவன் பாஙகனுக்குக் கழறறெதிாமறுததல
௫௮. தோழி தலைவன்பெருமையையுரைதது தலைவியை யாற்றல.
௫௯. இரவுநீடுதறகு ஆறறாத தலைவியைபபறறிச செவிலி இரஙகல.
௬௦. தலைமகளிளமைக்குச செவிலி இரஙகல
௬௧. தோழி தலைவனது நீரமையைத தலைவிக்குக் கூறல.
௬௨. தலைவியினாறறாமையைத தோழி தலைவனைநோககிக் கூறல.
௬௩. தலைவனை இயறபழிதத தோழிககுத தலைவி இயறபடமொழிதல.
௬௪. தலைவன்போகூறித தரிததிருததலைத தலைவிதோழிக்குககூறியிரஙகல.
௬௫. தலைவிநோக்கின்வாசிகணடு தலைவன குறிபபறிநது உரைததல.
௬௬. தலைவன் பாஙகனுக்குக் கழறறெதிாமறுததல.
௬௭. தலைவன் பாஙகனுக்குத் தன்வலியழிவு உரைததல.
௬௮. காலமயக்கு: காலம இனையது என்றல.
௬௯. மாலைபபொழுது கணடு மயஙகிய தலைவியைத தோழி ஆறறுதல.
௭௦. இரவின் நெடுமைக்குத தலைவி இரஙகல
௭௧. செவிலி வெறுததலைத தலைவி தோழியாக்கு உரைததல.
௭௨. இருளுக்கு ஆறறாத தலைவி இளமபிறைகணடு தளாநது உரைத்தல.
௭௩. பிறையுடைமாலைக்குஆறறாததலைவிதளாசசிகணடு பாஙகியிரஙகல.
௭௪. தலைவனதுதுழாயிறபட்டதென்றலவரத தலைவி மகிழநதுரைததல.
௭௫. மதியுடமபடுக்கலுறற தலைவன் தலைவிதோழியரைப் பதிவினுதல.
௭௬ தலைவனது மாலை பெறாது வருநதுந தலைவி மதிக்குஇரஙகி நெஞசொடு
௭௭. மாலைபபொழுதுக்கு ஆறறாத தலைவி இரஙகல. [கூறல.
௭௮ பிரிவாற்றாத் தலைவி தலைவனுறறலைக கருதி நெஞசழிநது இரஙகல.

எகூ தலைவனைப்பிரியாத மகளிரது சிறப்பைக் கூறித் தலைவி இரங்கல்.
அ0. பிரிவாற்றாத தலைவி மாலைப்பொழுது கண்டு இரங்கல்.
அக வெறிவிலக்கத்தொடங்கிய தோழி இரங்கல்.
அஉ. உருவெளிப்பாடுகண்ட தலைவி தலைவன்கண்ணழகுக்கு இரங்கல்,
அங பிரிவாற்றாத தலைவியின் தளர்ச்சி கண்டு தோழி இரங்கல்.
அச. தலைவி தலைவனைக்காண விரைதல்.
அரு. மாலைப்பொழுதுகண்டுவெருந்திய தலைவி இரங்கல்.
அசு. தலைவனைப் பிரிந்த தலைவி இரங்கல்.
அஎ. அன்றிற்கும் ஆழிக்கும் ஆற்றாத தலைவிக்குத் தோழி இரங்கல்.
அஅ. போலிகண்டுஅழிகிற தலைவி ஆற்றாமைக்கு இரங்கல்.
அகூ தலைவன்கலவிக்குவிரைகிற தலைவி இரங்கல்.
கூ0. தலைவனைப்பிரிந்த தலைவி ஆற்றாது உரைத்தல்.
கூக. தோழிக்குத் தலைவி தன்கற்புஉணர்த்தி அறத்தொடுநிற்றல்.
கூஉ, வேந்தற்குற்றுழிப்பிரிவில் தலைவனைக்குறித்துத் தலைவி இரங்கல்.
கூங. இருள்கண்டு அஞ்சுகிற தலைவி தோழிசெவிலியரை வெறுத்தல்.
கூச. தலைவியைக்கண்ட பாங்கன் மீண்டு தலைவனையடுத்து வியந்துகூறல்.
கூரு. தலைவி அறத்தொடுநிற்கத் துணிதல்.
கூசு. தலைவி வெறிவிலக்குவிக்க நினைத்தல்.
கூஎ. தலைவனைப்பிரிந்து துயில்கொள்ளாத தலைவி இரங்கல்.
கூஅ. தலைவனதுஅருமையைநோக்கிக்கவல்கிற தலைவிக்குத் தோழி கூறல்.
கூகூ. தலைவன்பால்தனக்குள்ளஅன்புறுதியைத் தலைவி தோழிக்குக்கூறல்.
க00. [நூற்பயன்]



“ போக்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி
ஆக்கஞ்சே ரூட லணிமருதம்—நோக்குங்கால்
இல்லிருக்கை முல்லை இரங்கல் நறுநெய்தல்
சொல்லிருக்கு மைம்பாற் றுறை ”



ஸ்ரீ

# * ப்ரதம சரம ப்ரபந்த ஸங்கதி.

| எண். | திருவிருத்தப்பாட்டு முதற்குறிப்பு. | எண். | திருவாய்மொழிப்பதிக முதற்குறிப்பு. |
|---|---|---|---|
| ௧ | பொய்ந்நின்ற. | ௨௩ | ஒழிவில்காலம். |
| ௨ | செழுநீர் | ௩௩ | கோவைவாயாள். |
| ௩ | குழற்கோவலர். | ௬௩ | வெள்ளைச்சுரிசங்கு |
| ௪ | தனிநெஞ்சம் | ௮ | ஓடும்புள்ளேறி |
| ௫ | பணிடபியல்வாக. | ௬௮ | மாயாவாமனனே. |
| ௬ | தடாவியவம்பும். | ௫௭ | உண்ணுஞ்சோறு. |
| ௭ | ஞாலம்பனிப்ப. | ௮௫ | இன்னுயிர்ச்சேவல். |
| ௮ | காண்கின்றனகளும். | ௪௧ | கையார்சக்கரம். |
| ௯ | திண்பூஞ்சுடர்நுதி. | ௪௨ | பொலிகபொலிக |
| ௧0 | மாயோன்வடதிரு. | ௮0 | நெடுமாற்கடிமை |
| ௧௧ | அரியனயாமின்று. | ௫௬ | மாலுக்குவையம். |
| ௧௨ | போகின்றதுமணிமாமை. | ௪௩ | மாசறுசோதி. |
| ௧௩ | தனிவளர்செங்கோல். | ௮௯ | மல்லிகைகமழ்தென்றல் |
| ௧௪ | ஈர்வனவேலும் | ௫௫ | துவளில்மாமணிமாடம். |
| ௧௫ | கயலோநும்கண்கள் | ௯௫ | கண்ணன்கழலிணை. |
| ௧௬ | பலபலவூழிகளாயிடும் | ௨௭ | பயிலுஞ்சுடரொளி |
| ௧௭ | இருள்விரிந்தாலன்ன | ௧௮ | அணைவதரவணை. |
| ௧௮ | கடல்கொண்டெழுந்தது. | ௯௯ | சூழ்விசும்பணிமுகில். |
| ௧௯ | காரிகையார்நிறை. | ௩௨ | பாலனாயேழுலகு |
| ௨0 | சின்மொழிநோயோ. | ௩௬ | தீர்ப்பாரையாமினி. |
| ௨௧ | சூட்டுநன்மாலைகள். | ௩௫ | வீற்றிருந்தேழுலகு. |
| ௨௨ | கொம்மையார்தழை | ௫௩ | நல்குரவுஞ்செல்வமும். |
| ௨௩ | புனமோபுனத்தயலே. | ௪௬ | கடல்ஞாலஞ்செய்தேனும் |
| ௨௪ | இயல்வாயின. | ௭௯ | கருமாணிக்கமலை. |
| ௨௫ | எங்கோல்வளைமுதலா | ௭௫ | மாயக்கூத்தாவாமனா |
| ௨௬ | நானிலம்வாய்க்கொண்டு. | ௯0 | மாலைநண்ணி. |
| ௨௭ | சேமஞ்செங்கோன் | ௭௬ | எல்லியுங்காலையும் |
| ௨௮ | தண்ணந்துழாய். | ௬௨ | கங்குலும்பகலும் |
| ௨௯ | இன்னன்னதூது | ௫௮ | பொன்னுலகாளீரோ. |

* நம்மாழ்வார் அருளிச்செய்த நாலுதிவ்யப்ரபந்தங்களுள் முதலதான திருவிருத்தத்தின் நூறுபாசுரங்களுக்கும், ஈற்றதான திருவாய்மொழியின் நூறுதிருப்பதிகங்களுக்கும் ஒன்றோடொன்றுள்ள பொருளொற்றுமையைக் குறிக்குமாறு பெரியோர் அமைத்தது, இது. இது, 'திருவிருத்தந்திருவாய்மொழியைக்கண்டீயம்' எனவும்படும். இங்குக்காட்டியவற்றின் பொருளொற்றுமை,இவ்விரண்டு திவ்யப்ரபந்தங்களின் பாசுரங்களாலும், அவற்றின் வியாக்கியானங்களைக் கொண்டும், சம்பிரதாயம்வல்லாரவாய்க் கேட்டும் ஓப்புநோக்கி உணரத்தக்கது "ருக்கு, ஸாமத்தாலே ஸரஸமாய், ஸ்தோபத்தாலே பரம்புமாபோலே, சொல்லார்தொடையல், இசைகூட்ட, அமர்சுவையாயிரமாயத்து" என்ற ஆசார்யஹ்ருதயவாக்கியத்தாலும், அதன்வியாக்கியானத்தாலும், ருக்வேதம் ஸாமவேதரூபமாகப் பரம்புதல்போல ருக்வேதஸ்தாநமான திருவிருத்தம்நூறுபாட்டுமே ஸாமவேதஸ்தாநமான திருவாய்மொழியாயிரம்பாட்டாகப் பரம்பிற்றென்று தெரிதலால், அத்தன்மையை விவரிக்கிற இந்த ப்ரதமசரமப்ரபந்தஸங்கதி, ஸம்ப்ரதாயக்ரந்தகாலக்ஷேபபரர்க்கு மிகவுபயோகமாம்.

| எண. | திருவிருததபபாட்டு முதறகுறிபபு | எண | திருவாயமொழிபபதிக முதறகுறிபபு |
|---|---|---|---|
| ௩௦ | அன்னஞ்செலவீரும | ௪ | அஞ்சிறையமடநாராய. |
| ௩௧ | இசைமின்கடூது | ௮௭ | எஙகானலகஙகழி. |
| ௩௨ | மேகஙகளோவுரையீர. | ௫௧ | வைகலபூஙகழிவாய |
| ௩௩ | அருளார திரு | ௩௮ | ஏறாளுமிறையோனும். |
| ௩௪ | சிதைக்கின்றதாழி. | ௫௨ | மின்னிடைமடவாரகள |
| ௩௫ | பாலவாயபபிறை. | ௧௧ | வாயுநதிரையுகளும. |
| ௩௬ | துழாநெடுஞ்சூழிருள. | ௧௪ | ஆடியாடி |
| ௩௭ | கொடுஙகாறசிலையா | ௩௪ | மணணையிருந்துதுழாவி. |
| ௩௮ | கடமாயினகள. | ௨௯ | சொன்னூலவிரோதம |
| ௩௯ | நீலததடவரை | ௬௭ | ஏழையராவி. |
| ௪௦ | கோலபபகறகளிறு | ௪௯ | மானேயநோக்கு |
| ௪௧ | என்றுமபுளவாடை | ௫௯ | நீராயநிலனாய. |
| ௪௨ | வன்காறறறைய. | ௧௦ | பொருமாநீளபடை. |
| ௪௩ | கணணுஞ்செநதாமரை. | ௧ | உயாவறவுயாநலம. |
| ௪௪ | திறமுயாகோலமும | ௩ | பததுடையடியவா |
| ௪௫ | பெருஙகேழலார | ௧௩ | ஊனிலவாழுயிரே |
| ௪௬ | மடநெஞ்சமென்றும் | ௯௬ | அருள்பெறுவாரடியார். |
| ௪௭ | திரிகின்றதுவடமாருதம. | ௭௨ | நஙகளவரிவளை. |
| ௪௮ | மெலலியலாக்கை. | ௬௯ | என்றைக்குமெனனை |
| ௪௯ | பணடுமபலபல. | ௪௪ | ஊரெல்லாநதுஞ்சி. |
| ௫௦ | ஒணணுதன்மாமை. | ௨௦ | கிளரொளியிளமை. |
| ௫௧ | மலைகொணடுமததா | ௩௯ | நணணாதாமுறுவலிபப. |
| ௫௨ | அழைக்குஙகருஙகடல. | ௧௫ | அநதாமததன்பு. |
| ௫௩ | வாராயினமுலையாள | ௧௬ | வைகுநதாமணிவணணனே. |
| ௫௪ | வீசுஞ்சிறகால. | ௧௭ | கேசவனறமா. |
| ௫௫ | வணடுகளோவமமின. | ௯௪ | சாரவேதவநெறி. |
| ௫௬ | வியலிடமுணடபிரானார. | ௭௮ | கணகளசிவநது. |
| ௫௭ | புலக்குணடலம. | ௨௮ | முடியானே. |
| ௫௮ | கழறலமொன்றே | ௧௨ | திணணனவீடு. |
| ௫௯ | அளபபருநதன்மைய | ௨௨ | முநநீராலம. |
| ௬௦ | முலையோமுழுமுறறும. | ௮௮ | அறுககுமவினையாயின. |
| ௬௧ | வாசகஞ்செயவது | ௫௦ | பிறநதவாறும. |
| ௬௨ | இறையோவிரககினும. | ௭௧ | தேவிமாராவார. |
| ௬௩ | வணணஞ்சிவநதுள. | ௯ | இவையுமவையுமுவையும. |
| ௬௪ | இருககாரமொழி | ௬௬ | பாமருமூவுலகும |
| ௬௫ | கறறுபபிணைமலா | ௪௭ | நோறறநோனபு |
| ௬௬ | உணணாதுறஙகாது. | ௪௮ | ஆராவமுதே. |
| ௬௭ | காவியுநீலமும. | ௬௦ | உலகமுணடபெருவாயா. |
| ௬௮ | மலாநதேயொழிநதில. | ௮௧ | கொணடபெணடிா. |
| ௬௯ | காரேறறிருள். | ௬௫ | கறபாரிராமபிரானை. |
| ௭௦ | வலைவாயததிரு. | ௭ | பிறவிததுயரற. |
| ௭௧ | ஊழிகளாய. | ௪௫ | எஙஙனேயோ. |
| ௭௨ | சூழகின்றகஙகுல | ௩௭ | சீலமிலலாசசிறியன். |
| ௭௩ | வாலவெணணிலவு. | ௯௩ | வேயமருதோளிணை. |
| ௭௪ | தளாநதுமுறிநதும | ௨௬ | செயயதாமரைக்கணணன். |
| ௭௫ | உலாகின்றகெணடை. | ௩௦ | சன்மமபலபலசெயது. |

| எண். | திருவிருத்தப்பாட்டு முதற்குறிப்பு | எண். | திருவாய்மொழிப்பதிக முதற்குறிப்பு. |
|---|---|---|---|
| ௭௬ | இடம்போய்விரிந்து. | ௮௩ | ஓராயிரமாய |
| ௭௭ | திங்களம்பிள்ளை. | ௯௧ | தாளதாமரை. |
| ௭௮ | நலியுநரகனை. | ௭௦ | இன்பம்பயக்க. |
| ௭௯ | வேதனைவெண்புரி. | ௨௫ | மொய்ம்மாம்பூம்பொழில. |
| ௮௦ | சீரரசாண்டு. | ௨௧ | முடிச்சோதியாய் |
| ௮௧ | உறுகின்றகன்மங்கள். | ௨ | வீடுமின்முற்றவும. |
| ௮௨ | எரிகொள்செஞ்ஞாயிறு | ௮௬ | உருகுமால்நெஞ்சம |
| ௮௩ | விளரிக்குரலன்றில. | ௬௧ | உண்ணிலாவியவைவர். |
| ௮௪ | தையலநல்லார்கள். | ௮௪ | மையார்கருங்கண்ணி. |
| ௮௫ | மாணிக்கங்கொண்டு. | ௧௯ | எம்மாவீட்டுத்திறம. |
| ௮௬ | அடைக்கலத்தோங்கு. | ௫ | வளவேழுலகு. |
| ௮௭ | புலம்புங்கனகுரல. | ௮௨ | பண்டைநாளாலே. |
| ௮௮ | திருமாலுரு. | ௨௪ | புகழுநல்லொருவன. |
| ௮௯ | தீவினைக்கருநஞ்சு. | ௭௩ | அங்குமிங்கும. |
| ௯௦ | தலைப்பெய்தியான. | ௫௪ | குரவையாய்ச்சியரோடு. |
| ௯௧ | சுருங்குறிவெண்ணெய. | ௭௪ | வார்கடாவருவி. |
| ௯௨ | பேணலமில்லா. | ௬௪ | ஆழியெழச்சங்கும. |
| ௯௩ | காலைவெய்யோற்கு. | ௩௧ | ஒருநாயகமாய. |
| ௯௪ | மைப்படிமேனியும. | ௭௭ | இருத்துமவியந்தென்னை. |
| ௯௫ | யாதானுமோர். | ௯௮ | திருமாலிருஞ்சோலைமலை. |
| ௯௬ | வணங்குந்துறைகள். | ௪௦ | ஒன்றுந்தேவும. |
| ௯௭ | எழுவதுமீண்டே. | ௬ | பரிவதிலீசனை. |
| ௯௮ | துஞ்சாமுனிவரும. | ௯௨ | கெடுமிடராய. |
| ௯௯ | ஈனச்சொல்லாயினும. | ௯௭ | செஞ்சொற்கவிகாள். |
| ௧௦௦ | நல்லார்நவில. | ௧௦௦ | முனியேநான்முகனே. |

# திருவிருத்த வுரையின் அநுபந்தம்.

## கட்டளைக்கலித்துறை யிலக்கண வாராய்ச்சி.

"முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக், கடையொரு சீரும் விளங்கா யாகி, நேர்பதி னாறே நிரைபதி னேழென், றோதினர் கலித்துறை யோரடிக் கெழுத்தே" என்பது, கட்டளைக்கலித்துறையிலக்கணமுணாத்துஞ் சூத்திரம். கட்டளைக்கலித்துறையில ஒவ்வோரடிக்கும உரிய ஐந்துசீர்களுள முதல நான்கும ஈரசைச்சீர்களும ஐந்தாவது விளங்காயச்சீருமாக வெண்டளைபிறழாமல் வரும் வரவே, நேரசைமுதலதான அடி ஒற்றொழிந்துப் பதினறெழுத்தும, நிரையசைமுதலதான அடி ஒற்றொழிந்துப் பதினேழெழுத்துமாகத் தானே அமையும. வெண்பாவுக்குப்போலக் கட்டளைக்கலித்துறைக்கு ஓரடியின் இறுதிச்சீரோடு அடுத்த அடியின் முதற்சீர் வெண்டளை தவறாது வரவேண்டுமென்ற நியதி இல்லை. அந்நியதி கொள்ளின், நிரையசை முதற்கட்டளைக்கலித்துறையெல்லாம காய்முன் நிரை வந்து கலித்தளையாய் வெண்டளைவழுவாமாறு காண்க. இனி, எழுத்தெண்ணிலும ஓசையிலும் தளைப்போக்கிலும் கீழ்க்கூறிய சீர்களோடு மாறுபடாமல ஒருபுடையொத்த பிற சில சீர்களும் கட்டளைக்கலித்துறையிற் பயிலும. எங்ஙனமெனின்,—ஈரசைச்சீர்களாகிய கூவிளச்சீரும் கருவிளச்சீரும் வருதற்கு உரியஇடத்து, முறையே மூவசைச்சீர்களாகிய தேமாங்காய்ச்சீரும் புளிமாங்காய்ச்சீரும் வரின் எழுத்தும ஓசையும தளையும வேறுபடாமை காண்க. அவ்விடங்களில கூவிளங்காய் கருவிளங்காய்ச்சீர்கள் கொள்ளின், வெண்டளைதவறாவிடினும் எழுத்தேறி ஓசைமிக்கு வழுவாமாதலால, அவை வாரா. ஆகவே, தேமா புளிமா கூவிள கருவிள தேமாங்காய் புளிமாங்காய் என்னும ஆறு சீர்களே கட்டளைக்கலித்துறையின் முதலநான்குசீராய் நிற்றற்கு உரியனவாம. ஐந்தாஞ்சீராகக் கூவிளங்காய் வரவேண்டுமிடத்து அதனோடு ஒருபுடையொத்தன வான தேமாங்கனி தேமாந்தண்பூ என்னுஞ் சீர்களும, கருவிளங்காய் வரவேண்டுமிடத்துப் புளிமாங்கனி புளிமாந்தண்பூ என்னுஞ் சீர்களும வரும, இவ்விடங்களில கூவிளங்கனி கருவிளங்கனிச்சீர்கள் கொள்ளின் எழுத்தேறி ஓசைமிக்கு வழுவாமாதலால, அவை வாரா.

முதல நான்கும ஈரசைச்சீர்களும, ஐந்தாவது விளங்காய்ச்சீருமாக வந்ததற்கு உதாரணமாக, இத்திருவிருத்தத்தின் தனியனையும, ௧௫, ௬௬, ௬௧- இப்பாட்டுக்களையுங் காண்க. இந்நூலின் ௨ - ஆமபாட்டின முதலடியில 'தாலொப்ப' எனத் தேமாங்காயும, மூன்றாமடியில 'முகிலவண்ணன்' எனப் புளிமாங்காயும முறையே கூவிள கருவிளச்சீர்கள் வருதற்குரிய இடத்து வந்தன. இங்ஙனம நூலமுழுதும பல உள்ளன. முதற்பாட்டின் நான்காமடியிறுதியில 'விண்ணப்பமே' எனத் தேமாங்கனியும, ௬ - ஆமபாட்டின் நான்காமடியிறுதியில 'ஞாலத்துளளே' எனத் தேமாந்தண்பூவும கூவிளங்காய்ச்சீர்வருதற்குரியஇடத்திலும, ௫ - ஆமபாட்டின் மூன்றாமடியிறுதியில 'இறத்துங்கொலாம' எனப் புளிமாங்கனியும, ௬ - ஆமபாட்டின இரண்டாமடியிறுதியில 'அசுராமங்க' எனப் புளிமாந்தண்பூவும கருவிளங்காய்ச்சீர்வருதற்குரியஇடத்திலும வந்தன. இவ்வாறு பிறவும பல உள.

௨௨, ௫௧, ௪௧-இப்பாட்டுக்களின் மூன்றாமஅடியிறுதியில 'கூடாதன,' 'நலலோர்பிரான்', 'தாமோதரன்' என்று வந்தவற்றை 'விண்ணப்பமே' என்பதுபோன்ற தேமாங்கனிச்சீராகவே கொள்க; குறிலொற்றடுத்துவந்ததுபோலவே நெடில தனியேவரினும ஒற்றடுத்துவரினும நேரசையாதலால. ஆகவே, 'கூடாதன' என்பதைக் 'கூடதன' என்று குறுக்குதலாவது, 'கூடுகில' என்று மாற்றுதலாவது செய்தலும, 'நலலோர்பிரான்' என்பதை 'நலலொர்பிரான்' என்று குறுக்கலும, 'தாமோதரன்' என்பதைத் 'தாமொதரன்' என்று குறுக்கலாவது 'தாமுதரன்' என்று மாற்றலாவது செய்தலும வேண்டுவதில்லையென மறுக்க. திருநாவீறுடையபிரானாகிய நமமாழவாரது முதலதிவ்வியப்பிரபந்

த்தில் இயைந்தமைந்த திருத்தம்போலவே, சைவசமயத்திலும் திருநாவுக்கரசு நாயனாரெனப்படுகிற அப்பர்சுவாமிகளது முதல் திருமுறையில் திருவாரூர்த் திருவிருத்தத்தின் ௫ - ஆம் பாட்டின் முதலடியிறுதியில் "கோடாலியால்" என்றும், திருக்காரோணத் திருவிருத்தத்தின் க, எ-இப்பாட்டுக்களின் இரண்டாமடியிறுதியில் "காரோணனே" என்றும், ௩ - ஆம்பாட்டின் இரண்டாமடியிறுதியில் "காரோணனின்" என்றும், ச - ஆம் பாட்டின் மூன்றாமடியிறுதியில் "காரோணவெள" என்றும், ௧௦ - ஆம் பாட்டின் முதலடியிறுதியில் "காரோணத்தான்" என்றும் வந்துள்ளன காண்க. (திருவேகம்பத் திருவிருத்தத்தின் ௬ - ஆம் பாட்டின் மூன்றாமடியிறுதியில் "திருவாரூராய்" என்பது புளிமாந்தண்பூவாய்க் கருவிளங்காய்நிறைந்தற்குரியஇடத்து வந்தமையும் நோக்குக) மற்றும் பதினோராந்திருமுறையிற்பிரந்தங்களுள் நம்பியாண்டார்நம்பி இயற்றிய திருத்தொண்டர்திருவந்தாதியில் அ, ௧ச, ௬௬ - இப் பாடல்களின் நான்காமடியிறுதியில் "ஆரூரனே," "வாட்டாயனே," "கண்ணாதனே" என்பனவும், ௧எ - ஆம் பாட்டின் முதலடியிறுதியில் "அன்றுல வாய்" என்பதும் மாங்கனிச்சீர் விளங்காய்ச்சீர்க்கு ஈடாக வந்தவையே. திருவரங்கத்தமுதனார் திருவாய்மலர்ந்தருளிய இராமாநுச நூற்றந்தாதியில் ௯௫-ஆம் பாட்டின் மூன்றாமடியிறுதியில் 'இராமாநுசன்' என வந்துள்ளதும் அறியத்தக்கது இவ்வாறு சான்றோர்செய்யுள்வழக்கத்தை உணரின் நூலோத் திருத்தக்காரணமில்லை அன்றியும், அருள்பெற்ற ஆன்றோர்பாசுரங்களைச் சம்பிரதாயவிரோதமாக மனம்போனபடி மாற்றிச் செய்யுளிசையொன்றையே நோக்கி வெவ்வேறுபாடங்கற்பிப்பது தகுதியன்று

கலிநிலைத்துறை, கலிவிருத்தம், ஆசிரியவிருத்தம் என்பவை முதலிய சிலவற்றிற்குப் போலக் கட்டளைக்கலித்துறைக்கு நான்குஅடிகளும் அளவொத்துவரவேண்டுமென்னும் நியதி கிடையாது, வெண்பா ஆசிரியப்பா முதலிய சிலவற்றிற்போலவே அளவொவ்வாமலே வரலாம்

கட்டளைக்கலித்துறை, பெரும்பாலும் ஏகாரவீற்றதும், சிறுபான்மை ஓகாரவீற்றதுமாம். இந்நூலில் நாற்பதாம்பாடலொன்றே ஓகாரவீற்றது, மற்றவையெல்லாம் ஏகாரவீற்றன. ஓகாரவீறுயவருதற்கு வேறுமேற்கோள் கிடைப்பரிது. ஏகாரவுயிரீறுகவன்றி மெய்யீறுகவந்த கட்டளைக்கலித்துறைகளும் சான்றோர்செய்யுள்களிற் காணப்படுகின்றன.

## கட்டளைக்கலித்துறையைத் திருவிருத்தமென்னும் மரபு.

பதினோராந்திருமுறைநூல்களுள் நம்பியாண்டார்நம்பியினது கோயில் திருப்பண்ணியர்விருத்தமும், திருஞானசம்பந்தர் திருச்சண்பைவிருத்தமும் கட்டளைக்கலித்துறையேயாதலுங் காண்க.

## வேறு சில குறிப்பு.

எ - ஆம் பாட்டு:—இதனை ஐயவணியில் அடக்கலாம். [ளத்திருத்துக.

௬ச - ஆம் பக்கம், ௬ - ஆம் வரி.—என்பதும் என்பதை என்பவற்றிலும்

௩அ - ஆம் பாட்டு —இதனைப் பயன்தற்குறிப்பேற்றமென்னலாம்.

௫௨, ௬௧ - ஆம் பாட்டுக்கள் —இவற்றை ஒழிப்பணியின்பாற் படுத்தலாம்.

௬௩ - ஆம் பாட்டு.—இரண்டாமடியில் 'தண்ணங்கமலம்' என்ற பாடமுங் கொள்ளலாம்

௬ச - ஆம் பாட்டு —இதில், அந்யாபதேசமும் ஸ்வாபதேசமும் ஒன்றுக்கொன்று சிறிது மாறுபடுதலால், அந்யாபதேசத்தில் தலைமகள்வார்த்தையென்றுவது ஸ்வாபதேசத்தில் அன்பர்வார்த்தையென்றுவது கொண்டு அதற்கேற்ப உரைகொள்ளுதலும் பொருந்தும்.

# அறிவிப்பு

அருந்தமிழறிந்த அன்பர்களே! மகாகனம்பொருந்திய சென்னை யுனிவர்சிடியாரால் பரீக்ஷைகளுக்குப் பாடமாக ஏற்படுத்தப்பட்டுவருகிற தமிழ் நூல்களுக்குச் சென்ற பன்னிரண்டுவருஷகாலமாக யாமும் மற்றுஞ் சிலரும் உரையெழுதிவெளியிட்டுவருவதும், அவை யாவராலும் அங்கீகரிக்கப்பட்டு உலகத்திற்பரவியிருப்பதும், இத்தமிழ்நாட்டார் பலர்க்குத் தெரிந்திருக்கக் கூடுமே

இப்படி நிகழ்கையில், ஒருசாலவர், சென்னைச்செந்தமிழுரைச்சங்கத்தா ரென்று தாமேபேரிட்டுக்கொண்டு தலைப்பட்டு, 'பரீக்ஷைகட்குப்பாடமாகஏற்படுத்திய அரியபெரிய நூல்கட்குப் பலரும் உரையெழுதுவான் புகவே, அவை காலத்தில்வெளிவாராமையானும் உண்மைப்பொருளுணராததாமையானும் இடர்ப்பட்டமாணாக்கரது தன்மையை உள்ளபடியறிந்த பல பண்டிதரும் நண்பரும் எம்மைப் பலகாலுந்தூண்டினமையின் யாம் உரையெழுதத்துணிந்தேம்' என்று (மெட்ரிகுலேஷன், எப் - ஏ பாடபுத்தகவுரைகளின் பதிப்புரைத்தொடக்கத்தில்) மற்றைய வுரைகாரர்களைப் பழித்தும், கனம்பொருந்திய யூனிவர்சிடியாரையும், மகாவித்வான் - மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களையும், பிறரையும் 'அறியார் இடர்ப்படுவர்' என (மெட்ரிகுலேஷன் பாடபுத்தகவுரை - குசேலோபாக்கியானம் - கக௮ - குறிப்பில்) இழித்தும், நாவலர்பெருமானென ஆறுமுகநாவலரவர்களையும் 'அறியார் ஓதுவர்' என (வில்லிபுத்தூரார் பாரதம் - பதின்மூன்றாம்போர்ச்சருக்கம் - ஏ - ஆம்பாட்டுரையில்) இழித்தும், இவ்வருஷத்தில் பாடபுத்தகங்களுக்கு ஓருரை வெளியிட்டனர்.

அன்னார் குழாங்கூடியதைப் பற்றியும், சங்கப்புலமை வகித்துக்கொண்டதைப் பற்றியும், அவர்களது உரையின் தகுதியைப் பற்றியும் யாதொரு ஆராய்ச்சியுஞ் செய்ய யாம் கடமையுடையோமல்லோமாயினும், அவர்கள் மற்றையவுரைகளையெல்லாம் 'உண்மைப்பொருளுணராததாமையான்' என்று நிந்தித்து அறைகூவியதுமாத்திரத்துக்கு மறுமொழிசில கூறவேண்டுவது எமக்கு அவசியமாயிற்று

அன்றியும், இவர்களில் மூவர்பெயரை உட்கொண்டு சென்றவருஷம் வெளியானதொரு எப்-ஏ பாடபுத்தகத்தின் முகவுரையில் 'பரீக்ஷைகட்குப் பாடமாக ஏற்படுத்திவரும் நூல்கட்குத் தக்கதோருரைவேண்டுமென்று பல பண்டிதர்களும், மாணாக்கர்களும், மற்றைநண்பர்களும் என்னைப் பலகால் தூண்டினமையால்' என்று எழுதியிருந்தது இப்படித் தற்புகழ்ச்சியாகப் புனைந்துரை யுரைத்ததற்கு எதிருரைப்பது இன்றியமையாததன்றாயினும், இவ்வருஷத்திற் பரநிந்தையாகப் பாயிரங்கூறியதற்கு மாறுகூறுவது முக்கியமன்றோ?

அல்லாமலும், யாமும் பிறரும் அவரவர் புத்திசத்திக்கு ஏற்ப முன்பு உரைகளில் எழுதியுள்ள பலவிஷயங்களைத் தாங்கள் (அச்சுப்பிழையுள்பட) அப்படியே எடுத்துக்கொண்டு, சில சரியான விஷயங்களை, இவர்கள் திரண்டும் தனித்தும் வெளியிட்ட புத்தகங்களில் தங்கள் மனத்துக்கும் உணர்வுக்கும் ஏற்றபடி வழியல்லாதவழியால் மறுக்கத்தொடங்கிய விடங்களில், 'கம்பராமாயணத்திற்கு வரலாற்றுமுறையின் வாராதார் சிலர் உரைவகுப்பான் புகுந்து...... அறியகில்லாது பொருள் வகுத்துரைத்து மாழாந்தொழிந்தார்.

அவாதந தெளிவிருந்தபடி யென்னே!' என்றும,'இனி யிசசெயயுளின்கட் பின்னிரடிகட்கும உணமைபபொருள் காணமாட்டாது மயஙகிய மாக்கள பலராயினர், அவர் தமகருததோன்றியவாறே மயஙகவைததலென்னும குறறததிறகிடனுகி யிலலாதசொறகளைவிரிததும கணடபடி கூட்டியு முரைத்தும அதன்கட டமக்கேயாாவமபிறததலின்றி யருவருபபுறறு மாழாநதொழிநதார். இது கிடக்க' என்றும, 'சஙகசசெயயுளுட் பயிறறபேறிலலாத சிலா' என்றும, 'இவையனைததும அவரவா தததமகருத தோறறியவாறே கூறிய உததிக்கூறறுக்க ளெனறபாலனவேயன்றி மெயயுரைகளாககோடறகியலாவாம பிற வென்க', 'ஈணடைக்கூறிய யாவரும பரணியென்னுஞசொலலைத தாம நாடொறுமவழக்கமாயபபாக்கும அகராதிகளி லெடுததுபபாாத்து அதன்கணசசொலலிறகுககூறபபட்ட ஒவ்வொருபொருளையு மிவ்வாறெடுததமைத்துப பெரிதுமிடாபபட்டுச சமாததிததுத தமக்குட்டாமே மனபபாலகுடிதது மகிழுறுவாராயினா' என்றும,'இவ்வாறுகவுஞ சிலா இதன்பொருளையறியகிலலாது' என்றும, 'அனறுரைதததது அறியாமைபறறி யெனவிடுக்க' என்றும, 'உணராா போலும' எனறும, 'அபபொருள் போலியென்றொழிக' என்றும, 'நோக்காது பொருளகூறுவாராயினா அதுகணடு மருளறக' என்றும இவை முதலாகப பலவாறு கணடபடியெலலாம வரமபிலலாத வசைமொழிகள கூறிப பழித்திருபபதனுலும, இவாகள்திறததைபபறறிச சிறிது கூறவேணடுவது இன்றியமையாததாய நின்றது.

இவாகள் மாறுக உரைவெளியிடவநதன ரென்று இவர்களிடத்து எமககுக் கிஞசிததும அருவை யிலலை, "யாஅ ருபாயததின் வாழாதாா" என்பவாகலின இனி, எமமை நிநதிததாரது திறமையை உலகததுககு எடுததுக்காட்டி மெயபபிததலொன்றே, எமது கருத்து எமமை இவாகள இகழாதிருபபின் யாமும இவாகளை ஒருபொழுதும இகழததொடஙகோம ஆதலால, அடியிறகாட்டியுள்ள சிலவிஷயஙகளைப பொதுநோக்காகப பாாதது அவ்வறறின் உணமைப்பொருளதிறததைக கருதுமாறு பெரியோாகளைப பிராாத்திக்கின்றோம. "எபபொரு ளெதநதனமைத தாயினு மபபொருள, மெயபபொருள் காணப தறிவு", "எபபொருள யாாயாாவாயக் கேடபினு மபபொருள், மெயபபொருள காணப தறிவு" என்பவறறை உணாநதாாககு யாம அதிகமாக எழுதின் மிகையா மாதலின், அவாகளதாமே குணம் நாடிக குறறமும நாடி அவறறுள் மிகை நாடி மிககக கொளவ ரென நமபுகிறோம. "சமனசெயது சீாதூக்குங கோலபோ லமைநதொருபாற, கோடாமை சானறோாககு அணி" யனறோ?

மேறகுறிததவாகள் சென்றவருஷம வெளியிட்ட கலிஙகத்துப பரணியுரையிலும அதன்பதிட்புரையிலும மறறும வெளியிட்ட உரைகளிலும உணமைபபொருளுணாததியது உலகப்பிரசிததமாயிருக்க, இபபொழுது இஙஙனமபெருமிதமபாராட்டுகிறது,"ஸஙகேசகதிஃ கலௌயுகே" [கூட்டததில வலலமை கலியுகததில] என வழஙகுவதொரு மேறகோளை மேறகொணடோ? தமது உரையின் வன்மையினுலோ? அன்றி, சஙகததினரென்று பெருமபெயா வைததுக்கொணடதனுலேயோ? அலலது, பிறரை நிநதிதது அதனுல தாம பெருமைபெறக் கருதியோ? முன்பு சிலஉரைகாரரிட மிருநத இவ்வழக்கத்தை விடலாகாத மரபெனக் கைபபறறியோ? இஙஙனம எழுதப் பிறாக்குச் சொலலிலலை யெனத துணிநதோ? இஙஙனம எளிதில தமிழுலகததை மருட்டிவிடலா மென்று மனஙகொணடோ? அறியோம.

இஙஙனமதொடஙகியவாகள உணமைப்பொருளுணாத்திய மகிமைக்கு, அவாகள் தனித்தும திரணடும தமமில இருவா மூவா கூடியும வெளியிட்ட புததகஙகளினின்று சில உதாரணஙகள் வருமாறு.—

க.—புகழேந்திப்புலவர் செய்த இரத்தினச்சுருக்கமும், திருவேங்கடையர் செய்த உவமானசங்கிரகமுமென்னு மிவ்விருபுத்தகங்களுக்கு உவமைப்பொருள்களை எடுத்துக்காட்டுஞ் சிறுநூல்கள் இரண்டு உண்டென்பது, பலர்க்குந் தெரியுமே. இவ்விரண்டனுள், புகழேந்தியாரது இரத்தினச்சுருக்கத்தின் முதலிற் காப்புச்செய்யுள் இல்லை. உவமானசங்கிரகத்தின் முதலில்மாத்திரம் "வேதத் தமிழ்மாறன் வெற்பனையார் கேசாதி, பாதத் துவமானப் பண்பெல்லாந்-தாதின்ப, முருகூர் மலர்க்குழலாய் மூதுரையாற் சொல்வன், குருகூரனைத் தொழுது கொண்டு" என நம்மாழ்வார்விஷயமான காப்புச்செய்யுள் உண்டு. இவ்விரண்டுநூல்கள், பலபதிப்பிலும், பொருளொற்றுமைபற்றியும் சிறுமை காரணமாகவும் ஒருங்கே அச்சிடப்பட்டுள்ளன. இப்படியிருக்க, இவர்கள், சென்ற இரண்டுவருஷத்து மெட்ரிகுலேஷன் பாடபுத்தக உரைகளில், புகழேந்தியை வைணவரென்று தாபிக்குமிடத்து, 'இவர் இயற்றிய இரத்தினச்சுருக்கத்தில் "குருகூரனைத்தொழுதுகொண்டு" என ஸ்ரீசடகோபமுனிவரையே துதித்தமையானும்' என்று ஒருமுறைக்கு இருமுறையாக மேற்கோள் காட்டியிருக்கிறார்கள். இங்ஙனம் ஒருநூலின்காப்பை மற்றொருநூலின்காப்பாக மாறுபடக்கூறி ஒருவரது மதத்தை நிலைநிறுத்துவதாயின், எந்தமதத்தைச்சார்ந்த புலவரையும் தமக்கு இஷ்டமானமதத்தைச்சார்ந்த புலவராக எளிதில் இழுத்துக் கொண்டுவந்து சேர்த்துவிடலாம். (காலம் முதலியவற்றுக்கும் இப்படியே.) புத்தகங்களை ஒருங்குசேர்த்துத் தைத்துக்கட்டிக் கொடுப்பவ[பைண்டா]ரது உதவியொன்றே வேண்டுவது. 'பரீக்ஷைக்குப் பயிலும் மாணாக்கர்க்கேயல்லாமல் ஏனையோர்க்கும் பயன் செய்யுமாறு ... அவ்வந்நூலாசிரியர்தம் காலம் மதம் முதலியவற்றையும் ஆராய்ச்சி செய்தற்கருவியாக அவ்வவ்விஷயங்களை ஆராய்ந்து அவ்வந்நூன்முகத்து விளக்கமுறப்பெய்துமிருக்கின்றோம்' என்று பதிப்புரை யெழுதும் இவர்கள் நூலாசிரியர்மதத்தைத் தக்கஆதாரமூலமாக நிலைப்படுத்துதலில் உண்மைப் பொருளுணர்த்திய திறம், இது!

உ.—மகாபாரதசரித்திரத்தில் பீஷ்மரது தம்பியராகிய சித்திராங்கதன் விசித்திரவீரியன் என்ற இருவருள், சித்திராங்கதனென்பவன் அப்பெயருள்ள ஒருகந்தருவராசனால் தன்பெயரை இவன்வைத்துள்ளானென்றகாரணத்தாற் பகைகொண்டு இரவில் தூங்குகையிற் கொல்லப்பட்டு இளமையிலேயே இறந்துவிட, பின்பு பீஷ்மர் விசித்திரவீரியனுக்கு முடிசூட்டிக் காசி நகரத்துஅரசன்புதல்வியர்மூவருள் அம்பிகை அம்பாலிகை என்னும் இருவரை மணஞ்செய்விக்க, பிற்காலத்தில் அம்பிகையினிடத்துத் திருதராஷ்டிரனும் அம்பாலிகையினிடத்துப் பாண்டுவும் வியாசரருளாற் பிறந்தனரென்ற கதை, இந்நாட்டிற் பெண்பாலார்க்கும் சிறுபிள்ளைகளுக்கும் முட்படப் பிரசித்தமாகத் தெரியுமன்றோ? இவ்விஷயத்தில் இவர்கள் அம்பிகையைச் சித்திராங்கதனுக்கும் அம்பாலிகையை விசித்திரவீரியனுக்கும் மனைவியாக ஆள் மாறாடித் தனித்தனி கூட்டிமுடித்து விளக்கமாக வம்சவிருக்கமொன்று (தங்கள் மெட்ரிக்உரையில்) நாட்டி வளர்த்திருக்கின்றனர். இவ்வாறு பெரியபாவத்துக்குஇடமான புணர்ச்சிவகையை விளைக்கிற கொம்மரமொன்றை உற்பத்திசெய்தது, ஒருகலிக்கூத்தாகவே கருதப்படுகிறது. சந்திரவம்சத்தாரது உறவுமுறையை விளக்கச் சித்திரமொன்றெழுதித் தெளிவுகாட்டியதில் இவர்கள் உண்மைப்பொருளுணர்த்திய வியப்பு, இது!

௩.—"முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல்பிழந்து நடுங்குதுயருறுத்துப், பாலையென்பதோர் படிவங் கொள்ளும்" என்பது சிலப்பதிகாரத்துக் காடுகாண்காதையின் ௬௪, ௬௫, ௬௬-ஆம் வரிகள்; இவை, சிலப்பதிகாரப்பதிகவுரையிலும், தொல்காப்பியப்பொருளதிகாரவுரையிலும், தொல

காப்பியசூத்திரவிருத்தியிலும், மற்றுஞ் சில இடங்களிலும் மேற்கோளாக எடுத்து ஆளப்பட்டுள்ளன. இவற்றை, இவர்கள், தங்கள் திருவிருத்தவுரையில், (உகூ-ஆம் பாட்டுக் குறிப்பில்) தொல்காப்பியசூத்திரமாகக் காட்டி, அம்மேற்கோள் நூற்பெயரை வேற்றெழுத்தாலமைத்து விளக்கஞ்செய்துமிருக்கின்றார்கள். தலைச்சங்கத்தார்க்கு அகத்தியமும், இடைச்சங்கத்தார்க்கு அகத்தியம் தொல்காப்பியம் மாபுராணம் முதலியனவும், கடைச்சங்கத்தார்க்கு அகத்தியம் தொல்காப்பியம் என்னும் இவையும் இலக்கணமென்று பழைய நூலுரைகளால் தெரிகிறது, அவர்கட்கெல்லாம் இலக்கண நூலே இலக்கணமாயிருந்தது. இந்த ஐந்தாஞ்சங்கத்தார்க்கு, இலக்கிய நூலாகிய சிலப்பதிகாரம் இலக்கண நூலாகிய தொல்காப்பியமாகப் பரிணமித்தது, ஆச்சரியத்திலும் ஆச்சரியம்! 'சங்கச்செய்யுளுட் பயிற்றப்பேறில்லாத சிலர்' என்று பிறரை இகழ்ந்துள்ள இவர்களது சங்கவிலக்கியப்பயிற்சி சங்கவிலக்கணப்பயிற்சி என்ற இரண்டிற்கும் இஃதொன்றே நற்சான்றாக அமையும். மேற்கோள் விளக்கமில்லாத தொல்காப்பியசூத்திரவிருத்தியில் இந்த மேற்கோளைக் கண்டு, சொற்செறிவுடைத்தாயப் பொருளிலக்கணத்தையுணர்த்தும் ஆசிரிய வடிகளாக அமைந்திருத்தலமாத்திரத்தைக்கொண்டே தொல்காப்பியமென்று தாங்கள் துணிந்து, அத்துணிவின்வன்மையால், தங்கள் புத்தகத்தைப் பார்க்குமாணாக்கர்களும் விபரீதஞானமடையுமாறு அங்ஙனமே வெளிப்படுத்தியும் விட்டனரேபோலும், அன்றி, சங்கத்தாராகிய தாம் யாதாயினுமொன்றைத் தொல்காப்பியமென்று உரைத்தால் அதனை நன்னூலிலுள்ள எழுத்துச்சொல்லிலக்கணங்களையேயன்றி மாணாக்கர் அன்றென்று மறுக்கமாட்டாது ஆமென்றே நம்பிவிடுவரென்ற துணிவே இதற்குக் காரணமென்று ஊகிக்கவும் இடமுண்டு. இவர்கள் மேற்கோள்விளக்கங் காட்டுதலில் உண்மைப்பொருளுணர்த்திய புதுமை, இது!

ச.—இவர்கள், தங்கள் திருவிருத்தவுரையில் உகூ-ஆம் பாட்டில் 'இளந்தலைப்பெயதல்' என்று ஒருதுறை காட்டியிருக்கின்றனர். தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களிலும் திருக்கோவையார் முதலிய இலக்கியங்களிலும், பூர்வாசாரியர்கள் செய்தருளிய வியாக்கியானங்களிலும், எங்கும் இப்படிப்பட்டதொரு துறையைக் காணேம், (அன்றோம், இவர்கள் பாலைநிலத்துக்கு மேற்கோள் காட்டிய சிலப்பதிகாரத்தொல்காப்பியத்திலும் இஃது இல்லை) எங்குக்கண்டதோ? எவ்வாசிரியர்பாற் கற்றதோ? யார்பக்கற் கேட்டதோ? பொருள்தான் யாதோ? இங்குப்பொருத்த மெப்படியோ? அறியோம். 'இடந்தலைப்பெயதமை சொல்லல்' என்று ஒருதுறை உண்டு, அதன் அச்சுப்பிழையென்று இதனைக் கொள்வோமெனின்,—அதற்கும் இடமில்லை; வருமிடந்தோறும் இளந்தலைப்பெயதல் என்றே இவர்கள் புத்தகத்திற் காணப்படுகிறது. இவர்கள் திருவிருத்த முகவுரையில் 'இப்பிரபந்தம் நுதலும் பொருள்' என்று அறுதியிட்டுத் துறைகளைக்காட்டியவிடத்தும் இங்ஙனமே உள்ளது, ஆகையால், எவ்வாற்றானும் இதற்கு வழிசொல்லுதல் அரிது. அகப்பொருள் துறையுணர்த்துதலில் இவர்கள் உண்மைப்பொருளுணர்த்திய ஆற்றல், இது!

ரு.—தண்டகவனமென்னும் பெயர்க் காரணம்—சூரியகுலத்து மநுசக்கரவர்த்தியினது குமாரனான இக்ஷ்வாகுமகாராசனுடைய மக்கள் நூற்றுவருட்கடைப்பட்டவனும், மூடனும் மூர்க்கனுந் துஷ்டனுமாய்த் தண்டனைக்கு உரியனாவனென்ற காரணங் கருதி எதிர்காலவுணர்ச்சியையுடைய தந்தையால் தண்டனென்று பெயரிடப்பட்டவனும், தண்டகனென்று வழங்கப்படுபவனுமாகிய ஓரரசன், விந்தியமலைக்கும் சைவலமலைக்கும் இடையிலுள்ள நிலத்தைத் தன் ஆட்சிக்கு உரியதாகக்கொண்டு, மதுமந்தமென்கிற பட்டணத்தை யமைத்து அங்கு அரசாண்டு வருகையில், ஒருநாள் தனது புரோகித

ரான சுக்கிராசாரியரது ஆச்சிரமத்துட் சென்று அவர் மகளாகிய அரஜையென்பாளைக் காதலித்து வலியக் கற்பழிக்க, பின்பு அதனையுணர்ந்த அந்தப் பார்க்கவர் சினந்து 'ஏழுநாட்களில் அவன் குடும்பத்தோடும் சேனை முதலிய பரிவாரத்தோடும் அழிந்துபோக, அவனது நாடு மண்மழையால் யாதொரு ஜீவஜந்துவுமில்லாமற் பாழாகக்கடவது' என்று சபிக்க, அங்ஙனமே அந்நாடும் அவ்வரசனும் ஏழுநாள் மண்மழையால் அழிந்துபோயவிட, அவ்விடம் பின்பு காடாகித் தண்டகாரணியமெனப் பெயர்பெற்றது என்பது, கதை இஃது, இவ்வனத்தின் வரலாற்றை விருவின் இராமபிரானுக்கு அகஸ்தியமகாமுனிவர் கூறினதாக வான்மீகிராமாயணத்தில் உத்தரகாண்டத்தில் எகூ, அ0, அக- இம்மூன்று சர்க்கங்களிற் பரக்கக் கூறப்பட்டுள்ளது. ஒட்டக்கூத்தர் உத்தரகாண்டத்திலும் சம்புகன்வதைப்படலத்தில் "தண்டனென்போன் மனுகுலத்தோன் தருமத்தயாவொன்றில்லாத, மிண்டனவன் தன்புரோகிதனும் வெள்ளி தவஞ்செய்வனம் நண்ணி, வண்டுபடும்பூம்பொழிலிடத்து வளர்சீரந்த முனிமகளைக், கண்டு காமபரவசனாய்க் கலங்குநெஞ்சங் கருத்துவான்" என்று தொடங்கி "அந்தவெள்ளியன்னவன்மேல் ஆலகாலவிடமென்னச், சிந்தையெழுந்த பெருங்கோபந் தீரா விடமை எனமகட்கு, தந்த தண்டன் வளநாடுந் தானுங் கிளையுந் தந்திரமும், வெந்து பொடியாய் வீழ்க வென எல்லாம் பொடியாய் வீழ்ந்தனவே", "அவன்றன் நாடு இத்தண்டகமா மடவியாகி ஆரழலிற், சிவந்த வெள்ளி சாபத்தால் நரர் யார்க்குஞ் சேரவொண்ணா" என்பவை முதல் ஒன்பதுசெய்யுட்களில் விரிவாகக் கூறப்பட்டிருத்தல் காண்க. இவ்வாறெல்லாமிருக்க, இவர்கள், (விராதன்வதைப்படலம் ௪- ஆம் பாட்டு உரையில்) 'இக்ஷுவாகுசக்கிரவர்த்தியின் கடைமகனாகிய தண்டகனென்போன் ஒருநாட் பலவிடங்களுக்குஞ் சென்றபின்னர் அவ்வயிற் போதுகையிற் சுக்கிரபகவானது சாபத்தினாற் காடாயினன், அவன் அங்ஙனங் காடாயினவிடமே தண்டகவனமெனப் பெறுவதாயிற்று' என்றும், (அகஸ்தியப்படலம்-௩௧- ஆம் பாட்டு உரையில்) 'தண்டகனென்னும் முனிவனது வனமாதலின், தண்டகவன மெனப்பட்டது' என்றும் எழுதியிருக்கின்றனர். இப்படி இவர்கள் எழுதியவை, முதனூல் வழிநூல் முதலிய பலநூல்களோடும் மாறுபடுதலோடு, தம்மில் ஒன்றற்கொன்று மாறுகொள்ளக்கூறலாதலுங் காண்க. 'தண்டகன் காடாயினன்' என்பதும், 'தண்டகன் முனிவன்' என்பதும் நிராதாரமான விஷயங்கள். வடமொழி தென்மொழி ராமாயணங்களுக்கு முற்றும் மாறுபட்டவை. யாம் ஒன்பது வருடத்துக்குமுன் வெளியிட்ட கம்பராமாயண ஆரணியகாண்ட உரைப்பகுதியில் இச்சரித்திரத்தைச் சுருக்கி 'தண்டகவனம்-இக்ஷுவாகுவினது கடைப்புத்திரனாகிய தண்டகனென்பவன் ஆண்டுவருகையில், சுக்கிரசாபத்தினாற் காடான இடம்' என்று எழுதியுள்ளவாக்கியத்துக்கு மாறுகட்பொருள்கொண்டு அதனையே இங்ஙனம் விரித்து எழுதிவிட்டனர்கள்போலும், என்றாலும், கொடியவனான தண்டகன் முனிவனாக மாறுதல் எங்ஙனம்? 'கம்பராமாயணத்துக்கு வரலாற்று முறையின் வீரர்தாம் சிலர்' என்று எம்போலியரை நிந்தித்த இவர்கள் தாங்கள் வரலாற்றுமுறையின்வந்து பொதிந்த கதையை விளக்குதலில் உண்மைபெறாருணர்த்திய அதிசயம், இது!

௬ —வடசொற்கள் தமிழில் வந்துவழங்கும்பொழுது 'ரு' [ऋ] என்னும் வடமொழிச்சிறப்பெழுத்துத் தென்மொழியில் 'இ' என்றும், 'இரு' என்றுந் திரியும், (உதாரணம்) ருஷபஃ = இடபம், வ்ருஷஃ = விடை- இகரமாகத் திரிந்தன; வ்ருத்தஃ = விருத்தம், ம்ருகஃ = மிருகம் - இரு எனத் திரிந்தன. இதற்கு விதி - "அவற்றுள், ஏழாமுயிர் இய்யு மிருவும்" என்பது [நன்னூல் - பதவியல் - சூத்திரம் - உ0]. வடமொழிச் சம்யுக்தாக்ஷரம் தமிழில் வரு

கையில் அதில் ரகரமிருந்தால் அதன்பின் தமிழில் உகரம் வரும். (உதாரணம்) அர்த்தஃ = அருத்தம், பாவ — பருவம். இதற்கு விதி - "இணைந்தியல்காலை" என்ற [நன் - பத - ௨௧] சூத்திரத்து 'ரவ்வழி யுவ்வுமாம்' என்பது இவ்விஷயம், கீழ்வகுப்பு மாணாக்கரிலும் பெரும்பாலார்க்குக் குழப்பமின்றித் தெரியும் இப்படியிருக்க, இவர்கள், தங்கள் திருவிருத்தவுரையின் தொடக்கத்தில், 'வ்ருத்தம் - இவ்வடசொல் "இணைந்தியல்காலை" என்னுஞ் சூத்திரத்து "ரவ்வழியுவ்வுமாம்பிற" என்றதனால் 'விருத்தம்' எனத் திரிந்து நின்றது' என்று ஒன்றுக்கொன்றாகத் தடுமாறி எழுதியிருக்கின்றார்கள். 'விருத்தம்' என்பது வடமொழியாயினன்றோ, 'விருத்தம்' எனத் திரிந்ததற்கு இவர்கள்காட்டிய விதி அமையும்? 'வ்ருத்தம்' என்ற வடமொழிக்கு இது அமைவது எங்ஙனமோ? அவர்களே கருதுவாராக. 'இக்காலத்துச் சிலர் நன்னூலுரைகளை இக்காலத்துக்கேற்ப ஒருவாறு மாற்றி எழுதினரேனும், அவையும் இந்நாள் ஆங்கிலத்தோடு தமிழைக்கற்கும் மாணாக்கர்க்கும் ஏனையோர்க்கும் ஒப்பப்பயன்படாமையின், எமக்கு வித்தியாப்பியாசத்திலுள்ள அநுபவத்தையும், எம்மினும் அதிக அநுபவமுடையோரது அபிப்பிராயத்தையுங் கொண்டு உரைநடையை எளிதாக்கியும், பொருளைத் தெளிதாக்கியும் . . இருக்கின்றேம்' என்று எமது நன்னூற்காண்டிகையையுட்பட்ட பிறவுரைகளையெல்லாம் இழித்துப்பேசிப் பெருமிதமாக முகவுரைவரைந்து மயக்கமின்றியுணருமாறு ஒருதாவரூபத்தோடு நன்னூலுரையொன்று பதிப்பித்த இவர்கள் வடமொழிவிகாரத்திலுண்மைப்பொருளுணராததிய அற்புதம், இது!

௭.—'க்ருமி' என்ற ஒரு வடசொல், புழுவை யுணர்த்துவது, இது, தமிழில் 'கிருமி' என விகாரப்பட்டு வழங்கும். இவ்விஷயம், சிறிது கற்கத்தொடங்கினார்க்கும் நன்றாகத் தெரியுமே இங்ஙனமிருக்க, இவர்கள், திருவிருத்தத்தில் "மெல்லியலாக்கைக் கிருமி" என்ற பாட்டின் உரையின்கீழ் 'கிருமி-கரிமிகம், வடசொல்' என்று எழுதியிருக்கின்றனர். இவ்வடசொல் எங்குக்கண்டதோ? பொருள் யாதோ? இவ்வாறு ஏன் திரிந்ததோ? க்ருமி என்னும் வடசொல்லைக் கொள்ளுதற்கு வந்த தடையென்னோ? 'வடமொழிதென்மொழிகட்கு உற்பப்புப்பொருளும் குறித்திருக்கின்றேம்' என்று பதிப்புரையுரைத்த இவர்கள் வடசொல்வடிவத்தைக் கண்டு வெளியிடுதலில் உண்மைப்பொருளுணராததிய விதம், இது!

௮.—முகமென்பது, ஒருவடசொல், இவ்விஷயம், பலர்க்கும் கையிலங்கு நெல்லிக்கனியாகத் தெளிவுறத்தெரிந்ததே. இதனைத் தாபித்தற்காக, இலக்கிய இலக்கண மேற்கோள் காட்டத்தொடங்கினாலும், யுக்திவாதஞ்செய்யத் தொடங்கினாலும், நன்றாகப்பிசைபட்டமாவையே மீண்டு மீண்டும் பிசைதலென்கிற பிஷ்டபேஷண நியாயத்தாற் குற்றமும் மிகையுமாய் முடியும். இப்படியிருக்க, இவர்கள், (நாலடியார்- ௬௫ - ஆம் பாட்டுரையில்) 'முகை, முகு-பகுதி, ஐ - வினைமுதற்பொருண்மை விகுதி; முற்பட்டுநிற்பது என்பது உற்பப்புப்பொருள். 'முகம்' என்பதும் அற்று, அறியார் இதனை வடசொல்லென்றுரைத்து மயங்குவர், அவர் 'முகஞ்செய்துகிடத்தல்', 'முகங்கொண்டுநிற்றல்' என்பனவாதிய பிரயோகங்களைக் கண்டிலர்போலும்!' என்று எழுதியிருக்கின்றனர். இதற்கு ஆதாரமென்னோ? முகமென்பதை வடசொல்லாகக்கொண்டால் வருங் குற்றமென்ன? உள்ளதை உள்ளபடிகொள்ளுதல், எப்படி மயக்கமாகும்? அப்படிகொண்டவர் எப்படி தாம் அறியாராவார்? முகம் என்ற சொல் வடமொழியிலேயேபலபொருள்களில்வழங்குதற்கு அநேகப்பிரயோகங்கள் காணலாமே. முகு என்பதொருபகுதி, எங்குக்கண்டது? அதன் மற்றை வினைவிகற்பங்கள் எப்படி? அவற்றிற்கெல்லாம் பிரயோகங்கள் யாவை?

[பரிதிமாற்கலைஞரது தனிப்பாசுரத் தொகையையும், நாடகவியலையும் தங்கள் கம்பராமாயணவுரையில் தாங்கள் மேற்கோளாகக் கொண்டதுபோல, தங்களிலொருவரைக்கொண்டு சிலவற்றை யெழுதுவித்து அவற்றை வேறொருபெயரால் யாதேனும் ஒரு மாதாந்தரப்பத்திரிகை மூலமாகவாவது வேறு வகையாகவாவது வெளிப்படுத்தி அப்படிப்பட்டவற்றை இப்படிப்பட்டபிரயோகங்களுக்கு மேற்கோளாகக்காட்டினால் யாவரும் உடன்படார்; அன்னவை, தமக்கும் தம்மினத்தார்க்கும் மேற்கோளாதற்கு உரியனவாயினும், பிறர்க்கெல்லாம் பொதுப்பட்டுத் தடையற அங்கீகரிக்கத்தக்க மேற்கோளாகா வன்றோ?] முகைக்கு முகத்தையும், முகத்துக்கு முகையையுமாக இவ்விரண்டுசொற்களையுமே திருப்பித்திருப்பி ஒன்றுக்கொன்று மேற்கோளாகக் காட்டினால், ஒன்றனையொன்று பற்றுத லென்னுங் குற்றம் வருமே, என்செய்வது? முகை யென்பதனை, அரும்புதலென்னும் பொருள் கொண்ட 'முகை' என்னும் வினைப்பகுதி கருத்தாப்பொருள் விகுதி புணர்ந்து கெட்டதாகக் கொள்ளின், வரும் இழுக்கு யாது? இவர்கள் வடசொற்களுக்கும் தமிழ்ச்சொற்களுக்கும் உறப்புப்பொருள் குறித்தலில் உண்மைப்பொருளுணர்த்திய பாங்கு, இது!

௧—தமிழ்நாட்டுமூவேந்தராகிய சேரசோழபாண்டியர்களுக்கு இடுகுறியாகவுங் காரணக்குறியாகவும் பற்பலபெயர்கள் தமிழ்நூல்களிற்பயிலுகின்றன. அங்ஙனமே சோழன்பெயர்பல கலிங்கத்துப்பரணியென்னுநூலில் வழங்கப்பட்டுள்ளன. அவற்றில் 'மாநதன்' என்பதொரு சோழன்பெயர், கலிங்கத்துப்பரணியில் (கடைதிறப்பு - ௧௧) "தண்கொடை மாநதன் மார்பு தோய் தாதகி மாலையின் மேல்விழுங், கண்கொடு போம்வழி தேடுவீர் கனகநெடுங்கடை திறமினோ" என்பதிலும், (கடைதிறப்பு - ௧௨) "அஞ்சியே கயல்கெடக் கூடலிற் பொருதுசென் றணிகடக் குழையிலே விழவடாது தெழிதலால், வஞ்சி மாநதன் விடுஞ் சேனையிற் கொடியகண் மடநலீர் நெடுமணிக் கடைதிறந் திடுமினோ" என்பதிலும், (கோயில்பாடியது- ௨) "வட்ட வெண்குடைச் சென்னி மாநதன் வாளினால் வாயினால் மறலி வாயிடைப், பட்ட மன்னர்தம் பட்ட மங்கையர் பருமணித்திருக் கருவி ருத்தியே" என்பதிலும், (களம்பாடியது-௧௧௪) "வாசுகி டக்கை கலிங்க ரோட மாநத னேவிய சேனை வீரர், தூசியெடுத்தமை பாடி நின்று தூசியு மிட்டினி யாடினவே" என்பதிலும் வந்துள்ளது. மாநத னென்னும் வடமொழிப்பெயர்க்கு-மானத்தைக் காப்பவ னென்று பொருள், இதனை, 'தநதன்' என்னுங் குபேரன் பெயர் செல்வத்தைக்காப்பவ னென்று பொருள்படுதல்போலக் கொள்க. சோழனுக்கு 'மாநாபரணன்' என்று ஒருபெயர் வழங்குதலால், இப்பெயர்க்கு இங்ஙனங் காரணப்பொருள்கொள்ளுதல் சாலும். இனி, (தம்மவர்க்கு) மானத்தைக் கொடுப்பவ னென்றும், (பகைவர்க்கு) மானத்தைக் கெடுப்பவ னென்றும் பொருள்கொள்ளவும் அமையும், 'நாரதன்' என்னும் வடமொழிப் பெயரில் 'த' என்பது - கொடுத்தலுங் கெடுத்தலு மாகிய இவ்விருபொருளும் படுதல் காண்க. இஃது, ஓர் இலக்கியப்பொருள். 'மாந்தர்' என்பது-மனிதர்பெயர்; தமிழில் ஒருமையில்லாமல் எப்பொழுதும் பன்மையிலேயே வழங்குவது; இப்படிப்பட்டதை வடநூலார் 'நித்யபகுவசநம்' என்பர்: இச்சொல் எங்கும் 'மாந்தன்' என்று ஒருமையாகப்பயிலுதலில்லை. இஃது, ஓர் இலக்கணப்பொருள். இவையிரண்டும், யாவர்க்கும் ஒப்ப முடிந்தவை. இப்படியிருக்க, இவர்கள், கலிங்கத்துப்பரணிப் பாடல்களிலொன்றில் 'மாநதன்' என்பதை 'மாந்தன்' எனப் படித்துக்கொண்டு, தங்கள் நாலடியுரையில் 'மாந்தர்கள்-ஒருமையில்சொல்லென்ப சிலர் அவர் 'மாந்தன்' என்னுமொருமைச்சொல் கலிங்கத்துப்பரணிக்களம்பாடியபகுதியில் ௧௧௪-ஆந்தாழி

சைக்கண் "மாந்தனேவியசேனைவீரர்" என்ப பயின்றுவந்த துணரார்போலும்' என்று எழுதியிருக்கின்றனர். அவ்விடத்து 'மாந்தன்' என்பபாடங்கொண்டால், செய்யுளோசைகெடுதல், அத்தாழிசையின் இரண்டாமடியோடு முதலடியை அளவொத்துவர அலகிட்டுப்பார்த்தால் விளங்குமே, அடுத்த தாழிசையோடும் ஒப்பிட்டுக்காணலாம். அன்றியும், மாந்தனெனக்கொண்டால், மனிதனென்றன்றோ பொருள்படும் அங்ஙனங்கொண்டால், அப்பாட்டிற் பொருந்தும் எப்படி? சோழனென்றன்றோ அங்குப்பொருள்படவேண்டுவது? மனிதனென்றமாத்திரத்தால் சோழனென்றாவது எவ்வாறு? இவர்களில் ஒருவரது பெயரால் பலரையும்பழித்தொரு பெருமுகவுரையோடு வெளியாயுள்ளபதிப்பிலும், யாம் மேற்காட்டிய நான்குசெய்யுள்களுள் முதல் மூன்றும் மானதனென்றன்றோ பதிப்பிக்கப்பட்டுள்ளன! அங்கும், மாந்தனென்றே திருத்திவிட்டால், மாந்தனென ஒருமையில்வருதற்கு ஒன்றுக்கு நான்காக உதாரணங்கள் அமையுமே அவ்விடங்களிலெல்லாம் அங்ஙனங்கொள்ளின் செய்யுளோசைசிதையுமே யென்றால், அச்சிதைவு இங்கும் விட்டதன்றே. இவ்விஷயத்தில் உணராமைக்குற்றம் யாரிடத்து நிலைத்து நிற்பதோ, உணர்வுடையாரே உணர்வாராக 'தானாட்டித் தனாதுநிறுப்பு' என்னும் மதத்தைக் கொண்டு இவர்கள் பழையஇலக்கியஇலக்கணப்பிரயோகங்களில் ஒன்றைத் தாங்களே புதிதாகத் தாபித்து அதனை வருமிடந்தோறும் நிலைநிறுத்துதலில் உண்மைப்பொருளுணர்த்திய விசித்திரம், இது!

௧௦ — துந்துபி யென்னும் வடசொல், பேரிகையென்னும்வாத்தியத்தைக் குறிப்பது, இதற்கு-துந்து என்ற ஒலியால் விளங்குவதென்றும், துந்து என்ற ஒலியால் நிறைவுடையதென்றும், துந்து என்று விளக்கமாக ஒலிப்பதென்றும் வடநூலார் காரணப்பொருள் கூறுவர். இது - வடமொழியில் ஓரசுரனுக்கும், ஒருவருடத்துக்கும், சூதாடுகருவிக்கும் பெயராகவும் நிற்கும் இச்சொல், தமிழில் பேரிகைக்குச் சிறப்புப்பெயராக வழங்குதலேயன்றி, பலவகைவாத்தியங்களுக்கும் பொதுப்பெயராகவும் வழங்கும், இதனைத் தமிழ்நிகண்டுகளாலும் அறியலாம் இது, தமிழிற் சிற்சிலஇடங்களில் துந்துமியென ஈறுதிரிந்து உபயோகிக்கவும் படும் இச்சொல், இவ்வருஷத்து மெட்ரிகுலேஷன் பாடபுத்தகத்தில் குசேலோபாக்கியானத்தில் ௧௧ - ஆம் பாட்டில் "ஐந்து துந்துபியின் முழக்கமும்" எனவும், ௧௧௮ - ஆம்பாட்டில் "வண் துந்துபி யைந்தும்' எனவும், வில்லிபுத்தூரர்பாரதம் - பதின்மூன்றாம் போர்ச்சருக்கம் - ௭ - ஆம் பாட்டில் "அந்தரதுந்துபிமீதெழவே" எனவும் வந்துள்ளது இவ்விடங்களில், இவர்கள், தங்களுரையில், 'துந்துமி' என மூலத்துக்குமாறானபாடங்கொண்டு, 'அறியார் துந்துபியெனப்பாடமோதி இடர்ப்படுவர்' என்றும், 'அறியாரிதனைத் துந்துபியென்றோதுவர்' என்றும் எழுதியிருக்கின்றனர். துந்துபியென்று சரியானபாடமோதியவர்கள்மேல் அறியாமையும் இடர்ப்பாடும் சென்று நிற்பது எவ்வாறோ? குசேலோபாக்கியான நூலாசிரியரது ஆசிரியர்தாமே பரிசோதித்து முதலிற்பதிப்பித்துள்ள பாட்டைத் வேறாகத்திருத்தி 'ஐந்து துந்துமியின் - துந்துமியாதிய ஐவகைப்பட்ட வாத்தியத்தினது' என்றும், 'வண் துந்துமி யைந்தும் - வளப்பம்பொருந்திய துந்துமியாதிய தோற்கருவி முதலாய ஐந்துவகைஇசைக்கருவிகளும்' என்றும் கூறுவழியாகப்பொருள்கொண்ட தங்களிடர்ப்பாட்டைப் பிறர்மேல் ஏற்றினும், அது ஏறாதன்றோ? இவர்களில் மூவர் பெயரால் வெளியான கலிங்கத்துப்பரணியுரையிலும் மற்றுஞ்சில இடங்களிலும் இவர்கள் தாமே துந்துபியென்று வெளியிட்டுள்ளனராதலால், அறியாமை தங்கள்மேலும் நிற்குமே யென்றாவது ஆலோசிக்கவேண்டாவோ? வடமொழியாக்கத்தில் இவர்கள் உண்மைப்பொருளுணர்த்திய வாறு, இது!

கக.—கம்பராமாயணத்தில் ஆரணியகாண்டத்தில் விராதன்வதைப்படலத்தில் "சுவணவண்ணனொடுங்கண்ணனுறைதோளின்மிசைதோ, யவணிவிண்ணிடைவிராதுபடர்கின்றவனறை, சிவணைதன்னசிறைமுன்னவரொடேகுசெலவத, தவணனென்னுநெடுமன்னவனு மொத்தனனரோ" என்றசெய்யுள், இராமலக்குமணர்களைத் தன்தோளிரண்டின்மீதுமுடைய விராதனுக்கு ஒருவமைகூறுவது. இதற்கு, இலக்குமணனும்இராமனுமஏறிவீற்றிருக்கப்பெற்ற தோள்களையுடையனாய வேகத்தோடுஆகாயத்திலெழும்பிச்செல்லுகிற விராதன் தாமசொரூபமான தன்சிறகுகளில் [தோள்களில்] பலராமகிருஷ்ணரை எழுந்தருளப்பண்ணிக்கொண்டுசென்ற கருடாழ்வானைப் போன்றுளனென்று யாம் முன்பு பொருளுரைத்து, அவ்வுவமைப்பொருத்தத்தையும் விளக்கி, 'இனி,முன்னவரென்பதற்குப் பிரமவிஷ்ணுக்களென்றும், கிருஷ்ணார்ச்சுனர்களென்றும் உரைப்பாருமுளர், அவை பொருந்துமேனுமுணர்க' என்றும் எழுதியிருந்தோம் இப்பொழுது, இவர்கள், அப்பாட்டின் பின்இரண்டடிகளுக்கு, 'தன் துசிறகுகளில் தமையன்மாராகிய கேதுராகுக்களோடு செல்லுகின்ற வேகத்தினையுடைய கருடனென்கிற பெரியபுள்ளரசனையும் நிகர்த்தான்' என்று பொருளெழுதி, 'கம்பராமாயணத்திற்கு வரலாற்றுமுறையின் வாராதார் சிலர் உரைவகுப்பான்புகுந்து முன்னவரென்பார் கிருஷ்ணார்ச்சுனரெனவும், பலராமகிருஷ்ணர்களெனவும், காலபேதவழுஉவாதலறியகில்லாது பொருள்வகுத்துரைத்து மாழாந்தொழிந்தார். அவர்தந்தெளிவிருந்தபடி யென்னே!' என்று எழுதிப் பிறவுரையை மறுத்துமிருக்கின்றனர் இங்ஙனம் எழுதியதில், இவர்கள்சொல்லும்புக்கு முதலியன புலனாவதொன்றெழிய வேறொருபயனுஞ் சிறிது மில்லையென்பது சற்றுஆராய்ச்சி செய்தால் யாவர்க்கும் விளங்கும் சரித்திரவிஷயத்தில் பின்னிருந்தவரை முன்னிருந்தவரென்பது தோன்ற எந்த வகையினுலாவது கூறினால் அதுவன்றோ காலபேதவழுவாம்? முன்னுள்ளாரது சம்பாஷணையிற் பின்னுள்ளாரதுபிரஸ்தாபம்வந்ததாகக்கூறின் அதுகாலபேதவழுவாகத்தட்டில்லை. பின்புள்ளபொருளை முன்புள்ள பொருளுக்கு உவமை கூறினால், அது காலபேதவழுவாகுமா? மக்கட்குத் தாயதந்தையரும், தம்பிக்குத் தமையனும், காரியத்துக்குக் காரணமும் போல, உபமேயப்பொருளுக்கு உபமானப்பொருள் முந்தியதாயே யிருக்கவேண்டுமென்ற நியதி, எந்தஇலக்கணநூலிலும் எந்த இலக்கியநூலிலும் கண்டதும் கேட்டதுமில்லையே, உபமானம், சொல்லுகிற கவியின் காலத்துக்கு முந்தியதாயிருந்தால், அவ்வளவே போதுமே? பிரஸித்தமான தொருபொருளின் உருவம் குணம் செயல் முதலியவற்றை அப்பிரஸித்தமானதொருபொருளைக்கொண்டுவிளக்குதலொன்றே, உவமையணியின் போக்கு இங்ஙனங்கொள்ளுதலே, இலக்கண இலக்கியங்களுக்கு மாறுபடாததும் ஆனறோவழக்கமுமாம் இவ்விஷயம், கீழ்க்குறித்தபாட்டினுரையில் 'முன்னவதாரமாகிய ராமலக்ஷ்மணர்களுக்குப் பின்னவதாரமாகிய ராமகிருஷ்ணர்களை உவமைகூறியது கவிக்கூற்றுதலின் னெனக' என்று யாம் முன்பு எழுதியிருத்தலினாலேயே விளங்கலாமே. புகழேந்திப் புலவர் நளவெண்பாவில் "தேன்பிடிக்குந் தண்டுழாய்ச் செங்கட் கருமுகிலை, மான்பிடிக்கச்சொன்ன மயிலேபோல - தான்பிடிக்கப், பொற்புள்ளைப் பறித்தா வென்றுள் புதுமழலைச், சொற்கிளிளை வாயாள் தொழுது" என்றவிடத்து,க்ருதயுகத்தில் நளனைத் தமயந்தி பொன்னன்னப்பறவையைப்பிடித்துக்கொடுக்கும்படி கேட்டதற்குத் திரேதாயுகத்தில் இராமபிரானைச்சீதை பொன்மானைப்பிடித்துக்கொடுக்கும்படி கேட்டதை உவமைகூறியதை யாயினுங் கண்டதில்லையா? கம்பராமாயணத்து வரைக்காட்சிப்படலத்தில் "இரண்டுதாள்நெடுஞ்செறிபணைமருதிடையோடியப், புரண்டு பின்வர வுரலொடு

போனவன்போல, உருண்டுகால்தொடர்பிறகிடுதறியொடுமொருங்கே,இரண்டுமொமரமிடையிறந்த தோயானை'' என்று தசரதாயானைக்குக் கிருஷ்ணமூர்த்தியை ஒப்புஉரைத்துள்ளதும், ஆற்றுப்படலத்தில் "செறிநறுந்தயிரும் பாலும் வெண்ணெயுஞ் சோர்ந்தநெய்யும், உறியொடுவாரியுண்டு குருந்தொடு மருதமுந்தி, மறியுடையாயாமாதா் வனைதுகில்வாருநீரால், பொறிவரியரவினூடு புனிதனும் போலுமன்றே'' என்று சரயுநதிக்குக் கண்ணபிரானை உவமை கூறியுள்ளதும், பிறவுங் காண்க, பாலகாண்டத்திற்கு இல்லாத காலபேத வழுஉ, ஆரணியகாண்டத்தில் எப்படிவந்தமுளைக்கும்? கம்பராமாயணத்தில் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பவள்ளலும், நளவெண்பாவில் சந்திரன் சுவர்க்கியும்,வில்லிபுத்தூரார்பாரதத்தில்வரபதியாட்கொண்டானும்,இராமன் நளன் பாண்டவா் இவா்களுக்கு உவமைகூறப்பட்டனரே,அவா்கள்,இராமன் முதலியோர்க்கு முன்னிருந்தவரோ? இப்படி முற்பொருளுக்குப் பிற்பொருளுவமைகூறுதலை, வடமொழி தென்மொழி முதலிய பலமொழிகளிலும் பல காணலாமே அவ்விடங்களிலெல்லாம் வரலாற்றுமுறையின்வந்தஇவா் காலபேதவழுஉவாகாமையறிந்து பொருள்வகுத்துரைத்து மாழாந்தொழியாதவாறு எங்ஙனே? 'அவா் தந்தெளிவிருந்தபடியென்னே!' என்று பிறாக்கு எழுதியதைத் தங்களுக்கேகொள்வாராக. வடமொழிதென்மொழிக்கடலைநிலைகண்டுணர்ந்த பிள்ளைலோகாசாரியா,முற்பட்டதாகிய திருவாய்மொழியீடுமுப்பத்தாறாயிரப்படிவியாக்கியானத்துக்குப் பிற்பட்டதாகிய சருதப்ரகாசிகை உவமை கூறப்படுதலைச் சாதிக்குமிடத்து, 'இதுதான் சருதப்ரகாசிகைக்கு முன்னே அவதரித்ததானாலும், பின்புள்ளார் இதன்படியைத் தருஷ்டாந்தமாக அருளிச்செய்யக் குறையில்லை' என்று (உபதேசரத்தினமாலைவியாக்கியானத்தில்) எழுதியதையும், வடமொழி தென்மொழிப் பயிற்சியில் மிக்கச் சிறந்த ஸ்ரீ-உ-வே தி-ஈ ஸ்ரீநிவாசராகவாசாரியா் நளவெண்பாவுரையில் 'கண்ணன் நளனுக்குப் பிற்காலத்தானாயினும், இக்கவிக்கு முற்பட்டவனாகலின், முரனை நகரத்தையும் உக்கிரபாண்டியனையுங் கூறியதுபோலக் கவிவழக்காயக்கூறியதென்பது ஒருவகை' என்று எழுதியதையும் அறிந்து அடங்கக்கடவா். திருமாலினுருவத்துக்குக் காளமேகத்தையும் சிவபிரானவடிவத்துக்குச் செவ்வானத்தையும் பெரியோர் உவமைகூறியுள்ள இடங்களையும், இவா்கள், தங்கள் துணிவால், 'கருமுகிலும் செக்கர்வானமும் அரிக்கும் அரனுக்கும் முன் தோன்றினவல்லவாகலின், இவ்வுவமை காலபேதவழுஉவாமபிற' என்றுமறுக்கத்தொடங்கிவிடுவர்போலும் இனி, இவா்கள் தங்களுரைக்குஆதாரமாகக் காட்டிய சரித்திரத்திலுஞ் சிறிதுஆராய்ச்சி செய்யப்படும் 'விநதைமகனுங் கருடன் கத்துருவின்மக்களான நாகங்களைச் சுமந்து திரிந்தான்' என்பதுமாத்திரமே, பாரதத்தி லுள்ளது; கேதுராகுக்களைச் சுமந்தா னென்பது, எங்குக் கண்டது? அன்றியும், ராமலக்ஷ்மணா்க்கு ராகுகேதுக்களை ஒப்புமைகூறுதல், இழிவுவமைக்குற்றத்தின்பாற்படுமே இவா்கள் கம்பராமாயணத்துக்கு வரலாற்றுமுறையின்வந்து உரைவகுப்பான்புகுந்து பொருள்வகுத்துரைத்துப் பிறருரைக்குற்றங்காட்டுதலில் உண்மைப்பொருளுணாத்திய தன்மை, இது!

க௨.—கலிங்கத்துப்பரணிக் கதாநாயகனும் சூரியகுலத்துக் கங்கைகொண்ட சோழனது பெண்வயிற்றுப்பிள்ளையும் அவனது அபிமானபுத்திரனுமாகிய விசயதரசோழன் சந்திரகுலத்துச் சாளுக்கிய வரசர்களில் ஒருவனது மகனென்று சிலாசாஸநபரிசோதகா் நன்குவிளக்கியிருக்கவும், இவா்கள், ஒரு பாண்டியராசனது குமாரனென்று எழுதிவைத்தது, யாதுகாரணத்தாலோ? நூலில் சந்திரகுலத்தானென்று சொல்லியிருத்தலைக்கொண்டும், சோழநாட்டிற்குப் பாண்டியநாடு அணுகியதாயிருத்தலைக்கொண்டும், சோழனுக்கும் பாண்டியனுக்கும் பெண்கொடுத்துவாங்கும் உறவுமுறை யிருந்ததாக வேறு

சிலவிடங்களில் வருவதுகொண்டும், பாண்டியனென்று அறுதியிட்டனர்போ லும். இவன் பாண்டியரைப் பொருது அழித்ததாக அந்நூலிற் பலவிடத்து வருதலாலும், இவன் பாண்டியராசனல்லனென்பது புலப்படுமே. சாஸனவா ராய்ச்சிப்புலவர் எழுதிவைத்த குறிப்புக்களைத் துணைகொண்டு கலிங்கத்துப்ப ரணிச் சரித்திரக்குறிப்பை விளக்க எழுதுதலில் இவர்கள் உண்மைப்பொரு ளுணராததிய மாட்சி, இது!

கங.—"நளியிரு முந்நீர் நாவா யோட்டி, வளிதொழி லாண்ட வுரவோ ன்" என்ற புறநானூற்றின்ஒரு சோழராசனை வாயுபகவானை யென்று னெ ன்று வெளிப்படையாகச் சரித்திர மிருப்பவும், கலிங்கத்துப்பரணியில் இராச பாரம்பரியம் - கசு - ஆம் பாட்டில் 'வாதராசன்' என்றதற்கு - யாதொரு சரித்திரமுங்காட்டாது 'ஓர் அரசனை என்று அறிக' என்று எழுதியிருக்கின்ற னர். அது, வாதராசனென்றதனாலேயே விளங்குகின்றது, இவர்களுரை யால் விளங்கவேண்டியதில்லை. மற்றும் அவ்விராசபாரம்பரியத்தில் "காலனு க்கிது வழக்கென வுரைத்தவனும் காவிரிப்புனல் கொணர்ந்தவனும்" என் பதுமுதலியவற்றிற்குச் சரித்திரங்கள் எழுதாதுவிட்டனவும், பொருத்தமில் லாத சரித்திரங்களையெழுதிவைத்தனவும், மிகப்பல, அவற்றை விரிப்பிற்பெ ருகுமென இங்கு விடுத்தனம். இடமவந்துழி அவையெல்லாம் எடுத்துக்கா ட்டப்படும். பழைய சிறந்த நூல்வள சரித்திர விவரங்களை வெளியிடுதலில் இவர்கள் உண்மைப்பொருளுணராததிய தோசசி, இது!

கச —"எழிலார் திருமார்பிற் கேற்ற மினவயென்று, அழகிய வைம்ப டையு மாரமுங் கொண்டு" (திவ்வியப்பிரபந்தம்), "செவ்வாய்க் குதலை மெய் பெறா மழலை, சிந்துபு சின்னீ ரைம்படை நனைப்ப", "அமளித் துஞ்சு மை மபடைத் தாலிக், குதலைச் செவ்வாயக் குறுநடைப் புதல்வர்" (மணிமேகலை), "தாலி களைந்தன்று மிலனே" (புறநானூறு), "தாலி யைம்படை தழுவு மார்பிடை" (கம்பராமாயணம்), "ஐம்படை மார்பிற் காணேன் சிறுசிலம் படியிற் காணேன்" (திருவிளையாடற்புராணம்) எனப் பல சிறந்த தமிழில க்கியங்களாலும், பல வடநூல்களாலும், ஐம்படை யென்பது - காத்தற்கட வுளான திருமாலின் பஞ்சாயுதவடிவமாக அமைத்துக் குழந்தைகளுக்குப் பாதுகாவலாகக் கழுத்திலணியப்பட்டு மார்பில் தொங்குவதோர் ஆபரண மென்று தெளிவாக விளங்கவும், இவர்கள், கலிங்கத்துப்பரணியுரையில் 'இவ் வாபரணம் குழந்தைப்பருவத்துக் குழந்தைக்கு இடையில் அணிவது' என்று எழுதியிருக்கின்றனர் இது, நூற்கொள்கைக்கு மாறான தொரு பொருளை வெளியிட்டு மாணுக்கரைத் திரிபுணர்ச்சிப்படுத்துவதோடு பகவத்பசாரத்து க்கு ஏதுவுமாம். பழைய புதிய இலக்கியங்களின் பயிற்சியால் உண்மைப் பொருளுணராததிய அழகு, இது!

கரு.—அஷ்டவசுக்கள்-அத்வரன், அநலன், அநிலன், ஆபன், சோமன், துருவன், பிரத்யூஷன், பிரபாஸன் என இவர் ; இவர்களில் ஆபன் என்ற பெ யரை 'ஆபசைவன்' எனச் சில தமிழ்நூல்களில் மாறுகக் குறிக்கப்பட்டுள் ளது , அவற்றிலுள்ளவாறே இவர்களும் 'ஆபசைவன்' எனறே ஒருமுறை க்கு மூன்றுமுறை தங்கள்புத்தகங்களில் வெளியிட்டிருந்தனர். அது வடநூ ற்கொள்கைக்கு வழு வென்று உணர்ந்து 'ஆபன் எனபவனை ஆபசைவ னெ னப் பெயர்கூறுவர், வசுக்களின்பெயரைக்குறிக்கும் வடமொழிச்சுலோகத் தில் "ஆபஸ்சைவ" என்றதன் பொருளை யறியாதவர்' என்று எமது கக - ஆம் வருடத்து யப - ஏ பாடபுத்தகத்தில் வெளியிட்டோம். பின்பு இவர்களில் ஒருவரும் ஒருவரது மாணுக்கரும் வெளியிட்ட தொரு சிறுநூ லில், யாமஎழுதியவிஷயமே, சிறிதுமாற்றி 'வடநூலுணராதார் 'ஆபசை வன்' என்பர். இதில் ச, ஏவ என்பன - வடசொலிடைச்சொற்கள்' என்று

காணபபட்டது. எமது கொள்கையைப் பிறரும எடுததாளுகிற விஷயததில எமககு மிகததிருபதியேயாம. தமமையும தமஆசிரியரையும 'வடநூலுணராதார்' என்று தாமே நிரூபிததது உணராமையை வெளியிடுத லொன்றே இதிற சால வியககத்தககது. பிறாமேற குறறஙகாட்டுமிடததுத் தன்னிமயலினமபாராத நடுவுநிலைமையின திறமபோலும, இது! முன்பு தாம மாறுக அறிநததும பிறர் அரிதிறகணடுபிடிதது உணமையையுணாததியது மாகிய தொரு விஷயததை இஙஙனம பிறஙகோட்கூறலாகவன்றித தானெடுதது மொழிதலாகவே வெளியிடடதை நோககுமிடதது, முன்பு ஒருவா விலலிபுததூராா முதலிய ஆனரோா பாடலகளைச சிறிது இசையோடு சிறிது சிறிதாகத தமவாயாறசொலலி அபபொழுதுதான் தாம புதிதாய ஆசுகவனமாகச செயததுபோலச சிறுவாககுககாடடித தாமஎதனைககூறினுமநமபததகக அவாமனததை மயககியமை ஞாபகததுககு வருகின்றது. வடநூறபொருளைஉள்ளபடிவெளியிடுதலில உணமைபபொருளுணாததிய போககு, இது!

கசு.—நீதிநெறிவிளக்கததில "கொள்ளுமா கொள்வோாக்குக் காணடுமே" என்றவிடததில 'இவ்விகுதி இறநதகாலஙகாட்டுவது 'கணடும' என வருமிடததேயாம' எனறும, "எநநலஙு காணடுமென் றெளளறக" என்றவிடத்தில 'கணடும எனறு பாடஙகொணடு' இவ்விடததுக் 'காணடும' என வேறுபாடமோதுவாரு முளா. அஃது எதிாகாலஙகாடடுமேயன்றி அவா தாம கருதுமாறு இறநதகாலஙகாடடாமை யுயததுணாக' என்றும, "ஊழுணமை காணடு மெனறு" எனறவிடததில 'அறியா ரிதறகு இறநதகாலமாகவே பொருளகூறுவா' என்றும பிறரைமறுதது எழுதியுள்ள இவாகள், தாஙகளே திருவிருதததில "பணடும பலபல வீஙகிருள் காணடும" என்றவிடததில 'காணடும' என்பதற்கு - 'கணடிருக்கிறோம' என்று இறநதகாலமாகப பொருள் எழுதியிருககினறனா. அறியாமை, இபபொழுது யாாமேல நிறகும? அது, கூடடததாாாகிய தஙகளைத தனியே தொடாதறகு அஞ்சிடு மெனக கருதினாபோலும. "கறறுப பிறாக்குரைத்துத் தாநிலலாா வாயபபடூஉம, வெறறுரைக குணடோா வலியுடைமை-சொறறநீா,நிலலாத தென்னென்று நாணுறைபப நோகதொருவன், சொலலாமே சூழநது சொலல"என்ற பாடல இவாகள் அறிநததேயன்றோ? தாம கசடறக் கறபவை கறறுக் கறறபின் அதறகுததக நிறபினன்றோ, பிறர்க்குபபோதித்தலும பிறாமேறகுறறஙகாட்டுதலும பெருமைபபடுமே? 'இலக்கணவிதிக்குமாறுகக காணபபட்ட இரணடொரு பாடலகளில ..திருததமானபாடஙகளைப பொருததியுமிருககினறோம' என்று தாஙகள் பதிபபுரையுரைததறகு ஏற்ப மறறுஞ்சிலவிடஙகளில திருததியதுபோல இஙகும 'பணடும பலபல வீஙகிருள கணடும' எனறு ஆழ்வாாபாசுரததைத் திருததிவிடாதது, மிககாருணியமே. 'இஃது எமமிடததுள்ள பழைய ஏட்டுபபிரதியொன்றிறகணடது,' 'சிறநத பழய கையெழுததுபபிரதியொன்று எமககுக் கிடைத்தமையின அதனையே ஆதாரமாககொணடு,' 'ஏட்டுப்பிரதியொனறு எமமிடததுளது'என்று பலவிடஙகளிலஎழுதியுளளவாகளது ஏட்டுபபிரதியில இஃதுஇலலாமறபோனது எனனோ? மாறுகொளக்கூற லென்னுங குறறத்திறகு இடமிலலாமல இவாகள உணமைபபொருளுணாததிய நிலை, இது!

கஎ.—திருக்குறணமுகவுரையில 'ஔவையாா இடைககாடா முதலிய இவர்தமசகோதராாகளும எனக' என்று இவாகள் எழுதியுள்ளாா. ஔவையார் திருவள்ளுவரது சகோதரியாரெனபது பிரசிததமே, இடைக்காடரைத் திருவள்ளுவர்சகோதர ரென்பதறகு ஆதார மெஙகே? உபபை உருவை ஔவை வள்ளி என்னும பெணபால நாலவரும், திருவள்ளுவா அதிகமான் கபிலா என்னும ஆணபால மூவரும ஒருவயிறறுதித்தவ ரென்பது மாததிர

மே, கபிலரகவலினால தெரிகிறது இடைக்காடர், எங்ஙனம அங்ஙனமாவர்? புலவர்சரித்திரம புலப்படுத்தலில உண்மைப்பொருளுணாத்திய நெறி, இது !

கஅ.—மற்றும திருக்குறளுமுகவுரையில 'புறநானூறு, எட்டுத்தொகை, நாலடியாா, புறப்பொருள்வெண்பாமாலை, கலித்தொகை முதலிய பழைய நூலகளினின்று' என்று எழுதியிருக்கின்றனா, புறநானூறும கலித்தொகையும எட்டுத்தொகையிற் சோந்தன வலலவோ? இவ்விரண்டுந்தவிர எட்டுத்தொகை நூலகள் எவையோ? "நற்றிணை நலலகுறுந்தொகை யையங்குறுநூறு, ஒத்தபதிற்றுப்பத்து ஓங்குபரிபாடல, கற்றறிந்தாரேத்துங்கலியே யகம்புறமென, றித்திறத்த வெட்டுத்தொகை" என இவ்வெட்டு நூலகளே அந்த மதுரை நூற்சங்கத்தாாக்கு எட்டுத்தொகையாய நின்றவை இந்தச்செல்லுரைச்சங்கத்தாாக்கு, காலபேதத்தால இன்னும இரண்டு வளாந்ததுபோலும்! மேற்கோள்நூலகளின் வரையறையில உண்மைப்பொருளுணாத்திய மாண்பு, இது !

ககூ.—திருவிருத்தவுரையில, 'இங்ஙனேயாகக்கூடுமோ எனனில, "புமபாவம மஸா யயு:," "புமஸாம தருஷ்டிசித்தாபஹாரிணம" என வாலமீக பகவானும . கூறுதலாற கூடுமெனக' என்று எழுதியுள்ளாா "புமஸாம தருஷ்டிசித்தாபஹாரிணம" என்று வாலமீக பகவான் கூறியது உண்மையே. "புமபாவம மஸாயயு:" என்று வாலமீகபகவான எங்கும கூறவிலலையே இது, வியாசபகவான கூறிய தன்றோ? "பாஞசாலயா: பதமபத்ராக்ஷயா: ஸநாயந்தயா ஜகமம கமம-யாஸ்ஸதர்மியோ தருஷ்டவதயஸ்தா: புமபாவம மநஸாயயு:" என்கிற மகாபாரத சுலோகத்தின நான்காம அடியன்றோ, இது. 'திரௌபதி நீராடுகையில அவளழகை நோக்கக்கண்ட மகளிர், மனத்தால ஆணமையடைந்தனா' என்று பாஞசாலியின் சௌந்தரியாதிசயத்தை வருணித்தது, இது உரையாசிரியரையும போதகாசிரியரையும பதிப்பாசிரியரையும நமபிக கலவி பயிலும மாணாக்கா, இம்மூவரக யாசிரியத்தன்மையையும மேறகொணடவாகள, இங்ஙனம பொய்யுணாவுக்கு உள்ளாக்கி இடாப்படுத்துவது, தருமமா? சிலப்பதிகாரம தொலகாப்பியமானதறகு, பாரதம ராமாயணமானதும வியாசா வாலமீகியானதும துணையாகத் தட்டிலலை. ஜைமினி பாரதம உணடு, வாலமீகி பாரதம எங்கும இலலையே. வடநூலமேறகோளகாட்டுதலில உணமைப்பொருளுணாத்திய முறைமை, இது!

உ0—மாணாக்காக்கு இடாப்பதாக வந்தவாகள, அவாகள்படித்தற கென்று யூனிவாசிடியாரால ஏறபடுத்தப்பட்ட புத்தகத்தில உள்ள பாட்டுங்களுக்குத் தக்க பொருளெழுதினாலன்றோ, மாணாககாகளுக்கு உபயோகமாம? அங்ஙனமன்றி, (மெட்ரிகயுலேஷன பாட்டுபுத்தக வுரையில) தாங்கள கணட பாட்டத்துக்கெலலாம பொருள இலக்கணம மொழிபெயாப்பு முதலியன எழுதியும, யூனிவாசிடியாா தக்ககாரணங்களால விலக்கிய பாடலகளுக்கும பாட்டுங்களுக்கும வசனங்களுக்கும பொருளவிளக்கியும, நீதிநெறிவிளக்கத்துச செய்யுளகளின இலக்கத்தையுமுட்பட மாறறியும வெளியிட்ட உரை, மாணாக்காக்கு இனிதுபயன்படுவது எவவாறோ? இவாகளுரை இங்ஙனமமாறு பட்டிருப்பதைப் புத்தகமுழுவதிலுமஆங்காங்குக்காணலாம. பெருந்தேவனார் பாரதத்தில கoச - பாடலகளுக்கு கoஉ - மாறுபாடுகளும, நீதிநெறிவிளக்கத்தில சஎ - பாடலகளுக்கு கரு - மாறுபாடுகளும நோட்டட்டன குசேலோபாககியானம, பஞசதந்திரவசனம என்னுமிவறறிலும இங்ஙனமே கண்டுகொள்க. இடாப்பட்ட மாணாககாது தன்மையை உள்ளபடியறிந்த பல பணடிதா முதலியோராற பலகாலுந்தூணடப்பட்டுத் துணிந்து உரையெழுதவந்தவாகளது கருணை இங்ஙனம மாணாககரது பேரிடாப்பாட்டுக்கு ஏதுவாய முடிதலை நோக்குமிடத்து, "செயிாத்துரைப்பின, நெஞசுநோமென்று தலை

துப்பபான் தண்ணளிபோல, எஞ்சா தெடுத்துரைக்கற்பாற்று" என்பது ஞாபகத்திற்கு வாராமற்போகாது பலரும் உண்மைப்பொருளுணர்த்தாமையால் இடர்ப்பட்ட மாணாக்கர்க்கு உதவியாகத் தாங்கள் உண்மைப்பொருளுணர்த்திய சால்பு ...

இவ்வாறு உண்மைப்பொருளுணர்த்துதற்கு யாம் இணிக்கற்கவேண்டுவதே!

இங்குக்காட்டிய இவை, வேண்டுமென்று தேடியெடுக்கப்படாமல் மேல் நோக்காகப்பார்க்கையில் தாமே காணப்பட்டவை, அன்றியும், அவர்கள் தாமே விளக்கியுள்ள ஸ்தாலீபுலாக நியாயத்தின்படி இவையே போதுமானவை.

இனி, இவற்றிற்கெல்லாம் கைப்பிழையென்றாவது அச்சுப்பிழையென்றாவது முக்குணங்களும் மாறிவரும் மானுடரியற்கையா லாய தென்றாவது சோர்வு மானுடர்க்கு இயற்கையென்றாவது இரவிலும் விரைவிலும் செய்ய வேண்டியிருந்தமைபற்றி நேர்ந்த பிறழ்வென்றாவது சமாதானங்கூறலுறின், தமக்குப்போலவே மற்றையோர்க்கும் இக்காரணங்களெல்லாம் அமையு மென்றும், தமது குற்றத்தைப் பிறர்கூறின் தமக்கு மனவருத்தமுண்டாவது போலவே பிறர்குறையைத் தாம் கூறினாலும் அவர்க்கு மனவருத்தமுண் டாகு மென்றும் தாமே அறிந்து பிறரைத்தூற்றாமையே அழகு என்க

இவ்வாறு தம்மிடத்துக் குறைவுபல உளவாகவும், பிறரை இகழ்வது, சிறிதும் தகுதியன்று. "தோன்று தோற்றித் துறைபல முடிப்பினும், தான் தற் புகழ்தல் தகுதியன்றே" என்பதுகாண்க. அன்றியும், "நல்லார் பிறர்குற்றம் நாடார் நலந்தெரிய, கல்லார் பிறர்குற்றம் காண்பாரே" என்பது முதலாகத் தாமே எடுத்துக்காட்டிய மேற்கோள்களை எட்டுச்சுரைக்காயாக்காது அனுட் டானத்திற்கொண்டுவந்து பிறரையுந் தம்மைப்போலவே கருதி அமைந்திருத்தலே தக்கதாம்.

யாம் இங்ஙனம் எழுதலுற்றது, அவர்கள்மீது அழுக்காறு காரணமாக வும் எமது லாபத்திற்காகவும் பிறரை நஷ்டப்படுத்தும்பொருட்டாகவு மன் று, மாணாக்கர்களின் உபயோகத்திற்காகவும், இனி எம்போலியரை அவர் கள் வீணே பழித்திடாமைக்காகவுமே யென அறிக

---

☞ 1892-ஆம் வருடத்து பி-ஏ டாட்புத்தகமாக யாம் முன்பு 1891-ஆம் வருடமுதலில் உரையோடு வெளியிட்ட கம்பராமாயணத்து ஆரணியகாண் டப்பகுதியே மீண்டும் இவ்வருடத்துப்பாடமாகவந்ததனால், அதனையே யாம் உபயோகப்படுத்திப் பிழைதிருத்தத்தோடு அநுபந்தமும் சேர்த்திட்டோம். அந்த எமதுஉரையே பிறர் இவ்வருடம் வெளியிட்ட வுரைக்கு மூலாதாரமெ ன்பது, இரண்டு உரைகளையும் ஒப்பிட்டுப்பார்ப்பவர்க்குத் தானேவிளங்கும். அன்றியும், அடுத்தபக்கத்திற்காட்டப்படுகிற பிழைதிருத்தத்தில் * இக்குறியி டப்பட்ட அச்சுப்பிழைகள் அவர்களபுத்தகத்திலும் அவ்வப்பாட்டி னுரையிற் காணுதலொன்றே, இவ்விஷயத்தை வற்புறுத்திப் பலர்க்கும் வெளியிடும். 'பிறர்பொருளைத் தம்பொருள்போலப் பாவிக்கவேண்டும்' என்ற நீதிமு றைமை தவறாமல், பிறர் சிரமப்பட்டுக் கண்டு எழுதிய விஷயங்களை அப் படியே தங்களதாக எளிதிலெடுத்துக்கொள்பவர், சிறிது உழைத்து அப்புத் தகத்திறுதியிலேயேயுள்ள பிழைதிருத்தத்தைப் பார்த்து அதன்படி அச்சுப் பிழைகளை யெல்லாந் திருத்திக்கொள்ளுதலாவது செய்யவேண்டாவோ? இன்னோரன்னவை இன்னுஞ்சில உள. உண்மைப்பொருளுணர்த்துவந்தார் தன்மையை இதனாலும் உணர்க.

---

# கம்பராமாயணவுரைப் பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| அ | சு | தன்னிடத்தே | தம்மிடத்தே |
| * கக | ௩௪ | இக்ஷுவாகு | இக்ஷுவாகு |
| உ௪ | ௩௩ | அம்பு | நிணட அம்பு |
| ,, | ௩௪ | அவ்வஸ்திரம் | அவ்வம்புகள் |
| * ௩0 | கக | முதலவனின் | முதலவனி்ர |
| ௪உ | ௩௬ | (தனக்குச சிறப்பாக வுடைய) | (தனக்குச) சிறப்பாகவுடைய |
| ௪௪ | ௩எ | தாநதா | தாநதாம |
| * ௫க | ௩௪ | உமபாக்கு அரசு | இவன் உம்பர்க்கு அரசு |
| * ,, | ௩௫ | தேவேந்திரன் | இத்தேவேந்திரன் |
| * ௫௪ | ௪க | ஆயநத | தேடி - தேடி, ஆயநத |
| - ௫௫ | ௪க | வந்து, | வந்து, எம்மை - எங்களை, |
| ௫௯ | ௩௫ | 'உனக்கு' | 'உனக்கு |
| ௬0 | ௩உ | அளவளாவினை | அளவளாவினர் |
| ௬க | ௪உ | மூடிய | மூடிப |
| ௬உ | அ | ஒரு | ஓர் |
| ௬௩ | ௩உ | (அப்பதவியை) | அப்பதவியை |
| ௬௯ | ௪ | செய்து, | செய்து, இருந்தனன் - வீற்றிருந்து, |
| எ0 | ௩௬ | கொள- | கொள்ளும - |
| எக | கஎ | அகரம | இகரம |
| ,, | உ௪ | நீரோ | நீரோ |
| * அ௬ | உஎ | விஜகதஸதவம | விஜிகீதஸதவம |
| அஎ | ௪ | (இ - ள) | (இ-ள) ஆழியுழவன் புதல்வ - சக்கரவர்த்தி திருமகனே! |
| அஅ | ௪ | நலகா - | நலகி - |
| ,, | ௩எ | ஒரு | ஓர் |
| அ௯ | கக | விளையாட, | விளையாட- |
| ,, | உஉ | வணணன- | வணணனும- |
| ,, | உ௩ | ஸ்ரீராமன், | ஸ்ரீராமனும, |

# கம்பராமாயணவுரை யநுபந்தம்.

## ஆரணிய காண்டம்.

### விராதன்வதைப்படலம்

க.—பத்திரம - மஙகளகரமான, பழுவம - சோலை யெனினுமாம, பத் - சுபம.

௪.—தணடகவனம - [இதன்விவரம அறிவிப்பிற காணக.]

அ.—செசசை - சாசசா என்னும வடசொலலின் சிதைவு; சாசசா - பூசசு.

கஉ.—கும்பம உற்ற - பானைபோலவுள்ள மஸதகம பொருந்தின எனி ரம. ஒளி குலாம ஓடை யென இயையும; ஓடை - நெற்றிப்பட்டம; முக ரமன்று: அது, சூழியெனப்படும.

கங.—கலிகாலமென நிமிர என இயைத்து உரைப்பினுமாம்

க௪.—இடையாவடமுடியையுணாததும கீவீ என்னும வடசொல், இ , இலக்கணையாய, ஆடைமாத்திரத்தை யுணர்த்திற்று.

